ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.



# ஸ்ரீராமாநுஜவிஜயம்

ஸ்ரீ சுப்ரமண்ய சிவம்

இயற்றியது.

இந்நூல் கிடைக்குமிடம்:—

ரிப்பன் பிரஸ் பதிப்பு,

...ன்ஸ் ரோட், பெரம்பூர்

...க்ஸ், சென்னை.

ஸ்ரீ:

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# ஸ்ரீராமாநுஜ விஜயம்

ஸ்ரீ வைஷ்ணவ சித்தாந்தத்தை நிலைநிறுத்தியவரும்,
ஸ்ரீ வைஷ்ணவ சம்ப்ரதாயத்திற்கு ஆசார்ய புருஷ
ராய் விளங்கியவரும் ஆகிய ஸ்ரீ ராமாநுஜா
சார்யரின் திவ்விய சரித்திரம்.

ஸ்ரீ சுப்ரமண்ய சிவம்
இயற்றியது



மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை,
87, தம்புசெட்டி வீதி, சென்னை.

1924

விலை ரூபா 2

ஓம்

ஸ்ரீமதே ராமாநுஜாயநம:

# முன்னுரை

ஆத்மீக விஷயங்களிலே பண்டைக் காலம் தொட்டு இப் பரத நாடே உலகிலுள்ள மற்றெல்லாத் தேசங்களினும் சிறந்து விளங்குகின்றதென்பதில் சந்தேகமில்லை; அதிலும், இத்தென்னிந்தியாவே மிகச்சிறந்து விளங்குகின்றது. உலகத்து ஆசார்யபுருஷர்களிலே முதன்மைபெற்றவர்கள் இங்கு, இத் தென் இந்தியாவிலேதான் உண்டானார்கள். பரத கண்டத்துக்ஷேத்திரங்களிலே பாரம்பர்யமும் பெருமையும் வாய்ந்தனவும், சித்திரீகத்திலும் சிற்ப சாஸ்திர வல்லமையிலும் தேர்ந்தனவுமான ப்ரஹ்மாண்டமாயுள்ள க்ஷேத்திரங்கள் இங்கு இத் தென்னிந்தியாவிலேதான் இருக்கின்றன. உலகத்துக்கே ஞான மளித்த உத்தம பூமி இத் தென்னிந்தியாவே ஆகும். ஞானமானது படிப்படியாகப் பக்குவமாகிப் பழுத்த பூமி இதுவேதான்; ஹிந்துக்களுடைய தேவாதி தேவர்களாகிய திரிமூர்த்திகள் அவதாரம் செய்து திருவிளையாடல் புரிந்த பூமியும் இதுவேதான். நாம் இப்பொழுது எழுதப்புகும் ஸ்ரீ ராமாநுஜாசார்யரும் இத் தென்னிந்தியாவிலேயே அவதரித்தவர். இவருடைய விசிஷ்டாத்வைத மதக் கொள்கையானது உலகில் பெரும்பான்மையோராலே அநுசரிக்கப்பட்டு வருகின்றது. வெளிப்பார்வை

க்கு எந்த மதத்னதச் சேர்ந்தவர்களா யிருந்தாலும், சாதாரண புத்திசாலிகள் தெரிந்தோ, தெரியாமலோ இந்த விசிஷ்டாத்வைத மதத்தையே பின்பற்றி, இம்மதக் கொள்கைகளையே அநுசரிக்கின்றார்கள்.

ஹிந்து மதம், பௌத்த மதம், கிறிஸ்தவ மதம், மகம்மதிய மதம் என மதங்களினுடைய ஸ்தூலப் பெயர்கள் பற்பலவா யிருந்தாலும், அவை எல்லாவற்றினுள்ளும் ஊடுருவிச் சென்று வியாபித்து நிற்கும் கொள்கைகள் மூன்று தன்மையனவாம்; அவையாவன:— துவைதம், விசிஷ்டாத்வைதம், அத்வைதம். இவற்றினுள்ளே, விசிஷ்டாத்வைதமானது ஞானமும் பக்தியும் நலமுறச் சமமாகக் கலந்துள்ள மதம் என்பதில் எள்ளளவும் சந்தேக மில்லை. துவைத மத சித்தாந்தமானது வெறும் பக்தியையே ஆதாரமாகக் கொண்டது; அத்வைதமானது கேவலம் ஞானத்தையே ஆதாரமாகக் கொண்டது; ஆனால், விசிஷ்டாத்வைத மதமோ பக்தி, ஞானம் இவ் விரண்டையும் சமப்படுத்தி, ஹிருதய உணர்ச்சியுடனே ஆத்ம ஞானத்தையும் ஊட்டுகின்றது. கேவலம் பக்திமாத்திரம் இருந்தால் அது வெறும் மூட பக்தியாகி, குருட்டு விஸ்வாசமாக முடிந்து, ஒரு மனிதன் ஆசையுடனே வளர்த்த காடிக்குட்டியானது அவன் முகத்திலே ஒரு ஈ யுட்கார, அவன்மீது தனக்குள்ள அன்பு மிகுதியினால் அதனை அது சகிக்காது, அவ் ஈயைக் கொல்லக் கருதி அவன் முகத்திலே ஓங்கி ஒரு அறை அறைய, ஈயும் அவனும் ஆகிய இருவரும் இறந்துவிட்ட கதைபோ

லாய்விடுகின்றது. வெறும் ஞானமோ ஹிருதயத்திலே ஈரம் வளர்க்காது, அன்பு என்பதை அறியாது, கேவலம் வரட்சி பெற்ற அறிவாகி விடுகின்றது. ஆனால், பக்தியும் ஞானமும் சேர்ந்த விசிஷ்டாத்வைதமோ இவ்விரண்டையும் ஏகோபித்து ஒரே காலத்தில் வளர்த்து, "ஹிருதயம், மூளை ஆகிய இரண்டிலே ஒன்றைவிட ஒன்று உயர்ந்ததில்லை" என்றும், "மநுஷ்ய வர்க்கத்தின் துக்கநிவிர்த்திக்கு இவ்விரண்டும் அவசியமேயாம்" என்றும் நிரூபிக்கின்றது. ஆகையால், விசிஷ்டாத்வைதமே சிரேஷ்டமான மதமாகும்; ஆகவே, அதனைப் பிரகாசப்படுத்திய ஸ்ரீராமாநுஜர் ஓர் மஹா புருஷர் என்பதில் என்ன சந்தேகம்? இம்மஹானுடைய அன்புக்கும் அறிவுக்கும் இணையாக எதையும் சொல்ல முடியாது! இத்தகைய அவதார புருஷருடைய சிறந்த சரித்திரத்தை எழுதுவதற்கு அவருடைய திவ்ய சக்தி எமக்கு அநுக்கிரகமாகுமாக.

சுப்பிரமணிய சிவம்.

---

# ஸ்ரீ ராமாநுஜ விஜயத்தின்
# விஷய அட்டவணை



ஸ்ரீ ராமாநுஜ விஜயத்தின் விஷய அட்டவணை

முற்றுப் பெற்றது.

ஓம்

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீ ராமாநுஜ விஜயம்

## 1-வது அதிகாரம்:

## ஸ்ரீ ராமாநுஜர் பரம்பரை

ஆசார்ய்ர் ஸ்ரீ ராமாநுஜரைப்பற்றி எழுதப் புகுவதற்கு முன், அவருடைய முன்னோர்களையும், பாம்பரையையும் பற்றி ஒரு சிறிதேனும் சொல்லவேண்டியது அவசிய மாகையால், முதலில் ஸ்ரீ சடகோபரைப்பற்றிச் சிலவிஷயம் சொல்லுவோம்.

### ஸ்ரீ சடகோபர்

திருநெல்வேலி ஜில்லாவிலே, தாம்ரபர்ணி நதி தீரத்திலே, திருநகரி என்று ஒரு கிராமம் உள்ளது. இந்தக் கிராமத்திலே பெயர் பெற்ற ஸ்ரீ விஷ்ணு க்ஷேத்திரம் ஒன்று உண்டு. இந்தக் கிராமவாசிகள் ஸ்ரீ விஷ்ணு பக்தியில் சிறந்தவர்களாய், எதற்கும் எக் குறைவுமின்றி இன்பத்துடனே வாழ்ந்துவந்தார்கள். இவர்களிலே, சூத்திர ஜாதியைச் சேர்ந்த ஸ்ரீ விபூதிநாதர் என்பவருடைய குடும்பமானது ஸ்ரீ விஷ்ணு பக்தியிலே விசேஷமாகச் சிறந்து,

அவ் வூரார் அனைவரும் கண்டு ஆச்சர்யப்படும்படி அவ் வளவு பரிசுத்தமானதாக இருந்தது. 'பரம்பரையாகவே இந்தக் குடும்பத்தார் பக்த சிரேஷ்டர்கள்' என்று அந்தப் பிரதேச மெங்கும் பிரசித்தமாம். இந்த விபூதிநாதருடைய நான்காவது பரம்பரையிலே பொற்காரியார் என் றொருவர் பிறந்தார். இவர் செல்வத்துடனும் சீருடனும் வளர்க்கப் பெற்று, வயது வந்து விவாகமான பிறகு ஆண்மகவொன்று ஈந்து, அம் மகவுக்குக் காரி என்று திருநாமம் சூட்டினார். இந்தக் காரியும் தமது பரம்பரா குணங்களிலும் நடக்கையி லும் சிறந்து வளர்ந்து, தகுந்த வயதடைந்தவுடன் அவ ருடைய பிதா, பொற்காரியாகிய தமது புத்திரனுக்கு விவா கம் செய்விக்க எண்ணி, தகுந்த பெண்ணைத் தேடி ஊர் ஊராகத் திரிந்தார். கடைசியாக மலையாளம் சென்று, திரு வண்பரிசாரம் என்னும் கிராமத்திலே கமலாதித்தவக்ஷர் என்பவருடைய புத்திரியைக் கண்டு, 'இவளே நமது புத் திரனுக் கேற்ற மனைவி' என்று தீர்மானித்துக்கொண்டு, குலம் கோத்திரம் முதலியன விசாரித்து, எல்லாம் இசைந் திருக்கக் கண்டு சந்தோஷித்து, முகூர்த்த தினம் ஒன்று நிச்சயித்து, சாதுக்களுடையவும், பெரியோர்களுடையவும், சமஸ்த பந்துக்களுடையவும் முன்னிலையிலே அவ் விரு வர்க்கும் விவாகம் செய்வித்தனர்.

விவாக முடிந்தவுடன் காரியும் அவருடைய மனைவியும் திருக்குருகூர்க்கு வந்து, ஒருவர்க்கொருவர் அந்யோந்ய மும் அன்பும் மிகுந்து, ஆவல் அதிகரித்து, இருவர் மன

மும் ஏகமனமாய், இல்லற வாழ்க்கையை நெடுநாட்கள் நடத்திவந்து எக்குறையு மில்லாது இவர்கள் இன்புற் றிருந்தபோதிலும், வரவர மகத்தான பெருங் குறை யொன்று இவர்கள் மனதிலே உதித்து, இவர்களுடைய இன்ப வாழ்க்கையைச் சலிக்கச் செய்து வந்தது. இவர்கள் இல்லற தர்மம் அநுஷ்டிக்கத் தொடங்கி நெடுங்கால மாயி னும், இவர்களுக்குப் புத்திர பாக்கியம் உண்டாகவில்லை. "புத்திர னில்லாதவர்கள் புத் என்னும் நரகம் செல்ல வேண்டுமே; ஆ! எம்பெருமானே! கோபால கிருஷ்ணா! நீ குழந்தை வடிவெடுத்து எங்களிடம் வாராயோ? எங்களைப் பாராயோ? எங்களைக் காராயோ? இளங் குழந்தைகளின் மழலைச் சொற்களைக் கேட்கும் பாக்கிய மில்லாதவர்களின் வாழ்நாள் வீணானன்றோ? இதனா லன்றோ, தெய்வப் புல மைத் திருவள்ளுவ நாயனாரும்,

"குழலினி தியாழினி தென்பதம் மக்கள்
மழலைச்சொற் கேளா தவர்."

என்றார். ஏ, பக்தவத்ஸலா! ப்ரமதயாளு! எளியேமாகிய எங்கள்மீது இரக்கமுற்று, எங்களுக்குப் புத்திர பாக்கியம் அருள்வாய்!'' என்று இருவரும் இரவும் பகலுமாக ஈரேழு பதினான்கு உலகங்கட்கும் இறைவனாகிய எம்பெருமான் ஜகந்நாதனை ஸ்தோத்திரம் செய்துகொண்டிருந்தார்கள்.

காரியார் தமது மாமனார் வேண்டுகோளின்படி, தமது மனைவியாகிய * நாத நாயகியுடன் மலைமாநாட்டில் திரு

* இதுதான் காரியினுடைய பத்தினியின் பெயர். இவ் வம்மை யாரின் பெயர் உடைய நங்கை என்றும் வழங்கப்படுகிறது.

வண்பரிசாரத்தை யடைந்து, அங்குச் சிலகாலம் வசித்திருந்து, பிறகு தமது இல்லாளோடு தமது ஊராகிய திருநகரியை நோக்கித் திரும்பி வருங்காலையிலே, திருக்குறுங்குடி என்னும் ஸ்தலத்திலே வழித் தங்கும்படி நேரிட்டது. இது ஒரு பெரிய விஷ்ணு க்ஷேத்திரம். இதிலே எம்பெருமான் ஸ்ரீ குரங்கேசர் என்னும் பெயருடனே எழுந்தருளியிருக்கின்றார். காரியாரும், நாதநாயகியும் அந்த க்ஷேத்திரத்தைச் சேர்ந்த புஷ்கரணியிலே ஸ்நாநம் செய்து, ஸ்ரீ விஷ்ணு பக்திக்கு அடையாளமாகிய திருமண்காப்புத் தரித்துக்கொண்டு, மஹா பரிசுத்தராய் ஸ்ரீ குரங்கேசப் பெருமான் சந்நிதிக்குச் சென்று, "ஏ, குரங்கேசா! கோபாலா! நீ அக் காலத்திலே கோபாலர்களுக்குள்ளே குழந்தையாகி விளையாடினையே! இப்போது ஒரு குழந்தையை எங்களுக்கு அளிப்பதுமாத்திரம் உனக்கு அருமையோ? நாங்கள் யாது பாபம் செய்தோம்? எவர்க்கு என்ன தீங்கிழைத்தோம்? என்ன செய்வோம், ஈசா! நாங்கள் எப்பிழை செய்திருந்தாலும் எல்லாவற்றையும் மன்னித்து, எங்கள்மீ திரங்கி, எங்களுக்குப் புத்திர பாக்கியம் அருள்வாய்!" என்று ஏகமனதுடனே இருவரும் பிரார்த்தித்தார்கள்.

அப்போது அந்த க்ஷேத்திரத்து அர்ச்சகருக்கு உடனே ஆவேச முண்டாகி, "ஏ காரி! ஏ நாதநாயகி! உங்களுடைய கோரிக்கை ஈடேறிவிட்டது; இது நிச்சயம், நிச்சயம்!" என்று ஒரு கோஷ முண்டாயிற்று. என்ன

ஆச்சர்யம்! ஆனால், அர்ச்சகர் இப்படிச் சொன்னதுடன் நிற்கவில்லை; ஆவேசத்துடனே இன்னும் அதிக உரத்த சப்தமிட்டு, "நானே உமது குடும்பத்தில் வந்து பிறக்கிறேன்! நானே உமது குடும்பத்தில் வந்து பிறக்கிறேன்!" என்று கூறினர்.

என்ன இது? ஸ்ரீ மஹாவிஷ்ணுவேயா இவர்களுடைய கர்ப்பத்தில் வந்து தங்கிப் பிறக்கப்போகிறார்? ஆதியிலே தேவகிக்கும் நந்தனருக்கும் ஸ்ரீ கிருஷ்ணன் உற்பவித்தது போல, இப்போது காரியாருக்கும் நாதநாயகிக்கும் பகவான் புத்திரனாக அவதரிக்கப்போகிறாரா? இந்த அருள் வாக்கை அர்ச்சகருடைய வாயிலிருந்து காரியாரும் நாதநாயகியும் கேட்டதுதான் தாமதம்; ஆ! ஆ! அவர்கள் அடைந்த ஆநந்தத்தை என்னென்று சொல்வது! ஆநந்தக் கூத்தாடினார்கள்; ஆநந்தம் பொங்கி அழுதார்கள்; புரண்டார்கள். ஆ! ஆ! என் அப்பா! நாங்கள் நின் அடிமைகள்; என்றென்றும் நின் அடிமைகள்! நீ இப்போது பாலித்த கிருபைக்கு நாங்கள் என்ன கைம்மாறு புரியப்போகின்றோம்?" என்று வாயார தேவாதிதேவனை ஸ்தோத்ரம் செய்தார்கள்.

"அர்ச்சகர் சொன்னது உண்மைதானா? அவருக்கு ஆவேசம் வந்ததும் உண்மைதானா? அவர் சொன்னபடியே நடக்குமா? அர்ச்சகர் ஒருநாளும் பொய் சொல்லாதவராயிற்றே; அவர் மிகவும் நல்லவராயிற்றே; சத்தியசந்தராயிற்றே; ஜீவகாருண்ணிய ஸ்வரூபியாயிற்றே; அவர்

ஸ்ரீ குரங்கேசருடைய விக்கிரகத்தை நோக்கி அழுதழுது தம்முடைய மனத்திலே யிருந்த கள்ளத்தை யெல்லாம் கரைத்தவ ராயிற்றே; அவர்மீது பொய்யாக ஆவேசம் வந்ததென்று ஏன் பாவனை பண்ணிக்கொள்ளவேண்டும்? அவர் நம்மை ஏமாற்றுவதற்கும் காரணம் இல்லையே. இல்லை, இல்லை! அவர் ஒருநாளும் பொய் சொல்லமாட்டார்; சாக்ஷாத் பகவானே நம்மீது இரங்கிக் கருணை பாலித்திருக்கிறார்!" எனச் சதிபதிகள் இருவரும் இவ்விதமாக வெல்லாம் சிந்தனை செய்து மனம் சந்தோஷித்தார்கள்.

நிற்க, அவ் வாவேச வாக்கின்படியே நாதநாயகி சீக்கிரம் கர்ப்பவதியானாள்; உடனே இவர்களுக்கு இருந்த அற்ப சொற்ப சந்தேகங்களும் அடியோடு நீங்கிவிட்டன. "ஈஸ்வர சங்கற்பம் நிறைவேறப்போகிறது' என்று சதிபதிக ளிருவரும் வெகு ஆவலுடனே ஒருநாளை ஒரு யுகமாகக் கருதிக் காலம் கழித்துவந்தார்கள்.

இச் சமயத்திலே, உலகில் தர்மம் க்ஷீணித்து அதர்மம் ஓங்கி, உத்தமர்களுக்குக் கஷ்டமும் துஷ்டர்களுக்குச் சுகமும் செல்வமும் பெருகி, உலகம் வியவஸ்தை கெட்டு இருப்பதை ஸ்ரீ வைகுண்டத்திலே எல்லாம் வல்ல எம் பெருமானாகிய ஸ்ரீலக்ஷ்மிகாந்தன் அறிந்து, தாம் அவதாரம் செய்வதற்குக் காலம வந்துவிட்டதென்று உணர்ந்து, தம் அருகே தமது பாதமலர்களிலே பணிந்து நிற்கும் பக்த சிரேஷ்டர்களை யெல்லாம் ஒரு பார்வை பார்த்து, கடைசியாக அந்தப் பக்த கோடிகளுக்குள்ளே முதன்மை பெற்றவ

ராகிய ஸ்ரீ விஷ்வக்ஸேனரை நோக்கி, "நீ பூமியிலே சென்று, காரியின் குலத்திலே கருவினுள் நுழைந்து மானிடப் பிறவி யெடுப்பாய்!" என்று ஆக்ஞாபித் தருளினர்.

அவ்வண்ணமே ஸ்ரீ விஷ்வக்ஸேனர் நாதநாயகியி னுடைய கர்ப்பத்தினுள்ளே நுழைந்து, பத்து மாதங்கள் பதுங்கிக்கிடந்து, பின்னர்க் கலியுகம் ஆரம்பித்து நாற்பத்து மூன்றும் நாளான பிரமாதீச வருஷம், வைசாக மாதம், பன்னிரண்டாம் தேதி, சுக்கிரவாரம் பௌர்ணமி திதி யன்று வைசாக நட்சத்திரமும் கடக லக்கினமும் கூடிய சுபதினத்தில் பூமியிலே அவதரித்தருளினர்.

இவருடைய அவதாரத்தைக் குறித்துப் பல புராணங் களிலே மேற்கோள்கள் இருக்கின்றன; அவற்றில் சில வற்றை இங்குக் கூறுவாம்:—

ஸ்ரீ விருத்தபத்ம புராணம்

"கலியுக ஆரப்பத்திலே சேனேசர் ஈஸ்வர பக்தியை உத்தாரணம் செய்வதற்காகப் பூமியிலே அவதரிப்பார்."

ஸ்ரீ ப்ரஹ்மாண்ட புராணம்

"ஏ, மகரிஷிகளே! நான் உங்களுக்குக் கூறும் ஒரு மகத்தான ரஹஸ்யத்தைக் கேளுங்கள்! எனது சயனமாகிய அநந்தன் பிற்காலத்திலே ஒரு சமயத்தில் பூமியிலே ஒரு பரிசுத்த புளிய விருக்ஷமாகச் செல்வான்; நான் சட் கோபன் என்ற பெயர் தாங்கி, என்னுடைய ஒரு பக்தன்

போலச் சந்தோஷத்துடனே அவனைப் பின்பற்றிச் செல்வேன். நான் சாதாரணப் பொது ஜனங்களுடைய பாஷையிலே வேத ரகஸ்யங்களை யெல்லாம் எடுத்துக் கூறி, ஜாதி மத வித்தியாச மில்லாமல், ஆண் பெண் என்ற வித்தியாசமு மில்லாமல், மோக்ஷ வாசலை எல்லோருக்கும் திறந்து விட்டுவிடுவேன்.''

ஸ்ரீ பவிஷ்யத் புராணம்

''தேவர்களுக்கு நாயகனாகிய ஸேனேசன் கலியுகாரம்பத்திலே தர்மத்தை உத்தாரணம் செய்யும்பொருட்டும், ஈஸ்வர பக்தி மார்க்கத்திலே ஜனங்களை இட்டுச் செல்லும் பொருட்டும் பூமியிலே அவதரிப்பார்.''

ஸ்ரீ மார்க்கண்டேய புராணம்

கௌஸ்துபத்தினின்றும் வெளிப்பட்ட திவ்யாக்கினியின் ஒரு பொறி பூமியிலே விழுந்து சடகோபர் என்ற ஒளி வடிவம் தரித்துக்கொண்டது.''

ஸ்ரீ பத்ம புராணம்

''பயங்கரமான கலியும் ஆரம்பித்து, உண்மை மார்க்கமானது நாஸ்திகர்களாலே அழிக்கப்படுகிறபோது, ஸ்ரீ மஹா விஷ்ணுவின் அம்சம் பெற்ற ஒருவர் பூமியிலே அவதரிப்பார்.''

ஸ்ரீ பார்க்கவ புராணம்

''அப் பிள்ளைக்குப் பதினாறு வயதாகிற வரையில் அவன் ஊமைபோல மௌனமாகவே யிருப்பான். அவன்

பரிசுத்த புளியம்விருக்ஷத்தினடியிலே யுட்கார்ந்து, ஈஶ்வர தியானத்திலே மெய்ம்மறந்து, அதனு லுண்டாகும் ஆநந்தத்திலே களித்துக்கொண் டிருப்பான்."

இப் புராணங்களிலே கூறியவாறு சாக்ஷாத் பகவானுடைய பரிசுத்த சயனமாகிய அநந்தன், இவருக்கு முன்னேயே உலகுக்கு வந்து, அந்த ஸ்தலத்து ஆதிநாதருடைய க்ஷேத்திரத்தருகே புளியம் விருக்ஷமாகத்தோன்றி நின்றுகொண்டிருந்தார்.

இந்தச் சடகோபக் குழந்தையானது இதர குழந்தைகள்போன் றிருக்கவில்லை. மற்றக் குழந்தைகள் போன்று அழுவதில்லை; சிரிப்பதில்லை; பால் குடிப்பதில்லை; சத்தமிடுவதில்லை; ஆகாரம் ஒன்றுமே எடுத்துக்கொள்வதில்லை; கொண்டுபோய் ஊட்டினுலும் உண்ண மறுத்துவிடும். ஆகாரமில்லாமலே யிருந்தாலும், இக் குழந்தை நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து, பரிபூர்ண ஆரோக்கிய திடகாத்திரமுள்ளதா யிருந்தது. 'இது என்ன! உண்பதில்லை, பேசுவதில்லை, அழுவதில்லை, ஆடுவதில்லை; குழந்தைச் செயல்கள் ஒன்றுமே யில்லை,' என்று பெற்ருேர்கள் பிரமிக்க ஆரம்பித்தனர். ஆயினும், 'எம்பெருமான் வரப்பிரசாதத்தினுல் ஈன்றெடுத்த குழந்தையல்லவா? என் செய்யலாம்? எல்லாம் ஈசன் செயல். நடந்தபடி நடக்கட்டும். ஈஶ்வர சித்தம் அப்படி யிருக்கிறது; ஏதோ இதில் ஈஶ்வர ரஹஸ்யம் அடங்கியுள்ளது. இதைப்பற்றி நாம் ஏன் கவலைப்படவேண்டும்?' என்று அக் குழந்தை

யின் பெற்றோர்கள் சாக்ஷாத் பகவானிடத்திலே சகல கவலை களையும் ஒப்புவித்துவிட்டுச் சந்தோஷமா யிருந்தார்கள்.

குழந்தை பிறந்த பன்னிரண்டாம் நாள் காரியும் நாதநாயகியும், தமது சுற்றத்தினர் பந்துக்கள் முதலி யோர் சூழ அக் குழந்தையை எடுத்துக்கொண்டு ஸ்ரீ ஆதி நாதருடைய க்ஷேத்திரம் சென்று, அதை அந்தத் தேவாதி தேவனுடைய சந்நிதானத்திலே வைத்து, அக் குழந்தைக்கு மாறன் என்று திருநாமம் சூட்டினார்கள்; அக் குழந்தைக் குச் சடகோபன் என்று இன்னொரு பெயரும் வழங்க லாயிற்று. "இக் குழந்தையினுடைய குணமும் செய்கைக ளும் உலகினருடைய குணங்களுக்கும் செய்கைகட்கும் நேர் மாறாக இருந்தபடியால், இக் குழந்தைக்கு மாறன் என்னும் நாமம் சூட்டப்பட்டது என்பர்" ஒரு சாரார்.

"குழந்தை கர்ப்பத்தினுள்ளே யிருக்கும் வரையில் அது திரிகால திருஷ்டி யுடையதா யிருக்கிறது; ஆனால், அதன் ஜனன காலத்திலே ஷட்ட என்னும் சூக்ஷ்மநாடி பொ ன்று அதனுடனே சம்பந்தப்பட, அதனுடைய பூர்வஞானத் தை மாயை மறைத்துவிடுகிறது; இந்த ஷட்ட என்னும் சூக்ஷ்மநாடி அக்குழந்தையுடனே சம்பந்தப்படாவிட்டால், அக் குழந்தையின் பூர்வஞானத்தை மாயை மறைக்காது. இந்தச் சூக்ஷ்ம நாடியை அது சம்பந்திக்கிறபொழுதுதான், அதற்கு அஞ்ஞான முண்டாகி, அது அழுவதோடு, மனி தர்களுடைய செயல்களை யெல்லாம் செய்ய ஆரம்பிக்கின் றது. ஆனால், இந்த மாறன் அந்தச் சூக்ஷ்ம நாடியின் சக்தி

யை எதிர்த்து நின்று, தன்னுடைய ஸ்வரூப லக்ஷணத்தைக் காப்பாற்றிக்கொண்டதினாலும், ஓங்காரத்தை உச்சரித்து மாயையை வென்றுவிட்டதினாலும் இக் குழந்தைக்கு ஷட்டகோபன் (சடகோபன்) என்று பெயர் வழங்கலாயிற்று'' என்பர் இன்னொரு சாரார்.

''சாக்ஷாத் பகவான் மற்றெல்லா ஆழ்வார்களையும் காட்டிலும் இவரிடத்திலே பிரத்தியேக வாத்சல்யம் வைத்து, 'நம் ஆழ்வார்' என்று அழைத்தார்'' என்றும், ''அதனால் இவருக்கு 'நம்மாழ்வார்' என ஒரு பெயர் உண்டாயிற்று'' என்றும் ஒரு ஐதிகம் உண்டு.

ஸ்ரீ ஆதிநாதமூர்த்தி தமது கழுத்திலிருந்து வகுள புஷ்பங்களாலாய மாலையொன்றை யெடுத்து இவருக்கு அளித்தார்; ஆதலினால், இவருக்கு ஸ்ரீ வகுளாபரணன் என்று ஒரு பெயர் உண்டாயிற்று.

யானையானது கூரிய இரும்பு ஈட்டியைக் கண்டு பயப்படுவதுபோல, எல்லாக் காலத்துச் சமயவாதிகளும் இவரைக் கண்டு பயப்படுகிறார்களாதலால், இவருக்கு ஸ்ரீ பராங்குசர் என்று ஒரு திருநாமம் உண்டாயிற்று.

இத்தனைத் திருநாமங்களால் இனிது விளங்கப்பெற்ற இந்தக் குழந்தையை அதன் பெற்றோர் அந்தப் பரிசுத்த புளியம் விருக்ஷத்தினடியிலே தொட்டில் கட்டி அதில் கிடத்தினார்கள். இக் குழந்தையினுடைய குணங்களை யெல்

லாம் அதன் பெற்ளுேர் கவனித்து, "இது சாதாரணக் குழந்தையன்று!" என்றும், "தேவநாதர்களுள் எவரோ ஒருவர் ஒரு பெருங் கார்யம் இப் பூமியிலே செய்யும் பொருட்டு அவதரித்திருக்கிருர்!" என்றும் மனப் பூர்வமாக நம்பி, அக் குழந்தையினிடத்தே பரிபூர்ண பக்தி செலுத்தி வந்தார்கள். அப்போது அவர்களுக்கு ஸ்ரீ குரங்கேச க்ஷேத்திரத்தில் ஆவேசத்துடனே அர்ச்சகர் சொன்ன வார்த்தைகளும் ஞாபகத்துக்கு வந்தன. இதனுல் அவர்களுடைய நம்பிக்கை இன்னும் உறுதிப்பட்டது.

இப் பிள்ளை ஒரே இடத்தில், மௌனமாய் அசைவற்று, பிரபஞ்ச பிரக்ஞையின்றி ஆழ்ந்த நிஷ்டையிலே பதினறு வருஷங்கள்வரை அழுந்தி யிருந்தது. "சுகப் பிரஹ்மரிஷி ஒருவர்தாம் பிறவியிலே ஞானி" என்று அத்வைதிகளும் பிறரும் கூறுவார்கள்; ஆனல், இதோ ஒருவர் பிறவியிலேயே பிரஹ்ம நிஷ்டரா யிருக்கிருர்; ஒருவேளை இவரைத்தான் அத்வைதிகளும் பிறரும் சுகப் பிரஹ்மம் என்று சொல்கின்றனரோ, என்னவோ? அவர் பிரபஞ்சத்தையே நினைக்காமலிருந்தது, ஒருவேளை அவர் நிஷ்டையிலிருந்து உண்டாகும் ஆநந்த சமுத்திரத்திலே நீந்தி விளையாடிக் களித்துக்கொண் டிருந்த காரணத்தினல் இருக்கலாம். அவர் மௌனமா யிருந்தது தாம் அநுபவித்துக்கொண் டிருந்த ஈச்வரப் பெருமையை எடுத்து வெளியிடுவதற்கு மனுஷ்ய பாஷை போதாத காரணத்தினல் இருக்கலாம்; அல்லது, அதைக் கேட்பதற்குத் தகுந்த பரிபாக

மடைந்த ஜனங்கள் இல்லாத காரணத்தினால் இருக்கலாம். பெற்றோர்கள் முதலிலே ஈஸ்வர சங்கல்பத்துக்குத் தலை குனிந்து, 'இக் குழந்தை தேவநாயகர்களுள் ஒருவருடைய அவதாரமாகவே யிருக்கவேண்டும்!' என்று நினைத்தார்களாயினும், பதினாறு வருஷங்கட்கு மேலாகப் பிள்ளை இம் மாதிரி யிருந்துவிடுவதென்றால் பெற்றோர்கட்கு மனம் சகிக்குமா? குழந்தை பிறந்தும், அதன்மழலை மொழிகளைக் கேட்பதற்கும், பால சேஷ்டைகளையும் லீலைகளையும் கண்டு களிப்பதற்கும் கொடுத்து வைக்காமற் போய்விட்டோமே!" என்று அவர்கள் மனம் வருந்தினார்கள்; தாங்கள் செய்த பாபத்தின் பயனாகத் தங்களுடைய குழந்தை ஊமையாகவும் ஜடமாகவும்போய்விட்டதோ என்று நினைத்தும் மனம் வருந்தினார்கள்; ஏனெனில், பெற்றோர் செய்த பாவம் ஏழாவது தலைமுறைச் சந்ததியார் வரையில் பீடிக்கும்" என்று பழையகாலத்துச் சட்டமொன்று உளதே.

## ஸ்ரீ மதுரகவிகள்

இந்த ஸ்ரீ சடகோபாழ்வார் பூமியிலே ஜனனமாவதற்கு அநேக வருஷங்களுக்கு முன்னமேயே, ஸ்ரீ வைஷ்ணவமத ஸ்தாபகர்களுள் ஒருவராகிய ஸ்ரீ மதுரகவியாழ்வார் என்பார் திருக்கோவளூர் என்னும் கிராமத்திலே நாராயணர் என்னும் திருநாமமுடைய ஒரு சோழியப் பிராமணருக்குப் புத்திரனாகப் பிறந்துவிட்டார். "இவர், வைகுந்தத்திலே சதாகாலமும் சாக்ஷாத் ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் சாந்நித்திய ஆநந்த மஹிமையை அனுபவித்து இரு

மாப்புற்றிருக்கும் குமுதனுடைய அம்சமாகப் பிறந்தவர்" என்று சொல்லப்படுகிறது.

"பரிசுத்தமான தாம்ரபரணி நதி தீரத்திலே, ஸ்ரீ கருடாம்சம் பெற்று, ஸ்ரீ மரதுகவியாழ்வார் என்று ஒருவர் ஸ்ரீ சடகோபரிடத்திலே அத்தியந்த பக்தி செலுத்துவோராகப் பிராஹ்மணகுலப் பெற்றோர்களுக்குப் பிறப்பார்" என்று ஸ்ரீ பத்மபுராணம் இதற்கு மேற்கோள் கூறுகிறது. இந்த மதுரகவியாழ்வார் துவாபரயுகம் ஆரம்பித்து 88,38,778 வருஷங்களுக்குப் பின் ஈஸ்வர வருஷத்திலே, சைத்திர மாசத்திலே, சைத்திரா நக்ஷத்திரத்திலே, சுக்கிர வாரத் தன்று ஜனனமானவர்.

இவர் எம்பெருமானிடத்திலே இணையற்ற பக்தி செலுத்தி வளர்ந்துவந்து, வயது பதினாறு ஆனவுடன், இவருக்கு 'ஹிந்துஸ்தானத்திலுள்ள க்ஷேத்திரங்களையெல்லாம் தர்சிக்கவேண்டும்' என்னும் ஒரு ஆசையுண்டாயிற்று. அவ்வாறே அவர் புறப்பட்டு வடதேசத்திலே யுள்ள க்ஷேத்திரங்களையெல்லாம் தர்சித்து, அவ்விடத்திலுள்ள தீர்த்தங்களி லெல்லாம் ஸ்நாநம் செய்து சுற்றிக் கடைசியாக அயோத்திமா நகரம் வந்து சேர்ந்தார்.

இவர் இவ் வூரில் சிலநாள் வசித்து வருகையில், ஒருநாள் இரவு பளிச்சென்று ஜகஜ்ஜோதியாய் ஒரு வெளிச்சம் இவருடைய கண்களுக்குத் தென்பட்டது; அது அமைதியாயும், ஆடாமல் உறுதியாயும் தோன்றிற்று. மதுரா

கவியாழ்வார் அதனை நன்றாக உற்று உற்றுப் பார்த்தார்; அது தென் திசையிலிருந்து வருவதாக அவருக்குத் தோன்றிற்று. முதலில் அவர் இந்த ஜோதியைப்பற்றிப் பிரமாதமாக ஒன்றும் நினைக்கவில்லை. 'அயோத்திக்குத் தென்புறமுள்ள ஏதேனும் ஒரு கிராமத்தில் பெரு நெருப்புப் பிடித்து, அதனால் உண்டாகும் வெளிச்சமோ, என்னவோ? அல்லது தென்புறத்துக் காடுகளிலே நெருப்புப் பிடித்து எரிகிறதோ, என்னவோ' என்று நினைத்து அவர் முதலில் அதைப் பற்றி அதிகம் கவனியா திருந்துவிட்டார்.

ஆனால், அவ் வெளிச்சம் இரண்டாவது நாளும் அவருக்குத் தோன்றிற்று. உடனே அவர் பின் வருமாறு யோசனை செய்யலானார். என்ன! தினந்தோறுமா தென்புறத்துக் கிராமங்கள் நெருப்புப் பிடித்து எரியும்? இல்லை, இதில் ஏதோ விசேஷ மிருக்கிறது; எப்படியேனும் இதை அறிந்துகொள்ளவேண்டும். இருக்கட்டும், பார்ப்போம்; இன்றிருந்து நாளையும் பார்ப்போம்!' என்று தீர்மானித்துக் கொண்டு அவர் அன்றைப் பொழுதைப் போக்கினர். மூன்றுவது நாளும் அந்த ஜோதி அவருக்குத் தோன்றிற்று. ஆகவே, மதுரகவி யாழ்வாருக்கு 'இந்த ஜோதியின் தோற்றத்திலேஏதோ ரஹஸ்யம் இருக்கிறது!' என்றுபுலப்பட்டு, 'இதைக் கண்டறியவேண்டும்' என்னும் ஆவல் அவரிடத்திலே பெருகிற்று. உடனே அவர் அந்த ஜோதி தோன்றும் மார்க்கமாகப் புறப்படலானார்.

ஸ்ரீ மதுரகவிகள் பகலெல்லாம் உறங்குவார்; இரவெல்லாம் அந்த ஜோதி தோன்றும் திசையை நோக்கி நடப்பார். அந்த ஜோதி அவருக்கு இடைவிடாமல் தினந்தோறும் தோன்றிக்கொண்டே யிருந்தது. பரிசுத்த க்ஷேத்திரங்கள் பல கடந்தார்; கடந்தும், இந்த ஜோதியின் உற்பத்தி ஸ்தானம் இன்னும் தெற்கே போய்க்கொண்டே யிருந்தது. கடைசியாக, 'இந்த ஜோதி ஸ்ரீரங்கத்திலிருந்து புறப்படலாமோ?' என்று ஐயுற்று, ஸ்ரீரங்கம் வந்து சேர்ந்தார்; ஆனால், அங்கும் அவருக்கு அந்த ஜோதியைப் பற்றிய ரஹஸ்யம் பிடிபடவில்லை. ஜோதியானது இன்னும் தெற்கே யிருந்து பிரகாசித்துக்கொண் டிருந்தது. ஆகவே, அவர் மேலும் மேலும் யாத்திரை செய்து, கடைசியாகக் குருகூர் என்னும் திருநகரிக்கு வந்து சேர்ந்தார். அதுதான் ஜோதியின் உற்பத்தி ஸ்தானம். ஆயினும், அவர் அதைத் தெரிந்துகொள்ள முடியாமல், இன்னும் தெற்கே யாத்திரை செய்து செல்ல, ஜோதியானது வடக்கே புலப்பட்டது. ஸ்ரீ மதுரகவிகள் உடனே மறுபடியும் வடக்கே புறப்பட்டு திருநகரிக்கு வந்து, அங்கு நன்கு ஆராய அந்த ஜோதி பரிசுத்த புளியம் விருக்ஷத்தினிடமிருந்து வருவதாகக் கண்டுகொண்டார்.

ஆ! ஆ! என்ன ஆச்சர்யம்! அந்த விருக்ஷத்தி னடியிலே ஒரு சிறு வாலிபர் பத்மாசனமிட்டுக் கண்கள் மூடிச் சித்திரப் பதுமைபோல அசைவற்று, ஆழ்ந்த சமாதி நிஷ்டையில் இருந்ததை ஸ்ரீ மதுரகவிகள் பார்த்தார். அந்த

வாலிபருடைய சிரசிலிருந்தும் ஹிருதயத்திலிருந்தும் அந்த ஜோதி புறப்பட்டு, அவரைச் சுற்றி நாலாபக்கங்களிலும் ஒளி வீசி, கண் பார்வை யெட்டிய வரையில் பிரகாச மளித்துப் பின்னர் ஸ்ரீ சடகோபரிடத்தில் கலந்துவிட்டது.

மதுரகவிகள் பார்த்தார்; மூக்கிலே கையை வைத்தார்; ஆச்சர்ய மடைந்தார்; "என்ன இது? இவரிடத்திலே இவ்வளவு அறிவும், இவ்வளவு அன்பும் உண்டா? இவருடைய சிரசிலிருந்து அறிவொளி வீசுகிறது; இவருடைய ஹிருதயத்திலிருந்து அன்பொளி பரவுகிறது. என்ன செய்யலாம்? இவரைப்போல மஹாத்மாக்கள் உலகிலே எப்பொழுதேனும் உற்பவித்த துண்டா?" மதுரகவிகளுக்குப் பேசுவதற்கே நாவெழவில்லை; அவ்வளவு வியப்பு உண்டாய்விட்டது. 'என்ன? இவர் மனிதர்தானா? நம்மைப்போல் ஒருவர்தானா? நம்மைப்போல இவருக்கு நினைப்புக்கள் உண்டா? பகிர்முக உணர்ச்சியை இவர் உணர்வாரா?' என்றெல்லாம் நினைத்தார் மதுரகவிகள். 'ஸ்ரீசடகோபரைப்பரிசோதித்துப் பார்க்கவேண்டும்' என்று ஒரு எண்ணம் உண்டாய்விட்டது மதுரகவிக்கு. தாம் செய்வது தப்பு என்றுகூட நினைக்காமல், மதுரகவிகள் ஸ்ரீசடகோபருக்கு முன்னிலையில் ஒரு பெரிய பாறுங்கல்லை !(கற் பாறையை) உருட்டிக்கொண்டு வந்து, தூக்கித் தொப்பென்று கீழே போட்டார்.

ஆ! ஆ!! இதுவரை கண் விழித்து உலகத்தையே பாரா திருந்த உத்தமர் இப்பொழுது கண்களை விழித்தார்; ஒரு வேளை தாம் உபதேசிப்பதற்குத் தகுந்த பரிபாக முடைய

சிஷ்யன் வந்துவிட்டானென்று கருதிக் கண்களை விழித்தார் போலும்! இல்லையேல், வடதேசத்திலே யிருந்த மதுரகவி களுக்குத் தமது ஜோதிஸ்வரூபத்தைக் காட்டி, ஏன் இங்கு அவரை ஆகருஷித்துக் கொண்டுவரவேண்டும்? மதுரகவி கள் திடுக்கிட்டுவிட்டார்; "இவர் பிறவிமுதல் கண்களை விழி த்து உலகினைப் பார்த்ததே யில்லை" என்று எல்லோரும் கூறுகிறார்களே; இவர் இந்தப் பாறுங்கல் விழுந்த ஓசை யைக் கேட்டுக் கண்களை விழித்தது ஆச்சர்ய மல்லவா? முதலில் மதுரகவிகள் திடுக்கிட்டுப்போய்விட்டாராயினும், பின்னர் அவர் தமது மனத்தைத் திடப்படுத்திக்கொண்டு, ஸ்ரீ சடகோபரை நோக்கி, "ஸ்வாமி! ஜடத்திலிருந்து உண்டாகும் சிறியதுக்கு ஆகாரம் யாது? இருப்பிடம் யாது?" என்று ஒரு கேள்வி கேட்டார். "ஜடமானது அசித்; அதாவது, சைதந்யப்பிரகாசமற்றது, பிரக்ஞையற் றது. சிறியதாவது அணுவுக் கணுவாயுள்ளது. 'இது ஜடத்தினல் உண்டானது' என்றால், 'இது ஜடத்தினல் மூடப்பட்டிருக்கிறது' என்றே பொருள். மதுரகவிகள் இந்தக்கேள்வி கேட்டதுதான் தாமதம்; ஸ்ரீ சடகோபர் அவர்மீது கருணைக்கண் பாலித்து, "அது அதையே ஆகார மாகக் கொண்டு அதனிடத்தேயே இருக்கிறது" என்று சுருக்கமாகச் சுகமாக மறுமொழி யளித்தார். கேள்வி எப்படி அபாரமானதோ அப்படியே மறுமொழியும் இருந் தது. ஆயினும், மதுரகவியினுடைய சந்தேகம் நிவிருத்தி யாய்விட்டது.

மதுரகவியின் கண்கள் திறக்கப்பட்டுவிட்டன; அவருடைய பூர்வஞாயக சக்திகளெல்லாம் வெளியாகத் தொடங்கின; மதுரகவிகள் தமது பூர்வ ஜன்மங்களை யெல்லாம் ஓர்ந்து பார்க்கத் தொடங்கினர்; இந்த ஸ்ரீ சடகோபர் தமக்கு எண்ணற்ற ஜன்மங்களாகக் குருவாக வந்துகொண்டிருப்பதையும் அறிந்தார்; உடனே ஸ்ரீ சடகோபருடைய பாதாரவிந்தங்களில் விழுந்து பணிந்து எழுந்தார்; ஆநந்தக் கண்ணீர் உதிர்த்தார்; ஆடினர்; பாடினர்; என்றும் அவருக்குப் பணிவிடை செய்துகொண் டிருக்கும்படியான பாக்கியம் தமக்குக் கிடைக்க வேண்டுமென்று பிரார்த்தித்தார். மறுபடியும் ஸ்ரீ சடகோபரின் முன்னே சாஷ்டாங்கமாக விழுந்தார்; அவருடைய இரு பாதங்களையும் கெட்டியாகப் பிடித்துக்கொண்டார், "என் அப்பனே! என் சற்குருமூர்த்தி! என்னைக் கைவிடாதே! என்னை நீதான் காக்கவேண்டும்; வேறு கதி யில்லை" என்று கண்ணீர் ஆறாக விட்டுக் கதறி நிற்க, ஸ்ரீ சடகோபர் அவரைத் தூக்கி நிறுத்தி, "நீ பயப்படவேண்டாம்; இனிமேல் இப் பூமியில் நீ ஜனன மரணத்துக் குட்படமாட்டாய்" என்று அபயாஸ்தம் அளித்து ஆதரித்தார்.

இச் சமயத்திலே வைகுண்டத்தில் எல்லோருக்கும், ஈ யெறும்புமுதல் எண்ணிறந்த ஜீவராசிகள் அனைத்துக்கும் மாதாவாகிய ஸ்ரீ லக்ஷ்மிதேவி எம்பெருமானை நோக்கி, "உலகிலுள்ள சர்வ ஜனங்களும் சுலபமாக உயர்வை யடைவதற்கு ஒரு மார்க்கம் உண்டுபண்ணவேண்டும்",

என்று கேட்டுக்கொள்ள, அவ் வேண்டுகோளுக் கிணங்கி, சாக்ஷாத் பகவானே நேரில் பிரத்தியக்ஷமாகி, ஸ்ரீ சடகோபருக்குப் பிரஹ்மஞான உபதேசம் செய்துபோனார். ஆகாசத்திலே கருடன் வட்டமிட்டு ஸ்ரீ சடகோபரின் முன்னே வந்து நின்றது; சாதாரண ஜனங்களுக்குக் கருடன் ஒன்றே தெரிந்தது. ஆனால், ஸ்ரீசடகோபர்: ஸ்ரீ லக்ஷ்மி சமேதராய், கருடவாகனரூடராய் சாக்ஷாத் கேசவனே எதிரே வந்து தர்சனம் அளித்ததாகக் கண்டார். ஸ்ரீ சடகோபர் பிரத்தியக்ஷத்திலே மஹா சந்நிதானத்தை யடைந்தார். அவருடைய அறிவை மூடியிருந்த திரை நீக்கப்பட்டு விட்டது. பரமபுருஷருடைய அகண்ட கல்யாண குணங்களும் சக்திகளும் அவருக்கு இப்பொழுது வியக்தமாகத் தெரிந்தன. அவர் ஆநந்தம் பொங்கிக் களிக்கடலில் ஆழ்ந்தார்; அன்பிலே லயித்தார்.

இவ்விதமாக ஸ்ரீ சடகோபர் தாம் கண்ட காக்ஷியினால் தமக்கு ஏற்பட்ட ஆநந்தானுபவங்களின் மத்தியிலே அவருடைய மனத்திலே ஒரு வேதனை யுண்டாயிற்று. "உலகு முழுதும் துன்புற்றுக்கொண்டிருக்க, நான் மாத்திரம் ஆநந்த மனுபவிப்பதா? அது கூடவே கூடாது. அப்படியாயின், இதைவிட அவமானம் வேறு என்ன வேண்டும்?" இப்படியெல்லாம் ஸ்ரீ சடகோபர் நினைக்க ஆரம்பித்தார். ஸ்ரீ சடகோபர் ஜீவகாருண்ய சொரூபியாய்விட்டார். தம்முடைய ஆநந்தத்தைப் பிறரும் பங்கிட்டு அநுபவிக்க வேண்டுமென்று அவர் விரும்பினார். காலமோ வித்தி

யாசப்பட்டுக்கிடந்தது. ஸம்ஸ்கிருத பாஷா விற்பத்தி குறைந்துவிட்டது; எல்லோரும் ஸம்ஸ்கிருதம் தெரிந்தவர்களா யிருந்ததுபோய், இப்பொழுது, ஸம்ஸ்கிருதம் தெரிந்தவர்கள் மிகமிகச் சிலரேயா யிருந்தனர். ஆகையினால், நமது பூர்வீகக் கிரந்தங்களி லுள்ள உண்மைகளையும் பக்தி ரசத்தையும் எடுத்துக் கையாண்டு அநுபவிப்பதற்குச் சாதாரண ஜனங்களுக்கு முடியாமற் போய்விட்டது. ஆகவே, இப்பொழுது ஸ்ரீ சடகோபர் மனுஷ்ய வர்க்கத்துக்கு உய்யும் நெறியை உபதேசிக்க உத்தேசித்த பொழுது, 'ஸம்ஸ்கிருத பாஷையின் மூலமாக உண்மையைப் பரப்பினால் அது உலகோபகாரமா யிராது' என்று நினைத்தார். ஞானலயத்தை, ஜாதி வித்தியாச மின்றி, ஆண் பெண் என்ற வேறுபாடு இன்றி, எல்லோருக்கும் திறந்துவிடத் தீர்மானித்தார். தென்னிந்தியாவிலே பெரும்பான்மையும் வழங்கிவருவது தென்மொழி யெனப்படும் தேன்மொழியாம் தமிழ்ப்பாஷை யல்லவா? இப் பாஷையின் மூலமாக ஸ்ரீ சடகோபர் ஜனங்களுக்கு உண்மைகளை எடுத்துரைக்கத் தொடங்கினர். இதற்கு முன்னே புத்தர் ஒருவர்தாம் சாதாரண ஜனங்களுடைய பாஷையிலே உண்மைகளை வெளியிட்டவர்; மற்ற ஆசார்யர்களெல்லோரும் ஸம்ஸ்கிருத பாஷையிலேயே தங்கள் வித்துவத் திறமைகளைக் காட்டிவந்தார்களை யொழிய, உண்மையான உணர்ச்சியினால் ஒரு கார்யமும் செய்யவில்லை. இவர், நமது ஜீவகாருண்ய சொரூபியாகிய ஸ்ரீசடகோபர்: திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி என்

னும் கீர்த்தங்களை இயற்றி, எண்ணற்ற பக்தகோடிக ளுக்கு இன்பத் தேனை யூட்டினார்.

திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி இம் மூன்று நூல்களும் முறையே ரிக்வேதம், எஜுர் வேதம், அதர்வண வேதம் ஆகிய இம் மூன்று வேதங்களி னுடையவும் கருத்துக்களை யடக்கிக்கொண்டிருக்கின்றன. அவருடைய நூல்களிலே மிகமிகப் பிரசித்தி பெற்றதும், உத்தம உண்மைகளை உள்ளடக்கிக் கொண்டுள்ளதுமான திருவாய்மொழி: சாமவேத மகா வாக்கிய ரகஸ்யத்தை உட் கொண்டுள்ளது. திருவிருத்தம் நூறு பாடல்கள் அடங்கி யது. திருவாசிரியம் ஏழு பாடல்க ளடங்கியது; பெரிய திருவந்தாதி எண்பத்தேழு பாடல்க ளடங்கியது; திருவாய் மொழி, 10 அத்தியாயங்களாகப் பிரிக்கப் பெற்று, 1102 பாடல்களை யடக்கிக்கொண்டுள்ளது. இதுவே, வேதங்களி லே காணப்படும் நித்திய உண்மைகளைப்பற்றிய மிகமிகத் தெளிந்த வியாக்யானமாம்.

ஸ்ரீ சடகோபர் இவ்வுலகிலே யுள்ள ஏழை ஜனங்க ளுடைய துக்கத்தைப் போக்கடிக்குமாறு, இப் பெரு நூல்களை இயற்றிய பின்னர், தமது ஞானதிருஷ்டியிலே, ஆர்யாவர்த்தத்திலே யுள்ள பரிசுத்த க்ஷேத்திரங்களி லிருக்கும் திவ்ய மூர்த்தங்க ளனைத்தையும் அந்தப் பரி சுத்தமான புளியம் விருக்ஷத்தினடியி லுட்கார்ந்துகொண் டே தர்சனம் செய்தார். வானவரும் மண்ணவரும் மற்றும் ஸ்வேதத்விபத்தி லுள்ளவர்களும் வந்து அவருடைய அழ

வணங்கி நின்றார்கள்; இதை யெல்லாம் அவர் தமது மனக் கண்ணாலே கண்டும், சற்றும் மயக்கமுறாமல், தமது சித்தத்தைச் சற்றும் சலியாது சாக்ஷாத் பகவானிடத்திலேயே வைத்திருந்தார். பண்டித பாமர சாதாரண சர்வ ஜனங்களுக்கும் இவர் ஹிதமான விஷயங்களையே உபதேசித்து அவர்களைத் தடுத்தாட்கொள்வதையே தர்மமாகக் கொண்டிருந்தமையால், இவருக்கு "ஆளவந்தார்" என்று ஒரு பெயர் வழங்கலாயிற்று. மற்ற ஆழ்வார்கள் எல்லோரும் அவரவர்களுடைய வாழ்நாட்களிலே ஒரு சந்தர்ப்பத்திலே அல்லது ஒரு காலத்திலே ஆண்டவனுடைய அருள் பெற்றிருக்க, இவர் ஒருவர்தாம் பிரபஞ்சத்தைத் தீண்டவே தீண்டாது, பிறவிமுதல் பெருமானிடத்திலே பிரியம் செலுத்திப் பித்துப் பிடித்து, பிரஹ்ம நிஷ்டையில் எழுந்தருளியிருந்தவர். ஆதலால், ஆழ்வார்களுக்குள்ளே இவரை ஆத்மா என்றும், மற்ற ஆழ்வார்கள் சரீரமென்றும் வைஷ்ணவ கிரந்தங்கள் கூறுகின்றன.

பூதத்தாழ்வார் சிரசாகும்; பேய்கையாழ்வாரும் பேயாழ்வாரும் கண்களாம்; பெரியாழ்வார் முகமாம்; திருமழிசையாழ்வார் கழுத்தாம்; குலசேகராழ்வாரும் திருப்பாணாழ்வாரும் கைகளாம்; தொண்டிரப்பொடியாழ்வார் மார்பாம்; திருமங்கையாழ்வார் உந்தியாம்; மதுரகவியாழ்வார் பாதங்களாம்.

இவ்விதமாகப் பல அங்கங்களும் வாய்ந்த ஆழ்வார் சரீரத்துக்கு நமது நம்மாழ்வார் ஆத்மாவாய் நின்றார்.

சாக்ஷாத் பகவானுக்கு நமது நம்மாழ்வாரிடத்திலே யுள்ள அத்தியந்த வாத்சல்யத்தைக் கருதி, எம்பெருமானுடைய பாதரக்ஷைகளுக்குச் சடகோபம் என்று பெயராம். இத்தகைய பிரக்கியாதியுடனும் மகிமையுடனும் விளங்கிய ஸ்ரீ சடகோபர் மனுஷ்ய வர்க்கத்தின் நன்மையின் பொருட்டு முப்பத்தைந்து வருஷங்கள் வரை இம் மாம்சக் கூண்டிலே வசித்துவிட்டு, பின்னர் வைகுண்ட ப்ராப்தி யடைந்து, நித்திய கல்யாண நிலைமையைப் பெற்றுவிட்டார்.

இவருடைய பிரதம சிஷ்யராகிய மதுரகவிகள் ஸ்ரீ சடகோபரினும் பல வருஷங்கள் வரை வயதில் மூத்தவராயினும் ஸ்ரீசடகோபர் பரலோக ப்ராப்தி யடைந்ததற்குப் பின் ஐம்பது வருஷங்கள் வரையில் இருந்து, தமது குருவின் பிரபந்தங்களை எங்கெங்கும் பாடி, ஈஸ்வரனை யாராதித்து, இன்பத்தைப் பெருக்கிக்கொண்டே தேச சஞ்சாரம் செய்து வந்தார். இவர், கண்ணிநுண் சிறுத்தாம்பு என்று ஆரம்பித்துத் தமது குருவைப்பற்றிப் பதினொரு பாடல்களால் ஒரு சிறு காவியம் இயற்றினார். தமது குருமூர்த்தியாகிய ஸ்ரீ சடகோபருடைய விக்கிரக மொன்றைத் திருநகரியிலே பிரதிஷ்டை பண்ணி, வெகு விமர்சையாகவும், கோலாகலத்துடனும், ஆடம்பரத்துடனும் உற்சவங்கள் செய்துவைத்தார்.

இவ் வுற்சவ சந்தர்ப்பங்களிலே ஒருசமயத்தில், மதுரைத் தமிழ்ச் சங்கத்தைச் சேர்ந்த சிலர், "உங்க

ளுடைய ஆழ்வார் ஒரு பக்தனே யாவர்; ஈஸ்வர னல்லர். அவர் மதுரைச் சங்கத்திலே தமது கிரந்தங்களைப் பரி சோதனைக்கு விடுத்ததில்லை; அக் கிரந்தங்கள் இதுகாறும் சங்கப் பலகையில் ஏற்றப்படவில்லை. ஆகையால், 'தமிழ்ப் பாஷையிலே வேதங்களை வெளியிட்டவர்' என்று நீங்கள் அவரைக் கூற லாகாது'' என்று ஆக்ஷேபித்தார்கள்.

இதனால் ஸ்ரீ மதுரகவிகளுக்கு நிரம்ப மனவருத்தம் உண்டாய்விட்டது; மதுரகவிகள் ஏழை யானதினாலே அவரை யாதரித்துப் பேசுதற்கு எவரும் முன் வரவில்லை. ''எனது குருமூர்த்தி எனக்குச் சரணாகதிக் கொள்கையை ஊட்டியிருக்க, நான் ஏன் பயப்படவேண்டும்? இப்பொழுது நான் எனது குருமூர்த்தியி னிடத்திலே சரணாகதி யடைந்துவிடுகிறேன்'' என்று தீர்மானித்துக்கொண்டார் ஸ்ரீ மதுரகவிகள். மறுநாள் விருத்தாப்பியப் பிராஹ்மணர் ஒருவர் வந்து, ''அப்பா! மதுரகவி! பபப்படாதே! திரு வாய்மொழியில் உள்ள ஒரு பாடலின் ஒரு அடியை மாத் திரம் நீ ஒரு பனையோலையிலே எழுதி, மதுரைச் சங்கப் பலகையிலே கொண்டுபோய் வை! நீ செய்ய வேண்டி யது அவ்வளவுதான்; மற்றவைகளை யெல்லாம் ஸ்ரீ சட கோபர் பார்த்துக்கொள்வார்'' என்று சொல்லிவிட்டுப் போனார்.

ஸ்ரீ மதுரகவியாழ்வார் அப்படியே செய்ய, ஆ! ஆ! அந்தச் சங்கைப் பலகையானது தன்மீது உட்கார்ந்திருந்த கவிகள் அனைவரையும் கீழேயுள்ள தண்ணீரில் அமிழ்த்து



போகுமாறு தள்ளிவிட்டு, இப் பனையோலைத் துண்டை மாத்திரம் தாங்கி நின்றது. சங்கப் புலவர்கள் மிகுந்த கஷ்டத்துடனே தண்ணீரினின்றும் வெளிக் கிளம்பி, தாங்கள் செய்த அபராதத்துக்காக மனஸ்தாபப்பட்டார்கள்.

"ஸ்ரீ சடகோபர் ஈஶ்வராம்சமே" என்றும், "அவர் அகண்ட ஞான சற்குருவே" என்றும் இப்பொழுதுதான் சங்கப்புலவர்கள் அறிந்துகொண்டார்கள். அவர்களுடைய கர்வம் அடங்கி, அவர்க ளனைவரும் மதுரகவி யாழ்வாரிடத்தே வந்து மன்னிப்புக் கேட்டுக்கொண்டார்கள். இவர்களில் ஒவ்வொருவரும் ஸ்ரீ சடகோபரை ஸ்தோத்தரித்து ஒரு பாடல் பாடினார்கள்; அவர்களுடைய வாயிலிருந்து—அவர்கள் உள்ளத்திலே யாது கருதியபோதிலும்—வந்ததெல்லாம் பின் வருவனவேயாம்:—

"வைகுண்டம் எங்கே யுள்ளது? அது திருப்பாற்கடலா? அல்லது திருநகரியா? நாம் ஈஶ்வரனை எப் பெயரிட் டழைப்பது? நாராயணனென்று? அல்லது பராங்குசனென்று? அவருடைய கழுத்தைச் சுற்றி யாது உள்ளது? துளசி மாலையா? அல்லது வகுளபுஷ்ப மாலையா? அவருக்கு எத்தனைக் கைகள் உண்டு? நான்கா? அல்லது இரண்டா?"

அவர்கள் ஸ்ரீ சடகோபாழ்வாருடைய மகிமைகளை நினைக்க, பயமும் பிரமையும் மிகுந்தவர்க ளானார்கள். "இது என்ன? ஸ்ரீ சடகோபர் மகா பெரியவரே. அவ

ருடைய மார்க்கங்களோ அதி ரகஸ்யமானவை. பக்ஷி ராஜனாகிய கருடனுக்கு முன்னே ஈயானது எம்மாத்திரம்? பகலவனைக் காட்டிலும் மின்மினிப் பூச்சி அதிகமாகப் பிரகாசித்துவிடுமோ? கொடும் புலியுடனே நாய் போட்டி யிடுமோ? மிருகேந்திரனுடனே குள்ள நரி போட்டியிடுமோ? பயங்கரமான பூதமானது தேவகன்னிகையாகிய ஊர்வசியுடனே அழகில் போட்டியிட முடியுமோ? ஸ்ரீ சடகோபருடைய ஆயிரம் பாடல்களுக்கு முன்னே உலகிலுள்ள கவிதை யெல்லாம் எம்மாத்திரம்—?" இவ்விதமாக இந்தச் சங்கத்துப் புலவர்கள் ஸ்ரீ சடகோபரை ஸ்தோத்திரம் செய்வதிலே ஒருவரை யொருவர் போட்டி போட்டுக் கொண்டார்கள்.

ஸ்ரீ மதுரகவி யாழ்வார் இவ்விதமாக வெல்லாம் தமது குருவினுடைய அருமையையும் பிரக்கியாதியையும் உலகிலே பரப்புவதற்காகப் பெரும்பாடு பட்டு, மகா பக்தராய்க் காலம் கழித்துவந்தார். இவர்தான் கம்பரும் அவருடைய தோழர்கள் முந்நூற்றுவரும் எதிர்த்து வாதாடிய ஸ்ரீ மதுர கவிகள். இவர் பிரசித்தி பெற்ற தமிழ் வித்வானாயிருந்தா ரென்பதிற் சற்றும் சந்தேக மில்லையாயினும், இவருடைய குருபக்திப் பிரபாவமே எல்லோராலும் பெரிதும் கொண்டாடற்பாலதாயிருந்தது. இவர் தாம் கற்ற வித்தையை யெல்லாம் பக்தி மார்க்கத்தில் செலவழிப்பதிலேயே உபயோகித்துவந்தார்.

---

## ஸ்ரீ நாதமுனி யோகீஸ்வரர்

அநேக நாட்களாய்விட்டன; ஸ்ரீ சடகோபருடைய திருவாய்மொழியானது காலக்கிரமத்திலே மறைந்துவிட்டது. சிலருக்கு இரண்டொரு பாடல்களே தெரிவனவாயிருந்தன. இச் சமயத்திலே, சோழராஜனுடைய தலைநகரமாகிய வீரநாராயணபுரம் என்னும் ஊரிலே, ஈஸ்வரபட்டர் என்னும் பெயருள்ள ஒரு பிராஹ்மணர் இருந்தார். அவருக்கு நாதமுனி என்ற பெயருடனே ஒரு புத்திரன் இருந்தார். இவர் கலியுகம் பிறந்து 3684 வருஷங்கட்குப் பின், சோபகிருது வருஷத்திலே, ஆனி மாதம் 7-ம் தேதி புதவாரம் அனுஷ நக்ஷத்திரத்திலே, ஸ்ரீ விஷ்வக்ஸேனருடைய பிரதானிகளுள் ஒருவராகிய ஸ்ரீ கஜாநநருடைய அம்சமாகப் பிறந்தார்.

இவருடைய ஜனனத்தைப்பற்றி ஸ்ரீவிருத்தபத்ம புராணத்திலே பின் வருமாறு குறிக்கப்பட்டிருக்கிறது:—

"நாதர் என்ற பெயருடனே ஒரு மஹா யோகி கிளம்புவார்; அவர் தமது யோக சக்தியினாலே உலகமானது நெடுநாளாக இழந்திருந்த ஸ்ரீ சடகோபருடைய திருவாய்மொழியை மறுபடியும உஜ்ஜீவிப்பித்துக் கொடுப்பார்."

இந்த நாதமுனிவருக்கு ஈஸ்வரமுனி என்றொரு புத்திரனுண்டு. ஒருநாள் ஈஸ்வரபட்டரும், நாதமுனியும், ஈஸ்வரமுனியும் அவ்வூர் க்ஷேத்திரத்தினுள்ளே ஸ்வாமி தர்சனத்துக்காகச் சென்றிருக்கையில், இம் மூவருக்கும் ஏக

காலத்திலே ஒரு எண்ண முண்டாயிற்று. இவர்கள் பரத கண்டத்திலுள்ள பரிசுத்த க்ஷேத்திரங்கள் அனைத்தையும் தரிசித்துத் தீர்த்த யாத்திரை செய்துவரக் கருதினார்கள். எம்பெருமான் சந்நிதானத்திலே மூவருக்கும் ஒரே காலத்தில் இவ்விதமான எண்ணம் உண்டானதினாலே, "இது ஈஶ்வராக்ஞையே" என்று அவர்கள் கருதி, அவ்விதமே யாத்திரை செய்யப் புறப்பட்டார்கள். அவர்கள் பல க்ஷேத்திரங்களுக்கும் சென்று கடைசியாகக் 'கோவர்த்தன'த்துக்கு வந்து சேர்ந்தவுடனே, அந்த ஸ்தலத்தின் ரம்யமான காட்சியும் ஐதீகங்களும் மகிமைகளும் அவர்களுடைய மனத்தைக் கவர, அவர்கள் அங்கேயே ஸ்திரவாசம் செய்ய நிச்சயித்தார்கள்.

இவ்விதமாக அவர்கள் அங்கே சில வருஷங்கள் தாமதித்துவர ஒருநாள் அங்கு எழுந்தருளியிருந்த ஸ்ரீ ராஜ கோபாலமூர்த்தி அவர்களுக்குக் கனவிலே தோன்றி, "நீ எவ்வளவு சீக்கிரத்திலே வீரநாராயணபுரம் வந்து சேர முடியுமோ அவ்வளவு சீக்கிரத்திலே நீ வரவேண்டுமென்று நான் விரும்புகிறேன்" என்று சொல்லி மறைந்தார். அவர்களும் அப்படியே தங்களுடைய ஊருக்குத் திரும்பிப் புறப்பட்டு வரும் மார்க்கத்திலே அநேக புண்ணிய தீர்த்தங்களிலே ஸ்நாநம் செய்து, க்ஷேத்திர தர்சனம் செய்துகொண்டு, மீண்டும் வீரநாராயணபுரம் வந்து சேரவே, அவ்விடத்து ஸ்ரீ வைஷ்ணவர்கள் இவர்களை மிகுந்த கௌரவத்துடனே வரவேற்று, அவர்களுக்குக்

காலக்ஷேபத்துக்கு வேண்டியதை யெல்லாம் கொடுத்துதவ, அவர்களும் வேறு எத்தொழிலையும் அநுசரியாதவர்களாதலால் ஸ்ரீ விஷ்ணு பக்தி யொன்றினையே பிரதானமாகக் கொண்டு காலங் கழித்துவந்தார்கள்.

ஸ்ரீ நாதமுனிகள் மஹா வித்வானும் யோக நிஷ்டாபரருமா யிருந்தபடியால், வெகு தூரத்திலிருந்தும் அவருக்குச் சிஷ்யர்கள் வந்து சேர்ந்தார்கள். அநேகர் இவரைத் தரிசிக்கவும் வந்தார்கள். இப்படி வந்தவர்களுக்குள்ளே மேல் திசையிலிருந்து வந்த சிலர் திருப் பிரபந்தத்திலிருந்து "ஆராவமுதே" என்று தொடங்கிய பாடலை ஸ்ரீ ராஜகோபால மூர்த்தியின் சந்நிதானத்திலே பாடினார்கள். ஸ்ரீ நாதமுனிவர் மிகுந்த கவனத்துடனே அப் பாடலைக் கேட்டுவிட்டு, அவர்களை நோக்கி, "இது திரு ஆயிரப் பிரபந்தத்திலே ஒன்றுபோலத் தோன்றுகிறதே; உங்களுக்கு அவை முழுதும் தெரியுமா?" என்று கேட்டார். அதற்கு அவர்கள், "இதற்குமேல் ஒன்றும் தெரியாது; இவ்வொரு பாடலையே நாங்கள் அறிவோம்" என்றார்கள். ஸ்ரீ நாதமுனிகள் "அப் பிரபந்தத்தின் பிரதிகள் உங்கள் பிரதேசத்திலே எங்கேனும் கிடைக்குமா? அல்லது, அவற்றைச் சொல்லிக் கொடுப்பதற்காவது எவரேனும் கிடைப்பார்களா?" என்று கேட்டார். அவர்கள் "இவ்வொரு பாடலையே எல்லோரும் அறிவார்கள்; இதற்குமேல் அறிந்தவர்கள் உண்டு என்று எங்களுக்கு இதுகாறும் தெரியவில்லை" என்றார்கள்.

'ஸ்ரீ நகரியிலே சென்றால், அது ஸ்ரீ சடகோபருடைய ஜனன ஸ்தலமாதலினாலே, அங்கே ஒருவேளை திரு ஆயிரப் பிரபந்தத்தின் பிரதிகள் கிடைக்கலாம், அல்லது அவற்றைக் கற்றுக்கொடுப்பதற்கேனும் எவரேனும் அகப்படுவார்கள்' என்று கருதி, ஸ்ரீ நாதமுனிகள் ஸ்ரீ நகரிக்குச் சென்றார்.

அங்கு ஸ்ரீ நாதமுனிகள் ஸ்ரீ மதுரகவி யாழ்வாருடைய சிஷ்யர்களுள் ஒருவராகிய ஸ்ரீ பராங்குச தாசரைச், சந்திக்கும்படி நேர்ந்தது; அவரை ஸ்ரீ நாதமுனிகள் "ஸ்ரீ சடகோபருடைய திருவாய்மொழியின் பிரதிகள் அகப்படுமா?" என்று கேட்க, அவர் "அகப்படுவது அருமை; திருவாய்மொழியை முற்றும் அறிந்தவர்கள் இப்பொழுது இங்கு எவரும் இல்லை. அவை யெல்லாம் போய்விட்டன. ஆனால், 'கண்ணிநுண்' என்று ஆரம்பிக்கின்ற பீஜமொழி யடங்கிய பாடலை எனக்கு என்னுடைய குரு உபதேசித்திருக்கிறார்; எவரேனும் பரிசுத்தமான ஹிருதயத்துடனும், உண்மையான மனத்துடனும் ஸ்ரீ சடகோபருடைய விக்கிரகத்தின் முன்னே நின்று இப் பாடலை 12,000 தடவை உருப்போடுவாரானால், அவர் சாக்ஷாத் ஈஸ்வரனுடைய கிருபைக்குப் பாத்திரராகி, அவருடைய தர்சன பாக்கியமும் கிடைக்கப் பெறுவர்" என்று கூறினார்.

ஸ்ரீ நாதமுனிகள் திருநகரிக்குச் சென்றதற்கு இன்னொரு காரணமும் கூறப்படுகிறது. அவர் அவ் வொரு பாடலை மாத்திரம் வைஷ்ணவர்களிட மிருந்து கற்றுக்

கொண்டு, கும்பகோணம் சென்று, அந்தப் பரிசுத்த பிர பந்தத்தைத் தமக்கு உபதேசித் தருளும்படி ஸ்ரீ சாரங்க பாணி நாதரை வேண்ட, அவர் "ஸ்ரீ நாதமுனிவரைத் திரு நகரிக்குச் சென்று ஸ்ரீ சடகோபரிட மிருந்தே அவற்றைக் கற்றுக்கொள்ளும்படி ஆக்ஞை செய்தார்" என்றும், "அதனு லேயே ஸ்ரீ நாதமுனிகள் திருநகரி சென்றார்" என்றும் சொல்லப்படுகிறது.

ஸ்ரீ நாதமுனிகள் ஸ்ரீ பராங்குசதாசரை நோக்கி, "பிர பந்தத்தின் ஆயிரத்துச் சொச்சம் பாடல்களும், எப்படி ஏன் மறைந்துவிட்டன?" என்று கேட்க, ஸ்ரீ பராங்குச தாசர் "பிரபந்தத் திரட்டை நாங்கள் இழந்துவிட்ட விதத் தைக் கூறுகிறேன். அது வேத சாஸ்திரங்க ளெல்லா வற்றினு முள்ள சாராம்சத்தை யெடுத்து உரைக்கின்றது; அது எல்லா வகுப்பு ஜனங்களுக்கும் அவரவர்களுடைய ஆத்ம அபிவிருத்தியின் பரிபாக நிலைமைகளுக்குத் தக்க பிரகாரம், மோக்ஷ வாசலைத் தாராளமாகத் திறந்து விட்டுவிட்டது. ஆகையால், அதைப் பக்திபூர்வகமாகப் பாராயணம் பண்ணியவன் எவனும் பகவானுடைய பாதார விந்தங்களை யடையாம லிருக்கவில்லை. வரவர, ஜனங்கள் அதை மிகவும் அபாயகரமானதாகவும், உலக மார்க்கத்துக்கு விரோதமானதாகவும் கண்டு, அதைப் பாராயணம் செய்வதை விட்டுவிடத் தொடங்கினர்கள். சிலர், "எங்கெல்லாம் அப் பிரபந்தத்தின் பிரதிகள் இருந்தனவோ அவற்றை யெல்லாம் தேடிக் கண்

டறிந்து, சேர்த்தெடுத்து அழித்துவிடவேண்டும்" என்றும், "இல்லையேல், அவை அவற்றை வைத்திருந்த குடும்பத்துக்கு அபாயத்தையும் அநர்த்தத்தையும் உண்டாக்கும்" என்றும் கூறத் தொடங்கினார்கள். ஆகையால், 'எங்கெல்லாம் இப் பிரபந்தங்கள் இருந்தன' என்று ஜனங்கள் தேடி யெடுத்து, அவற்றை யழித்துவிடும் பொருட்டு, அவற்றைத் தாம்பிரபர்ணி நதியினுள்ளே எறிந்தார்கள்; அப்பொழுது, ஆ! ஆ! ஒரு ஏடு நீரோட்டத்தை எதிர்த்து நீந்திக் கரையிலே ஒதுங்கிற்று. இதைப் பார்த்திருந்தவர்கள் ஆச்சர்யப்பட்டு, பயம் மிகுந்து, 'அதில் ஏதோ மகத்தான ரஹஸ்யம் இருக்கவேண்டும்,' என்று தீர்மானித்து, அந்த யெடுத்துப் பத்திரமாக வைத்துக்கொண்டார்கள். அப் பாடல்தான் ஸ்ரீ சாரங்கபாணி நாதருக்குச் சமர்ப்பிக்கப்பட்ட பாடல்; இது ஒன்றே அப் பிரபந்தத்தில் எஞ்சியுள்ளது" என்றார்.

ஸ்ரீ நாதமுனிகள் "தாங்கள் சொல்வது சரிதான். இப்பொழுது நான் என் செய்வது? எனக்கு இந்தப் பிரபந்தத்தை யறிந்துகொள்ளாவிடில், ஊண் இறங்காது; உறக்கம் வாராது. ஆதலால், தயைசெய்து, என்னை யீடேற்ற வேண்டும்" என்று கேட்க, ஸ்ரீ பாரங்குசதாசர் "சரி" என்று சொல்லி, அவருக்குப் பேருண்மையை உபதேசிக்க, அவரும் ஸ்ரீ பாரங்குசதாஸருடைய ஆக்ஞையின் பிரகாரமே அநுஷ்டானம் செய்துவந்தார்.

ஸ்ரீ லக்ஷ்மி தேவிக்கு ஸ்ரீ நாதமுனிவரிடத்திலே கிருபை விழுந்துவிட்டது. ஸ்ரீ நாதமுனிவருடைய ஏகாக்

கிர நிஷ்டையும் பக்தி சிரத்தையும் ஸ்ரீ லக்ஷ்மி தேவியை ஆகருஷித்துவிட்டது. ஸ்ரீ லக்ஷ்மிதேவி ஸ்ரீ சடகோபரை நோக்கி, "நீ நாதமுனிக்கு இகலோக ஞானத்தையும் பரலோக ஞானத்தையும் உபதேசித்து வருவாய்" என்று ஆக்ஞாபித்தனர். உடனே ஸ்ரீ நாதமுனிகள் தம் முன்னே ஒரு மகா சாந்நித்தியம் விளங்குவதாக உணர்ந்தார்; அசரீரி வாக்கு ஒன்று கேட்டது அஃதாவது,—"ஏ, பக்த சிரேஷ்டா! என்னைக் குறித்து ஏகாக்கிரத்துடனே தியானம் செய்யும் உனக்கு யாது வேண்டும்?" என்பதேயாம்.

"ஈஸ்வரா! எம்பெருமானே! தங்களுடைய கிருபை பரிபூர்ணமாக எனக்குண்டாகவேண்டும்; பிரபந்தத்திரட்டு எனக்கு உபதேசிக்கப்படவேண்டும்."

ஸ்ரீ சடகோபர் உடனே ஸ்ரீ நாதமுனிவருக்கு ஞான திருஷ்டி யளித்தார்; இன்னும், ரஹஸ்யத் திரயத்தையும், பரிசுத்த பிரபந்தத்தையும், பற்பல தத்துவ சாஸ்திரங்களினுடைய சாராம்சங்களையும், அணிமா முதலிய அஷ்டாங்க யோக ரஹஸ்யங்களையும் அவருக்குத் தெளிவுற உபதேசித்தருளினர். ஸ்ரீ நாதமுனிகள் அங்கு ஸ்ரீ ஆதிநாத ஸ்வாமியினுடைய ஸேவையிலும் ஸ்ரீ சடகோபருடைய பணிவிடையிலுமாகக் காலங் கழித்துக்கொண்டு சில காலம் வசித்துவந்தார்.

"ஸ்ரீ நாதமுனிகள் ஸ்ரீ சடகோபரைப் பிரத்தியக்ஷத்தில் தர்சிக்கவில்லை" என்றும், "ஸ்ரீ சடகோபர் அசரீரி

வாக்கின் மூலமாகவே ஸ்ரீ நாதமுனிகளுக்கு உபதேசித்தார்'' என்றும் சொல்லப்பட் டிருக்கிறது. ''ஆனால், ஸ்ரீசடகோபர், பின்னால் வரப்போகின்ற ஒரு அவதார புருஷருடைய விக்கிரகமொன்றை ஸ்ரீ நாதமுனிகளுக்குக் கொடுத்தருளினார்'' என்றும் சொல்லப்பட் டிருக்கின்றது. அது பின் வருமாறு விளக்கப்படுகின்றது.

ஸ்ரீ நாதமுனிகள் தமது குருவை நோக்கி, ''ஸ்வாமி! பிரபந்தத்திரட்டின் பாடல்களுக்குள்ளே, பின்னால் வரப் போகின்ற ஏதோ ஒரு பெரிய அவதாரத்தைப்பற்றி மறை பொருளாக ஒரு பாட லிருக்கின்றது. அதிலிருக்கும் திரையை நீக்கி, எனக்கு அதைத் தெவிக்கக் கோருகின்றேன்'' என்றார். அன்றிரவே, ஸ்ரீ சடகோபர் அவ் வூரிலுள்ள ஒரு சிற்பியினுடைய கனவிலே தோன்றி, ''உன் முன்னே நீ பார்க்கின்ற உருவத்தைப்போலவே ஒரு விக்கிரகம் செய்து, பரிசுத்த புளியம் விருக்ஷத்தினடியிலே உட் கார்ந்திருக்கின்ற ஸ்ரீ நாதமுனி என்னும் ஒருவரிடத்திலே கொண்டுபோய்க் கொடுத்துவிடு!'' என்று கூறி யருளினர்.

அந்த விக்கிரகமானது ஸ்ரீ நாதமுனிக ளிடமிருந்து ஸ்ரீ புண்டரீகாக்ஷருக்கும், பின்னர் ஸ்ரீ ராமமிச்ரருக்கும், பின்னர் ஸ்ரீ யமுனாசாரியாருக்கும், பின்னர் ஸ்ரீ கோஷ்டி பூர்ணருக்கும், பின்னர் அவருடைய புத்திரி ஸ்ரீ தேவகிக்கும் பரம்பரையாகக் கைமாற்றி யளிக்கப்பட்டு வந்தது. ஆனால், ஸ்ரீ ராமாநுஜர் கோஷ்டிபூர்ணரிடம் உபதேசம் பெறச் சென்றபொழுது, அந்த விக்கிரகம் ஆச்சர்யமாக

மறைந்துவிட்டது. அது அவருடைய சரீரத்திலே ஆகருஷிக்கப்பட்டு, லயமாய் விட்டது. அப் பாடலிலே குறிப்பிடப்பட்ட அவதார புருஷர் ஸ்ரீ ராமாநுஜரேயாவர்.

இது விஷயமாக இன்னும் இரண்டொரு விதமான ஐதிகங்கள் உள்ளன. அவற்றையும் இப்பொழுதே கூறி விடுதல் நலம்.

ஒரு சமயத்திலே, ஸ்ரீமந் நாராயணர், ஸ்ரீ ஹரித ரிஷியை நோக்கி, "ஆர்ய தர்மத்துக்கு நாஸ்திக மதத்தினுலும் மூடக்கொள்கைகளினுலும் அபாயம் உண்டாய்விடுமோ என்று பயப்படத் தகுந்த கலியுகத்திலே, உனது வம்சத்திலே எனது பக்தர்களுள் ஒருவன் அவதரித்து, வியாச சூத்திரங்களின்மீது பாஷ்யம் இயற்றுவார். அவர் எண்ணற்ற லக்ஷக் கணக்கான ஜனங்களைச் சன்மார்க்கத்திலே திருப்பி, எனது பாதாரவிந்தம் சேரும்படி உய்யும் நெறி யுணர்த்துவார்" என்ருர்.

இன்னென்று:—ஸ்ரீ ராமாநுஜருடைய சில சிஷ்யர்கள் மிகுந்த மரியாதையுடனே அவரை யணுகி, அவருடைய பாதாம்புஜங்களிலே பணிந்து எழுந்து, அவரை நோக்கி, "ஸ்வாமி! ஸ்ரீ யாதவாசலமாகாத்மியத்திலே பின் வரும் வாக்கியம் காணப்படுகின்றது:—'அநந்தன் முதலாவது அவதாரம்; லக்ஷ்மணன் இரண்டாவது; பலராமர் மூன்ருவதாம்; இன்னும் நான்காமவன் கலியுகத்திலே வருவான்.' இது யாரைக் குறிப்பிடுகின்றது?" என்று கேட்டார்கள்.

குரு அக் கேள்விக்குப் பதில் உரைக்காமல் நெடுநாள் தள்ளிவந்தார்; ஆயினும், சிஷ்யர்கள் ஒரே பிடிவாதமாக அவரை இடைவிடாது பிரார்த்தித்துக் கேட்க, அவர் அவர்களை யொரு புறமாகக் கூப்பிட்டு, மெல்லிய குரலில், "அது நானே, வேறு எவரு மில்லை" என்று கூறினர்.

ஸ்ரீ ராமாநுஜர் பின் அவதரிக்கப்போவது ஸ்ரீ சடகோபர் ஒரு விக்கிரகம் அளித்ததிலிருந்து வெளியாகின்றது.

ஸ்ரீ நாதமுனிகள் திருநகரியிலே நெடுநாள் தங்கி ஸ்ரீ ஆதிநாதமூர்த்திக்கும் ஸ்ரீ சடகோபருக்கும் தொண்டுகள் புரிந்து காலம் கழித்து வருகையில், வீரநாராயணபுரத்து மூர்த்தியான ஸ்ரீ ராஜகோபாலர் ஒருநாள் கனவிலே அவர்முன் தோன்றி, உடனே அவர் வீரநாராயணபுரத்துக்குத் திரும்பி வரவேண்டும்" என்றும், அங்குத் தம் முன்னே "அவர் பிரபந்தம் பாடவேண்டும்" என்றும் ஆக்ஞாபித்தார்.

ஸ்ரீ நாதமுனிகள் உடனே தமது குருவாகிய ஸ்ரீ பராங்குசதாசரிடம் சென்று, "ஸ்வாமி! அடியேனுக்கு இன்றைய கனவிலே ஸ்ரீ ராஜகோபாலமூர்த்தி எழுந்தருளி, என்னை வீரநாராயணபுரத்துக்கு வரும்படிக்கும், அங்குச் சந்நிதானத்திலே பிரபந்தம் பாடும்படிக்கும் ஆக்ஞாபித்திருக்கிறார்; நான் என் ஊர் போதற்கு உத்தரவு அளிக்க வேண்டும்" என்று வெகு விநயத்துடனே வேண்டி நிற்க, ஸ்ரீ பராங்குசதாசரும் பரிவுடனே விடைகொடுத் தனுப்பி

னூர். ஸ்ரீ நாதமுனிகள் தமது ஊருக்குத் திரும்பி வரும் மார்க்கத்திலே யுள்ள பரிசுத்த க்ஷேத்திரங்கள் பலவற்றை யும் தர்சித்து, ஆங்காங் கெல்லாம் பிரபந்தங்கள் பாடி ஆபத்பாந்தவனை வழி நெடுக ஸ்தோத்தரித்துக்கொண்டே, வீரநாராயணபுரம் வந்து சேர்ந்தார்.

ஸ்ரீ நாதமுனிவரின் பக்தியின் அருமை பெருமை களை நன்குணர்ந்த வீரநாராயணபுரத்துப் பெரியோர்கள் அவரை நோக்கி, "ஸ்வாமி! பூர்வ நாட்களிலே, 'மார் கழி மீத்தில் வருஷ முறை முறை ஸ்ரீ சடகோப ருடைய விக்கிரகமானது ஸ்ரீரங்கம் செல்லவேண்டும்' என்பது பரிசுந்த பாகால ஏற்பாடு. சுக்கிலபக்ஷம் ஏகா தசி திதியிலிருந்து பத்து நாட்களுக்கும் பரிசுத்த பிர பந்தமானது ஸ்ரீ ரங்கநாதர் முன்னே பாராயணம் செய்யப் படவேண்டும். அதற்குப் "பரிசுத்த பாராயணத் திரு விழா" என்று பெயராம். வரவர, அப்படி ஸ்ரீ சடகோபர் செல்வது நின்றுவிட்டது; பரிசுத்த பிரபந்தமானது உல குக்கே மறைந்துவிட்டது. இந்த மகா நிதியைத் திரும்ப உலகுக்குக் கொண்டு வந்தவரே! உங்களுக்கு மங்கள முண்டாகுக! வருஷந்தோறும் செல்லுதலையும், பரிசுத்த பாராயணத் திருவிழாவையும் மறுபடியும் ஏற்படுத்துவ தற்கு நாங்கள் உங்களையே பார்க்கின்றோம்" என்றார்கள்.

ஸ்ரீ நாதமுனிகள் உடனே இதைச் சந்தோஷ சித்தத் துடனே ஒப்புக்கொண்டு, ஸ்ரீரங்கம் சென்று, அந்தத் திருவிழா முன்போல வெகு விமர்சையுடனே நடக்கும்படி

க்ஷேத்திர அதிகாரிகளைத் தூண்டி ஏற்பாடு செய்து, அந்த மாதத்திலே முதல் பத்து நாட்களில் முதல் ஆயிரமும், திருவாய்மொழியும் பாராயணம் செய்யும்படிக்கும், இருபதாவது நாள் இயற்பா பாராயணம் செய்யும்படிக்கும் ஏற்பாடு செய்தார்.

அவர், பின்னர்க் கும்பகோணம் சென்று, அங்கு ஸ்ரீ சடகோபருடைய க்ஷேத்திர மொன்றை ஸ்தாபித்து, பின்னர் அங்கும் சங்கிரமணத் திருவிழாவுடனே எவ்விதத்திலும் முரண்படாத, பரிசுத்த பாராயணத் திருவிழாவையும் உண்டுபண்ணினார். பரிசுத்தப் பிரபந்தம் தமக்குக் கிடைக்கும்படி அருளிய ஸ்ரீ சாரங்கபாணி நாதரிடம் தமக்கு உள்ள நன்றிக்கு அடையாளமாக அவர் அந்த ஸ்வாமியை அபர்யாப்தாம்ருதன் என்று பெயரிட்டு அழைத்து வந்தார்.

பின்னர், ஸ்ரீ ராஜகோபால மூர்த்தியே இவருடைய சொப்பனத்திலே எழுந்தருளி, அந்தப் பிரபந்தம் முழுவதையும் அவருடனே பாராயணம் செய்தார்.

"இப் பாடல்கள் தேவ கீதத்திலே பாடப்படட்டும்; அப்பொழுது எல்லோரும் மிகவும் எளிதாக அவற்றை ஞாபகத்தில் வைத்துக்கொள்வார்கள். தவிர, எனது க்ஷேத்திரங்களிலே ஸ்ரீ சடகோபருடைய அமிருத மொழிகள் பாடிக் கேட்பது, எனக்கு அளவற்ற சந்தோஷத்தைக் கொடுக்கும்" என்றார் பகவான்.

ஸ்ரீ நாதமுனிவர் தமது மருமக்களாகிய ஸ்ரீ பத்ராக்ஷர், ஸ்ரீ ராமமிச்ரர் என்னும் இருவரையும் தமது சகாயத்துக்கு அழைத்து, பாடல்களைத் தேவகீதத்திலே பாடும்படி ஏற்பாடு செய்ததுமன்றியில், ஷை பத்ராக்ஷரும் ராமமிச்ரரும் ஸ்ரீரங்கத்திலேயே ஸ்திரவாசம் செய்துகொண்டு ஸ்ரீரங்கநாதரின் முன்னே பிரபந்தத்தைப் பாராயணம் பண்ணிக்கொண்டிருக்கும்படியும் ஏற்பாடு செய்தார்.

ஒரு காலத்திலே, உலக சங்கீதத்திலே பாண்டித்தியம் பெற்றவள் ஒருத்தியும், தேவகீதத்திலே பிரசித்தி பெற்றவள் ஒருத்தியுமாக இரு தாசிகள் சோழ ராஜனுடைய கொலுக்கூடத்திலே சென்று தங்கள் திறமைகளைக் காட்டினார்கள். அந்த ராஜன் சங்கீத வித்வான்களையெல்லாம் ஒன்றுகூட்டி, அவர்கள் முன்னே இந்த இரண்டு தாசிகளையும் பாடும்படி ஆக்ஞாபித்தான். அப்படியே இருவரும் பாட, மத்தியஸ்தமாயிருந்த சங்கீத வித்துவான்கள், "உலக சங்கீதத்திலே திறமை பெற்றவளே கெட்டிக்காரி" என்று தீர்மானித்தார்கள்; அரசனும் அவளுக்கு வேண்டிய வெகுமதிகளும் கௌரவங்களும் அளித்து அனுப்பினான். மற்றவள் மனம் நொந்து, "தேவகீதமானது உலக மனிதரால் மதிக்கப்படத் தக்கதன்று" என்று தனக்குள் தானே கூறிக்கொண்டு, "இன்னும், அது தேவர்களுடையது; அதன் அருமையைத் தேவர்களே அறிவார்கள். இனிமேல் நான் இந்தச் சிறந்த சங்கீதத்தையும் சாஸ்திரத்தையும் மனிதர்களுக்கு முன்னே பாடித்

தாழ்மைப் படுத்தமாட்டேன்” என்று தீர்மானித்துக் கொண்டாள். பின்னர், அவள் தீர்த்தயாத்திரையின்பொருட்டுப் புறப்பட்டு, பரிசுத்த க்ஷேத்திரங்களுக் கெல்லாம் சென்று பாடிக்கொண்டு வந்தாள்.

இப்படி யிவள் யாத்திரை செய்து வருகிற மார்க்கத்திலே இவள் வீரநாராயணபுரம் வரவே, இங்குத் தன்னுடைய வித்துவத்தைக் கண்டு மெச்சவல்ல ஒருவர் இருக்கக் கண்டு ஆச்சர்யமடைந்தாள். ஸ்ரீ நாதமுனிவர் அவளுடைய கீதத்திலே லயித்து, க்ஷேத்திரத்திலே அவளுக்குச் சகல கௌரவங்களும் செய்யும்படி ஏற்பாடு செய்தார். அவள் அவருடைய பாதங்களிலே வீழ்ந்து, அங்கிருந்து நீங்கினாள்.

அவள் நேரே சோழ ராஜனிடம் சென்று, தன்னுடைய வித்துவத்தின் அருமையை உண்மையில் அறிந்து மெச்சவல்ல ஒருவர் உலகில் இருக்கின்றாரென்று கூறி, ஸ்ரீ நாதமுனிவருடைய பெயரையும் ஊரையும் சொன்னாள். அரசன், உடனே ஸ்ரீ நாதமுனிகளுக்குச் சொல்லியனுப்பி, அவரை வரவழைத்து, “ஸ்வாமி! இந்த ஸ்திரீ ஏதோ தேவகீதத்திலே தான் தேர்ச்சி பெற்றவள் என்று சொல்லுகிறாளே; உண்மைதானா? எங்களுக்கு அது காதுக்குச் சுகத்தைக் கொடுக்கவில்லை” என்றான்.

ஸ்ரீ நாதமுனிகள், “அரசே! இவள் தேவகீதத்திலே வல்லவள் என்பதை நான் வெகு சுலபமாக உங்களுக்கு நிரூபித்துக் காட்டுவேன்” என்றார். பின்னர், முன்போல

இரண்டு ஸ்திரீகளையும் அரசன் முன்னிலையில் பாடச் சொன்னார். உலக சங்கீத வித்தையில் தேர்ந்த ஸ்திரீயினிடத்திலே முன்போலவே அங்கிருந்தவர்கள் அனைவரும் மயங்கிவிட்டார்கள். ஆனால், ஸ்ரீ நாதமுனிகள் ஒருவரே அந்தத் தேவகீதத்தின் திவ்யத் தன்மையை உணர்ந்தவர்.

அரசனுக்கு இன்னது செய்வதென்று தெரியவில்லை. அரசன், ஸ்ரீ நாதமுனி யோகியை நோக்கி, "பிரபு! தேவகீதத்தின் மேன்மை எங்குள்ளது என்பதை எங்களுக்குக் கொஞ்சம் விவரித்துக் கூறவேண்டும்" என்று கேட்டுக் கொண்டான். அதற்கு அவர், "தேவகீதத்தைப்பற்றி ஏதேனும் தெரியும் என்று சொல்லிக்கொள்பவன் ஒரு லோகத்திலிருந்து புறப்படுகின்ற சப்தத்தினால் அந்த லோகத்தின் எடை இவ்வளவென்று கூற வல்லவனாயிருக்க வேண்டும்" என்றார். "இஃதென்ன? இப்படியும் முடியுமா? இது வீண் பேச்சு. ஒரு லோகத்திலிருந்து வெளிப்படுகிற சப்தத்தினாலாவது, எடையைக் கண்டுபிடிப்பதாவது? ஆயினும், இதைப் பரிசோதித்துப் பார்த்துவிடுவோம்" என்று அரசன், பற்பலவித லோகங்களாலாய 340 பாத்திரங்களை ஸ்ரீ நாதமுனிவர் முன்பு கொண்டுவந்து, "ஸ்வாமி! இவற்றிலிருந்து புறப்படுகின்ற சப்தத்தினால் இவற்றின் எடையை ஒவ்வொன்றாகச் சொல்லுங்கள்! பார்ப்போம்; இப்படி நான் கேட்பதற்குத் தாங்கள் மன்னிக்கவேண்டும்" என்று கூற, ஸ்ரீ நாதமுனிவர் புன்னகை புரிந்துகொண்டே, அரசனை நோக்கி, "அரசே! அப்படி

யேயாகட்டும்; இப் பாத்திரங்களை ஒவ்வொன்றாகச் சப்த மிட்டு, எடை கூறுவதென்றால் நிரம்ப நேரமாகும். ஆத லால், எல்லாப் பாத்திரங்களையும் ஏககாலத்தில் சப்த மிடும்படி செய்யுங்கள்!'' என்றார்.

அரசன், ''அவர் ஒரு வீண் பேச்சுக்காரர்! இப் பொழுது அவராகவே அகப்பட்டுக்கொண்டார்'' என்று தனக்குள்தானே நினைத்துக்கொண்டு, அப்படியே எல் லாப் பாத்திரங்களும் ஏககாலத்திலே சப்திக்குமாறு உத் தரவிட்டு, சைகை காட்டினான். சிறியனவும் பெரியனவு மான 340 பாத்திரங்களும், பல விதமான சப்தங்களை யுண்டாக்கின.

பின்னர், அவன் ஸ்ரீ நாதமுனிவரை நோக்கி, 'நாத முனிவர் தோற்றுவிடப்போகிறார் என்பதைக் குறிப்பிடு கின்ற ஒரு புந்நகையுடனே, ''ஸ்வாமி! பாத்திரங்களின் எடையை ஒவ்வொன்றாகச் சொல்லுங்கள்! குறித்துக் கொள்ளலாம்'' என்றான். ஸ்ரீ நாதமுனிவர் ''அப்படியே ஆகட்டும்'' என்று கூறி, ஒவ்வொரு பாத்திரத்தினுடைய வும் எடையைக் குறித்துக்கொள்பவர்கள் கூடக் குறித்துக் கொள்ள முடியாதபடி, அவ்வளவு வேகமாகக் கூறிக் கொண்டே வந்தார். உடனே பாத்திரங்களெல்லாம் நிறுக் கப்பட்டு, 'அவர் கூறியது சரியாயிருக்கின்றதா?' என்று பார்க்கப்பட்டது. ஆ! ஆ! என்ன ஆச்சர்யம். ஒரு அணு வளவுகூட பிசகு இல்லை. ஒரு ரோமமளவுகூடத் தவறு காணப்படவில்லை.

அரசன் ஸ்ரீ நாதமுனிவரின் பாதங்களின்மேல் விழுந்து பணிந்து தான் அவருடைய மகிமையை அறியாது அவருடைய வார்த்தைகளைச் சந்தேகித்துப் பரிசோதனை செய்ததைக் குறித்துத் தன்னை மன்னிக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டான். அவன் ஸ்ரீ நாதமுனிவருக்கு ஏராளமான வெகுமதிகள் கொடுக்க வந்தான். அவர் எதையும் ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டார்.

ஸ்ரீ நாதமுனிவர், ஒரு கல் தூணின்மீது ஒரு பாத்திரத்தை வைக்கும்படி கூறினார். அந்த ஸ்திரீ பாடி முடிந்தவுடன் அவர்கள் அந்தப் பாத்திரத்தை அங்கிருந்து எடுக்க முடியவில்லை; எல்லோரும் ஆச்சர்ய மடைந்தார்கள். அவள் பாடும்பொழுது, அந்தக் கல்தூண் உருகிவிட்டது; அவள் பாட்டை நிறுத்தியவுடனே அந்தக் கல்தூண் மறுபடியும் கட்டியாய்விட்டது. அந்தப் பாத்திரமானது அதில் ஒட்டிக்கொண்டுவிட்டது. ஸ்ரீநாதமுனிவர் அவளை மறுபடியும் பாடும்படி சொன்னார்; அங்கு வந்திருந்தவர்கள் எல்லோரும் கல் உருகுவதைக் கண்ணால் கண்டார்கள்; அந்தப் பாத்திரம் அப்பொழுது சுலபமாக அங்கிருந்து எடுக்கப்பட்டுவிட்டது. "இதுதான் தேவதைகளின் சங்கீதம்" என்றார் ஸ்ரீ நாதமுனிவர்.

இந்தத் தேவகீதத்திலே, பிரபந்தத்திரட்டு, தேச மெங்கும் ஒவ்வொரு க்ஷேத்திரத்திலும் தேவகீதத்தில் இசைக்கப்பட்டுப் பாடப்பட்டது.

ஸ்ரீநாதமுனிவருக்கு அநேக சிஷ்யர்கள் உண்டு; அவர்களுக்குள்ளே ஸ்ரீ புண்டரீகாக்ஷர், ஸ்ரீ குருகாதிபர் இவ்விருவர்களும் மிகமிகப் பிரசித்தி பெற்றவர்கள். இவர்களில் குருகாதிபர், மகர மாதத்திலே, வைசாக நக்ஷத்திரத்திலே ஜனித்தவர்; ஸ்ரீநாதமுனிவர் சமாதியடைந்த ஸ்தலமாகிய திருக்குருகூரிலேயே பிறந்தவர்; ஸ்ரீராமமூர்த்தியை இஷ்ட தெய்வமாகப் பூஜித்துவந்தவர்; இவர் உலகிலே 151 வருஷங்கள் வாழ்ந்தார்.

வரவர, ஸ்ரீ நாதமுனிவருடைய கீர்த்தி தேசமெங்கும் பரவத் தொடங்கிவிட்டது; அவ்வூர் அரசனே இவருடைய மகிமைகளையும் வித்துவத்தையும் பற்றிக் கேள்விப்பட்டு, இவரைப் பார்த்துவிட்டுப்போக வந்து சேர்ந்தான்; அச்சமயத்திலே அவர் ஆழ்ந்த நிஷ்டையிலே எழுந்தருளியிருந்தார். ஆகையால், அரசன் தூரத்திலிருந்தே அவரைத் தர்சித்துவிட்டு, அரண்மனை செல்வதற்காகத் திரும்பினான். உடனே, அப்பொழுது ஸ்ரீநாதமுனிவர் சட்டென்று கண்விழித்து எழுந்திருந்து அரசன் பின்னேயோடினார். சிஷ்யர்கள் இதைப்பற்றிக் கண்டித்து, "ஸ்வாமி! தாங்கள் பிராஹ்மணராயிருந்தும், மகா ஞானியாயிருந்தும் க்ஷத்திரியன் பின்னே, ஒரு அரசன் பின்னே ஓடலாமா? இது நியாயமா?" என்று கூற, ஸ்ரீநாதமுனிவர், "அப்படியா? அது எனக்குத் தெரியாது; அவ்வளவு நேரமும் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவும் அவருடைய பிரியைகளான கோபிகைகளும் என்னுடனே யிருந்தார்கள்; நாங்கள் உயர்ந்த விஷ

யங்களையும் இனிய விஷயங்களையும் பற்றிச் சம்பாஷித்துக் கொண்டே யிருந்தோம்; சட்டென்று திரும்பிப் பார்த்தேன்; ஸ்ரீ கிருஷ்ணன் திடீரென்று மறைந்துவிட்டார்; அவரைக் காணவில்லை; அவர் இவ்வழி போனதுபோலத் தோன்றிற்று; நான் ஓடாமலிருக்க முடியுமா?'' என்றார்.

அவருடைய சிஷ்யர்கள், “ஸ்வாமி! 'யோகி வேதங்களுக்கு மேற்பட்டவர்' என்றும், 'அதன் ஆக்ஞைகளுக்கும் சட்ட திட்டங்களுக்கும் கட்டுப்பட்டவ ரல்லர்' என்றும் வேதங்களே கூறுகின்றன. யோகியினுடைய கர்மக் கடன்க ளெல்லாம் செலுத்தப்பட்டுவிட்டன; அவன் உயர்ந்த சமாதியிலேயே இருக்கின்றான்; ஸ்வாமி! தாங்களும் அத்தகைய யோகிதானா? துன்புறுகின்ற மனுஷ்ய வர்க்கத்துக்கு ஈஸ்வர பக்தியைப் புகட்டி உய்யும் நெறி காண்பிக்காமல் நிஷ்டையிலேயே இருக்கப்போகின்றீர்களா?'' என்று கேட்டார்கள்.

அதற்கு ஸ்ரீ நாதமுனி யோகீஸ்வரர் “நான் ஈஸ்வரனுடைய தாசாநுதாசன்; நீங்கள் என்னைப் பக்தி மார்க்கத்திலே திருப்பிவிட்டதற்காக நிரம்ப வந்தனம்'' என்று கூறினார். அன்றுமுதல் அவர் உலகுக்குத் தர்மத்தைப் போதித்து, தமது சிஷ்யர்களுக்கு உபதேசம் செய்து கொண்டுவந்தார்.

ஒருநாள் அவர் தமது சிஷ்யர்களாகிய புண்டரீகாக்ஷரையும் குருகாதிபரையும் தம்மிடமிருந்து யோகசாஸ்திரம் கற்றுக்கொள்ளும்படி கூறினார்.

புண்டரீகாக்ஷர், "ஸ்வாமி! எனக்கு அது வேண்டாம்; வாசற்படியிலே செத்த பிணம் கிடக்க, எவனுவது விவாகத்தைப்பற்றி நினைப்பானு? நான் செலுத்தவேண்டிய கர்மக் கடன்கள் இன்னும் நிரம்ப இருக்கின்றன; இன்னும் கொஞ்ச நாட்கள் செல்லவேண்டும்" என்றுர்.

ஆனுல், ம.ற்றவருக்கு அத்தகைய ஆக்ஷேபனை யொன்றும் இல்லை. குரு அவருக்கு யோகசாஸ்திர ரஹஸ்யங்களைப் போதித்தார். பரிசுத்தமான பிரபந்தப் பாடல்களை வியாக்கியாநம் செய்து .ஜனங்களுக்கு உரைக்கவும், தர்மத்தைப் பிரசாரகம் செய்யவும் ஸ்ரீ நாதமுனிவர் ஸ்ரீ புண்டரீகாக்ஷருக்கு ஆக்ஞையிட்டார். பின்னர், அவர், தமது புத்திரராகிய ஈஸ்வரபட்டரைக் கூப்பிட்டு, "புத்திரா! உனக்கு ஒரு ஆண் மகவு பிறக்கும், அவனுக்கு யமுனு என்று பெயர் வை! நான் எனது சிஷ்யர்களிடத்திலே என்னை கொடுத்து வைத்துவிட்டுப் போகின்றேனே அதை அவர்கள் அவனுக்குக் கொடுப்பார்கள்" என்று சொல்லிவிட்டு, அவர் அநேக வருஷங்கள் சமாதி நிஷ்டரா யுட்கார்ந்துவிட்டார்.

அந்தப் பிரதேசத்திலே அந்தத் தேசத்து அரசன் வேட்டைக்கு வந்து, வேட்டை முடிந்து, தனது தலை நகருக்குத் திரும்பிப் போய்க்கொண்டிருந்தான். அதே சமயத்தில், ஸ்ரீ நாதமுனி யோகீஸ்வரர் சமாதியினின்றும் கண் விழித்து, தமது வாசஸ்தலத்துக்குச் சென்றுர். அங்கே

அவருடைய புத்திரி அவரை நோக்கி, "அப்பா! இரண்டு வேட்டைக்காரர்களும், ஒரு ஸ்திரீயும், ஒரு பெரிய குரங்கைத் தம்முடன் இட்டுக்கொண்டு இங்குவந்து தங்களைப் பற்றி விசாரித்தார்கள்; தாங்கள் வெளியே போயிருக்கிற தாக நான் சொல்லவே, அவர்கள் "அவர் வந்தால் எங்களின் பின்னே வேகமாக வரச்சொல்!" என்று சொல்லிவிட்டுப் போனார்கள்" என்றாள். 'அவ்விரண்டு வேட்டைக்காரர்களும் ஸ்ரீ ராமச்சந்திரும் ஸ்ரீ லக்ஷ்மணருமாகத்தான் இருக்க வேண்டும்' என்றும், 'அந்த ஸ்திரீ சீதையா யிருக்க வேண்டும்' என்றும், 'பெருங் குரங்கு ஹநுமாரா யிருக்க வேண்டும்' என்றும் அவர் சட்டென்று அறிந்துகொண்டு, தம்மை வைகுண்டத்துக்குச் சீக்கிரம் வரும்படி அவர்கள் அழைத்துவிட்டார்களென்றும் ஊகித்துக்கொண்டார். அவர் அவர்களின் பின்னே யோடினார்; வழியில் போவார் வருவாரை யெல்லாம் விசாரித்தார். "இதோ போகின்றார்கள், அதோ போகின்றார்கள்" என்று அவர்கள் கூறினார்கள்; இவரும் அப்படியே பின்தொடர்ந்து ஓடினார். இவர், தலைநகரத்துக் கிழக்குக் கோட்டை வாசலினருகே செல்லும் வரையில், அவர்கள் இவர் முன்னே செல்வதுபோல இவருக்குத் தோன்றிக்கொண்டிருந்தது. அங்கே அவர்கள் மறைந்து விட்டார்கள். ஸ்ரீ நாதமுனிவருக்குத் துக்கம் பொறுக்க முடியவில்லை; அப்படியே களைத்து விழுந்து விட்டார். இச் சமயத்திலே சாக்ஷாத் பகவான் ஸ்ரீநரசிம்ஹ மூர்த்தி சொரூபமாக அவருக்குத் தர்சனம் கொடுத்தும் அவர் தேறுதலடையாதவராய், ஸ்ரீ ராமசொரூபத்திலே

ஈடுபட்டவராய், "நான் ஒரு மகா பாபி; ஈஶ்வரனே என்னைத் தேடி வந்தார், என்னைக்கூட ஒரு பொருட்டாக நினைத்துத் தேடி வந்தார்; எவருடைய சந்நிதான மகிமை யொன்றினாலேயே அஞ்ஞானமும் துக்கமும் பறந்துவிடுமோ, அந்தப் பரமதயாளுமூர்த்தி என்னைத் தேடி வந்தார். ஈஶ்வரனாகவே வந்து தேடிக் காணாத மனிதன் என் ஒருவனைத்தவிர வேறு யாவர் உளர்?" என்று கதறினார்; மறுபடியும் களைத்து மூர்ச்சை யடைந்தார். அப்பொழுது இத்தனை நாட்களாய் அவர் எதற்காக இரவும் பகலும் பாடுபட்டுக்கொண் டிருந்தாரோ அந்தத் தர்சனம் கிடைத்தது. அவருடைய சரீரத்திலிருந்து ஒரு ஜோதி வடிவம் கிளம்பி ஆகாயத்திலே சென்றது; அவருடைய கண்கள் பின்னால் பூலோகத்திலே திறக்கவேயில்லை. இவ்விதமாக ஸ்ரீ நாதமுனி யோகீஶ்வரர் 330 வருஷங்கள் பூவுலகிலே வாசம் செய்து, புஷ்ப மாதத்திலே சுக்கில பக்ஷம் ஏகாதசி திதியன்று வைகுண்டம் போய்ச் சேர்ந்தார்.

அவருக்கு ஈஶ்வரபட்டர் என்று ஒரு புத்திரருண்டென்று முன்னமேயே சொல்லியிருக்கின்றோம்; அந்த ஈஶ்வரபட்டரும் மற்றச் சிஷ்யர்களுமாக ஸ்ரீ நாதமுனிவருடைய சரீரத்தை வீரநாராயணபுரத்திற்கு எடுத்துச் சென்று அங்கே பிரஹ்மமேதச் சடங்குகளுடனே அதைக் கனம் செய்தார்கள். குருகாதிபர் என்ற சிஷ்யர் தமது குரு நெடுங்காலமாக நிஷ்டை செய்துவந்த இடத்திலே—யோக சமாதியிலே—உட்கார்ந்துகொண்டார்.

ஸ்ரீ நாதமுனிவர், வங்கிபுரத்தாச்சி என்னும் அம்மையாருடைய பெண் அரவிந்தப்பாவை என்னும், பெயருடைய ஒரு மாதை விவாகம் செய்திருந்தார். அரவிந்தப்பாவை ஒரு சமயத்திலே தனது தாயார் வீட்டுக்குப் போகும்படி நேரிட, அப்பொழுது ஸ்ரீ நாதமுனிவர் தமது சிஷ்யராகிய புண்டரீகாக்ஷரைத் தமது மனைவிக்கு வழித் துணையாக அனுப்பிவைத்தார். சிஷ்யர் புண்டரீகாக்ஷர் அவ் வம்மையாரை ஊரிலே கொண்டுபோய் விட்டவுடனே செலவு பெற்றுக்கொள்ள, வங்கிபுரத்தாச்சி யம்மையார் அப் புண்டரீகாக்ஷரை யிருந்து சாப்பிட்டுவிட்டுப் போகும்படி வற்புறுத்தி, அவருக்கு எக் குறைவு மில்லாது எல்லாம் சரியாகப் பார்க்கும்படி தமது வேலைக்காரர்க ளிடமெல்லாம் உத்தரவிட்டிருந்தார். புண்டரீகாக்ஷர் சோழியப் பிராஹ்மணரா யிருந்ததினாலே, வேலைக்காரர்களும் அவரை அசட்டை செய்து, சூத்திரர்கள் உட்கார்ந்து சாப்பிடக்கூடிய வெளி முற்றத்திலே அவருக்கு இலையிட்டு, அதற்கு முந்தியநாள் பழைய அமுதைக் கொண்டுவந்து அவருக்குப் பரிமாறினார்கள். ஸ்ரீ புண்டரீகாக்ஷருக்கு இதனால் மன வருத்தம் ஏற்படவில்லை; ஆனால், அத்தியாநந்தத்துடனே—இந்த ஆநந்தத்துக்குக் காரணம் குருபக்தியல்லவா?—அவர்கள் போட்டதை யுண்டுவிட்டு, வங்கிபுரத்தாச்சி யம்மையாரிடத்திலும் அரவிந்தப்பாவைய ரிடத்திலும் அதி விநயத்துடனே சென்று விடை பெற்றுக்கொண்டு திரும்பிவந்தார். 'அகத்தில் உள்ளது முகத்தில் தெரியும்' என்னும் பழமொழிக் கிணங்க, அவருடைய ஹிருதயத்தில் அந்தப்

பழைய சோறு சாப்பிடும்படியான பாக்கியம் தமக்குக் கிடைத்ததே யென்று அநுபவித்துக்கொண்டிருந்த ஆநந்தம் பொங்கித் ததும்பி அவருடைய முகத்திலே பூரணமாய் விளங்கிற்று. இவர் ஆநந்த உல்லாசமா யிருப்பதைக் குரு அறிந்துகொண்டார்; உடனே அவர் தமது மனத்தை அகமுகமாகத் திருப்பி, இவருக்கு இவ்வளவு ஆநந்த முண்டாகும்படியாக நடந்த சங்கதி யின்னதென்று தெரிந்துகொண்டார். அவர் கள்ளங் கபடற்ற மனத்துடனும், அதனால் உண்டான பார்வையுடனும், ஸ்ரீ புண்டரீகாக்ஷரை நோக்கி, "புத்திரா! நீ சென்ற இடத்திலே உன்னை நன்றாகத்தானே நடத்தினார்கள்" என்று கேட்டார். புண்டரீகாக்ஷர், ஆநந்தம் பொங்கிய குரலுடன், "குருமூர்த்தி! அவர்கள் எனக்கு அளவுக்கு மிஞ்சிய மரியாதைகள் செய்து, என்னை அவமானம்தான் செய்துவிட்டார்கள்; யோக்கியதைக்கு மிஞ்சிய மர்யாதைகள் செய்தால், அது அவமானப்படுத்தியது போலத்தானே. மூன்று உலகங்களும் பார்த்து என்னைக் கண்டு பொறாமைப்படும்படி அவ்வளவு கௌரவமாக என்னை அவர்கள் நடத்தினார்கள்", என்றார். "அது என்ன? அப்படிச் சொல்கின்றாயே! அவர்கள் உன்னை எப்படி நடத்தினார்கள்?"

"ஸ்வாமி! ஈஸ்வர பக்தனுடைய கைகளிலிருந்து கிடைக்கப்பட்ட அன்னமானது ஸ்தோத்திரங்கட்கெல்லாம் மேற்பட்டுப் பரிசுத்தமானது. இன்னும் அந்த ஆகாரமானது எனக்குப் பரிசுத்த தீர்த்தத்துடன் கலந்து கொடுக்

கப்பட்டது. பிரபு! இம்மாதிரி இரண்டிடங்களில் என்னைக் கௌரவம் செய்தார்களானால் எனக்கு வீண் கர்வம் உண்டாய்விடும்.''

பார்த்தார் ஸ்ரீ நாதமுனிகள் புண்டரீகாக்ஷருடைய பக்தியின் தன்மையை. ஸ்ரீ புண்டரீகாக்ஷருக்குத் தம்மிடத்து மாத்திரமன்று, தம்முடன் சம்பந்தப்பட்ட சகலரிடத்தும் அவருக்குள்ள பக்தியைக் கண்டு கண்டு களித்தார். ஸ்ரீ நாதமுனியோகியினுடைய கண்களிலே ஆநந்தக் கண்ணீர் சொரிந்தது; அவர், ஸ்ரீ புண்டரீகாக்ஷரைத் தமது ஹிருதயத்துடனே சேர்த்துக் கட்டிக்கொண்டு, உரத்த சப்தத்துடனே, "புத்திரா! உண்மையில் உனக்கு நான் குருவாயிருப்பதற்கு உரித்தானவனல்லன். நீ எனது சரீரத்தையும் ஜீவனையும் உனக்கு அடிமை யாக்கிக்கொண்டுவிட்டாய். நான் ஒரு ஏழைப் பிராஹ்மணனே யாகையால், என்னிடத்தி லுள்ளதை யேற்றுக்கொள்ளும்படி நான் உன்னை வேண்டிக்கொள்கின்றேன். சர்வேஶ்வரன் உன்மீது கிருபை பாலிப்பாராக! ஏனெனின், அத்தகைய கிருபை மனிதனிடமிருந்து அடைய முடியாது,'' என்று கூச்சலிட்டுத் தமது பரிசுத்த பாதங்களைத் தூக்கிச் சிஷ்யனுடைய சிரத்திலே வைத்து, உடனே அவர் நிஷ்டையில் அமர்ந்தார்.

ஸ்ரீ புண்டரீகாக்ஷருக்குப் பொங்கிவிட்டது துக்கம். ஆ! ஆ! குருவுக்குத் தம்மீது எவ்வளவு வாத்சல்லிய மென்று; அவர் தேம்பித் தேம்பி யழுதார். "குருமூர்த்தி! என்னைத் தட்டுத்தாட் கொள்ள எழுந்தருளிய எம்பெருமானே! மிகு

மிகச் சிரேஷ்டமான இந்தக் கௌரவத்துக்கு நான் உரித்தானவனா? தங்களுடைய பாதாரவிந்தங்கள் என்றென்றும் எனது இச் சிறிய சிரசின் மேலேயே இருக்கும்படி அநுக்கிரகிக்கவேண்டும். அதுவே நான் வேண்டுவது" என்றார் ஸ்ரீ புண்டரீகாக்ஷர்.

அருகில் நின்று இதைப் பார்த்துக்கொண் டிருந்தவர்கள், "இவர்கள் இருவரும் நல்ல ஜதைகள்; ஸ்ரீ நாராயணனும் அவருடைய தேவியும் போல அவ்வளவு அந்யோந்யம் வாத்சல்ய முள்ளவர்களா யிருக்கின்றார்கள். எவரைப் புகழ்வது? சிஷ்யனுக்குக் குருவினிடத்திலேயுள்ள பக்தியைக் கண்டு மெச்சுவதா? அல்லது, குருவுக்குச் சிஷ்யனிடத்திலேயுள்ள வாத்சல்யத்தைக் கண்டு மெச்சுவதா?" என்று வியந்து பேசிக்கொண்டார்கள்.

வங்கிபுரத்தாச்சியம்மையாருக்கு இது தெரிய வந்தது; அவள் உடனே ஸ்ரீ நாதமுனிவருடைய பாதார விந்தங்களிலே விழுந்து தான் அறியாமற் செய்த குற்றத்தை மன்னிக்குமாறு வேண்டிக்கொள்வதற்காக ஓடி வந்தாள். "அந்தோ! உலக முழுதும் ஆசார்யரென்று கொண்டாடுகின்ற ஒரு யோகீஸ்வரரை நான் மருமகப் பிள்ளையாக அடையப்பெற்றும், ஒரு சிறிதும் நான் உய்யும் நெறி கண்டிலேன். அவர் போதிக்கின்ற உண்மைகள் எனது மனத்தினுள்ளே நுழைகின்றதில்லை. நான் உலகில் அமிழ்ந்திருக்கின்றேன். ஆயினும், 'ஒரு நல்ல புத்திரன் பத்துத்தலைமுறைகளை உயர்த்திவிடுகின்றான்' என்றும், 'ஒரு நல்ல புத்

திரி நூறு தலைமுறைகளை உயர்த்திவிடுகின்றாள்' என்றும் சாஸ்திரங்கள் கூறுகின்றன. அத்தகைய ஒரு புத்திரி எனக்கு உண்டாயிருப்பது பற்றியும், அப்புத்திரியின் மூலமாக ஆசார்ய புருஷர் எனக்கு மருமகராளு ரென்பதைப் பற்றியும் சந்தோஷிக்கின்றேன்" என்றாள்.

ஸ்ரீ நாதமுனிகள்:—நியாய தத்துவம், யோக ரஹஸ்யம், ஸ்ரீ புருஷ நிர்ணயம் என்னும் மூன்று கிரந்தங்கள் அருளிச் செய்திருக்கின்றார்.

அவருடைய சிஷ்யர்களுக்குள்ளே ஸ்ரீ உய்யக்கொண்டார் (புண்டரீகாக்ஷர்), ஸ்ரீ குருகைக்காவலப்பன் (குருகாதிபர்), ஸ்ரீ திருக்கண்ணமங்கையாண்டார் ஸ்ரீ கிருஷ்ண லக்ஷ்மிநாதர்) இவர்களே பிரசித்தி பெற்றவர்கள்.

இவர்களுக்குள்ளே ஸ்ரீ கிருஷ்ணலக்ஷ்மிநாதர் என்பவர் கிருஷ்ணமங்கலம் என்னும கிராமத்தைச் சேர்ந்தவர்; இவர் இல்லற தர்ம மநுஷ்டித்து வந்தவர். ஸ்ரீநாதமுனிகள் இவருக்குப் பக்தி மார்க்க ரஹஸ்யங்களை யுபதேசித்து, பின்னர் அவரை அவருடைய கிராமத்துக்குச் சென்று, அந்தக் கிராமத்து மூர்த்தியாகிய ஸ்ரீ பக்தவத்சலநாதருடைய உபயோகத்துக்காக ஒரு புஷ்பத் தோட்டம் வைத்துப் பயிர் செய்து பராமரித்து வரும்படி ஆக்ஞாபித்தார். ஸ்ரீ கிருஷ்ணரும் அப்படியே தமது குருமூர்த்தியினுடைய ஆக்ஞைகளை நிறைவேற்றிவர, பக்தியிலும் பரிசுத்தத்திலும அவர் அபிவிருத்தியடைந்து, ஈஸ்வர பக்தி யொன்றைத் தவிர வேறு எண்ணமே யில்லாதவராய்விட்டார்.

ஒருநாள் ஈஸ்வரன் பார்த்தார்; மனுஷ்ய வர்க்கம் மேம்பாடடையும் பொருட்டுத் தம்முடைய பக்தர்களாலே செய்யப்பட்டு வருகின்ற பல உபாயங்களும் வேத சாஸ்திரங்களை வியாக்கியாநம் செய்வதிலேயே உள்ளன என்றும், 'அவை போதா' என்றும், 'உலகிலே ஆழ்ந்து வீழ்ந்து கிடப்பவர்களுடைய ஹிருதயங்களையும் தட்டி யெழுப்பும் படியாகக் கார்யங்கள் செய்யப்படவேண்டும்' என்றும் எம்பெருமான் நினைத்தார். கொள்கைகள் அநுஷ்டானத்திலே கொண்டுவரப்படவேண்டும்; தினசரி வாழ்க்கையிலே அநுஷ்டிக்கப்படவேண்டும்; இம் முறைதான் நம்பிக்கையற்ற ஜனங்களுக்குக்கூட நம்பிக்கையை யுண்டாக்கும்; அவர்களுக்குச் சன்மார்க்கத்திலே செல்ல மனம் உண்டு பண்ணும். இதற்கு ஸ்ரீ கிருஷ்ணலக்ஷ்மிநாதரைக் கருவியாக உபயோகப்படுத்துவதாகப் பகவான் சங்கற்பித்துக் கொண்டார். எப்படி நடந்ததென்றால்,

ஒருநாள், இரண்டு வேடர்கள் பகவானைப் பூஜிப்பதற்கு க்ஷேத்திரத்தினுள்ளே செல்லும்பொழுது, தங்களுடைய பாதரக்ஷைகளைத் தங்களிடம் மிகுந்த விஸ்வாசமுள்ள நாய்களின் காவலில் வெளியே வைத்துவிட்டு உள்ளே சென்றார்கள். ஆனால், உடனே இந்த நாய்கள் ஒன்றுடனொன்று போராடத் தொடங்கி, கடைசியில் பெரும் சண்டையாக முடிந்தது. உள்ளே யிருந்த நாயின் சொந்தக்காரர்கள், நாய்களின் கூச்சலைக் கேட்டு வெளியே ஓடிவந்து, நாய்ச் சண்டையை அடக்குவதற்

கென்ணி இவர்களும் பெருங் கூச்சல் போடவே, இவர்க ளுடைய கூச்சலினுல் நாய்கள் சண்டை யொழிவதற்குப் பதிலாக, அந் நாய்களுக்கு இன்னும் அதிகமாகக் கோபம் அதிகரித்து, ஒன்றை யொன்று சின்னபின்னப் படுத்தத் தொடங்கின. இதற்குள்ளாக நாய்ச் சண்டையின் வேடி க்கையைப் பார்ப்பதற்கு ஜனக்கூட்டம் அதிகமாகச் சேர் ந்துவிட்டது.

கடைசியாக ஒருநாய் இன்னொன்றினுமேலே கடித்துக் கிழித் தெறியப்பட்டுவிட்டது; இந் நாய் கீழே விழுந்து விட்டது. இந்த நாயின் சொந்தக்காரன் தன்னுடைய வேட்டை நாய் மரித்துவிட்டதைப்பற்றிக் கோபதீபித னுய்த் தன்னுடைய கத்தியை உருவி ஜயித்த நாயினுடைய தலையை வெட்டி யெறிந்தான். உடனே அந்த நாயினுடைய் சொந்தக்காரன் கத்தி பளபளவென்று மின்னிற்று; இருவ ரும் பயங்கரமான யுத்தம் தொடங்கினுர்கள்; இருவ ருடைய சரீரங்களிற் பற்பல இடங்களிலிருந்தும் ரத்தமா னது பீறிட்டு ஒழுகிக்கொண்டிருந்தது; இவர்களும் கீழே விழுந்துவிட்டார்கள். இவற்றை யெல்லாம் ஸ்ரீ கிருஷ்ண லக்ஷ்மிநாதர் பார்த்துக்கொண்டிருந்தார். கையிலே புஷ் பங்க ளெடுத்துக்கொண்டு கோவிலில் பூஜை வேளைக்குப் போக வந்தவர், இந்த நாய்ச்சண்டையை வேடிக்கை பார் த்துநின்ற கூட்டத்து ஜனங்களால் கோவிலுக்குப் போக முடியாது தடுக்கப்பட்டுத் தாமும் இதை வேடிக்கைப் பார்த்துக்கொண் டிருக்கும்படி நேரிட்டது.

இந்த நாய்ச்சண்டையும், பிறகு நேரிட்ட சம்பவங்களும் அவருடைய மனத்தைப் பரிபூரணமாகக் கவர்ந்தன. அதனால் அவருடைய ஹிருதயம் உருகிவிட்டது. அவர் தமது கையிலிருந்த புஷ்பமாலையைத் தூர எறிந்துவிட்டு, "புத்தியற்ற, அன்பென்பதே யில்லாத இந்த மிருகங்கள் தங்கள் எஜமானர்களுடைய ஸேவையில் பரிபூர்ண விஸ்வாஸத்துடனும் நன்றியறிதலுடனும் தங்கள் பிராணன்களைத் தியாகம் செய்துவிட்டன. அவர்களும் தங்களுக்குச் சொந்தமென்று கூறிக்கொண்டிருந்த மிருகத்தின் பழிக்குப் பழி வாங்குவதற்காகத் தங்களைத் தாங்களே பலியிட்டுக்கொண்டார்கள். இவர்களே இப்படி யிருந்தார்களானல், சர்வ பிதாவும் மஹா மாதாவும் குழந்தைகளுடைய துக்கத்தைப்பற்றிக் கவனியாம லிருப்பார்களா? ஒருநாளும் இரார்கள். இதோ நான் சமஸ்த உலக பந்தங்களையும் தியாகம் செய்கின்றேன்; உன்னுடைய அகண்ட கிருபையிலே நான் சரணாகதி யடைந்துகொள்கின்றேன்; ஈஸ்வரா! உனது சித்தம் எவ்வாறோ அவ்வாறே முடியும்" என்று கூறினர்.

அந்த நிமிஷம் முதல் அவருடைய குணங்களும் தன்மைகளும் மாறுபட்டன; அவர் ஒரு புதிய புருஷர்போன்று ஆய்விட்டார்; அவர் வெகு விநோதகரமான வழிகளை யப்பியசிக்க ஆரம்பித்தார். தம்முடைய நடத்தை மாறுதலுக்கு முக்கிய காரணமாயிருந்த நாய்களின் நடத்தையைப் பின்பற்றி, மிருகப்பிராயம் அடைந்து, நான்கு கால்களாலும் நடக்கத் தொடங்கினர். அவர் தினந்தோறும் சூர்யோதய

மானவுடனே கிராமத்துக்கு வெளியே சென்று, ஸ்நாந பானாதிகள் முடித்துக்கொண்டு, திரும்பவும் க்ஷேத்திரத் துக்கு ஓடிச் சென்று, க்ஷேத்திரத்தினுள்ளே யொரு விரு க்ஷத்தி னடியிலே உட்கார்ந்துகொண்டு மௌனமாய், நிஷ் டாபரராய், அசைவற்று உட்கார்ந்துகொள்வார். அவருக்கு ஒரு வேளை யாகாரம் எவரேனும் பக்த சிரேஷ்டர்கள் கொண்டுவந்து கொடுத்துவிடுவார்கள். இவர் இம்மாதிரி சாய் நடத்தை நடந்து, பக்தி பரவசராய் எழுந்தருளி யிருப்பதைத் தேசத்திலே நாலா பக்கங்களிலு முள்ள ஜனங்கள் கேள்விப்பட்டு, "ஆச்சர்யம்! ஆச்சர்யம்!" என்று அங்குவந்து சூழ்ந்தார்கள். சிலர், அவரை வேடிக் கையாகவும், பரிகாசமாகவும் பார்த்தார்கள்; வேறு சிலர், பரிதபித்தார்கள்; இன்னும் சிலர், அவரைக் குறை கூறி னார்கள். மற்றும் சிலர், தூரத்தி லிருந்துகொண்டே அவ ரிடத்தே பக்தி செலுத்தினர்கள்.

ஒருநாள் இரவில் அவ்வூர் ஜனங்கள் அனைவருக்கும், ஆண் பெண் அடங்கலுக்கும், பகவான் ஸ்ரீ பக்தவத்சலன், கனவிலே தோன்றி, "நாளைக்கு, இன்ன நேரத்திலே என் னுடைய க்ஷேத்திரத்திலே நீங்கள் எல்லோரும் வரத் தவறாதீர்கள்; ஏனென்றால், நான் எனது மகா பக்த னாகிய கிருஷ்ணலக்ஷ்மிநாதனை எல்லோரு மறிய எனது லோகத்துக்கு இட்டுச் செல்லப்போகின்றேன்" என்று சொன்னார். மறுநாள் பொழுது விடிந்தது. குறிப்பிட்ட நேரத்துக்கு முன்னமேயே, வெகு நேரத்துக்கு முன்ன

மேயே, அந்த க்ஷேத்திரத்துப் பிராகாரத்திலே ஏராள மான ஜனங்கள் கூடிவிட்டன. அன்று காலையிலே ஸ்ரீ கிருஷ்ணலக்ஷ்மிநாதர் வழக்கம்போல வெளியே சென்று, ஸ்நாநம் முதலியன செய்து, திரும்பி க்ஷேத்திரத்துக்கு வந்தார். ஆனால், அவர் என்றும்போல அன்று அவர் வழக்கமாகவிருந்த விருக்ஷத்தினடிக்குத் திரும்ப வரவில்லை; உட்பிரகாரங்கள், வெளிப்பிரகாரங்கள் முதலியவற்றிலே பிரதட்சிணம் செய்தார். அங்குத் திரண்ட பெருங் கூட்டமானது மிகுந்த பயபக்தியுடனே அவர் பின் தொடர்ந்து சென்றது. ஸ்ரீ கிருஷ்ணலக்ஷ்மிநாதர் பிராகாரங்களிலெல்லாம் பிரதக்ஷிணம் செய்து முடித்த பின்னர், மூலஸ்தானத்துக்குச் சென்றார். அங்கிருந்த விக்கிரகத்துக்கு மிகச் சமீபத்திலே போய் நின்றுகொண்டு, அந்த விக்கிரகத்தையே ஏகாக்கிர சித்தத்துடனே நோக்கித் தியானம் செய்வாரானார். ஒரு நிமிஷம்தான்; மறு நிமிஷத்திலே, பளிச்சென்று அங்கே ஒரு ஜோதி பிரகாசித்தது; அங்குக் கூடியிருந்த ஜனங்களுடைய கண்களெல்லாம் இந்த ஜோதியைக் காணக் கூச்சமுற்று மூடின; பின்னர்க் கண்கள் திறந்தனதான் தாமதம்; அங்குள்ளவர்கள் ஸ்ரீ கிருஷ்ணலக்ஷ்மிநாதரைக் காணவில்லை; அவர் சாக்ஷாத் எம்பெருமானிலே லயித்துக் கரைந்து கலந்துகொண்டார் போலும்! இறைவனுடைய விக்கிரகமானது மகா சாந்த முடையதாய், கண்களின் மூலமாக உயர்ந்த ஞான வொளியைக் கக்கியதாய், உதடுகள் லேசாகப் பிரிந்து புன்னகை புரிவதாய், அனை

ருக்கும் ஆநந்தம் அளிப்பதாய்த் தோன்றிற்று. பார்த்தார்கள் ஜனங்கள். ஸ்ரீ கிருஷ்ணலக்ஷ்மிநாதருடைய பக்தியையும், அவர்மீது எம்பெருமான் செலுத்திய கிருபையையும் கண்டு அடங்கா ஆநந்தம் கொண்டு ஆடிப்பாடிக் குதித்தார்கள்.

---

## ஸ்ரீ புண்டரீகாக்ஷர்

ஸ்ரீ நாதமுனிவருடைய சிஷ்யர்களுக்குள்ளே வயதில் மிகமிகப் பெரியவரும் நாதமுனிவருடைய பிரத்தியேக வாத்சல்யத்திற்குப் பாத்திரமா யிருந்தவருமானவர் ஸ்ரீபுண்டரீகாக்ஷரே யாவர். இவர் கலியுகம் பிறந்து 3927 வருஷங்கட்குப் பின்னர் பராபவ வருஷத்திலே, சித்திரைமீ சுக்கில பக்ஷம் பிரதமை புதன்கிழமை யன்று கிருத்திகை நக்ஷத்திரத்திலே ஸேனருடைய அம்சமாகப் பிறந்து 105 வருஷங்கள் உலகிலே யிருந்தார். இவர் பிறந்த ஊர் ஸ்ரீரங்கத்துக்கு வடக்கேயுள்ள திருவெள்ளறை (ஸ்வேதகிரி)யாம். இவர் தமது குருபரம்பரையை விட்டுவிடாமல், எண்ணற்ற சிஷ்யர்களுக்கு இன்ப மார்க்கத்தைப் போதித்துக்கொண்டிருக்கும் காலையிலே அந்த சிஷ்யர்களுக்குள்ளே ஸ்ரீராமமிச்ரர் என்னும் பெயருடைய ஒருவர் இவரிடத்திலே பிரத்தியேக பக்தி சிரத்தை யுடையவராகி, அவருடைய அந்திமகாலம் வரையிலே அவருக்கு உண்மையுடன் பணிவிடை செய்துவந்தார். ஸ்ரீ புண்டரீகாக்ஷருடைய மனைவியாகிய ஆண்டாளம்மாள் மரித்துவிடவே. அவருடைய குடும்பமானது கவனிப்பாரற்றுப்போக, ஸ்ரீராமமிச்ரர் இதைக்

கண்டு மனம் தாளாதவராய்த் தமது குருவினுடைய வீட்டு வேலைகளனைத்தையும் தாம் கவனித்து, குழந்தைகளையும் மற்றும் பார்த்துக்கொள்வதாக ஒப்புக்கொண்டு, சந்தோஷத்துடனே அப்படியே நடந்துவந்தார்.

ஒருநாள் ஸ்ரீபுண்டரீகாக்ஷருடைய புத்திரிகள் ஸ்நாநத்துக்கு நதிக்குச் சென்றவர்கள், ஸ்நாநம் செய்துவிட்டு வீட்டுக்குத் திரும்பி வரும் மார்க்கத்தில், வழியிலே சேறு மிகுந்திருந்ததினால், அவ்வழியே நடப்பதற்குச் சிறிது யோசனை செய்யலானார்கள். அப்பொழுது அவர்களுடன் கூடப் போயிருந்த ஸ்ரீராமமிச்ரரானவர் அவர்களை நோக்கி, "அம்மைமார்களே! நீங்கள் இச் சேற்றிலே நடந்து உங்களுடைய சரீரங்களை அசுத்தப் படுத்திக்கொள்ளவேண்டாம். நான் இச் சேற்றின்மேலே படுத்துக்கொள்கிறேன்; நீங்கள் என்மீது நடந்து செல்லுங்கள்!" என்று சொல்லி, அவ்வாறே தாம் படுத்துக்கொண்டார். அப் பெண்களும் அவர்மீது ஏறி நடந்து, தங்களுடைய சரீரங்களிலே மண் படாமல் வீடுபோய்ச் சேர்ந்தார்கள். இச் சங்கதி புண்டரீகாக்ஷருக்குத் தெரியவந்தது; அவர் நினைத்தார்:— "ஆ! ஆ! என்ன குருபக்தி! இந்த ராமமிச்ரனுக்கு என்னிடத்தில் மாத்திரமன்று, என்னைச் சேர்ந்த எல்லோரிடத்திலும் என்ன பக்தி! இத்தகைய பரிசுத்த பக்தி செலுத்துபவனை நம்மால் வெறுக்க முடியுமா? விரும்பாதிருக்க முடியுமா?" ஸ்ரீராமமிச்ரரை ஸ்ரீபுண்டரீகாக்ஷர் தம்மருகே வரவழைத்து, தமது பரிசுத்த பாதங்களை அவர் தலைமீது வைத்து,

"அப்பா! புத்திரா! நீ இகத்தும் பரத்தும் என்றும் சீரும் சிறப்பும் பெற்று வாழ்வாய்!" என்று ஆசீர்வதித்தார்.

இன்னும் ஸ்ரீ புண்டரீகாக்ஷர் ஸ்ரீ ராமமிச்ரரை நோக்கி, "புத்திரா! உனக்கு யான் என்ன கைம்மாறு செய்யப் போகிறேன்?" என்றார்; இப்படி இவர் சொல்லிய பொழுது இவருடைய கண்களிலே நீர் ததும்பிற்று; அவருக்கு மூச்சு முட்டிற்று; அன்பு மிகுதியினால் அவர் அலக்கண் உற்றார். ஸ்ரீ ராமமிச்ரர், மிகுந்த கலக்கமும் விசனமும் பொங்கியவராகி, "நான் செய்யும் சிறு ஊழியங்களுக்குப் பதிலாகத் தாங்கள் அளவுக்கு மிஞ்சியபடி வெகுமதி செய்துவிட்டீர்கள். இன்னும் எனக்கு வேண்டியதென்ன?" என்றார்.

அப்பொழுது சற்குரு, ராமமிச்ரரைப் பார்த்து, "எனது அரும்புதல்வனே; அப்படியன்று! அப்படியன்று! நான் ஒரு ஏழைப் பிராஹ்மணனே; ஆயினும், கொடுப்பதற்கு என்னிடமுள்ள எல்லாவற்றையும் நீ ஏற்றுக்கொள்! நான் உனக்கு ஞான ரகசியத்தைக்கூட உபதேசித்துவிடுகிறேன்" என்றார்.

ஸ்ரீ புண்டரீகாக்ஷருக்கு அந்திய காலம் சமீபித்துவிட்டது; அவர் இவ் வுலகினின்று நீங்கவேண்டிய காலம் நெருங்கிவிட்டது. அப்பொழுது ஸ்ரீராமமிச்ரர் வெகு விநயத்துடனும், வெகு மர்யாதையுடனும் அவரை யணுகி, "ஸ்வாமி! தங்களுடைய ஸ்தானத்தை வகிப்பதற்குத் தாங்கள் யாரைத் தெரிந்தெடுத்திருக்கின்றீர்கள்?" என்று கேட்

டார். அதற்கு அவர், "இத்தனை நாட்களாக இவ்வளவு பக்தி சிரத்தையுடனே எனக்குச் சிசுருஷை புரிந்து, எனது ஹிருதயத்திலேயுள்ள அன்பை வளர்த்து அதற்குப் பிரத்தியேகமாகப் பாத்திரமாயுள்ள எனது அருங் குழந்தையாகிய உன்னைத் தவிர நான் வேறு யாரைத் தெரிந்தெடுப்பது? எனது சிஷ்யர்களெல்லோரையும் நீ உன்னைச் சுற்றிலும் சேர்த்துக்கொண்டு, நான் செய்துவரும் வேலையை நீ செய்வாய். சீக்கிரத்திலே ஈய்வரபட்டருக்கு ஒரு ஆண்மகவு பிறக்கும்; அதற்கு யமுனு என்று பெயர் வை! எனது குரு அக் குழந்தைக்குச் சாஸ்திரோபதேசம் செய்யும்படி எனக்கு ஆக்ஞாபித்துச் சென்றார். ஆனால், அந்தோ! நான் அவ் வதிர்ஷ்டம். பெறக் கொடுத்து வைக்காதவனுய்விட்டேன். நீ என்னிலும் பாக்கியவந்தன்போலத் தோன்றுகின்றது. நான் எனக்குத் தெரிந்ததை யெல்லாம் உனக்குப் போதித்துவிட்டேன்; எனது குருவினுல் எனக்குக் கொடுக்கப்பட்டதை யெல்லாம் நான் உனக்குக் கொடுத்துவிட்டேன். பின்வரும் ஆசாரியரைக் கவனிப்பாய்; எப்படியாவது அவரை யடைந்து, என்னிடமிருந்து நீ அடைந்துள்ளதை யவருக்கு உண்மையில் உபதேசித்துவிடு! நம்மெல்லோரையும் பார்க்கிலும் அவர் சிரேஷ்ட புருஷராவர்; அவருக்கு உபதேசிக்கத் தவறி விடாதே!" என்றார்.

பின்னர் அவர் ஸ்ரீரங்கம் போயிருந்தபொழுது, அங்கு ஒரு சுக்ரவார தினத்திலே, தமது குருவினுடைய பாத

ரக்ஷகளைத் தம் முன்னே வைத்துக்கொண்டு, அவருடைய பாதாரவிந்தங்களிலே தமது மனத்தை ஏகாக்கிரமாகச் செலுத்தி, ஸ்ரீ வைகுண்ட பதவி யடைந்துவிட்டார். கீழே விழுந்துவிட்ட அவருடைய ஸ்தூல சரீரமானது அவருடைய சிஷ்யர்களாலே முறைப்படி தகனம் செய்விக்கப்பட்டது.

ஸ்ரீ புண்டரீகாக்ஷருடைய அத்தியந்த சிஷ்யராகிய இந்த ராமமிச்ரர் கலியுகம் பிறந்து 3932 வருஷங்களுக்குப் பின் விரோதி வருஷத்திலே மாசிமீ த்தில் திங்கட்கிழமை சுக்கிலபக்ஷம் சதுர்த்தசி மகநட்சத்திரத்தில் ஸ்ரீரங்கத்துக்கு அருகாமையிலுள்ள மணக்கல் என்னும் கிராமத்தில் பிறந்தவர். இவர் தமது குருவினுடைய வைகுண்டப் பிராப்திக்குப் பின்னர், குருவினுடைய ஆக்ஞைபின் பிரகாரம் குருவின் அடிச் சுவடுகளிலே சற்றும் வழுவாமல் நடந்து வந்தார்.

இப்பொழுது ஈஸ்வரபட்டருக்கு ஒரு ஆண் மகவு பிறந்தது; யமுனாசார்யார் என்று பெயர் பெற்ற அக் குழந்தை கலியுகம் பிறந்து 4017 வருஷங்கட்குப் பின் தாது வருஷத்திலே ஆஷாடமீ த்தில் சுக்கிலபக்ஷம் சதுர்த்தசி புதவாரம் உத்திராட நக்ஷத்திரத்தில் வீரநாராயணபுரத்தில் ஸிம்ஹவாகன அம்சமாக ஜனித்தது. இச் சங்கதி ராமமிச்ராருக்குத் தெரியவரவே, அவர் உடனே வீரநாராயணபுரம் சென்று ஈஸ்வரபட்டரைக் கண்டு யோக க்ஷேமம் விசாரித்து, பிறந்திருக்கும் குழந்தையைப் பார்

வைபிட்டார். அக் குழந்தையின் முகத்திலே ஞான ஒளி ஜகஜ்ஜோதியாய் வீசிற்று; அக் குழந்தையின் புன்நகையிலே ஆநந்தம் பொங்கித் ததும்பிப் பூரணமாய் எங்கும் ஓடி அனைவரையும் வியாபித்து, எல்லாரையும் ஆநந்தகரர்களாக்கிவிட்டது. சாமுத்திரிகா சாஸ்திரத்திலே சொல்லப் பட்ட சகல லக்ஷணங்களும் இக் குழந்தையி னிடத்திலே பொருந்தியிருப்பதைக் கண்ட ஸ்ரீராமமிச்ரர், பெற்றோரை வாழ்த்தி, "உங்களுடைய பாக்கியமே பாக்கியம்; உலகுய்விக்க வந்த உத்தம புருஷன் உங்களுடைய புத்திரனானது நீங்கள் எத்தனையோ ஜன்மங்களிலே சேர்த்து வைத்த புண்ணியத்தின் பலனே யாகும்" என்று கூறி, குழந்தை பிறந்த பன்னிரண்டாம் நாள் அதற்கு யமுநாசார்யர் என்று நாமகரணம் சூட்டிவிட்டு, ஸ்ரீரங்கத்துக்குத் திரும்பி வந்து சேர்ந்தார்.

ஸ்ரீ யமுனாசார்யர் நாளொரு வண்ணமும் பொழுதொருமேனியுமாக வளர்ந்து அழகுக்கும் அழகாய் அனைவரும் பார்த்து ரமிக்கவும் பிரமிக்கவுமாக, மகா புத்திசாலியாய் வளர்ந்துவந்தார். இவருக்கிருந்த ஞாபகசக்தி அத்தியாச்சர்யமானது; ஒரு விஷயம் காதிலே விழுந்தாற் போதும்; பின்னர் அது அவருடைய ஞாபகத்தினின்றும் ஒரு பொழுதும் மறையவே மறையாது. இதனால் அவருக்கு எந்த விஷயத்தையும் இரண்டாம் முறை கேட்டு அறிந்து கொள்ளவேண்டிய அவசியம் இல்லாமற் போய்விட்டது. வெகு சீக்கிரத்திலே, மிகவும் இளங் குழந்தையா யிருக்கும்

பொழுதே, இவர் சகல கலைகளிலும் தேர்ந்த வித்துவா னுகிவிட்டார்; பின்னர்த் தத்துவ சாஸ்திரங்கள் படிக்கும் பொருட்டு இவர் ஸ்ரீ மகா பாஷ்யபட்டர் என்னும் பிரபல வித்துவான் ஒருவ ரிடத்திலே மாணவராகி, சாங்கியம் மீமாஞ்சை முதலான சாஸ்திரங்க ளெல்லாம் படித்து வரு கையில், இவர் அரசர்முதல் சகலராலும் மதிக்கப்பட்டுப் பிரசித்தி பெறும்படியான ஒரு விசேஷம் நடந்தது.

இப்பொழுது யமுநாசார்யருக்குப் பத்து அல்லது பன்னிரண்டு வயதுதான் இருக்கும். அக் காலத்திலே அவ் வூர் அரசனுடைய சமஸ்தான வித்வானுக வித்வஜன கோலாகலன் அல்லது ஆக்கியாழ்வான் என்ற பெயருடைய சமஸ்தான வித்துவான் ஒருவன் இருந்தான். அவன் சகல சாஸ்திரங்களிலும் சம்பூர்ண பாண்டித்திய முள்ளவன்; வித்வான்கள் எல்லாரும் அவன் பெயரைக் கேட்ட மாத்தி ரத்தில் கிடுகிடு என்று நடுங்குவார்கள். அவன் உண்மையி லேயே மகா வித்வானுகவும், சமஸ்தான வித்வானுகவும் இருந்தபடியினுலே, எவரையும் லக்ஷியம் செய்யாது, இறு மாப்பு மிகுந்து, வித்வான்கள் உபாத்தியாயர்கள் என்று சொல்லிக்கொள்ளுகின்றவர்கள் அனைவரையும் வாதுக் கழைத்து, அவர்களைத் தோற்கடித்து, வருஷந்தோறும் ஒவ்வொரு வித்வானும் தனக்குக் கட்டவேண்டிய கப்பம் இவ்வளவு என்று நியமித்து, அவ்வாறே சகல வித் வான்களிடமும் கப்பம் வாங்கிவந்தான். நமது யமுநாசார்ய ருடைய உபாத்தியாயராகிய மகா பாஷ்யபட்டரும் ஒரு

வித்வா னுகையினுலே ஆக்கியாழ்வானுக்குப் பயந்து வருஷந்தோறும் கப்பம் கட்டிவந்தார்.

வித்வான்களிற் பலரும் வறியவர்களா யிருப்பது ஒரு ஆச்சர்ய சம்பவமன்று; நமது மகா பாஷ்யபட்டர் வறுமையி லாழ்ந்து மிகவும் சிரமத்துடனே காலக்ஷேபம் செய்துவந்தார். இவர் நான்கு ஐந்து வருஷ காலமாக ஆக்கியாழ்வானுக்குக் கட்டவேண்டிய கப்பம் கட்ட முடியாமல் பாக்கி நின்றுவிட்டது. ஒருநாட் காலையில் ஆக்கியாழ்வானுடைய வேலைக்காரர்கள் மகா பாஷ்யபட்டருடைய வீட்டுக்கு வந்து, ''ஐயா! மரியாதையாகப் பாக்கியில்லாமல் கட்டவேண்டிய முழுத் தொகையையும் கட்டிவிடுகிறீர்களா? இல்லையா?' என்று எங்கள் எஜமானன் உங்களைக் கேட்டுவரச் சொன்னர்; கப்பம் கட்டாவிட்டால், நாலு தெருக்கள் கூடும் நடுவிடத்திலே நீர் அவமானப்படுத்தப் படுவீர்; மிஞ்சினுல் தண்டனையும் கிடைத்துவிடும்; உயிருக்கே அபாயம் வந்துவிடும்; எத்தனை வித்வான்களை இவர் சிரச்சேதம் செய்திருக்கின்றார்? என்னவோ? எங்களுக்குத் தெரிந்ததைச் சொன்னேம்; பின்னர்த் தங்களுடைய இஷ்டம்'' என்றார்கள்.

மகா பாஷ்யபட்டர் பயந்து நடுங்கி, இவர்களுக்கு உத்தரம் ஒன்றும் சொல்லத் தோன்றுதவராய், எவ்வித மறுமொழியும் அளிக்காமல், வீட்டினுள்ளே சென்று, மூடி முக்காடிட்டு ஒரு மூலையிலே படுத்துக்கொண்டு, விசனம் நிறைந்த மனத்துடனே கவலைப்பட்டுக்கொண்டிருந்தார்;

அச் சமயத்திலே, நமது யமுநாசார்யர் எங்கோ வெளியே சென்றிருந்தார்; பின்னர் உள்ளே வந்து உபாத்தியாயரைக் காணுதவராய், மற்றப் பிள்ளைகளை விசாரிக்க, அவர்கள் "உபாத்தியாயர் ஏதோ விசனத்தினுலே தம்மை மூடி முக்காடிட்டுக்கொண்டு மூலையில் படுத்துக்கொண்டிருக்கிறுர்" என்பதை யமுநாசார்யருக்குத் தெரிவித்தார்கள்.

யமுநாசார்யர் இதைக் கேட்டு, உடனே உபாத்தியாயரிடம் ஓடிச் சென்று, "ஸ்வாமி! தாங்கள் இப்படி விசனப்படவேண்டிய காரணம் என்ன?" என்று கேட்க, மகாபாஷ்யபட்டர், "அப்பா! அந்த மகா கர்வி ஆக்கியாழ்வானுக்குக் கப்பம் கட்டித் தீரவேண்டும்; அவனுக்கு நாலைந்து வருஷங்களாக என்னுல் கப்பங் கட்ட முடியவில்லை; இன்று அவன், வேலைக்காரர்களைக் கப்பம் கேட்டு வாங்கி வரும்படி யனுப்பியிருக்கின்றுன்; அவர்கள், திண்ணையில் உட்கார்ந்திருக்கின்றுர்கள்; நான் என்ன செய்வேன்? அவனுக்கு நான் இப்பொழுது என்ன பதில் சொல்லி யனுப்புவது?" என்று சொல்லிவிட்டுக் கண்ணீர் விட்டார். யமுநாசார்யருக்குக் கோபம் பொங்கிவிட்டது; உடனே அவர் வெளியே ஓடிவந்து திண்ணையி லிருந்த ஆக்கியாழ்வானுடைய வேலைக்காரர்களைப் பார்த்து, "நீங்கள் யார்? எங்கே வந்திருக்கின்றீர்கள்?" என்று கேட்க, அவர்கள், "எங்களுடைய எஜமானர், வித்வான்களை யெல்லாம்

நடுநடுங்கச் செய்யும் வேந்தன், அறிவுள்ளோர் என்று கர்வித்திருப்பவர்களை அறிவில்லாதவர்களாக ஆக்கியாழ்வான், எங்களை இந்தச் சிறிய மின்மினிப்பூச்சி போன்ற பாஷ்யாசார்யா ரிடமிருந்து கப்பம் வாங்கி வரும்படி சொல்லி யனுப்பினுர்; அதற்காகவே வந்தோம்; அவர் என்ன பதில் சொல்லுகின்றுர்? என்று கேட்டு உடனே எங்களுக்குக் கூறுவாய்" என்றுர்கள்.

ஸ்ரீ யமுநாசார்யர் கடுகடுத்த பார்வையுடனே அவர்களை நோக்கி, பரிகாசச் சிரிப்புச் சிரித்து, "வித்வான்களுக் கெல்லாம் வேந்தனு உங்களுடைய எஜமானன்! அவனுடைய பெயர் என்ன? ஆக்கியாழ்வானு? ஆக்கியாழ்வானை யழிப்பதற்கு ஒருவன் இங்கே மகா பாஷ்யபட்டரிடத்திலே சிஷ்யனு யமர்ந்திருக்கிறுனென்று உங்களுடைய எஜமானனிடம் போய்ச் சொல்லுங்கள்! அவன் கற்ற வித்தையின் கை வரிசையை இங்குக் காட்ட வேண்டாமென்று சொல்லுங்கள்! போங்கள்! போங்கள்! சீக்கிரமாகப் போய்ச் சொல்லுங்கள்!" என்றுர். வேலைக்காரர்களும் ஆக்கியாழ்வானிடம் சென்று, "ஸ்வாமி! நாங்கள் போய் பாஷ்யாசார்யரைக் கப்பம் கேட்டோம்; அவர் ஒன்றும் சொல்லாமல் உள்ளே போய்விட்டார்; கொஞ்ச நேரம் கழித்து, அவர் தமது மாணவன் ஒருவனிடத்திலே 'கப்பம் கொடுப்பதில்லை' என்று சொல்லும்படி சொல்லி யனுப்பிவிட்டார்; அந்த மாணவனுக்கு வயது பத்து அல்லது பன்னிரண்டு தான் இருக்கும்; அவனே அவனுடைய உபாத்தியாயரைப்

பார்க்கினும் கர்வமுள்ளவனாக இருக்கின்றான்; அவன் தங்களை மிகவும் இழிவாகப் பேசினான்" என்றார்கள்.

இங்கே, உள்ளே படுத்திருந்த மகா பாஷ்யபட்டரிடத்திலே, மற்றப் பள்ளிப் பிள்ளைகள் போய் யமுநாசார்யர் அந்த வேலைக்காரர்களிடம் இவ்விதம் சொல்லியனுப்பினாரென்று புகலவே, அவர் தட்டுக் கெட்டு எழுந்து தடுமாறி ஓடி வந்து, யமுநாசார்யரை மிகுந்த கோபத்துடனே பார்த்து, "அடே! நீ எங்கிருந்து வந்தாய் எனக்குச் சனியன்போல? 'இளங்கன்று பயமறியாது' என்பதுபோல, நீ வாயில் வந்தபடி பேசியனுப்பிவிட்டாயே" என்று கலங்கினார். யமுநாசார்யர் "ஸ்வாமி! நீங்கள் ஒன்றுக்கும் பயப்படவேண்டியதில்லை; அவன் வாதுக்கழைப்பானானால், தங்களுடைய மாணவனாகிய அடியேன் சென்று ஜயித்து வருவேன்; இது நிச்சயம்" என்றார். ஆயினும் மகா பாஷ்யபட்டர் இதை நம்பவில்லை.

ஆக்கியாழ்வான் இச் சமாச்சாரம் கேட்ட மாத்திரத்தில் கோபத்தினால் துடிதுடித்து, பல்லை நறநறவென்று கடித்து, "அப்படியா? நல்லதிருக்கட்டும்" என்று கூறி, உடனே அரசனிடம் சென்று சங்கதியைச் சொல்லி, அந்த மகா பாஷ்யபட்டரை அரசனுடைய முன்னிலையில் தன்னுடனே வாது செய்யுமாறு ஆக்ஞாபிக்கும்படி கேட்டுக்கொண்டான்.

அரசனும் உடனே அவரை அரண்மனைக்கு வாது செய்வதற்கு இட்டுக்கொண்டு வரும்படி ஆள் அனுப்ப,

அந்த ஆளைக் கண்டு மகா பாஷ்யபட்டர் நடுநடுங்கி, யமுநாசார்யரைப் பார்த்து, "அடே! பாபி! என்னை மானபங்கம் செய்யவேண்டு மென்று எத்தனை நாட்களாகக் காத்துக் கொண் டிருந்தாய்? இதோ அவன் என்னை வாதுக்கழைத்து விட்டானே; நான் என்ன செய்வேன்?" என்று வருந்த, யமுநாசார்யர் குருவுக்குத் தைர்யம் சொல்லிவிட்டு, வந்த வேலைக்காரனைப் பார்த்து, "இஷ்ட மிருந்தால் அந்த ஆக்கியாழ்வானை வாது செய்வதற்கு இங்கே வரச்சொல்; இல்லையானல், நாம் அங்கே வரவேண்டுமானல் வித்வானுக்குரிய மரியாதையின்படி வரவழைத்துக்கொள்ளச் சொல்!" என்று சொல்லியனுப்பினர். அரசன் இந்த மறுமொழியைக் கேட்டு ஆச்சர்யப்பட்டு, சாமரம், குடை முதலிய பரிவட்டணைகளோடு பல்லக்கு ஒன்றும் அனுப்பிவைத்தான்.

ஸ்ரீ யமுநாசார்யர் ஜயவீர சிங்கம்போலக் கம்பீரமாக பல்லக்கிலேறி யுட்கார்ந்துகொண்டார்; பல்லக்கை யெடுப்பவர்கள் மேள தாள வாத்திய கோஷங்களோடு கூடி அதைத் தூக்கிச் சென்றனர்; யாமுனசார்ய ருடைய பள்ளிப் பிள்ளைக ளெல்லோரும் பல்லக்கைச் சூழ்ந்து சென்றனர்; பல்லக்கின் முன்னே ஒரு பள்ளிச் சிறுவன் "ஜயவீர சிங்கம் ஸ்ரீ யமுநாசார்யருக்குப் பராக்கு; கற்றோர்களை யெல்லாம் கலக்கி நடுங்கிடச் செய்யும் கம்பீர புருஷன் வருகின்றார்; ஆக்கியாழ்வானை யழிப்பதற்குக் கங்கணம் கட்டிக்கொண்டு வருகின்றார்; பராக்கு" என்று கட்டியம் கூறிச் சென்றான்.

இவ்விதமாக ஸ்ரீ யமுநாசார்யர் ஊர்வலம் வரும்பொழுது அவ்வூர் அரசனும் ராணியும் உப்பரிகையின் மேலே உலாவிக்கொண்டிருந்தவர்கள் கீழே பார்க்கும்படி நேரிட, அரசன் "என் கண்ணே! காதலியே! இந்தச் சிறு பிள்ளையா நமது வித்வஜன கோலாகலருடனே வாது செய்யப்போகின்றான்? இப் பிள்ளைக்குப் பைத்தியமோ? என்னவோ?" என்று சொல்லிச் சிரித்தான். இராணி, "என் பிராணநாதா! அப்படித் தாங்கள் நினைக்கவேண்டாம்; எந்தப் புற்றிலே எந்தப் பாம்பு இருக்கிறதென்று எவருக்குத் தெரியும்? இவ்வளவு சீக்கிரத்திலே இக் குழந்தையைத் தாங்கள் இகழ்ந்துவிடவேண்டாம்" என்றாள். அரசன் தன் ராணியைப் பார்த்து "ஏ, பைத்தியமே! இப் பிள்ளைக்கு இன்னும் பால் மணம் மாறவில்லை—இன்னும் மழலைச் சொல் நீங்கியிராது—இப் பிள்ளை நமது வித்வஜன கோலாகலனை ஜயித்துவிடுவானென்று நீ நினைக்கிறாய்போலிருக்கின்றது; அப்படி ஜயிக்காவிட்டால், என்ன பந்தயம் வைக்கின்றாய்?" என்று கேட்க, ராணி, "அரசே! இப் பிள்ளையினுடைய முகக் குறியினாலே இவனே கட்டாயம் ஜயிப்பானென்று எனக்கு உறுதியாகத் தோன்றுகின்றது; உங்களுடைய வித்வான் தோற்பது நிச்சயம்; அப்படி இந்தப் பிள்ளை ஜயிக்காவிட்டால், நான் தங்களுடைய தாசிக்குத் தாதியாகி, அவளிடம் புழுக்கை வேலையையெல்லாம் செய்வேன்" என, அரசன் அப்படி அந்தப் பிள்ளை ஜயித்தானானால், நான் எனது ராஜ்யத்தில் பாதி அப் பிள்ளைக்கு அளித்துப் பட்டமும் கட்டி வைக்கின்றேன்" என்றான். இப்படியிவர்கள் பேசிக்கொண்

டிருக்கையிலே, ஸ்ரீ யாமுநாசார்யருடைய பல்லக்கு அரச னுடைய அரண்மனை வாசலிலே வந்து நின்றது. அரசனும் அரசியும் கொலுக்கூடத்திலே வந்து உட்கார்ந்தார்கள்; வித்வஜன கோலாகலனும் ஒரு பக்கத்திலே யுட்கார்ந் திருந்தான். ஸ்ரீ யமுநாசார்யர், பல்லக்கினின்றும் கீழே யிறங்கிக் கொலுக்கூடத்தினுள்ளே செல்ல, அரசனும் அரசியும் எழுந்து வித்வானுக்குச் செய்யவேண்டிய மரி யாதைகள் அனைத்தையும் செய்தார்கள்; ஸ்ரீ யமுநாசார்ய ரும் அரசனுக்குச் செய்யவேண்டிய மரியாதையைச் செய்து, தமக்கிட்ட ஆசனத்தில் உட்கார்ந்தார். பின்னர், வித்வஜன கோலாகலன் — ஆக்கியாள்வான்—தான் வாது செய்யத் தயாரா யிருப்பதாக அரசனிடம் தெரிவிக்கவே, ஸ்ரீ யமுநாசார்யர் அரசனை நோக்கி, "அரசே! வாது செய்வதற்கு நானும் தயாராகத்தான் இருக்கின்றேன்; ஆனால், நானும் இந்த வித்வானும் வாது செய்வதை நேரில் கண்டும் கேட்டும் நிஷ்பக்ஷபாதமாகத் தீர்ப்புச் சொல்லக்கூடிய வித்வான்கள் வேண்டும் ஆதலால், இவ்வூர் வித்வான்களை யெல்லாம் வரவழைத்தால் அவர்களின் எதிரே எங்களைத் தாங்கள் பரிசோதனை செய்து பார்த் துக்கொள்ளலாம்" என்றார். உடனே அரசன், வேலைக் காரர்களை அவ் வூரின் நாலாபக்கங்களிலும் அனுப்பி, வித்வான்க ளெல்லோரையும் அரைநொடியி லழைத்து வரும்படி ஆக்ஞாபித்தான். வெகு சீக்கிரத்திலே வித் வான்க ளெல்லோரும் வந்து கூடிவிட்டார்கள்; வேடிக்கை பார்ப்பதற்கு ஊர் முழுதும் வந்து கூடிவிட்டது.

ஆக்கியாழ்வான் ஸ்ரீ யமுநாசார்யரைப் பார்த்து, “நீயோ சிறு பையன்; உன்னிடத்திலே பெரும் வாது செய்ய எனக்குப் பிரியமில்லை. ஆகையால், நம்முடைய வாதமானது ஏதேனும் மூன்று கேள்விகளிலேயே நிற்கட்டும்; நீ மூன்று விஷயங்களை சொல்! அவை நீ சொல்லுகிறபடி யல்லவென்று நான் மறுக்கிறேன்” என்றான்.

ஸ்ரீ யமுநாசார்யர் “ஆ! ஆ! சந்தோஷம்! நான் சிறு பிள்ளையென்று இரங்குவதற்காக மெத்த வந்தனம். வீண் பேச்சுப் பேசுவதில் பயன் யாது? மூன்று விஷயங்களை சொல்லிவிடுகிறேன். அவற்றை நீங்கள் மறுக்கவேண்டியது. தோற்றவர் ஜயித்தவருக்கு அடிமையாக வேண்டியது. (1) முதலாவது விஷயம்:—உம்முடைய மாதாவுக்கு ஒரு புத்திரனுண்டு என்று நான் சொல்லுகின்றேன்; முடியுமானால் இல்லையென்று மறுத்துவிடும் பார்க்கலாம். இரண்டாவது விஷயம்:—இந்த அரசன் தர்மவானென்கின்றேன். மூன்றாவது விஷயம்:—இந்த ராஜபத்தினி பதிவிரதை. இம் மூன்று விஷயங்களையும் இல்லையென்று மறுத்துவிடும் பார்க்கலாம்” என்றார்.

ஆக்கியாழ்வானுக்குப் புத்தி கலங்கிவிட்டது; மறுமொழி யொன்றும் சொல்லத் தோன்றவில்லை. தாய்க்குப் புத்திரனாகத் தான் ஒருவன் பிரத்தியக்ஷத்தில் இருக்கத் தாயை மலடியென்று சொல்வது எப்படி? தனக்கு வேண்டியன கொடுத்துச் சீரும் சிறப்புமாய் வாழும்படி செய்துவைத்திருக்கும் அரசனைத் ‘தர்மவானல்லன்’ என்று எப்படிக் கூறு

வது? இதேதடா சங்கடம்! 'பிள்ளையார் பிடிக்கப் போய்க் குரங்காக முடிந்ததுபோல,' ராஜபத்தினியை நா கூசாமல் எப்படி 'வியபசாரி' என்று கூறுவது? கிணறு வெட்டப் பூதம் புறப்பட்டுவிட்டது. இப்படியெல்லாம் ஆக்கி யாழ்வான் சிந்தனைசெய்து மனம் கலங்கி மருண்டுகொண் டிருந்தான். அப் பிள்ளையினுடைய மூன்று கேள்விகளுக்கு அந்த வித்வான் மறுமொழி கூற முடியாதுபோனமைபற்றி, ராணிக்கு உண்டான சந்தோஷத்துக்கு அளவேயில்லை. ஆக்கியாழ்வானும் தான் இதுகாறும் அநேக வித்வான் களை ஜயித்துச் சம்பாதித்த விருதுகளனைத்தையும் எடுத்து ஸ்ரீ யமுநாசார்யருக்கு முன்னே வைத்து, "நான் தோற் றேன்" என்று கூறினான்.

இவற்றைக் கேட்டுக்கொண்டும் பார்த்துக்கொண்டு மிருந்த அரசன் பிரமித்து, ஸ்ரீ யமுநாசார்யரை நோக்கி, "ஸ்வாமி! தாங்கள் கேட்ட கேள்விகளுள் ஒன்றையாவது நமது சமஸ்தான வித்துவான் மறுக்க முடியவில்லை யென் பது உண்மைதான்; ஆயினும், அவற்றுள் ஒன்றையேனும் தங்களால் மறுக்க முடியுமோ?" என்று கேட்க, ஸ்ரீயமுநா சார்யர் பின் வருமாறு மறுமொழி யளித்தார்:—

அரசே! ஒவ்வொன்றாகக் கேட்பீராக!

(1) "உன்னுடைய தாய்க்கு ஒரு புத்திர னுண்டு' என்பதை மறுக்கிறேன். 'ஒரு பிள்ளையும் பிள்ளை யாகாது, ஒரு மரமும்தோப்பாகாது' என்னும் பழமொழியைக் கேட்

டிருக்கலாம்; இப் பழமொழியின்படி, இந்த வித்துவான் அவருடைய தாய்க்கு ஒரே பிள்ளையாகையினாலே, இவருடைய தாய் மலடிவர்க்கத்திலேயே சேர்க்கப்படுவாள்.

(2) "அரசன் தர்மவான்" என்பதை மறுக்கின்றேன். 'தேச ஜனங்கள் செய்கிற பாபங்கள் அனைத்தும் அரசனையே சேரும்' என்பது நீதிவாக்கிய மாதலாலே, அரசன் தர்மவா னாகமாட்டான்.

(3) "ராஜபத்தினி பதிவிரதை" என்பதை மறுக்கின்றேன். ஒவ்வொரு ஸ்திரீயும் உலகத்திலே மணவாளனுடனே விவாகம் செய்விக்கப்படுவதற்கு முன்னர், சந்திரனுக்கும், கந்தர்வர்களுக்கும், அக்கினிக்கும் விவாகம் செய்விக்கப்படுகிறா ளென்பதை நீர் அறியீரோ? "சோமன் அவளை முதலில் அறிந்தான்; கந்தர்வர்கள் பின்னர் அவளையறிந்தார்கள்; கடைசியாக அக்கினி யறிந்தான். சோமன் அவளைக் கந்தர்வர்களுக்கு அளித்தான்; கந்தர்வர்கள் அக்கினிக்கு அளித்தார்கள்; அக்கினியினிட மிருந்து நான் பெறுகின்றேன்" என்று புருஷன் கூறவேண்டிய சுருதி யொன்று இருக்கிறதே. ஆகையால், ஒவ்வொரு ஸ்திரீயும் முதலில் சந்திரன், கந்தர்வன், அக்னியாகிய மூவருக்கும் மனைவியாகி, பின்னர்த் தான் மனிதனுக்கு மனைவி யாகின்றாள். அப்படியேதான் இந்த ராஜபத்தினியும்.

ஸ்ரீ யாமுனாசார்யர் இவ்விதமாக எல்லோரும் ஆச்சர்யப்படும்படியான மறுமொழிகள் அளித்தவுடனே, ஆக்கி

யாழ்வானுடைய அகங்கார மெல்லாம் அடியோடு அழிந்து விட்டது; தலை குனிந்து, முகம் வாடி யுட்கார்ந்திருந்தான். அப்பொழுது ஸ்ரீ யமுநாசார்யர் எழுந்திருந்து, ஆக்கியாள் வானை நோக்கி, "ஐயா! நீங்கள் இப்பொழுது தோற்று விட்டதினால், நீங்கள் எனக்கு அடிமையாய்விட்டீர்கள்; நான் இப்பொழுது உங்களை என் இஷ்டப்படி என்ன வேண்டுமோ செய்யலாம். ஆனால், நீங்கள் வயதில் பெரியவ ராயும், இவ் வரசனிடத்திலே சமஸ்தான வித்துவானாயு மிருக்கிறதினாலே, நான் உங்களை மன்னிக்கின்றேன். மிகுதி யுள்ள உங்களுடைய ஆயுட் காலத்தை இதுகாறும்போல அகங்காரத்திலே போக்காமல், ஞானமார்க்கத்திலே நின்று எம்பெருமான் சரணாரவிந்தங்களை யடைவதற்கு முயற் சிப்பீர்கள்" என்றார். அங்குக் கூடியிருந்த ஆயிரக் கணக் கான ஜனங்கள் ஸ்ரீயாமுனாசார்யருடைய வித்துவத்தையும் பெருந் தன்மையையும் மெச்சிக் கரகோஷம் செய்து ஆர்ப் பரித்தார்கள்; இன்னும், ஸ்ரீ யாமுனாசார்யரை அழகிய தொரு ரதத்திலே யுட்காரவைத்து, தெருத் தெருவாக ஊர்வலம் இழுத்துச் சென்று, ஆநந்த கோஷம் செய்தார் கள்.

இராணிக்கு உண்டான சந்தோஷத்தை என்னென்று சொல்வது? ஓடி வந்தாள். ஸ்ரீயாமுனாசார்யக் குழந்தையைக் கட்டி யணைத்துக்கொண்டாள்; ஆநந்தக் கண்ணீர் ஆறாக ஓடவிட்டாள்; "ஆ! என்னை ஆளவந்தானோ நீ?" என்று அரற்றினாள்; அன்றுமுதல் அவருக்கு ஸ்ரீஆளவந்தார் என்று ஒரு பெயர் உண்டாயிற்று.

அரசனும் தன்னுடைய சமஸ்தான வித்துவான் தோற்றுவிட்டதைப்பற்றி வருத்தமுறாமல், ஸ்ரீ யமுனாசார் யரை மிகக் கொண்டாடி, தன் மனைவியினிடத்தில் வாக் களித்தபடியே தன்னுடைய ராஜ்யத்தில் பாதியை அவ ருக்கு அளித்து உபசரித்தான்.

ஸ்ரீ யமுனாசார்யர் ராஜ்யபாரம் செய்து வருங்காலத் திலே, இவருடைய விஷயங்களைப்பற்றி அடிக்கடி அதிக கவனத்துடனே விசாரித்துக்கொண் டிருந்த ஸ்ரீராமமிச்ரர்: ஸ்ரீ யமுனாசார்யர் ஆக்கியாழ்வானைத் தோற்கடித்து, அரசு புரிந்துவரும் சங்கதியை அறிந்து, ஆநந்த பரவசராகி, அவரை நேரிலே கண்டு தமது குரு ஸ்ரீபுண்டரீகாக்ஷரால் தமக்கு நியமிக்கப்பட் டிருந்த கடமையைச் செலுத்துவ தற்குப் புறப்பட்டார். ஆனால், அரசனை ஒரு சாதாரண மனிதன் பார்ப்பதென்றால், என்ன, லேசான கார்யமா? ஸ்ரீராமமிச்ரருக்கு அரசனைக் காணும்படியான சௌகர்யம் ஏற்படவில்லை. அவர் அநேக நாட்கள் காத்திருந்தார்; அரச னைப் பார்க்க முடியவில்லை. ஆகையால், 'எப்படியாவது யமுனாசார்யராகிய அரசனைப் பார்க்கவேண்டும்' என்று தீர்மானித்துக்கொண்டு, ஒரு யோசனை பண்ணினார்.

அரண்மனையிலே யுள்ள மடப்பள்ளியின் வேலைக் காரர்களுடனே ஸ்ரீ ராமமிச்ரர் நட்புச் செய்துகொண்டு, 'அரசனுக்கு மிகவும் பிரியமான பதார்த்தம் யாது?' என்று விசாரித்துத் தெரிந்துகொண்டார். ஸ்ரீயாமுனாசார்யருக்குத் தூதுவளங் கீரையினிடத்திலே மிகுந்தபிரியம். தினந்தோ

றும் ஸ்ரீராமமிச்ரர் எங்குச் சென்றேனும் தூதுவளங்கீரை சம்பாதித்து மடப்பள்ளிக்குக் கொடுத்துக்கொண்டு வந்தார்; இங்ஙனம் ஆறுமாதகாலம் நடந்தது. ஆனாலும், தாம் அரசனைப் பார்க்க முடியவில்லை. ஆகையால், ஸ்ரீராமமிச்ரர் இப்பொழுது ஒரு யோசனை பண்ணினர்; தாம் தூதுவளங்கீரை கொண்டுவந்து கொடுப்பதை நிறுத்திவிட்டார்; நான்கு நாட்களாய்விட்டன; அரசனுக்குத் தூதுவளங்கீரை கிடைக்கவில்லை. ஸ்ரீ யமுநாசார்யர் சமையற்காரர்களை நோக்கிச் "சென்ற நான்கு நாட்களாக எனக்கு மிகவும் பிரியமாகிய தூதுவளங்கீரை சமையல் செய்யாத காரணம் என்ன?" என்று கேட்டார்.

"எவரோ விருத்தாப்பிய பிராஹ்மணர் ஒருவர், அவரை யின்னாரென்று எங்களுக்குத் தெரியாது, அவராகவே சென்ற ஆறுமாத காலமாகத் தினந்தோறும் தூதுவளங்கீரை கொடுத்துக்கொண்டு வந்தார்; சென்ற நான்கு நாட்களாக அவர் வரவில்லை" என்றான் சமையற்காரர்களுக்குத் தலைவன். ஸ்ரீ யமுநாசார்யர் சற்றுநேரம் யோசனை செய்தார்; 'இதில்ஏதோ விஷய மிருக்கின்றது' என்று கருதினர். "நல்லது, அவன் இனிமேல் இங்கு அடுத்த முறை வருங்கால், அவனை நேரே என்னிடம் கொண்டு வாருங்கள்!" என்று உத்தரவு செய்தார் ஸ்ரீ யமுநாசார்யர் தமது சமையற் காரர்களுக்கு.

நான்கு நாட்களாகத் தூதுவளங்கீரை கொண்டுவராமலிருந்த ஸ்ரீராமமிச்ரர் அடுத்தநாள் அந்தக் கீரை கொண்டு

வந்து சமையற்காரர்களிடம் கொடுத்தார்; உடனே அவர்கள் அவரை அரசனிடம் இட்டுக்கொண்டு போனார்கள்.

ஸ்ரீ யாமுனாசார்யர் ஸ்ரீ ராமமிச்ரரை ஏறிட்டுப் பார்த்தார்; அவருள்ளே ஆநந்தம் அளவு கடந்து பொங்கிற்று; எவருடைய சந்நிதானத்திலே ஆநந்தம் உண்டாகின்றதோ அவரே குரு; ஸ்ரீ ராமமிச்ரரைப் பார்த்ததுதான் தாமதம், ஸ்ரீ யாமுனாசார்யருடைய ஞானதிருஷ்டியை மறைத்துக் கொண் டிருந்த திரையானது நீக்கப்பட்டது போலத் தோன்றிற்று; ஸ்ரீ ராமமிச்ரர் தமக்குக் குருவே யென்று ஸ்ரீ யமுனாசார்யர் தெரிந்துகொண்டார்; மிகுந்த பயபக்தி விநயத்துடனே, "ஸ்வாமி! இத்தனை மாதங்களாக நீங்கள் காத்திருக்கும்படி நான் தெரியாமல் செய்த அபராதத்தை மன்னிக்கும்படி வேண்டி நிற்கின்றேன்; என்ன லாக வேண்டியதைச் சொன்னால், அது எதுவேயாயினும், நான் செய்யத் தயாரா யிருக்கின்றேன்; என்னுடைய ஐச்வர்ய மெல்லாம் உங்களுடையதே; என்னுடைய பூமிகளெல்லாம் உங்களுடையவையே; எனக்குச் சேர்ந்தனவா யுள்ள யாவும் உங்களுடையவையே" என்றார்.

"எனக்கு இவை யொன்றும் வேண்டாம்; தங்களுடைய பாட்டனார் என்னிடத்திலே தங்களுக்குத் தகுந்த பக்குவம் வரும்பொழுது தங்களிடம் ஒப்புவிக்கும்படி விலை மதிக்க முடியாத நிதியொன்று கொடுத்துவிட்டுப் போயிருக்கின்றார்; அது இருக்கும் இடம் எனக்குத் தெரியும்; தாங்கள் அதை ஒப்புக்கொள்ளுகிற வரையில், நான்

தங்களிடம் தாராளமாக வந்து செல்லும்படி உத்தர வளிக்கவேண்டும்.''

''அந்த நிதி எத் தன்மையது?''

''அந்த நிதி, அரசர்களுடையவும் சக்கரவர்த்திக ளுடையவும் அரண்மனைகளிலுள்ள நிதிகள் போன்று, அழியும் தன்மையுடைய தன்று. அது நெருப்பினல் எரிக் கப்படாதது! நீரினல் நனைக்கப்படாதது! பிரகிருதியி னுடைய அழிக்கும் சக்திகள் எதனுலும் அது அழிக்கப் படாதது.

''நான் அந்த நிதியை எப்டிப் பார்க்க முடியும்?''

''அஞ்ஞன மைகளினலே உலகத்திலே புதைந்து கிடக்கும் நிதிகளைப் பாக்கலாம்; ஆனல், யான் கூறிய நிதி அவற்றினும் ஒரு விசேஷத் தன்மை வாய்ந்தது.''

''நான் அந்த நிதியை எப்படி அடைதல் முடியும்?''

உலக நிதியை அடைவதற்கு நீ மிருகங்களையாவது மனிதர்களையாவது பலியிடவேண்டும். இந்த நிதியை அடைவதற்கோ மிகவும் சூக்ஷ்ம சக்திகளுள்ள ஒரு இலை யிருக்கிறது; அதை அந்த நிதியின் மேலே போட்டால் போதும்; அந்த நிதி உன்னுடையதாய் விடும்.''

''நல்லது! அது எங்கே யிருக்கிறது?''

''இரண்டு நதிகளுக்கும் இடையிலுள்ள ஒரு ஸ்தலத் திலே அந் நிதி யிருக்கின்றது; அது ஒன்றினுள் ஒன்ரு

யமைக்கப்பட்டுள்ள ஏழு பலமான கோட்டைகளினுலே காக்கப்பட்டு, ஒரு யந்திரத்தின்மீது வைக்கப்பட்டிருக்கிறது; ஒரு பெரும்பாம்பு அதைச் சுற்றியுள்ளது; பன்னிரண்டு வருஷங்கட்கு ஒருமுறை தென்கடல்களிலிருந்து ஒரு ராக்ஷதன் 'அந்த நிதி பத்திரமா யிருக்கிறதா?' என்று பார்க்கும்பொருட்டு வருகின்ருன்."

"நான் தங்களுக்குத் தாசன்; அந்த நிதியை எனக்குக் காண்பிக்கவேண்டும்."

"ஆகட்டும், சீக்கிரம் காண்பிக்கிறேன்."

அன்றுமுதல் ஸ்ரீ ராமமிச்ரர் ஆளவந்தாரிடம் தினந்தோறும் வந்து, ஸ்ரீ பகவத்கீதையி லடங்கிய ரகஸ்யங்களையெல்லாம் எடுத்து உபதேசித்துக்கொண்டிருந்தார். நாளுக்கு நாள் ஸ்ரீ யாமுநாசார்யருக்கு 'ஸ்ரீ பகவத்கீதையிலே போதிக்கப்பட்டுள்ள உண்மைகளை யெல்லாம் அநுபவத்தில்அநுஷ்டித்துப் பார்க்கவேண்டும்' என்று பேரவா உண்டாயிற்று. ஸ்ரீராமமிச்ரரை நோக்கி, "ஸ்வாமி! எம்பெருமானுடைய பாதாரவிந்தங்களிலே நான் சரணுகதி யடைந்து தொண்டு செய்தால், அவர் ஏற்றுக்கொள்வாரா?" என்ருர். ஸ்ரீ யாமுநாசார்யர் அதற்கு அவர் "ஏன் ஏற்றுக்கொள்ளமாட்டார்? எம்பெருமா னிடத்திலே பக்ஷபாதம் கிடையாது" என்ருர். பின்னர் ஸ்ரீ ராமமிச்ரர் ஸ்ரீ யாமுநாசார்யரைத் தனியே இட்டுச் சென்று பிரபத்தியைப்பற்றிப் போதிக்கின்ற சரம ஶ்லோக ரகஸ்யத்தை அவருக்கு உப

தேசித்தார். வெகு சீக்கிரத்திலே ஸ்ரீ யாமுநாசர்யார் மகா வைராக்யசாலியாகி, உலகினையும் அதன் ஊழற் சுகங்களையும் உதறிவிட்டு, இறைவனடி பணிவதிலேயே என்றும் காலம் கழிக்கப் பிரியப்பட்டார். ஸ்ரீ ராமமிச்ரர் தமது சிஷ்யருடைய மனம் பக்குவ நிலை யடைந்துவருவதைக் கவனித்துக்கொண்டேயிருந்தா ராதலால், 'இப்பொழுது ஆளவந்தார் போகமார்க்கத்தை விட்டுத் தியாக மார்க்கத்திலே நடக்கத் தீர்மானித்துள்ளார்' என்பதையறிந்துகொண்டார்.

இப்படிச் சின்னாட்கள் கழிந்தன. பின்னர் ஸ்ரீ ராமமிச்ரர் 'ஸ்ரீ ஆளவந்தாருடைய மனம் பக்குவ மடைந்துவிட்டது' என்பதை யறிந்து, அவரை நோக்கி, "அப்பா! நீ உன்னுடைய பாட்டனாருடைய நிதியை ஏற்றுக்கொள்ளவேண்டிய காலம் வந்துவிட்டது; ஆகையால், என்னுடன் வந்தால், நான் அதை யுனக்குக் காண்பிக்கின்றேன்" என்றார். அப்படியே அந்த நிதியைக் காண்பதற்கு ஆளவந்தார் தமது யானை குதிரை சேனை பரிவாரங்களுடனே புறப்பட, ஸ்ரீ ராமமிச்ரர் "நீ தனியே வந்தால்தான் நான் காண்பிக்க முடியும்; வேறு எவரும் வரக்கூடாது" என்று மொழிந்தார். "சரி" என்று சொல்லி ஆளவந்தார் தமது குருவாகிய ஸ்ரீ ராமமிச்ரருடனே செல்ல, ஸ்ரீராமமிச்ரர் இவரை நேரே ஸ்ரீரங்கத்துக்கு இட்டுக்கொண்டுபோய், மூலஸ்தானத்தினுள்ளே சென்று, ஸ்ரீரங்கநாதருடைய விக்கிரகத்தைக் காண்பித்து, "எனது அருங் குழந்தாய்! இதுதான் உனது

பாட்டனார் உனக்கு வைத்துவிட்டுப் போயிருக்கும் விலை மதிக்க முடியாத நிதியாம்; இதைத்தான் நான் உனக்குக் காண்பிக்கவேண்டு மென்று உனது பாட்டனார் எனக்கு ஆக்ஞை யளித்துவிட்டுப் போனார்" என்று கூறினார். ஆளவந்தார் அந்த அகண்ட கல்யாணகுண ஆநந்தகரமான விக்கிரகத்தைப் பார்த்துப் பார்த்து அடங்காத மகிழ்ச்சி கொண்டு, ஆநந்த பரவசராய் அயர்ந்து நின்றார். அவ்விடத்தினின்றும் நீங்குவதற்கு அவருக்கு மனமே வரவில்லை. அப்பொழுதே அந்த இடத்திலேயே அவர் உலகைத் துறந்து சந்யாசாச்ரமம் புகுந்து கொண்டார்.

அவர் அப்பொழுது பின் வருமாறு தமக்குத் தாமே யோசிக்கலானார்:—'நான் உலகில் அழுந்தி ஓயாத் துன்பத்தில் உழன்றுகொண்டிருந்தேன்; அதோகதி மார்க்கத்திலே அவசரமாகப் போய்க்கொண்டிருந்தேன்; இப் பரிசுத்த புருஷன், மகா பாபியான என்னைத் தேடி, எனக்காக ஆறு மாதங்கள் வரையில் காத்துக்கொண்டிருந்து, எல்லோரும் ஆச்சர்யப்படும்படியான ஒரு சூழ்ச்சி செய்து என்னை யடைந்து, அளவற்ற பொறுமையுடனும் மிகுந்த கவலையுடனும் இராப்பகலாக என்னுடனேயே தங்கி, எனது பக்குவ நிலைமையைக் கவனித்துப் போதித்துக் கொண்டே வந்தார்; கடைசியாக என்னுடைய முன்னோர்களுடைய சொத்தை என் வசம் ஒப்புவிக்கப்போவதாகக் கூறினார். 'அந்தச் சொத்து பூமியினுள்ளே புதைபட்டுக் கிடக்கும் ஏதோ நிக்ஷேபமோ' என்று நினைத்தேன். ஆனால்,

'அந்தச் சொத்து சாக்ஷாத் பரமேஸ்வரனே, என்று இப்பொழுது தெரியவருகிறது. 'இது நிதிகளெல்லாவற்றிலும் சிரேஷ்டமானது' என்பதில் எவருக்குச் சந்தேகமுள்ளது? 'அந்தச் சொத்து பொன்னு? வெள்ளியா? இரத்தினங்களா?' என்று தெரிந்துகொள்ள விரும்பினேன். 'அது அழிக்கும் சக்திகள் எதனுலும் அழிக்கப்பட முடியாதது' என்று கூறினுர். 'அது புதையுண்டு கிடக்கும் இடம் அறிவதற்கு அஞ்சனம் ஏதேனும் உளதோ?' என்று அறிய விரும்பினேன். 'கண்ணில் எவ்விதமான அஞ்சனமும் உபயோகிக்காமல் இருந்தாலே அந்தச் சொத்துப் புலப்படும்' என்ருர். உலக அழுக்காகிற எவ்வித அஞ்சனத்தினின்றும் விடுபட்டு ஸ்வதந்திரமாயுள்ள கண்களே ஈஸ்வரனுடைய மகிமையைத் தர்சித்தல் கூடும். புதையுண்டு கிடக்கும் நிக்ஷேபங்களைப் பலிகொடுத்தாலொழிய காண முடியாதாகையினுலே, 'அந்த நிதியை எப்படியடைவது?' என்று கேட்டேன். சூட்சும சக்திகளுள்ள ஒரு இலையைக் கூறினுர்; அது துளசியாகத்தான் இருக்கவேண்டும். 'அந்த நிதி இரண்டு நதிகளுக்கிடையே உள்ளது' என்ருர்; அது தென்காவிரிக்கும் வடகாவிரிக்கும் இடையேயுள்ள ஸ்ரீரங்கமேயாகும். இந்த க்ஷேத்திரத்தின் ஏழு பிராகாரங்களும் ஏழு கோட்டைகள்போல இந்த நிதியைக் காக்கின்றன. பீஜயந்திரமாவது விமான ரூபமாகிய பிரணவமேயாகும். பெரும்பாம்பு அகண்ட ஞானத்துக்கு அறிகுறியாகிய ஆதிசேஷனேயாகும். இந்த க்ஷேத்திரத்தைத் தர்சிப்பதற்குப் பன்னிரண்டு வருஷங்கட்கு ஒருமுறை வருகின்ற ராக்ஷதன்

மகா பக்தன் விபீஷணனே யாவன். இந்த நிதியை எனது பாட்டனார் ஸ்ரீ நாதமுனிவர் எனக்காக வைத்துவிட்டுப் போயிருக்கிறார். நான் இங்கேயே இருந்துகொண்டு, பகவானுக்குத் தொண்டு புரிந்துகொண்டிருக்க வேண்டுமென்பதே எனது பாட்டனாருடைய விருப்பம்போலும்! ஆ! என்ன ஜீவகாருண்யம்! ஐம்புலன் வாழ்க்கைச் சேற்றிலே அமிழ்ந்தி யுழன்றுகொண்டிருந்த புழுப்போன்ற என்னை எனது குரு தேடிப்பிடித்து, நித்திய வாழ்க்கையும் நிரந்தர ஞானமும் அளித்தாரே. இவ்வினிய வாழ்க்கையின் முன்னே பெண்டு பிள்ளைகள், பெயர், கீர்த்தி, ஐஸ்வர்யம் முதலிய இவ் வுலக பந்தங்களும் சுகங்களும் எம்மாத்திரம்? இனிமேல் ஈஸ்வர பக்திக்குத் தவிர, வேறொன்றுக்குமே எனது வாழ்க்கையில் இட மில்லை.'

இவ்விதமாகவெல்லாம் ஸ்ரீ ஆளவந்தார் சிந்தனைசெய்து, 'ஈஸ்வர பக்தி யொன்றே' என்ற சங்கற்பம் செய்துகொண்டு, ஸ்ரீரங்கத்திலேயே பன்னாட்கள் கழித்தார். இப்பொழுது இவருடைய பக்தியின் பெருமையும் பரிபூர்ண பாண்டித்தியமும் பிரக்யாதியும் தேசத்தின் நாலா பக்கங்களிலும் பரவின; ராஜனுடையவும் ராணியினுடையவும் காதுகளுக்கும் எட்டின. இராணி தான் ஆளவந்தாரை முதல் முதல் கண்டறிந்தவளாயிற்றே; அதனால் அரசனும் அவனது மனைவியும் ஆளவந்தாரிடம் வந்து "ஸ்வாமி! எங்களை ஈடேற்றவேண்டும்" என்று இரந்து கேட்க, ஆளவந்தாரும் சந்தோஷத்துடனே ஏற்றுக்கொண்டார்; இவ் வாச

னுடைய பெயர் இதற்கு முன் ரங்கசோழன் என்றும், ராணியின் பெயர் ரங்கநாயகி என்றும் அழைக்கப்பட்டன. அகங்காரமே அவதாரமா யிருந்த ஆக்கியாள்வானும் ஸ்ரீ ஆளவந்தாரிடத்திலே சிஷ்யனுகி, உபதேசம் பெற்று, ஸ்ரீ நாதமுனி தாசன் என்ற பெயருடனே விளங்கினர்; ஸ்ரீ யாமுநாசார்யர் ஆண்டுவந்த ராஜ்யமானது ஸ்ரீ ரங்கநாதர் வசம் ஒப்புவிக்கப்பட்டது; கிருமிகாந்த சோழன் என்னும் அரசன் ஒருவன் பிற்காலத்திலே அதனைத் தன்னுடைய தேசத்தோடு சேர்த்துக்கொண்டான்; ஸ்ரீ ஆளவந்தாருக்கு இரண்டு புத்திரர்கள் உண்டு; அவர்களும் வந்து ஸ்ரீரங்கத்திலேயே வசித்தார்கள்.

ஸ்ரீ ஆளவந்தாருக்கு அநேக சிஷ்யர்கள் ஏற்பட்டார்கள்; அவர்களில் முக்கியமானவர்கள் சிலருடைய பெயர்கள் பின் வருமாறு:— ஸ்ரீ மகா பூர்ணர், ஸ்ரீ கோஷ்டி பூர்ணர், ஸ்ரீ சைல பூர்ணர், ஸ்ரீ மாரனேரி நம்பியார் ஸ்ரீ காஞ்சி பூர்ணர், ஸ்ரீ தெய்வ வாரியாண்டான், ஸ்ரீ மாலாதரர் முதலியோர்.

ஒரு நாள் ஸ்ரீ ராமமிச்ரர் ஸ்ரீ ஆளவந்தாரிடம் சென்று "நீ செய்யவேண்டிய கார்யம் ஒன்று உள்ளது; உனது பாட்டனர் அவருடைய சிஷ்யர்களுள் ஒருவராகிய குருகாதிப ரிடத்திலே உனக்குக் கூறும்படி ஒரு ரகஸ்யம் சொல்லிவிட்டுப் போயிருக்கிறுர்; நீ அதை அவரிடமிருந்து கேட்டுக்கொள்ளவேண்டு மென்று நான் விரும்புகிறேன்"

என்றார். இப்படிக் கூறியதற்குச் சந்தர்ப்பம் வேறொன்றாக வும் சிலர் கூறுவர்.

ஒரு சமயத்திலே ஸ்ரீ ராமமிச்ரர் "அடியார்க் கெளிய வன்" என்ற பாடலை வியாக்கியானம் செய்துகொண் டிருந்தபொழுது, ஸ்ரீ ஆளவந்தார் மிகுந்த ஆத்திரத் துடனே "ஸ்வாமி! ஈஸ்வரன் அதுபோல் அவ்வளவு சுலப மாக அடையப்படுவாரானால், அவரை நேருக்கு நேரே பிரத்தியக்ஷத்தில் பார்ப்பதற்கு மார்க்கம் இருக்கவேண் டும்; நான் அந்த மார்க்கத்தை யறிந்துகொள்ளுதற்குத் தகுந்தவன் என்று தங்களுக்குத் தோன்றினால், எனக்கு அதை யுபதேசித் தருளுங்கள்" என்று கூற, ஸ்ரீராமமிச் ரர்—இவருக்கு மணக்கால் நம்பி என்றும் ஒரு பெயர் உண்டு—"குழந்தாய்! எனக்கு அதெல்லாம் தெரியாது; அத்தகைய விஷயங்களிடத்து நான் ஆசை யுறுவதில்லை; நான் அவருடைய தாசாதி தாசனா யிருக்கப் பிரியப்படு கின்றேனே யொழிய, நான் வேறொன்றுக்கும் உரித்தானவ னல்லன்; இதுவே எனது தியானங்க ளெல்லாவற்றுக்கும் விஷயமாம்; உனக்கு ரகஸ்யம் உபதேசிப்பதற்கு ஸ்ரீ குரு காதிபரே தகுந்தவர்; அவர் உன்னை ஈடேற்றிவிடுவார்" என்று கூறினார்.

ஸ்ரீ ஆளவந்தார் ஆச்சர்ய முடையவராய் "ஏன் அந்த ரகஸ்யம் தங்களிடம் இல்லை?" என்று கேட்டார்

மணக்கால் நம்பியார் "உன்னுடைய பாட்டனார் அவ ருடைய சிஷ்யராகிய என்னுடைய குருவைத் தம்மிட மிரு

ந்து கற்றுக்கொள்ளும்படி கூறினர்; அதற்கு எனது குரு, 'வாசலிலே பிணம் கிடக்க, விவாகத்தைப்பற்றி யோசனை செய்வா ருண்டா? இன்னும் நான் அந்த மார்க்கம் அநுஷ்டிப்பதற்குத் தயாராகவில்லை.; நான் இந்தச் சரீரத்தை எறிந்துவிடுகிறபொழுது, நான் அதைப் பெற்றுக்கொள்வதற்கு போதுமான அளவு பரிசுத்தத் தன்மை வாய்ந்தவனுவேனென்று நினைக்கிறேன்' என்றார்" என்று கூறினர்.

ஸ்ரீ ஆளவந்தார் "அப்படியானல் நான் குருகாதிபரிடம் சென்று உபதேசம் பெற்றுக்கொள்வதற்குச் சந்தோஷத்துடனே சம்மதிக்கிறேன்" என்று சொன்னர்.

ஸ்ரீ ராமமிச்ராருக்கு வயது தளர்ந்துவிட்டது; பலவீனம் நாளுக்குநாள் அதிகத்துக்கொண்டு வந்தது; அந்தியகாலம் நெருங்கிவிட்டது. ஆனல், தமக்குப் பின்னே தம்முடைய வேலையை விடாமல் செய்வதற்குத் தகுந்த யோக்கியதையுள்ள ஒருவர் ஏற்பட்டுவிட்டதுபற்றி ஸ்ரீராமமிச்ராருக்கு அதிக சந்தோஷம் உண்டாயிற்று. அவர் ஸ்ரீ ஆளவந்தாரைத் தம்மருகே கூப்பிட்டு "நீ ஸ்ரீநாதமுனி யோகீஸ்வராருக்கு இரண்டுவிதத்திலே சம்பந்தப்பட் டிருக்கிருய்; இந்தப் பரிசுத்த க்ஷேத்திரத்திலேயே இருந்து, உன்னுடைய வேலைச் சரிவரப் பின்பற்றிச் செய்யும்படியான ஒரு சிஷ்யனை ஏற்படுத்துவாய்" என்று கூறினர். பின்னர் அவர் தமது குருமூர்த்தி ஸ்ரீ புண்டரீகாக்ஷருடைய பாதாரவிந்தங்களிலே தமது முழு மனத்தையும் ஏகாக்கிரப்படுத்தி, நிஷ்டையி லிருந்து, சரீரத்தை உதறி

யெறிந்துவிட்டு எம்பெருமா னடிகளிலே போய்ச் சேர்ந்தார். ஸ்ரீ ஆளவந்தாரும் மற்ற சிஷ்யர்களும் துக்கக் கடலில் ஆழ்ந்தார்கள். ஸ்ரீ ராமமிச்ரருக்கு ஆளவந்தார் மிக மிகப் பழைய சிஷ்யரும் மிகமிகப் பிரிய சிஷ்யரு மான தினலே, ஸ்ரீ ராமமிச்ரருடைய சரீரத்தைத் தகனம் செய்து, பிரஹ்மமேதக் கிரியைக ளெல்லாம் நடத்தினர்.

---

## ஸ்ரீ யாமுநாசார்யர்

---

சின்னட்கள் கழிந்த பின்னர் ஸ்ரீ ஆளவந்தாருக்கு ஸ்ரீ குருகாதிபருடைய ஞாபகம் வந்தது; 'குருகாதிபரிடம் நான் உபதேசம் பெறவேண்டுமென்று கூறி, என்னை யங்கு ஸ்ரீ ராமமிச்ரர் போகச் சொன்னரே; நான் இதுகாறும் போகாம லிருந்துவிட்டேனே' என்று ஸ்ரீ ஆளவந்தார் வருத்தமுற்று, 'இனிமேலாயினும் தாமதிக்க லாகாது' என்று கருதி, தமது சிஷ்யர்களையும் கூடவே யிட்டுக் கொண்டு, யோகேஸ்வரராகிய ஸ்ரீகுருகாதிபர் நிஷ்டையிலே யுட்கார்ந்திருந்த இடத்துக்குச் சென்றார்.

அங்குக் குருகாதிபர் ஆழ்ந்த சமாதியிலே அகிலநாயகனுடனே ஐக்கியமுற்று, ஆநந்த சொரூபராய் மற்றெல்லாவற்றையும் மறந்து மனமடங்கி வீற்றிருப்பதைக் கண்ட ஸ்ரீ ஆளவந்தாருக்கும் அவருடைய சிஷ்யர்களுக்கும் பய பக்தி பெருகிற்று; இவர்கள் அவருடைய சமாதி நிஷ்டையைக் கலைக்கத் துணியாதவர்களாய், அவர் பின்னே

சென்று மௌனமாயிருந்தார்கள், ஆனால், அந்த யோகீஸ்வரர் திடீரென்று பின்புறம் திரும்பிப் பார்த்து, "சோட்டைக் குடும்பத்தைச் சேர்ந்தவர் எவரேனும் இங்கே வந்திருக்கின்றாரா?" என்று கேட்க, ஸ்ரீ யாமுநாசார்யர் குருகாதிபர் முன்னே சாஷ்டாங்கமாக விழுந்து பணிந்து, "ஸ்வாமி! அக்குடும்பத்தைச் சேர்ந்த யாமுனன் என்ற நான் இதோ தங்கள் அடிகளிலே முடி சாய்த்திருக்கிறேன்" என்றார்.

அப்பொழுது ஸ்ரீ குருகாதிபர் அவருக்கு ஆசி கூறி, அவரை எழுந்திருக்கும்படி ஆக்ஞாபித்தார். ஆளவந்தார் உடனே ஸ்ரீ குருகாதிபரை நோக்கி, "ஸ்வாமி! நான் ஒரு கேள்வி கேட்கப்போகின்றேன்; தாங்கள் என்னை மன்னிக்க வேண்டும்; தங்களுடைய சிஷ்யனாகிய நான் இங்கு வந்தது தங்களுக்கு எப்படித் தெரிந்தது?" என்றார். குருகாதிபர் "புத்திரா! இதுதானா கேள்வி. சாக்ஷாத் எம்பெருமான் என்னிடத்திலே கிருபை செலுத்துகிறபொழுது, என்னைத்தவிர மற்றெல்லாவற்றையும் மறந்துவிடுவது வழக்கம்; ஜகன்மாதாகூட அப்பொழுது அவருடைய மனதைக் கலைக்க முடியாது. ஆனால், அவர் இப்பொழுது எனது தோள்களின்மேலே கை வைத்து, ஒரு தரத்துக்குமேலே இருதரமாக எனக்கப்பால் பார்த்தார். ஸ்ரீ நாதமுனியோகியினுடைய குடும்பத்தைச் சேர்ந்தவரைத்தவிர வேறெவரும் எம்பெருமானுடைய மனத்தை அப்பொழுது அவ்வளவு ஆச்சர்யமாக இழுக்க வல்லவர்களாகார்கள் என்று நான்

ஊகித்தறிந்துகொண்டேன்" என்று மறுமொழி கூறினர். ஸ்ரீ ஆளவந்தார் குருகாதிபருடைய பாதமலர்களைத் தொட்டுக் கண்களில் ஒத்திக்கொண்டு, "ஸ்வாமி! தங்களுடைய அடிமைக்கு யோக ரகஸ்யங்களை உபதேசிக்கக் கூடாதா?" என்று வெகு விநயத்துடனே கேட்க, அந்த யோகீஸ்வரர் ஒரு விநாடிநேரம் யோசனை செய்து, "புத்திரா! எனது குருவின் பேரனுக்கு நான் ஒன்றும் இல்லையென்று சொல்லமுடியாது; தவிர, எனது குருவினுடைய ஆக்ஞையும் இதுவேயாகும்; நான் இச் சரீரத்தை விட்டுப் போகும் பொழுது உனக்கு உபதேசிப்பேன்; புஷ்யமாதத்திலே இன்ன தேதியிலே நான் சரீரவியோகமாய் விடுவேன்; அப்பொழுது நீ இங்கேயிருக்கத் தவருதே" என்ருர். ஸ்ரீ ஆளவந்தாரும் அப்படியே செய்வதாக வாக்குறுதி செய்துவிட்டு, ஸ்ரீ குருகாதிபரிடம் விடைபெற்றுச் சென்ருர்.

ஒருநாள் ஸ்ரீ திருவரங்கப் பெருமாளரையர் சொல்ல வேண்டிய முறைப்படி சந்தம் குன்ருமல் பிரபந்தத் திரட்டைப் பாடிக்கொண்டிருக்கையில், "கெடுமிடராயவெல்லாம்" என்று ஆரம்பிக்கிற பாட்டிலிருந்து "நடமினே நமர்களுள்ளீர்" என்று ஆரம்பிக்கின்ற பாட்டுவரையில் பாடியபொழுது, ஆளவந்தாரையே உற்று நோக்கியவண்ணமாயிருந்தார்; இது மாத்திரம் அன்று; இப் பாடல்களை ஆளவந்தாரை உற்று நோக்கிய வண்ணமாக இன்னெருமுறையும் பாடினர். இப் பாடல்களின் சுருக்கமான கருத்தாவது, "பக்தர்கள் ஸ்ரீ பத்மநாபனிடம் சென்று பக்தி செய்வதற்கு அனந்தசயனம் செல்லவேண்டும்" என்பதாம்.

இப்பாடல்களை ஆளவந்தார் மிகக் கவனமாகக் கேட்டு, 'ஸ்ரீ பத்மநாப க்ஷேத்திரத்துக்கு யாத்திரை செய்யவேண்டும்' என்று தீர்மானித்துக்கொண்டு, மடத்திலே தமது சிஷ்யர்களுள் ஒருவராகிய ஸ்ரீ தெய்வவாரியாண்டான் என்பவரைத் தமக்கு பதிலாக வைத்துவிட்டு, அநந்தசயனம் சென்றார்.

அவர் கொஞ்சகாலம் அநந்தசயனத்திலே தங்கி வசித்துவந்தார்; இப்படியிருக்கும் நாளையிலே ஒருநாள் அவர் தம் குருகாதிபருடைய வாக்குறுதியை நினைத்துக்கொண்டார்; அவர் குருகாதிபர் முன்னே இருக்கவேண்டிய நாள் அன்றுதான்.

இப்படி ஞாபகமில்லாம லிருந்துவிட்டது பற்றி ஆளவந்தார் பொறுக்க முடியாத விசனமுடையவராகி, "ஆ! ஆ! தவற விட்டுவிட்டேனே! நான் என்செய்வேன்? இவ்வளவு ஜாக்கிரதை யில்லாமல் மோசம் போனேனே; நான் மகா பாபம் செய்திருக்கிறேன்; இல்லையேல் இப்படியும் குரு ஆக்ஞை தவறுவேனு? இப்பொழுது என் செய்வது? ஆ! ஆ! கருடனுடைய வேகம் எனக்குண்டாகாதா? புஷ்பக விமானம் வந்து இப்பொழுது என்னைக் கொண்டு சென்று அவர் முன்னே வைத்துவிடாதா? இப்பொழுது விசனப்பட்டுப் பய னில்லை; ஸ்ரீ ரங்கநாத க்ஷேத்திரம் செல்வோம்; அங்குதான் மனம் சமாதான மடையும்" என்று இரங்கி, தாமே தேறுதலும் செய்துகொண்டார். இவர் இவ்விதமாக விசனித்துக்கொண் டிருக்கையிலே, எம்பெருமான்

அவருக்குப் பிரத்தியக்ஷமாகி, "அப்படி நீ போகவொட்டாமல் செய்தது நான்தான்; அதுவும் ஒரு கார்யார்த்தமாகத்தான் செய்தேன்; நீ உனது குரு ஸ்ரீ ராமமிச்ரரைப் போல, லக்ஷியத்தினிடத்தே பற்றியிரு" என்று சொல்லி விட்டு மறைந்தார். இதனால் ஸ்ரீ ஆளவந்தார் திருவநந்தபுரத்தை விட்டு நீங்கி, ஸ்ரீரங்கத்துக்குப் பிரயாணமானார்.

ஸ்ரீரங்கத்திலே மடத்திலே வைக்கப்பட்டிருந்த தெய்வவாரியாண்டான், குருவினுடைய பிரிவாற்றாமையினாலே மனம் மிக நொந்து, இதனால் அதிக வியாதியிலே விழுந்துவிட்டார்; நாளுக்கு நாள் பலவீனம் அதிகரித்தது; அவருடைய நண்பர்கள் 'அவருடைய உயிருக்கே ஆபத்து வந்துவிடுமோ?' என்று பயந்தார்கள்; வைத்திய நிபுணர்களைக் கூப்பிட்டு, அவரைக் காண்பித்தார்கள்; புத்திசாலிகளான வைத்தியர்கள், "இந்த வியாதி சரீர சம்பந்தமானதன்று; இது மனத்தைப் பற்றியதேயாகும்; ஹிருதயத்தைப்பற்றியதேயாகும்; அவர் ஏதோ ஒன்றை நாடியிருக்கின்றார்; அதை அவர் சீக்கிரம் அடையாவிட்டால், மரணமடைந்துவிடுவார்" என்று சொன்னார்கள். அப்பொழுது அந்த நண்பர்கள், ஆண்டானை நோக்கி, "தாங்கள் நாடிக் கவலையுறுவது எதைப்பற்றி?" என்று கேட்க, ஆண்டான் "நான் எனது சற்குருவின் தர்சனத்தைத் தவிர வேறு எதை நாட முடியும்?" என்று பதில் கூறினர். வைத்தியர்கள் "அப்படியானல், ஒன்று செய்தால்தான் அவர் சொஸ்தமடைவார்—அவருடைய குரு எங்கேயிருக்கிறு

ரோ, அங்கே அவரை யுடனே கொண்டுபோகவேண்டும்'' என்று சொன்னார்கள்.

உடனே, வைத்தியர்களின் சொற்படியே ஸ்ரீ தெய்வ வாரியாண்டானை அவருடைய நண்பர்கள் வண்டியிலேற்றி மெல்ல மெல்லக் கொண்டு சென்றார்கள். அவர் நாளுக்கு நாள் சௌக்கியமாகி, மெல்லத் தாமே நடந்து செல்லும்படி யான ஸ்திதியை அடைந்தார். கொஞ்சதூரம் போவதற் குள்ளாக, 'ஸ்ரீ ஆளவந்தார் அநந்தசயனத்தை விட்டு நீங்கி, ஸ்ரீரங்கத்துக்குப்பிரயாணமாகி வருகிறார்' என்று கேள்விப் பட்டு, தெய்வவாரியாண்டானும் அவருடைய சிஷ்யர்க ளும் ஆளவாந்தாரைச் சந்திப்பதற்காக வேகமாகச் சென் றார்கள். தெய்வவாரியாண்டான் ஸ்ரீ யாமுனாசார்யரையும் அவருடைய சிஷ்யர்களையும் பார்த்துவிட்டதுதான் தாம தம், ஓடிப்போய் அவருடைய பாதாரவிந்தங்களிலே விழுந்து, பச்சைக் குழந்தைபோலத் தேம்பித் தேம்பி யழுதார். ஸ்ரீ ஆளவந்தாருக்கு விவரமாக விஷயம் ஒன்றும் தெரியாதாகையினாலே, மடத்தை விட்டுவிட்டு இவ்வளவு தூரம் தம்முடைய உத்தரவில்லாமல் வந்துவிட்டதைப் பற்றி முதலில் வெகுவாகக் கடிந்துகொண்டா ராயினும், பின்னர் ஆண்டான் தம்முடைய பிரிவாற்றாமையினாலே நோயில் விழுந்துவிட்டா ரென்று கேள்விப்பட்டு, ஆண் டானைப் பார்த்து ''நீ செய்தது சரிதான்; நான் கோபித்தது தப்பு; ஸ்ரீ ராமசந்திரர் தாம் திரும்பிவருகிறவரையில் பதினான்கு வருஷகாலம் காத்திருக்கும்படி பரதனுக்குச்

சொல்லிவிட்டுப்போனர்; ஸ்ரீராமர் ஈச்வராம்ச முடையவ ரென்றும், ஆதலால் அவருடைய வாக்குப் பலிக்காது போகாது என்றும் பாதனுக்கு நன்ருகத் தெரியும். நான் ஒரு புழுப்போன்றவன்; எந்த இடத்திலே எந்த நிமிஷத்திலே என் உயிர் நீங்கிவிடுமோ? எவர் அறிவார். ஆதலால், நீ இப்பொழுது வந்தது நல்லதாம்விட்டது" என்ருர்.

ஸ்ரீ ஆளவந்தார் இப்படிச் செய்வாரென்று ஆண்டான் ஒருபொழுதும் நினைக்கவே யில்லை; ஆகையினுலே ஆண்டானை விட்டு இப்பொழுதுதான் நீங்கிய வியாதி மறுபடியும் ஆண்டானைப்பலமாகப்பிடித்துக்கொண்டது; அவர் எழுந்திருக்கமுடியாமல் படுத்த படுக்கையிலேயே படுத்துக்கொண்டு "நான் மடத்திலேயே யிருந்து மரித்திருக்கலாகாதா!" என்று புலம்பினர். ஸ்ரீ ஆளவந்தாருக்கு 'உண்மை தெரியாது; ஆண்டான் முரண்டுசெய்கிருரென்று ஸ்ரீ ஆளவந்தார் நினைத்துக்கொண்டு, மிகவும் கோபத்துடனே—"என்ன! ஸ்ரீ ராமரைப்போல உன்னை நான் சக்தி வாய்ந்தவனுக்குகிற வரையில் நீ அங்கேயே படுத்துக் கிடக்க உத்தேசித்திருக்கிருயா? எத்தகைய குருபக்தி; உன்னைப்போல இன்னும் சில சிஷ்யர்கள்வேண்டும் எனக்கு! நீ எனக்கு இப் பாடம் கற்பித்ததற்காக அநேக வந்தனம்" என்ருர். இக் கொடிய வார்த்தைகள் ஆண்டானுடைய ஹிருதயத்தை பிளந்தன; கோபதிபிதாயிருக்கும் குருவின் முன்னே ஆண்டான் அமாநுஷ்ய முயற்சி செய்து நடுநடுங்கிக்கொண்டு நின்ருர். அப்பொழுது மற்ற

சிஷ்யர்கள் ஸ்ரீ ஆளவந்தாருக்கு உண்மையைக் கூறி, "ஆண்டானிடத்தில் குற்றமொன்றுமில்லை" என்று தெளிவித்தார்கள். ஸ்ரீ ஆளவந்தார் சிறிது நேரம் பேசாமலிருந்தார்; பின்னர் "அப்படியா! நான் செய்தது கொடுமையே! பேசியது மடத்தனமே! நான் அறியாமற் செய்த இக் குற்றத்தை, எனது அருங் குழந்தாய்! நீ மன்னிப்பாயா? ஆனால், உண்மையில் நான் உன்னை யொருபொழுதும் கோபித்துக் கொள்ளவேயில்லை. 'மற்ற சிஷ்யர்களைப் பார்க்கிலும் நீ பக்தியில் குறைந்தவனென்று தோற்றக் கூடாது' என்பதே எனது எண்ணம். நான் முன்னமேயே சொன்னபடியே, நீ எங்கள் எல்லோருக்கும் ஒரு பாடம் கற்பித்துவிட்டாய்; நான் சீக்கிரத்தில் அதை மறக்க மாட்டேன்" என்றார்.

பின்னர் ஸ்ரீ ஆளவந்தார் ஆண்டானைத் தமது ஹிருதயத்தோடு சேர்த்துக் கட்டியணைத்து, பிறகு அவரை நன்றாகப் பார்க்கும்பொருட்டுக் கொஞ்ச தூரத்திலே நிறுத்திக்கொண்டு, "எனது அருங் குழந்தாய்! உண்மையில் நீ நிரம்பவும் வியாதியில் விழுந்திருக்கின்றாய்போலத்தான் தோன்றுகின்றது; இப்பொழுது நீ இவ்வளவுதூரம் வந்துவிட்டதினாலே, அநந்தசயனம் சென்று ஸ்ரீ பத்மநாப ஸ்வாமியையும் தரிசித்துவிட்டு வருவாய்" என்று கூற, ஆண்டான், "ஸ்வாமி! நான் அங்குப் போகவேண்டியதில்லை; நான் ஸ்ரீ பத்மநாப ஸ்வாமியை முன்னமே தரிசித்துவிட்டேன்" என்றார்.

ஸ்ரீ ஆளவந்தார்:— "அஃதெப்படி தர்சித்தாய்? நீ இன்னும் அநந்தசயனம் போகவில்லையே."

ஆண்டான்:—"ஸ்வாமி! நான் ஸ்ரீ பத்மநாப ஸ்வாமி க்ஷேத்திரத்துக்குப் போகும் மார்க்கத்திலேயே எனது இறைவன் ஸ்ரீ பத்மநாபன் என்னைச் சந்தித்து தர்சனம் கொடுத்துவிட்டார்; இப்பொழுதுகூட நான் அவருடைய சந்நிதானத்திலேதான் இருக்கின்றேன்; அவர் ஒன்றுக்கும் உதவாத இந்த என்னுடைய நாற்றச் சடலத்தை தமது பரிசுத்த சரீரத்தினல் ஸ்பர்சிக்கும்படியான அவ்வளவு பாக்கியம் பெற்றுவிட்டேன்; நான் இப் பாக்கியம் செய்ததற்கு மற்றவர்களினும் எப் புண்ணியம் செய்தேனே?"

ஸ்ரீ ஆளவந்தாருக்கு ஹிருதயம் உருகிவிட்டது; "இத்தகைய பக்தியுடைய சிஷ்யனும் ஒருவன் இருப்பானே?" ஸ்ரீ ஆளவந்தார் சற்று நேரம் மௌனமா யிருந்தார்; பின்னர் ஆண்டானைத் திரும்பத் திரும்ப ஆசி கூறினர்; அன்று முதல் ஆண்டானை முன்னிலும் பன்மடங்கு அதிகமான பிரியத்துடனே பாராட்டி வந்தார். பின்னர் எல்லோருமாக ஸ்ரீரங்கத்துக்குத் திரும்பி வந்தார்கள்; அங்கு ஸ்ரீ ஆளவந்தார் எந்த நிமிஷமும் நீங்காத ஈஸ்வர பக்தியிலும் தமது குரு தமக்கு உபதேசித்தருளிய ஞானத்தைப் பரப்புவதிலுமாகக் காலம் கழித்துக்கொண்டு வந்தார்.

ஒரு சமயத்திலே "பொலிக பொலிக" என்று ஆரம்பிக்கின்ற பாடலை வியாக்கியாநம் செய்துகொண் டிருக்கை

யில், சட்டென்று நின்று, மெய் மறந்து அப்படியே அந்தர் முகப்பட்டுவிட்டார்; உள்ளுக்குள்ளே அவர் பின் வருமாறு யோசனை செய்யலானார்:— "இந்த வாக்கியங்களிலே மறை பொருளாகக் கூறப்பட்டுள்ள பெரியோர் யாரா யிருக்க லாம்? அவர் வந்துவிட்டுப் போயிருக்கவேண்டும், அல்லது இனிமேல் வரவேண்டும்; ஸ்ரீ சடகோபர் சொல்வது ஒரு பொழுதும் தவறுகிறதில்லை; அவரிடமிருந்து ஒன்றும் ஒளிக்கப்படுகிற தில்லை; அவரிட மிருந்து ஒன்றும் மறைக் கப்படுகிறதில்லை."

ஸ்ரீ ஆளவந்தாருடைய சிஷ்யர்கள் அவர் யோசனை செய்வ தின்னதென்று தெரிந்துகொண்டு, அப்படிக் கூறப் பட்டுள்ளவர் தேவரீரேயாம்" என்று சொன்னார்கள். ஸ்ரீயாமுநாசார்யர் புன்நகை புரிந்துகொண்டே "அத்தகைய உயர்ந்த கௌரதை எனக்கு வேண்டியதில்லை; நான் மிக மிக இழிந்தவர்க்குள்ளும் இழிந்தவன்; பூமியிலே ஜன ரக்ஷகராயும் தர்ம ஸ்தாபகராயுமுள்ள ஒரு பெரியோ ருடைய அவதாரத்தைப்பற்றி இந்த வாக்கியங்கள் குறிப் பிடுகின்றன. அது இறந்த காலத்து ஆசார்யர்கள் எவரையும் குறிப்பிடவில்லை யென்பதும், என்னையும் குறிப்பிடவில்லை யென்பதும் நிச்சயம். அவ் வாக்கியங்களிலே கூறப்பட் டுள்ளபடி யெல்லாம் இன்னும் நடக்கவில்லையே. இப் பூமியி லிருந்து கலிபுருஷன் நீங்கிவிட்டானா? நரகங்க ளெல்லாம் காலியாய்விட்டனவா? எமனுக்கு வேலை யில்லாமற் போய் விழிக்கின்றானா? பூமியிலே கிருதயுகம் ஏற்பட்டுவிட்டதா?

இல்லையே! அப்படியானால் அந்த அவதார புருஷர் இனி மேல்தான் வரப்போகின்றார்; ஆனால், சீக்கிரத்திலே வந்து விடுவா ரென்பது மாத்திரம் நன்றாகத் தெரிகின்றது. அப் பொழுது நான் இவ் வுலகிலே யிருப்பேனே? இருக்கமாட் டேனே? தெரியவில்லை. அந்தப் பாக்கியதையும் ஆநந்த மும் உங்களில் சிலருக்கேனும் கிடைக்கலாம். அப்பொ ழுது நீங்கள் ஹாரீதசம்ஹிதையிலும், யாதவாசல மாகாத் மியத்திலும் கூறப்பட்டுள்ள மறை பொருளான வாக்கியங்க ளுக்கும், 'பொலிக' என்று ஆரம்பிக்கின்ற பாடலுக்கும் உள்ள உண்மையான பொருளை நீங்கள் அறிந்துகொள்வீர் கள்'' என்றார்.

ஸ்ரீ ஆளவந்தாருடைய ஹிருதயத்திலே ஒரு பெருந் துக்கமானது நுழைந்துகொண் டிருந்தது; அவர் இரவும் பகலும் இதே கவலையா யிருந்தார். அவருக்கு வயதோ அதிக மாகிவிட்டது; பலஹீனம் அதிகரித்தது; தாம் தாங்கி யிருந்த பாரத்தை ஒப்புவித்துவிட்டுச் சாந்தியடைய எண் ணினார்; ஆனால், அந்தப் பாரத்தை ஏற்றுக்கொள்வதற்கு எவரும் அகப்படவில்லை; தமது குரு தமக்கு இட்ட கட் டளையை நிறைவேற்ற முடியவில்லையே யென்று வருத்தப் பட்டார்; 'பிற்காலத்து ஆசார்யர் உண்டாவதற்குள்ள அடையாளங்கள் தோன்றுகின்றனவா?' என்று மிகுந்த கவலையுடனே எதிர்பார்த்தார். ஆனால், நல்ல வேளையாய் அவர் வெகுநாட்கள் காத்திருக்கவேண்டி யிருக்கவில்லை.

---

2-வது அதிகாரம்:

# ஸ்ரீ ராமாநுஜர் ஜனனம்

ஸ்ரீரங்கத்திலே ஸ்ரீயாமுநாசார்யருடைய சிஷ்யர்களாக இரண்டு வைஷ்ணவர்கள் இருந்தார்கள்; இவர்கள் இணை பிரியா நண்பர்கள்; எச் சமயத்திலும் ஒருவரைவிட்டொரு வர் பிரியாதவர்கள்; இவர்கள் "பிரிவற்றவர்கள்" என அவ் வூராரால் அழைக்கப்பட்டார்கள். ஒரு நாள் இவர்க ளுள் ஒருவர் நதியி லிருந்து தனியே திரும்பி வருவதைக் கண்ட ஸ்ரீ யாமுநாசாரியர் "அவன் கிரௌஞ்ச பக்ஷியின் நிலைமையைத் தன்னிலே அறிந்துகொண்டபொழுது; தனது ஆத்மாவை யறிந்துவிட்டான்" என்றார்.

குறிப்பு:—கிரௌஞ்ச பக்ஷியானது தனது சகாவி னிடத்திலே அத்தியந்த வாற்சல்விய முடையது எனப் பெயர்பெற்றது. அது பனை மரங்களிலேதான் கூண்டு கட்டுகின்றது; கூண்டினுடைய வெளிப்புறமானது முரட் டுக் கூரிய முட்களாலும் உள்புறமானது மிருதுவான புல் லினாலும் இறகினாலும் ஆக்கப் பெற்றது. இரவாகட்டும், பகலாகட்டும், எந்தச் சமயத்திலும் இரண்டு பக்ஷிகளும் ஒன்றைவிட்டொன்று பிரிவதேயில்லை. அவை பிருட்டிலே பார்க்க முடிகிறதில்லை; அவை தங்கட்குத் தெரியாமல் பிரிக்கப்பட்டுவிடுவோமோ என்று பயந்து தங்கள் மூக்கு

களை ஒன்றுடனென்று பிணைத்துக்கொண்டு படுத் துறங்கு கின்றன. யதேச்சையாக ஒன்று மற்றதை விட்டுப் பிரிந் திருக்கும்படி நேர்ந்துவிட்டால், ஒரு மாதிரி ஹிருதயம் உருகும்படியான தொனியிலே இரண்டு அல்லது மூன்று தரம் கூவும்; எப்படியாவது ஒன்றையொன்று கண்டு கொள்ளும்; அப்படிச் சந்தித்துக் கொள்ளாவிட்டால் அவை உயிருடன் இருப்பதில்லை. அன்புக்கு ஒரு அறிகுறியாக கிரௌஞ்ச பக்ஷியை ஸம்ஸ்கிருத கவிகள் கூறுவது வழக் கம். ஸ்ரீ யாமுநாசார்யர், 'ஈச்வர பக்தர்களிடத்து வைக்கப் படும் அத்தகைய அன்பும் பக்தியுமே ஆத்மஞான மடை தற்கு மிகமிக நிச்சயமான மார்க்கம்' என்று குறிப்பிட் டார்.

ஒரு நாள் ஸ்ரீ யாமுநாசார்யர் ஈச்வரனைத் தியானிப்ப தற்கு க்ஷேத்திரனுள்ளே செல்லப் போகையில், உள்ளே யொரு ஸ்திரீ யிருக்கக் கண்டு, பின்னுக்கு வாங்கிக்கொண் டார். அந்த ஸ்திரீ பார்வையிலே மகா பக்தி யுடையவள் போலத் தோன்றிற்று; ஆனால், ஸ்ரீ யாமுநாசார்யர் கொஞ்ச நேரம் வெளியே தங்கியிருந்து, பின்னர் அருகி லிருந்தவர் களை நோக்கி, "ஸ்வயநல சிந்தையுடைய அந்த வேஷகாரி போய்விட்டாளா?" என்று கேட்டார். அதற்கு ஒருவர், "ஸ்வாமி! நீங்கள் ஏன் அதைக் கவனிக்கின்றீர்கள்? ஈச்வர சந்நிதானத்திலே தனவந்தனென்றும் தரித்திரனென்றும், உயர்ந்தவனென்றும் தாழ்ந்தவனென்றும் சாதுவென்றும் சண்டாளனென்றும் வித்தியாசம் கிடையாதே" என,

ஸ்ரீயாமுநாசார்யர் "அன்று, அன்று; ஈஶ்வரனுடைய சர்வ சுத்த சந்நிதானத்திலேகூட, வேஷதாரிகளிடமிருந்து மனிதன் நீங்கிவிடவேண்டும்; அத்தகைய பிரகிருதிகளிலிருந்து ஆத்மாவைக் கொலை புரியும்படியான சக்திகள் புறப்படுகின்றன; இச் சக்திகளை எதிர்த்து நிற்க எவராலும் முடியாது. அவை மிகமிகப் பரிசுத்தர்களையும் கெடுத்துக் கட்டாயமாக அவர்களைத் தங்களுடைய நிலைமைக்கு இழுத்துக் கொண்டுவிடுகின்றன." என்று மறுமொழி கூறினர்.

ஸ்ரீ ஆளவந்தாருடைய சிஷ்யர்களுள் ஒருவரான ஸ்ரீ சைலபூர்ணருக்கு இரண்டு சகோதரிகள் இருந்தார்கள்; மூத்தவளின் பெயர் காந்திமதி; இவள் ஸ்ரீ பெரும்பூதூரிலேயிருந்த ஆசூரிகேசவ சோமயாஜி என்பவருக்கு விவாகம் செய்விக்கப்பட் டிருந்தாள்; இளையவளாகிய தயந்திமதி வல்லாளமங்கலம் கமலாக்ஷபட்டருக்கு விவாகம் செய்விக்கப்பட்டிருந்தாள்.

அந்த மகாபுருஷன் அவதரிக்கவேண்டிய காலம் வந்துவிட்டது. இவ் வவதாரத்தைப்பற்றி முன்னமேயே சூசிப்பித்துக் காட்டிய பின் வரும் மேற்கோள்கள் வாசகர்களுக்கு உபயோகமா யிருக்கும்.

ஸ்ரீ விருத்த பத்ம புராணம்

(1) "நெடுநாட்களுக்குப் பின்னே, ஈஶ்வரனே பூமியில் தர்மத்தை உத்தாரணம் செய்வதற்காகத் திரிதண்ட சந்யாசியாகி அவதரிப்பார்; அச்சமயத்திலே ஆஷாட பூதிகளும் குயுக்தி புருஷர்களும் ஜனங்களுடைய மனங்களைக்

குழப்பிவிடுவார்கள்; கள்ள நியாயங்களை ஆதாரமாகக் கொண்ட ஆசுர சாஸ்திரங்களும் வேதாந்தத்திலிருந்து அநேகமாக வேறு பிரித்தறிய முடியாதபடி அவ்வளவு ரம்யமான பல கட்சிக் கொள்கைகளும் ஜனங்களுடைய ஹிருதயங்களை ஸ்ரீ விஷ்ணுவினிடத்திலிருந்தும் வேறு பிரித்து ஸ்ரீ விஷ்ணுவினுடைய மகிமையை மறந்துவிடும்படி செய்யும் அந்த மகிமை பொருந்திய அவதாரமானது ஈச்வர பக்தர்களுடைய நல்லதிர்ஷ்டத்தினாலே ஸ்ரீ பாதராயண மகரிஷியினுடையவும் ஸ்ரீ கீதா புருஷருடையவும் அபிப்பிராயங்களை விரித்துரைத்துப் போதிப்பதற்காகப் பூலோகத்திலே யுண்டாகும். திருட்டுக் கொள்கைகளினாலே யுண்டான குழப்பத்திலிருந்தும் ஏக்கத்திலிருந்தும் மனிதர்களை ரக்ஷித்து உண்மையான மதத்திற்கு அவர்களை யிட்டுச் செல்லும்படி ஒருவர் வியாச ஸூத்திரங்களுக்குப் பாஷ்யம் இயற்றுவார்.''

ஸ்ரீ நாரதீய புராணம் (யாதவாசல மாகாத்மியம்)

(2) "அவருடைய முதலாவது அவதாரம் அநந்தனாக இருந்தது; அவருடைய இரண்டாவது அவதாரம் ஸ்ரீ ராமருடைய இளைய சகோதரனாகிய லக்ஷ்மணனாயிருந்தது; அவருடைய மூன்றாவது அவதாரம் கிருஷ்ணனுடைய மூத்த சகோதரராகிய பலபத்திரரா யிருந்தது; இன்னும் ஒரு முறை கலியுகத்திலே அவர் பூமியில் அவதரிப்பார்.

அந்த மகா புருஷன் திரேதா யுகத்திலே ஸ்ரீ ராமருடைய இளைய சகோதரராய் லக்ஷ்மணராய் அவதரித்தார்; துவாபர யுகத்திலே அவர் பலராமராக அவதரித்தார்; இன்

னும் ஒரு முறை இப்பொழுது அவர் கலியுகத்திலே அவதரித்தார். இந்த அவதார புருஷருக்குப் பிதாவாயிருக்கும் பாக்கியம் பெற்ற கேசவ ஸ்ரீ சோமயாஜி: எஜர் வேதத்திலே யுள்ள சிக்ஷை, ஸ்ரௌதம் முதலியவற்றைப்பற்றிக் கேசவீயம் என்ற பெயருடன் அநேக நூல்கள் இயற்றியிருக்கின்றார். இந்தக் கேசவ சோமயாஜிக்கு நெடு நாட்களாகப் புத்திரப்பேறில்லாமல் இருந்தது. இவர் ஒரு சமயத்திலே சந்திரகிரகணகாலத்தில் திருவல்லிக்கேணி சமுத்திரத்திலே புண்ணிய ஸ்நாநம் செய்யச் சென்றவர் அப்படியே திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்தசாரதிக்ஷேத்திரத்துக்குள் நுழைந்து, திரிகரண சுத்தியுடனே ஸ்ரீ பார்த்தசாரதியை நோக்கித் தமக்கு ஒரு புத்திரனை யளிக்குமாறு பிரார்த்தனை செய்து, அந்த க்ஷேத்திரத்தின் வாசலிலேயே புத்திர காமேஷ்டியாகம் ஒன்று செய்தார். அன்றிரவே பகவான் அவருடைய கனவிலே தோன்றி "நீ கேட்டது அளிக்கப்பட்டது; நானே உனக்குப் புத்திரனாய்ப் பிறக்கின்றேன்" என்றார்.

இந்தக் கேசவ சோமயாஜியினுடையவும் அவருடைய மனைவியினுடையவும் புண்ணிய கர்மங்களின் பயனாக, சென்னப்பட்டணத்துக்கு 26 மைல் மேற்கே யுள்ள ஸ்ரீ பெரும்பூதூர் என்னும் கிராமத்திலே, இவ் விருவர்களுக்கும் புத்திரனாகக் கலியுகம் பிறந்து 4118 வருஷங்கட்குப் பின் பிங்கள வருஷம் சித்திரைமீ சுக்கில பக்ஷம் குருவாரம் பஞ்சமி ஆருத்திரா நக்ஷத்திரம் கர்க்கடக

லக்னம் ஆயுஷ்மான் யோகத்திலே ஆபஸ்தம்ப சூத்திரத்தைச் சேர்ந்தவராய்ப் புருஷோத்தமன் அவதரித்தார்.

ஸ்ரீ சைலபூர்ணருக்கு இந்தச் சங்கதி தெரிய வந்தவுடனே, அவர் ஸ்ரீபெரும்பூதூருக்கு வேகமாக வந்தார். "பரிபூர்ண புருஷருக் கிருக்கவேண்டிய பரிசுத்த லக்ஷணங்கள் அனைத்தும் அவருக்கு இருக்கின்றன; மனுஷ்ய ஞானமாகட்டும், தெய்வ ஞானமாகட்டும், அவர் கரைகாணாதது ஒன்றுமிராது. ஆகையால், அவர் அளவற்ற ஞானத்துக்கும் நித்தியத்துக்கும் அதிரகஸ்ய அறிகுறியாகவுள்ள மகா நாகம் அநந்தனைப் போன்று லக்ஷ்மணன் என்று அழைக்கப்படட்டும்" என்றார் ஸ்ரீ சைலபூர்ணர்.

இக் குழந்தையை ஸ்ரீவரதராஜரும், ஸ்ரீ மகா பூர்ணரும் இராமாநுஜர் என்று அழைத்தார்கள்; ஸ்ரீ வரதராஜர்: யதீந்திரர் என்று அழைத்து வந்தார்; ஸ்ரீ ரங்கநாதர்: உடையவர் என்று அழைத்தார்; கோஷ்டி பூர்ணர்: எம்பெருமானர் என்று அழைத்தார்; சரஸ்வதி: பாஷ்யக்காரர் என்று அழைத்தார். இக் குழந்தை நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து, வெகு சீக்கிரத்திலே அக் காலத்துக் கலைஞானங்கள் அனைத்தையும் கற்றுத் தேர்ந்துகொண்டது. அவருடைய பிதாவாகிய கேசவ சோமயாஜி அவருக்கு உபநயனம் செய்வித்து, பதினைந்தாவது வயதுவரையில் அவருக்கு வேதவேதாங்கங்கள் எல்லாவற்றையும் போதித்துவந்தார்; பின்னர் ஸ்ரீ ராமாநுஜருக்குப் பதினறு வயதானபொழுது, அவருடைய பிதா

தமது புத்திரனுக்குத் தங்கமம்மாள் அல்லது ரக்ஷகாம்பாள் என்ற பெயருடைய ஒரு பெண்ணை விவாகம் செய்வித்தார்.

இப்படியிருக்கும்பொழுது, ஸ்ரீ ராமாநுஜரைப் புத்திர காமேஷ்டியாகம் செய்து பெற்று, வெகு அருமையாக வளர்த்து, சகல வித்தைகளையும் போதித்து, புத்திரனுடைய பாண்டித்தியத்தைக் கண்டு மகிழ்ந்து வந்த கேசவ சோமயாஜிக்கு அவருடைய புத்திரன் உலகப் பிரக்கியாதியுடனே ஒரு உத்தம புருஷன் ஆகப்போகின்றதைக் காணும் பாக்கியம் கொடுத்துவைக்காமல், இப்பொழுது மரித்துவிட்டார்.

இச் சமயத்திலே காஞ்சீபுரத்திற்கு அருகிலுள்ள திருப்பூற்றுக்குழி என்னும் கிராமத்திலே யாதவப் பிரகாசர் என்ற பெயருடன் அத்வைத சந்யாசி யொருவர் வசித்துவந்தார். இவர் மகா வித்வான்; ஆதியில் இவர் ஸ்ரீ சங்கராசார்யருக்குச் சிஷ்யரா யிருந்தவர்; ஆனால், பின்னர் அவருடைய கொள்கைகளினின்றும் சிறிது மாறுபட்டுத் தனித்த அத்வைதியானார். அவருடைய அபிப்பிராயங்கள் சங்கர சிஷ்யர்களால் ஒப்புக்கொள்ளப்படுகிறதில்லை. அவர் வியாச சூத்திரங்கட்குத் தனியே ஒரு வியாக்கியானம் எழுதியுள்ளார். இவர் வேதாந்தத்தினுடைய மூலாதாரக் கொள்கைகளைப்பற்றிப் பெரும் பிரசங்கங்கள் செய்துவந்தா ராதலினாலே, நாலாபக்கங்களி லிருந்தும் இவருக்குச் சிஷ்யர்கள் ஏராளமாக வந்து சூழ்ந்துகொண்டார்கள்.

நமது இராமாநுஜரும் இதைக் கேள்விப்பட்டு அவருடைய சிஷ்யர்களுள் ஒருவராகக் கருதி அங்குச் சென்றூர்.

இச் சமயத்தில் கமலநயனபட்டருக்கும் ஒரு குழந்தை பிறந்தது. இக் குழந்தை குரோதன வருஷம் பௌர்ணமி சோமவாரம் புநர்வசு நட்சத்திரத்திலே பிறந்தது. ஸ்ரீ சைலபூர்ணர் அங்கும் உடனே சென்று, ஒரு மகா புருஷர் அங்கும் அவதரித்திருப்பதைக் கண்டு, பெற்றோரை வாயார வாழ்த்தி, அப் புத்திரனுக்குக் கோவிந்தன் என்று திருநாமம் சூட்டும்படிக் கூறினர். இக் குழந்தையும் அதிபுத்திசாலியாய் வளர்ந்து சகல கலைஞானங்களிலும் தேர்ந்து, வேதவேதாங்கங்களிலும் விற்பத்தி யுடையவரானர். தமது சகோதரராகிய ஸ்ரீ ராமாநுஜர் யாதவப் பிரகாசரிடத்திலே படிக்கச் சென்றிருக்கிருரென்று கேள்விப்பட்டுத் தாமும் அங்கே சென்று ஸ்ரீ ராமாநுஜருடனே சேர்ந்துகொண்டார்.

ஸ்ரீ ராமாநுஜர் யாதவப்பிரகாச ரிடத்திலே சிஷ்யராகிச் சில நாட்க ளாயின; அத்வைதார்த்தங்களை யெல்லாம் நன்ருய்க் கிரகித்துக்கொண்டார்; அடிக்கடி விசிஷ்டாத்வைதக் கொள்கைகளை யெடுத்து யாதவப் பிரகாசருடனே தர்க்கம் செய்து, யாதவப் பிரகாசரை விழிக்கச் செய்துவிடுவார். ஆயினும், ஸ்ரீ ராமாநுஜர் இன்னும் யாதவப்பிரகாசரிடமிருந்து வேறுபட்டுவிடும்படியான காலம் வரவில்லை. ஆகையால், அவர் தமது குருவுக்குச் செய்ய வேண்டிய சகல மரியாதைகளையும் யாதவப்பிரகாசருக்குச்

செய்யத் தவறவில்லை. இப்படி யிருக்கையிலே ஸ்ரீராமாநுஜருடைய மகிமையை வெளிப்படுத்தும்படியான ஒரு விசேஷ ஸம்பவம் நடந்தது.

அந்தத் தேசத்து அரசனுக்கு ஒரு புத்திரி யிருந்தாள்; அவளோ சிறு பெண்; மகா புத்திசாலி; அழகிலே ரதிக்கும் மேலானவள்; ஆயினும், அவளுடைய கர்மமானது அவளை ஒரு பிரஹ்மராக்ஷசு பிடிக்கும்படி செய்தது. இதனால் அப் பெண் அலறுவதும், அழுவதும், மூர்ச்சை போவதும், வாயில் வந்த வசை மொழிகளால் எல்லோரையும் திட்டுவதும், தலை விரித்து ஆடுவதுமாகப் பலவிதத்திலும் அவஸ்தைப்பட்டுக்கொண் டிருந்தாள்; அரசன் மிகுந்த வியாகுல மடைந்து, பெயர் பெற்ற மந்திரவாதிகள் பலரை யழைத்து வரும்படி சொல்லி, அந்த பிரஹ்மராக்ஷஸை ஓட்டும்படி கேட்டுக்கொண்டான். ஆனால், எவருடைய கை வரிசையும் அங்கே நடக்கவில்லை. கடைசியாக ஒருவன் அரச னிடத்திலே "மகாத்மாவாகின்ற யாதவப் பிரகாசர் அரண்மனைக்கு வரவேண்டியதுதான் தாமதம்; அந்தப் பிரஹ்மராக்ஷஸு தனது உயிருக்குப் பயந்து ஓடிவிடும் என்று ஜனங்கள் சொல்கிறார்கள்" என்றான். அரசன் "அப்படியா? இதுவரையில் இச் சங்கதி நம்முடைய காதுக் கெட்டாததும் நம்முடைய துர்ப்பாக்கியமேயாம்; நல்லது, அந்த மகாத்மாவைத் தகுந்த மர்யாதைகள் செய்து அழைத்து வாருங்கள்" என்று தனது மந்திரி பிரதானிகளுக்கு உத்தரவு அளித்தான்.

அப்படியே மந்திரி யாதவப்பிரகாச ரிடத்திலே சென்று சங்கதியைச் சொல்லி அரண்மனைக்கு அழைக்க, அவர் புந்நகை புரிந்து, "இப் பேயை ஓட்டுவதற்கு நான் வரவேண்டுமா? அது அவ்வளவு சக்திவாய்ந்ததென்று அரசன் நினைக்கிறாரா? நீங்கள் போய், பிரஹ்மராக்ஷஸினிடத்திலே, ராஜபுத்திரியை விட்டுவிட்டுத் தேசத்தை விட்டு ஓடிவிடவேண்டுமென்று நான் ஆக்ஞாபித்ததாகச் சொல்லுங்கள்; இதுவே போதும்" என்று சொல்லி யனுப்பினார்.

அப்படியே மந்திரி போய்ப் பிரஹ்மராக்ஷஸினிடம் சொல்ல, அது "அவன் அப்படிச் சொன்னானா? அவனுக்கு உயிர் தப்பவேண்டுமானால் இந்தத் தேசத்தை விட்டு ஓடிப் போகச் சொல்லுங்கள்! என் முன்னே வராம விருக்கச் சொல்லுங்கள்!" என்று கூவிற்று. இச் சங்கதி யாதவப் பிரகாசருக்கு எட்டவே, அவர் கோபத்தினால் குதித்து, தமது சிஷ்யர்கள் அனைவரும் தம்மைச் சூழ்ந்துவர அரண்மனைக்கு வெகு வேகமாக வந்து சேர்ந்தார்; ஒரு பெருங் கூட்டம் கூடிவிட்டது; யாதவப்பிரகாசர் சக்தி மிகுந்ததொரு மந்திரத்தை ஜபித்துக்கொண்டே ராஜகுமாரி யிடம் சென்றார். ஆ! ஆ! அப்பொழுது அந்த ராஜகுமாரி தன்னுடைய இரண்டு கால்களையும் நீட்டி அவரை யுதைப்பதுபோன்று காட்டி, "ஏ! மூடா! நீ என்மீது பிரயோகிக்கும் மந்திரம் இன்னதென்று எனக்குத் தெரியாதா? இவ்வற்ப மந்திரத்தினாலே நீ என்னை ஜயித்துவிடலா மென்று நினைக்கிறாயோ? நீ வீண் கர்வ முள்ளவன், முட்டாள்;

உனது முன் ஜன்மமும் எனது முன் ஜன்மமும் உனக்கென்ன தெரியும்? உன்னால் முடியுமானால் சொல்லு பார்க்கலாம்'' என்று கூறினாள்.

யாதவப்பிரகாசர் அவமான மடைந்தவராகித் தலையைக் கீழே தொங்கப் போட்டுக்கொண்டார். 'இன்னும் பரிசோதித்துப் பார்க்கலாம்' என்று நினைத்து, யாதவப்பிரகாசர் "உனக்கு சர்வஞ்ஞத்துவமும் சர்வ சத்தியுமிருக்கலாம்; நம் மிருவருடையவும் முன் ஜன்மத்தைப் பற்றி எங்கே, நீதான் கூறு, பார்ப்போம்'' என்றார். அந்தப் பிரஹ்ம ரக்ஷஸானது அவ் வூரே நடுநடுங்கும்படி இடியிடித்ததுபோலச் சிரித்து, "என்னைச் சோதிக்கவா விரும்புகிறாய்? நீ உனது சென்ற ஜன்மத்திலே ஒரு கீரிப்பிள்ளையாகி மதுராந்தகம் ஏரியின் தீரத்திலே ஒரு வளையிலே வசித்து வந்தாய். காஞ்சீபுரத்திலிருந்து திருப்பதிக்கு யாத்திரை போன சில வைஷ்ணவர்கள் அங்கு ஸ்நாந பான போஜனம் முதலியவை செய்துகொள்ளும்பொருட்டுத் தங்கினார்கள். அவர்கள் உண்டு உச்சிஷ்டமாக எறியப்பட்டதை நீ உண்ணும்படி நேரிட்டது; அதன் பலனாக நீ உயர்வகுப்புப் பிராஹ்மணனாகவும் பிறந்து, வித்வானாகவும் ஆனாய். நான் எனது பூர்வ ஜன்மத்திலே உயர்குலத்துப் பிராஹ்மணனாயிருந்தேன்; நான் ஒரு யாகம் செய்தபொழுது சில தவறுதல்கள் செய்துவிட்டதினாலே இப்பொழுது பிரஹ்ம ரக்ஷஸானேன்; ஆனால், எனக்குப் பூர்வஜன்ம ஞாபகமுமிருக்கின்றது. இப்பொழுது தெரிந்ததா?'' என்றது.

யாதவப்பிரகாசர் "நல்லது! அது அப்படி யிருக்கட்டும். உன்னை இந்த ராஜகுமாரியிடத்தி லிருந்து ஓட்ட வல்லவர்கள் இங்கு எவரேனும் இருக்கின்றார்களா?" என்று கேட்டார்.

உடனே அந்தப் பிரஹ்மரக்ஷஸானது யாதவப் பிரகாசருக்குப் பின்புறத்தே மிகுந்த விநயத்துடனே நின்று கொண்டிருந்த ஸ்ரீ ராமாநுஜரை யணுகி, அவருடைய பாதங்களிலே விழுந்து எழுந்து "இம் மகா புருஷர் என்னைப் போய்விடும்படி ஆக்ஞை செய்வாரானால், நான் கிருதார்த்தனாய்விடுவேன்" என்றது.

யாதவப்பிரகாசர் ஸ்ரீராமாநுஜரை நோக்கி, "ஸ்ரீ ராமாநுஜா! அப்படியே இந்தப் பிரஹ்மரக்ஷஸை ஓட்டிவிடுவாயாக" என்று கூறவும், ஸ்ரீ ராமாநுஜர் "ஆகட்டும்" என்று குருவினிடம் சொல்லிவிட்டு, அப் பேயைப் பார்த்து, "நீ போய்விடு; இனிமேல் இந்த ராஜகுமாரியைத் தொந்தரவு செய்யாதே; நீயும் இப்பேய் நிலையினின்றும் விடுபட்டு உபசாந்தி நிலைமை யடைவாயாக" என்றார்.

அது "ஸ்வாமி! தங்களுடைய ஆக்ஞைப்படியே நடக்கிறேன். ஆனால் தங்களுடைய பாதமலர்களை எனது சிரசின் மீது வைத்து இப் பாபியை ஆசீர்வதிக்கலாகாதா?" என்று கேட்டுக்கொள்ள, ஸ்ரீ ராமாநுஜரும் அப்படியே செய்தார். "நீ போய்விட்டாயென்று எங்களுக்கு எப்படித் தெரியும்?" என்று ஸ்ரீ ராமாநுஜர் கேட்க, அது "நான்

ஒரு அத்திமரத்திலே வசித்துவந்தேன்; நான் இந்த இடத்தை விட்டுப் போனவுடனே, அந்த விருக்ஷம் வேரோடு கிளம்பி விழும்" என்று சொல்லிவிட்டு, யாதவப் பிரகாசரை நோக்கி, "ஏ, மூடா! சீக்கிரத்திலே நீ இந்த மகா புருஷருடைய கிருபைக்குப் பாத்திரமாய்விடு! இவரிடத்திலே சரணாகதி யடைந்துவிடு! அதோகதிக்கு ஆளாகாமல் சீக்கிரம் ரக்ஷிக்கப்படும் மார்க்கத்தைத் தேடிக்கொள்!" என்று கூறினதுதான் தாமதம்; கடகடவென்று ஒரு பெருஞ் சத்தம் கேட்டது; ஒரு பெரும் சுழல் காற்றினாலே கிளப்பப்பட்ட மரம்போல, அந்த விருக்ஷமானது அடியோடு ஆகாயம்வரை கிளம்பி, பொத்தென்று கீழே விழுந்தது; அதிலிருந்து ஒரு ஜோதி புறப்பட்டு மறைந்தது.

யாதவப்பிரகாசருக்கு ஆச்சர்யம் ஒரு பக்கத்திலே, பயம் ஒரு பக்கத்திலே உண்டாயின. ஸ்ரீ ராமாநுஜரை அவர் வெகுவிசேஷமாகக் கொண்டாடினார். இராஜகுமாரி நித்திரை தெளிந்து எழுந்தவள்போல விழித்து, சுற்றிலும் பல புருஷர்களிருப்பதைக் கண்டு ஆச்சர்யப்பட்டு, நாணத்தினால் தலை குனிந்து, தன்னுடைய பிதாவாகிய அரசனைப் பார்த்து, "என்ன சங்கதி?" என்று கேட்க, அரசன் "எனது கண்மணியே! நீ ஒரு பிரஹ்ம ரக்ஷஸினால் பிடிக்கப்பட்டு நெடுங் காலமாக அவஸ்தைப் பட்டுக்கொண்டிருந்தாய்; (ஸ்ரீ ராமாநுஜரைச் சுட்டிக் காட்டி) இந்த பரிசுத்த புருஷனே அப் பிரஹ்ம ரக்ஷஸை ஓட்டிவிட்ட

வர்; அவருடைய கிருபையிலே சரண் புகுந்துகொள்'' என்றான்.

இராஜகுமாரியும் கண்ணீர் சொரிந்து, ஸ்ரீ ராமாநுஜருடைய பாதங்களைப் பிடித்துக்கொண்டு அவற்றிலே தமது முடியைச் சாய்த்து, ''பிரபு! ஸ்வாமி! இவ் வேழைக்கு இரங்கி ரக்ஷித்தீர்கள்; நான் என்ன கைம்மாறு செய்யப்போகின்றேன்? நான் இன்றும், என்றும் தங்களிடத்திலே சரணாகதி யடைந்து கொள்கிறேன்'' என்று கூறி, பின்னர் தனது அந்தப்புரம் சென்றாள். அரசன் ஸ்ரீ ராமாநுஜருக்கு வேண்டிய திரவியங்களை வெகுமதியாக அளிக்க, அவர் அவற்றையெல்லாம் யாதவப்பிரகாசருக்குக் கொடுத்துவிட்டு, விநயத்துடனே யாதவப்பிரகாசரை நோக்கி, ''ஸ்வாமி! நேரமாய்விட்டது, மடத்துக்குச் செல்வோம்'' என, அப்படியே யாதவப்பிரகாசரும் அரசனிடம் விடை பெற்றுக்கொண்டு தமது இருப்பிடம் போய்ச் சேர்ந்தார்.

ஸ்ரீ ராமாநுஜருடைய இந்த விசேஷ மகிமையைக் கேட்டதும், கமலநயன பட்டருடைய புத்திரராகிய கோவிந்தர் காஞ்சிபுரம் வந்து சேர்ந்தார்.

ஸ்ரீ ராமாநுஜர் இவ்விதமாக யாதவப்பிரகாச ரிடத்திலே மாணவரா யிருந்துவருகையில், ஸ்ரீ ஆளவந்தார் தமது ஞான திருஷ்டியிலே 'உலகில் அஞ்ஞானம் ஒழியும் காலம் வந்துவிட்டது' என்றும், 'ஜனங்களுக்குத் தர்மோபதேசம் கேட்பதிலே ஒருவித இச்சை பிறந்திருக்கிறது' என்றும்

கண்டு, 'புருஷோத்தமர் அவதரித்துவிட்டார்' என்று ஊகி த்து, தமது சிஷ்யர்களைத் தேசதேசங்க ளெல்லாம் சுற்றித் திரிந்து அந்த ஆசார்ய புருஷனைக் கண்டு பிடிக்கும்படி ஆக்ஞாபித்து அனுப்பினர்.

ஸ்ரீரங்கத்துக்குத் தர்சனார்த்தமாக யாத்திரை வந்த இரண்டு வைஷ்ணவர்கள் காஞ்சிபுரத்தில் ஸ்ரீ ராமாநுஜ ருடைய மகிமைகளைப்பற்றி ஸ்ரீ ஆளவந்தாரிடம் கூற, ஸ்ரீ ஆளவந்தார் அதிக சந்தோஷ முடையவராய், "எனது பிரார்த்தனைகள் பலித்துவிட்டன; நான் நெடு நாட்களாகக் கொண்டிருந்த இச்சைகள் நிறைவேறப் போகின்றன போலும்! இவரே ஆசார்ய புருஷர்; இவரைத் தர்சியாமல் இனிமேல் ஒரு நிமிஷமும் என்னால் இருக்க முடியாது" என்று கூறி, ஸ்ரீரங்கநாதரிட மிருந்து உத்தரவு பெற்றுக் கொண்டு, காஞ்சீபுரத்துக்குப் புறப்பட்டார். ஸ்ரீ ஆளவந்தா ருடைய பிரிய சிஷ்யர்களுள் ஒருவரான திருக்கச்சி நம்பி யார் (காஞ்சிபூர்ணர்) இந்த சமாசாரம் தெரிந்து, காஞ்சீமா நகரி லுள்ள பிரதான புருஷர்களை யெல்லாம் அழைத்துக் கொண்டு ஸ்ரீ ஆளவந்தாரை எதிர்கொண்டு அழைக்கச் சென்றார். திருக்கச்சி நம்பியார் தமது குருவாகிய ஸ்ரீ ஆள வந்தாரைக் கண்டவுடனே அவரது பாதங்களிலே அடி யற்ற மரம்போல விழுந்து, ஆநந்தக் கண்ணீர் பெருக்கி னர். ஸ்ரீ ஆளவந்தார் அவரைத் தூக்கியெடுத்துக் கட்டி யணைத்து, "அன்ப! இன்னும் நினது கைகளினாலே எம் பெருமானுக்குச் சாமரம் வீசும் தொண்டு புரிந்து வருவ

தை எம்பெருமான் இன்பத்துடனே ஏற்றுக்கொள்ளுகிறு ரென்று நினைக்கின்றேன்'' என்ருர். ''ஸ்வாமி! தங்களுடைய கிருபா கடாக்ஷத்தினுலே நான் அத்தொண்டுதான் செய்து கொண்டிருக்கின்றேன்'' என்று திருக்கச்சி நம்பியார் கூற, பின்னர் ஸ்ரீ ஆளவந்தார் ஸ்ரீ வரதராஜப்பெருமானைப் பூஜிப்ப தற்காக க்ஷேத்திரத்தினுள் சென்ருர்; அங்கே பிராகாரங்க ளிலே பிரதக்ஷணம் செய்து வருகையில், அவர் ஏராளமான ஜனங்கள் எதிர் நோக்கி வருவதைக் கண்டு, திருக்கச்சி நம்பியாரை நோக்கி, ''அப்பா! அங்கு வருகிறது யார்?'' என்று கேட்டார். ''ஸ்வாமி! யாதவப்பிரகாசரும் அவ ருடைய சிஷ்யர்களும் வருகிருர்கள்'' என்ருர் நம்பியார்.

''அப்படியானுல், ஸ்ரீ ராமாநுஜர் என்ற வாலிபரும் அந்தக் கூட்டத்திலே யிருக்கவேண்டு மென்று நம்புகி றேன்'' என்று ஆளவந்தார் கூறினுர்.

''ஆமாம், ஸ்வாமி! இதோ மற்றெல்லோரையும் பார்க் கிலும் உயர்ந்து ஒருவர் போகின்ருரே, அவர்தான் ஸ்ரீ ராமா நுஜர்; தாங்கள் உலகு முழுவதும் சுற்றிப் பார்த்தாலும் இவர் போன்ற ஒரு புருஷர் கிடைப்பது அரிது'' என்ருர் நம்பியார்.

ஸ்ரீ ஆளவந்தார் ஸ்ரீ ராமாநுஜர்மீது தமது கண்களை ஏகாக்கிரமாகச் செலுத்தி நிறுத்திப் பார்த்தார். அவ்விரு வருக்குள்ளும் யாது நடந்ததோ, நமக்கெப்படித் தெரியும்? ஸ்ரீ ஆளவந்தார் சீக்கிரம் இவ்வுலகை விட்டு நீங்கிவிடப்

போகிறாராதலால், ஸ்ரீ ராமாநுஜருக்குள்ளே தமது சக்திகளை யெல்லாம், தமது ஞானத்தை யெல்லாம் புகுத்திவிட்டாரோ, என்னவோ? ஸ்ரீ ஆளவந்தாருடைய முகத்திலே ஒரு ஆநந்த ஜோதி வீசிற்று. அவர் ஈஸ்வரனை நோக்கி, "ஏ! ஒளிக்கும் உண்மைக்கும் பிரபுவே! நான் உன்னிடத்தில் சரணாகதி யடைகிறேன்; உன்னுடைய லக்ஷணம் அறிய முடியாதது; ஏ! ரகஸ்ய நாதா! உனது பராக்கிரமம் நினைக்க முடியாதது; நித்தியநாதா! உனது அடிமைகட்கும் அடிமையாகிய நான் ஒன்று பிரார்த்திக்கின்றேன். ஸ்ரீ ராமாநுஜன் ஆசார்யனாகி உனக்கு ஊழியம் செய்வதிலே சிரத்தை மிகுமாறு அருள் புரிவாய்; வைஷ்ணவ சித்தாந்தமானது அவன் மூலமாக உலகிலே நிலை பெறுமாறு அநுக்கிரகிப்பாய்" என்று பிரார்த்தித்தார். பின்னர் அவர் வரதராஜ ஸ்தோத்திரமாக ஸ்தோத்ர ரத்நம் என்னும் காவ்யத்தை யியற்றி, அதிலே ஸ்ரீ ராமாநுஜரை ஆசார்ய புருஷராக்கும்படி பிரார்த்தித்தார். பின்னர் ஆளவந்தார் வரதராஜ ஸ்வாமியைப் பஜித்துவிட்டு, திக்கச்சிநம்பியாரிடம் விடைபெற்று ஸ்ரீரங்கம் போய்ச் சேர்ந்தார். இப்பொழுது ஆளவந்தார் ஸ்ரீ ராமாநுஜரைக் கண்டு பேசவில்லை; பேசினால் ஸ்ரீ ராமாநுஜருடைய படிப்புக்கு ஏதேனும் பங்கம் ஏற்படுமென்று நினைத்தாரோ? அல்லது பேசுவதற்கு சௌகர்யப்படவில்லையோ? அல்லது ஈஸ்வர சங்கல்பம் அவர்கள் அப்பொழுது ஒருவரை யொருவர் சந்தித்துக்கொள்ளக் கூடாது என்றிருந்ததோ என்னவோ? தெரியவில்லை.

ஸ்ரீ ஆளவந்தார் ஸ்ரீ ராமாநுஜரைத் தனியே சந்தித்துச் சம்பாஷணை செய்யாமலே ஸ்ரீரங்கம் போய்ச் சேர்ந்தார்.

ஒருநாள் யாதவர் தைத்திரீய உபநிஷத்திலே பிரஹ்மாநந்தவல்லி, இரண்டாவது அநுவாகத்திலே, "சத்தியம் ஞானம் அநந்தம் ப்ரஹ்மா" என்ற முதல் ஶ்லோகத்தை யெடுத்து வியாக்கியானம் செய்துகொண்டு வந்தபொழுது, "பிரஹ்மத்துக்குச் சத்தியம், ஞானம், அநந்தம் என்னும் லக்ஷணங்கள், ஒரே பசுவுக்கு ஒரே சமயத்தில் கொம்புடைத்தென்றும், கொம்பில்லை யென்றும், கொம்புண்டென்றும் கூற முடியுமானால்தான் ஒப்புக் கொள்ளலாம்" என்று கூற, ஸ்ரீ ராமாநுஜர் உடனே எழுந்திருந்து, "ஸ்வாமி! இந்த வாக்கியத்துக்கு இன்னும் அதிகநியாயமான பொருள் ஒன்று கூறப்படலாமென்று எனக்குத் தோன்றுகிறது. சத் என்னும் லக்ஷணம் நிமிஷந்தோறும் மாறுதல் என்னும் எண்ணத்தையே நீக்கிவிடுகிறது. ஞான லக்ஷணமானது அதன் இயற்கையிலே அசித் என்பது இருக்கலாமென்னும் எண்ணத்தையே அடியோடு நீக்கிவிடுகிறது; அநந்த லக்ஷணமானது அவருடைய சாராம்சம் எல்லைக்குட்பட்டது என்னும் எண்ணத்தையே மாற்றிவிடுகிறது. ஆகையால், இந்த லக்ஷணங்கள் ஒன்றுக்கொன்று சம்பந்தமற்றவை யென்று நான் கூறுகிறேன்; பிரஹ்மமானது நித்தியமாயும், சித் பிரபஞ்சம் அசித் பிரபஞ்சம் இரண்டிலிருந்தும் வேறுபட்டதாயும் இருக்கிறது" என்று கூறினர். யாதவப்பிரகாசர் கொஞ்சம் யோசனைபண்ணினர்; அதற்

குப் பதில் கூற முயற்சித்தார்; ஆனால் முடியவில்லை; ஆகை யால், அதிருப்தியினால் முறுமுறுத்துக்கொண்டு மௌனமா யிருந்துவிட்டார்.

இன்னொருநாள், ஸ்ரீ ராமாநுஜர் யாதவப்பிரகாசரு க்கு எண்ணெய் தேய்த்துக் கொண்டிருக்கையில், சாந் தோக்கிய உபநிஷத்திலே முதலாவது அத்தியாயம், ஆறு வது பிரிவிலே, "கபியாசம் புண்டரீகம் ஏவம் அக்ஷிணி" என்றுள்ள 6, 7-வது வாக்கியங்களைப்பற்றிப் பேச்சு நடந் தது. யாதவப்பிரகாசர் அதற்குச் சற்றும் நியாயமல்லாத, அவலக்ஷணமான வியாக்கியானம் ஒன்று செய்தார். இப்படி யாதவர் வேண்டுமென்றே குறும்புத்தனத்தினாலே செய்த வியாக்கியானத்தைக் கேட்டு ஸ்ரீ ராமாநுஜர் கோபம் மிகுந் தார்; ஆயினும், கோபத்தை யடக்கிக்கொண்டதினாலே, அது அவருடைய ஹிருதயத்துக்குள்ளே பன்மடங்கு அதிகமாகித் துடித்தது; கோபம் கொதித்த கண்ணீர் அவ ருடைய கன்னங்களிலே ஆறு யோடிற்று. இக் கண்ணீர்த் துளிகள் யாதவப்பிரகாசருடைய தொடையின்மீது விழு ந்துவிடவே, அவை விழுந்த இடத்தைப் பொசுக்கிக் கொப் புளிக்கும்படி செய்துவிட்டன. யாதவப்பிரகாசர் இக் கண் ணீர்த் துளிகளின் சூடு பொறுக்க முடியாமல் குதித்தெழு ந்து, அடக்கிய கோபத்தினால் கறுகறுத்திருந்த ஸ்ரீ ராமா நுஜருடைய முகத்தைப் பார்த்து, "என்ன சங்கதி?" என்று கேட்டார். ஸ்ரீ ராமாநுஜர், "ஸ்வாமி! ஒன்றுமில்லை; ஸ்ருதி வாக்கியம் ஒன்று நியாய விரோதமாகவும், ஒழுக்க விரோத

மாகவும் பொருள் படுத்தப்படுவதை நான் இன்று கேட்கும்படி நேர்ந்தது; அதுவும் விஷயத்தை நன்று யறிந்திருக்க வேண்டிய வித்துவானுகிய தாங்கள் கூறியதுதான் இன்னும் எனக்கு ஆச்சர்யத்தையும், விசனத்தையும் மேன்மேலும் உண்டுபண்ணுகிறது'' என்று மறுமொழி கூறினர்.

யாதவப்பிரகாசருக்குக் கோபம் ஒரு பக்கம் உண்டாயிற்று; அலக்ஷிய சிந்தை ஒரு பக்கம் உண்டாயிற்று. "அப்படியானல், அந்தகாரத்திலே அமிழ்ந்து கிடக்கிற உன்னுடைய வேலைக்காரர்களுக்குத் தங்களுடைய உயர்ந்த ஞானத்தில் ஒரு சிறிதாவது அளியுங்கள்; அந்தக் கிரந்தத்துக்குத் தங்களுடைய பெயர் பெற்ற வியாக்கியானத்தைக் கேட்கும் பொருட்டு, நான் தங்களுடைய பாதங்களின் அடியில் உட்காருகிறேன்'' என்ருர் யாதவப்பிரகாசர்.

யாதவப்பிரகாசர் பரிகாச நிந்தையாகக் கூறிய இவ்வார்த்தைகளை ஸ்ரீ ராமாநுஜர் காதில் போட்டுக்கொள்ளாமல் "ஸ்வாமி! இம்மாதிரி அது புராதன காலத்திலே பொருள்படுத்தப் பட்டதாகத் தோன்றுகிறது. சூர்ய மண்டலத்தினுள்ளே யுள்ள பொன்னிறப் புருஷனுடைய கண்கள் தினகரனுடைய ஆநந்தகரமான கிரணங்களுக்குத் தனது மார்பை விரித்துக் கொடுக்கின்ற தாமரையின் இதழ்கள் போல் அவ்வளவு அழகும் ஒளியும் உள்ளனவாம். நியாய மனத்தினையுடைய ஆர்யன் எவனும் இதற்கு வேறெவ்விதப் பொருளும் அளிக்கக் கனவில்கூடக் கருதமாட்டான்'' என்ருர்.

யாதவப் பிரகாசரை நமது ராமாநுஜர் அதிர்த்துக் கலங்கச் செய்தது இது இரண்டாம் முறையாம். யாதவப் பிரகாசருக்கு ராமாநுஜர்மீது பொருமையும், கோபமும் இவ்வளவு அவ்வளவு என்று சொல்லமுடியாமல் அவ்வளவு அதிகமாகப் பொங்கிவிட்டது. அவர் ராமாநுஜரை நோக்கி, "எனக்கா உபதேசிக்கின்ருய்? சிங்கத்தை அதன் குகையிலேயே சென்று எதிர்க்கின்ருயா? நீ கற்ற வித்தையை பெற்ற தாயிடத்திலா காட்டுகின்ருய்? வளர்த்த கடா மார்பில் பாய்ந்ததுபோல, நீ செய்தாய்; கொல்லது தெருவில் ஊசி விற்க வந்தாயா? நன்று, நன்று. பண்டிதா! நீ மெத்தப் படித்தவ ஞய்விட்டாய்; இனிமேல் உனக்கும் நமக்கும் சரிவராது; ஓடிப்போ வெளியே; என் முகத்தில் விழிக்காதே" என்று கர்ஜித்தார். ஸ்ரீ ராமாநுஜர் சிறிதுநேரம் யோசனை செய்து பார்த்து, 'யாதவப்பிரகாசரை விட்டு நீங்கி விடுவதுதான் நல்ல' தென்று தோன்ற அப்படியே அவர் வெளியே போய்விட்டார்.

ஆனல்,யாதவப்பிரகாசர் சும்மா இருக்கவில்லை. இராமாநுஜர் இவ்வளவு பேரறிவுடனே உலகி லிருக்கும்வரையில், தம்முடைய பெயரும் கீர்த்தியும் விளங்கிவிடவேண்டுமென்றும், ஆகவே எப்படியாவது ஸ்ரீ ராமாநுஜரைக் கொன்றுவிட வேண்டுமென்றும் தீர்மானித்துக்கொண்டு, தமது சிஷ்யர்களை நோக்கி, "இதைக் கவனியுங்கள், இந்த ராமாநுஜன் நிரம்ப அபாயகரமானவன்; உங்க ளெல்லோரிலும் இவன் ஒருவனே என்னுடைய உபதேசங்களைக்

குறை கூறுகிறான் என்பதை நீங்கள் கவனித்த தில்லையா? உலகத்தி லிருந்து அவனை யொழிக்காவிட்டால், அத்வைத மதம் அழிந்துவிடும்; அதுவும் வெகு சீக்கிரத்தில் அழிந்துவிடு மென்பது நிச்சயம்; ஆகையால், அவனைச் சீக்கிரம் எமலோகம் அனுப்பிவிடுதற்கு வழி தேடுங்கள். இது ரகஸ்யமா யிருக்கட்டும்; ஆனால் சுறுசுறுப்பாக வேலை நடக்கவேண்டும்'' எனவே, அவருடைய சிஷ்யர்கள் ஸ்ரீராமாநுஜரைக் கொல்வதற்குப் பற்பல விதமான உபாயங்களைச் சொன்னார்கள்; கொரோத் தன்மையிலே இவர்கள் குருவுக்கு மிஞ்சின சிஷ்யர்களா யிருந்தார்கள். ஆனால், யாதவப்பிரகாசரோ ''அவ்வுபாயங்களெல்லாம் பாபகரமானவை'' என்று நிராகரித்துவிட்டார்; கடைசியாக யாதவப்பிரகாசர், ''சிஷ்யர்காள்! கேளுங்கள்! நான் ஒரு உபாயம் சொல்லுகிறேன்; இது சுலபமா யிருக்கும் என்று தோன்றுகிறது. நாம் காசிக்கு அவனையும் யாத்திரை செய்யும்படி சொல்லி இட்டுக் கொண்டு செல்வோம்; அங்குப் போய்விட்டால், கங்கா நதியி னுள்ளே அவன் மூழ்கிப் போய்விடும்படி செய்து விடலாம்; நம்முடைய கார்யமும் பலித்துவிடும்; பாபமும் நம்மைச் சாராது'' என்றார். எல்லோரும் இதற்குச் சம்மதித்தார்கள். ஆகவே, 'ஸ்ரீராமாநுஜரிடம்போய் அவரைச் சமாதானப்படுத்தி, மறுபடியும்யாதவப்பிரகாசரிடம் அழைத்து கொண்டு வரவேண்டும்' என்று தீர்மானிக்கப்பட்டது.

அவ்வாறே ஒரு சிஷ்யன் ஸ்ரீ ராமாநுஜரிடம் சென்று ''சகோதரா! நமது உபாத்தியாயருடைய மூடத்

தனங்களினால் நாங்கள் கஷ்டப்படவேண்டி யிருக்கிறது; நீ இல்லாமல் எங்களுக்குப் பொழுது போகிறதில்லை. மடத்திலே மூதேவி பிடித்ததுபோ லிருக்கிறது. நாங்களெல்லோரும் அந்தக் கிழவனை லகுவில் விடவில்லை; மூலைக்கு ஒருவராகப் பிடித்துக்கொண்டு நெருக்கவே, அக் கிழவன் தான் செய்தது தப்பிதமே யென்று ஒப்புக்கொண்டான். தன்னுடைய பிரசங்கங்கள் பயனற்றவை யென்றும், கவனித்துக் கேட்பார் எவருமில்லை யென்றும் இப்பொழுது அக் கிழவனுக்கே தெரிந்துவிட்டது. நீ அங்கே யில்லாமற் போனதினால், நாங்கள் உயிரற்றஉடல்களா யிருக்கின்றோம். ஆகையால், அங்கு நடந்ததை நீ மறந்துவிடு; மன்னித்துவிடு; மறுபடியும் எங்களுடனே வந்து சேர்'' என்றான்.

ஸ்ரீ ராமாநுஜர் கள்ளங் கபடற்ற உண்மையான உள்ளமுடையவராதலினாலே, தாம் அவசரப்பட்டு அங்கிருந்து வந்ததைப்பற்றி வருந்தி, மறுபடியும் யாதவப்பிரகாசரிடம் சென்றார். யாதவப்பிரகாசர் தம் மனத்திலுள்ள பொறாமையையும், விரோத எண்ணத்தையும் வெகு சாமர்த்தியமாக மறைத்து வைத்துக்கொண்டு, ஸ்ரீராமாநுஜரை நோக்கி, "என்ன அப்பா! நீ இவ்வளவு கோபித்துக்கொள்ளலாமா? எனக்கோ விருத்தாப்பிய பருவம் அதிகரித்து வருகின்றது. அதனால் ஏதேனும் அவசரப்பட்டு முன்பின் யோசனை யில்லாமல் ஏதேனும் சொல்லிவிட்டாலும், நீ அதை மன்னித்துவிட வேண்டாமா?'' என்று அதிகப் பிரியம் பாராட்டுபவர்போலப் பேச, ஸ்ரீராமாநுஜருடைய

ஹிருதயம் உருகிவிட்டது. அவர் யாதவப்பிரகாச ரிடத்திலே முன்போலச் சிஷ்யராக அமர்ந்துகொண்டார்.

இவ்வாறு சின்னுட்கள் கழிந்தன; ஒருநாள் யாதவப் பிரகாசர் தமது சிஷ்யர்களை நோக்கி, "சிஷ்யர்காள்! எனக்கோ வயது தளர்ந்துவிட்டது; அந்தியகாலம் சமீபித்து வருகின்றது. எனக்குக் கங்கா யாத்திரை செய்யவேண்டுமென்னும் எண்ணம் உண்டாயிருக்கின்றது. கங்கா தீரத்திலே எனது பிராணன் பிரியவேண்டுமென்று நான் இச்சிக்கிறேன். ஆதலால், அதற்கு நீங்களெல்லோரும் உதவிசெய்வீர்களா? கங்கா யாத்திரை செல்லலாமா?'' என்று வினவ, எல்லோரும் அதற்குச் சம்மதித்து, கங்கா யாத்திரை புறப்பட்டார்கள். வழியிலே ஸ்ரீ ராமாநுஜரும் கோவிந்தரும் சந்தித்துப் பேசிக்கொள்ளாதபடி, அவ்வளவு ஜாக்கிரதையாக மற்ற சிஷ்யர்கள் ஸ்ரீ ராமாநுஜரைக் கவனித்து வந்தார்கள். இதற்குக் காரணம், ஸ்ரீராமாநுஜர் கோபித்துக்கொண்டு யாதவப் பிரகாசரிடமிருந்து போய்விட்டபொழுது, கோவிந்தர் அங்கேயிருந்தார்; அங்கு ஸ்ரீ ராமாநுஜரைக் கொல்வதற்கு நடைபெற்ற யோசனைகளும், சூழ்ச்சிகளும் எல்லாம் கோவிந்தருக்கு நன்ருகத் தெரியும்; இப்பொழுது ஸ்ரீராமாநுஜரைக்கங்கையில் அமிழ்த்திவிடுவதாகயோசனை செய்து, அதற்காகவே யாத்திரை செய்வதும் கோவிந்தருக்குத் தெரியும். ஆகையால், கோவிந்தர் தனித்து ஸ்ரீ ராமாநுஜருடனே சம்பாஷிக்கும்படி மற்றச் சிஷ்யர்கள் விடுவதில்லை. இவர்கள் ஸ்ரீ ராமாநுஜரிடத்திலே அளவுக்குமிஞ்சின பிரிய

செலுத்தி, ஒரு நிமிஷம்கூட அவரைத் தனியே விடாமல் அவ்வளவு இணைபிரியா வாத்சல்யமுள்ளவர்களாயிருந் தார்கள்.

பிறகு எல்லோரும் விந்தியகிரி போய்ச் சேர்ந்தார்கள்; கோவிந்தருக்கு ஸ்ரீ ராமாநுஜரை எப்படித் தப்புவிப்பது என்பதே பெருங் கவலையாய்விட்டது; ஸ்ரீ ராமாநுஜரிடத் தில் மெல்லச் சொல்லிவிடலாமென்றால், அதற்கும் முடிய வில்லை; எவரேனும் ஒருவர் ஸ்ரீ ராமாநுஜருடன் இருந்து கொண்டேயிருந்தார். இவ்விதமாகக் கோவிந்தர் கவலைப் பட்டுக்கொண்டிருக்கும்பொழுது, ஒருநாள் இரவு விடியற் கால சமயத்தில் ஸ்ரீ ராமாநுஜர் எழுந்திருந்து காட்டி னுள்ளே மலவிசர்ஜ்ஜனம் செய்யச் சென்றார். ஸ்ரீ ராமா நுஜரைப்பற்றிக் கவலைப்பட்டுக்கொண்டு நித்திரை வராது விழித்துக்கொண்டிருந்த கோவிந்தர் ஸ்ரீ ராமாநுஜர் செல்வ தைப் பார்த்துவிட்டு, எவருக்கும் தெரியாமல் சப்தம் செய்யாது அவர் பின்னேயே சென்றார். இருவரும் காட்டி னுள் நுழைந்துவிட்டார்கள்; மெல்லக் கோவிந்தர் ஸ்ரீ ராமா நுஜரை யணுகி, அவர் தோளின்மீது கை போட்டார். ஸ்ரீ ராமாநுஜர் ஆச்சர்யத்துடனும், பயத்துடனும் திடுக் கிட்டுத் திரும்பிப் பார்க்க, கோவிந்தர் மெல்லிய தொனி யில், "அப்பா! நாம் நெடுநேரம் இங்கு ஒன்று யிருக்க முடி யாது; நேரமானால் நம்மைத் தேட ஆரம்பித்துவிடுவார்கள்; உன்னைக் கொல்வதற்கு யாதவப்பிரகாசரும், அவருடைய சிஷ்யர்களும் எத்தனையோ சூழ்ச்சிகள் செய்தார்கள்;

கடைசியில், இப்பொழுது உன்னைக் கங்கையில் அமிழ்த்தி விடத் தீர்மானித்து, உன்னை அழைத்துக்கொண்டு போகிறார்கள்; சீக்கிரத்திலே இவ்விடமிருந்து ஓடிவிடு; உன்னை அவர்கள் சீக்கிரம் தேடாமலிருக்கும்படி நான் பார்த்துக் கொள்ளுகிறேன்'' என்றார். இவ்வளவும் சொல்லிவிட்டு, கோவிந்தர் ஸ்ரீ ராமாநுஜரைக் காட்டிலே விட்டுவிட்டு யாதவப்பிரகாசரிடம் போய்விட்டார்; அந்த இருண்ட காட்டிலே ஸ்ரீ ராமாநுஜர் இன்னது செய்வதென்று அறியாதவராய்த் தனியே நின்று யோசனை செய்தார். சிறிது நேரம் கழித்து மனந் தெளிந்து, ஸ்ரீராமாநுஜர் ஒரு ஒற்றையடிப் பாதையைப் பின்பற்றி நடக்க ஆரம்பித்தார்; அது காட்டின் நடுவிலே கொண்டுபோய் விட்டுவிட்டது; காட்டிலிருந்து வெளியேறுவதற்கு வழி தெரியவில்லை. அவருடைய கால்கள் வீங்கிவிட்டன; ரத்தம் கட்டிவிட்டது; முட்களும், புதர்களும் அவருடைய சரீரத்தை ஆங்காங்கு குத்திக் காயங்களை புண்டுபண்ணிவிட்டன; அவருக்குப் பசியும், களைப்பும் அதிகரித்தது; நாவு உலர்ந்து வரண்டு, 'தாகத்துக்குத் தண்ணீர் தண்ணீர்' என்று தவிக்கலானார். கடைசியாக அவர் ஒரு விருக்ஷத்தினடியிலே விழுந்து, ''நான் கருவிலிருந்தபொழுது என்னைக் கவனித்து வளர்த்த எ பிரபு! நான் உன்னுடைய கிருபையிலே சரண் புகுகிறேன்; உன் இஷ்டப்படி செய்!'' என்று பிரார்த்தித்தார்.

அப்படிச் சொன்னவுடன் ஸ்ரீ ராமாநுஜர் மூர்ச்சையாய்விட்டார்; மூர்ச்சை தெளிந்து கண்களை விழித்தபொ

ழுது, ஒரு வேடனும் அவனுடைய மனைவியுமாகிய இரு வர்கள், அற்புதமான அழகு வாய்ந்தவர்களாய் அன்புட னும், அநுதாபத்துடனும் இவரைக் குனிந்து பார்த்தார்கள்.

ஸ்ரீ ராமாநுஜருக்கு எழுந்திருக்கச் சக்தி யில்லை; ஆயி னும், அவருள்ளே ஒருவித ஆநந்தம் பொங்கிற்று; பய மென்பது போய்விட்டது; அவர் தமது முழங்கைகளை யூன்றிச் சாய்ந்துகொண்டு, "நீங்கள் யார்! எங்கிருந்து வரு கிறீர்கள்? எங்குச் செல்லுகிறீர்கள்?" என்று மெல்லிய குர லில் கேட்டார். அவர்கள், "நாங்கள் வெகு தூரத்திலே பனி வரையிலுள்ள சித்தாஶ்ரமத்தி லிருந்து வருகிறோம்; இப் பொழுது சத்தியவிரதத்துக்கு(காஞ்சிமா நகருக்கு)செல்லு கின்றோம்" என்றார்கள். ஸ்ரீராமாநுஜர் புளகாங்கித முடை யவராய், அந்த வேடனையும் அவனுடைய மனைவியையும் ஏறிட்டுப் பார்த்தார். அவருடைய பலஹீனமும் களைப்பும் எங்கோ பறந்துவிட்டன; அவர் சட்டென்று எழுந்திருந்து அந்த வேடனுடைய கைகளைப்பிடித்துக்கொண்டு, "நானும் அங்குத்தான் செல்ல விரும்புகின்றேன்; ஆனால், இந்தப் பயங்கரமான காட்டிலே வழி தவறிவிட்டேன்; நீங்கள் இப் பொழுது வந்திராவிட்டால், என்னுடைய கதி யாதாயிரு க்குமோ? என்னைத் தயவுசெய்து இக்காட்டினின்றும் வெளி யே கொண்டுபோய், ரஸ்தாவிலே விட்டு விடும்படி நான் கேட்டுக்கொள்ளுகிறேன்" என்றார்.

வேடுவர், "நிரம்பச் சந்தோஷம், அப்படியே செய்கின் றோம்" என்று கூறி, தாம் முன்னே நடந்தார்கள்; சீக்கிரத்

திலே, ஸ்ரீ ராமாநுஜருக்கு இதற்குமுன் பாத்திராத ஒரு பாதை தென்பட்டது; சூர்யன் அஸ்தமன மாகிறவரையில் அப்பாதை வழியே சென்றார்கள்; இரவு ஆகவே, அவர்கள் பெருங்கிளைக ளடர்ந்த ஒரு பிரம்மாண்டமான விருக்ஷத்தி னடியிலே தங்கினார்கள். அவர்களுக்கு அன்றிரவு ஆகாரம் ஒன்றும் கிடைக்கவில்லை; அர்த்த ராத்திரியாயிற்று; அப்போது வேடச்சி தனக்குத் தாகம் மிக எடுத்ததென்று தவிக்கத் தொடங்கினாள். வேடன், "என் கண்ணே! சற்று பொறுத்திரு, விடியட்டும். அருகில் எங்கேனும் அமிர்தம் போன்ற தீர்த்தமுள்ள கிணறு இருக்கலாம்" என்று கூறி னான். ஸ்ரீராமாநுஜருக்கு இது மிகுந்த வருத்தத்தை யளித் தது. "ஆ! என்னால் ஒன்றும் செய்ய முடியவில்லையே; எனக் குச் சமயத்தில் உதவி செய்தவர்களுக்கு என்னால் ஒன் றும் பிரதி உபகாரம் செய்ய முடியவில்லையே" என்று வருந்தினார். இந்த மன வருத்தத்தினாலே அவர் நெடுநேரம் உறக்கம் வாராதிருந்து, விடியற்கால சமயத்திலே உறங்கி விட்டார்.

ஸ்ரீராமாநுஜர் கண்களை விழித்துப் பார்த்தார்; சூர்யன் உதயமாகி வெகு நேரமாய்விட்டது; அவ்வளவு நேரம் உறங்கிவிட்டதைப் பற்றியும், காலைக் கடன்கள் செய்யத் தவறிவிட்டதைப் பற்றியும் அவர் வெட்க மடைந்தவராய், அவர் உடனே எழுந்திருந்து பார்க்க, தம்முடன் முந்திய நாள் கூட வந்த வேடனையும் வேடச்சியையும் காணவில்லை; அவர்களைக் கூவிக் கூப்பிட்டுக்கொண்டே நாலாபக்கங்களி

லும் ஓடினார்; பதிலே யில்லை. அப்பொழுது அக்காட்டி லிருந்து வெளியே செல்ல ஒரு ஒற்றை யடிப்பாதை தென் பட்டது; அவ் வழியைப் பின்பற்றிச் செல்ல, சிறிது தூரத்திலே கிராமங்கள், தோட்டங்கள் முதலியன காணப் பட்டன. சுற்றிலும் தோன்றிய காட்சிகள் அவருக்கு மிக வும் பழக்கமுள்ளவைபோலக் காணப்பட்டன; விந்திய பர் வதத்திலிருந்து இவர் தெற்குப் பிரதேசங்களுக்குத் திடீ ரென்று எப்படி வர முடிந்ததென்பது ஆச்சர்யமாயிருந் தது. ஸ்ரீ ராமாநுஜர் அங்கு அருகே யிருந்த ஒரு அழகிய தோட்டத்துக்குச் சென்று, அங்கிருந்த ஒரு பெரிய கிணற்றைச் சுற்றி நின்றுகொண்டிருந்த சில ஜனங்களை நோக்கி, "நான் காட்டுக்குள்ளே வழி தவறிவிட்டேன்; இது எந்தத் தேசம்? அருகிலுள்ள நகரம் எது?" என்று கேட்க, அவர்கள் முதலில் விநோதகரமாகச் சிரித்தார்கள்! பின்னர், பரிதாபத்துடனும் வருத்தத்துடனும் அவரைப் பார்த்து, "ஐயா, வாலிபரே! உம்மைப் பார்த்தால் இந்தப் பிரதேசத்தவர் போலவே தோன்றுகிறது. ஆயினும், இந்த இடம் இன்னதென்று உங்களுக்குத் தெரியாதது ஆச்சர்ய மாயிருக்கின்றது. புண்யகோடி விமானமானது எதிரே நிற் பது தெரியவில்லையா?" என்றார்கள். உடனே ஸ்ரீராமாநுஜர், "ஆ! இதென்ன? காஞ்சிமாநகரா? நான் பாக்கியமற்றவன்!" என்று கூச்சலிட்டு, அப்படியே மூர்ச்சையாய்விட்டார்.

அப்போது அவருடைய மனமானது அற்புத அழகு வாய்ந்த வேடனையும், வேடச்சியையும் நினைத்தது; அங்கு

உண்டான ஆநந்தத்தையும் உபசாந்தத்தையும் நினைத்தது; விந்திய பர்வதத்திலிருந்து காஞ்சிமாநகர் வந்து சேர்ந்த காலக் குறைவை நினைத்தது; அழகிய வேடச்சியின் அடங்காத அர்த்த ராத்திரி தாகத்தை நினைத்தது; 'விடிந்தால் அமிர்த நீர் கிடைக்கு'மென்ற வேடனுடைய மறுமொழியை நினைத்தது; அவர்கள் செய்த உபகாரத்துக்கெல்லாம் பிரதியொன்றும் செய்ய முடியவில்லையே என்று வருந்திற்று; இந் நினைப்புக்களெல்லாம் அவருடைய மனதிலே ஏக காலத்தில் தோன்றின.

பிறகு ஸ்ரீ ராமாநுஜர் வீடுவந்து சேர்ந்து, நிகழ்ந்தவற்றை யெல்லாம் தம் தாயாரிடம் சொன்னார். "திருக்கச்சி நம்பியாரிடத்திலே போய் நடந்ததை யெல்லாம் கூறு; திருக்கச்சி நம்பியார் சபரியினுடைய அம்சம்; ஸ்ரீ வரதராஜப் பெருமாளுக்கு அவர் மிகவும் வேண்டியவர்; இன்னது செய்யவேண்டு மென்பதைப்பற்றி அவர் வழி காட்டுவார்" என்று மாதா கூறினாள். அப்படியே ஸ்ரீ ராமாநுஜர் திருக்கச்சி நம்பியாரிடம் சென்று நடந்த விஷயங்களைக் கூற, அவர் "நல்லது, தினந்தோறும் நீ எம்பெருமானுடைய அபிஷேகத்துக்குக் கிணற்றிலிருந்து ஒரு குடம் ஜலம் கொண்டுபோய்க் கொடு" என்று ஆக்ஞாபித்தார். அன்று முதல் அக் கிணறு மகா பரிசுத்தமானதென வைஷ்ணவர்களால் கொண்டாடப்பட்டு வருகிறது.

காஞ்சீபுரத்தில் ஸ்ரீ ராமாநுஜர் இப்பொழுது அத்தியாநந்தமுடையவராய், ஈஶ்வர ஸேவையிலே தமது நேரம்

முழுதையும் கழித்துக்கொண்டு வந்தார். இது இப்படியிருக்க, ஸ்ரீ ராமாநுஜர் ஓடிவிட்ட பின்னர், சிறிது நேரம் கழித்து, விடியற்கால மாயிற்று; ஸ்ரீ ராமாநுஜரைக் காணவில்லை; யாதவப்பிரகாசரும் அவருடைய சிஷ்யர்களும் ஸ்ரீ ராமாநுஜரை நாலா பக்கங்களிலும் தேடிப் பார்த்தார்கள்; அவர் எங்கும் காணப்படவில்லை. இப்படி யிருக்கும் பொழுது, கோவிந்தர் எங்கோ போய்விட்டு வருவார்போல, அவர்களுக்கு முன்னே தோன்றி, "சங்கதி என்ன?" என்று கேட்க, அவர்கள் "ஸ்ரீ ராமாநுஜர் எங்கே?" என்று கேட்டார்கள். "ஆ, ராமாநுஜரா! அவர் எங்கே போனார்? ஐயோ! நான் காலையி லெழுந்து பார்க்கும்பொழுதே அவரைக் காணவில்லை; அவர் நம்முடைய குருவுடனே வெளியே போனாராக்கும் என்றிருந்தேன்; எங்கே போய்விட்டார்? ஆ, அண்ணா! நான் என்ன செய்வேன்? எங்குப் போய்த் தேடுவேன்? என்னிடம் சொல்லாமலா போய்விட்டாய்? எனது பெரிய தகப்பனருக்கு நான் யாது பதிலுரைப்பேன்? ஐயையோ! நீ இங்கு இருக்கிறா யென்றல்லவோ நான் வந்தேன்? உன்னை நம்பியல்லவோ நான் உயிர் வாழ்ந்தேன்?" என்று பலவிதமாகக் கதறிப் பதறிக் கரைந்து கோவிந்தர் அழுதார். இவர் பொய் யழுகை அழுகிறாரென்று எவருக்கும் தெரியாது; இவருடைய அழுகையானது அங்கிருந்த பலருடைய ஹிருதயங்களையும் கரைத்துவிட்டது; ஆயினும், ஸ்ரீ ராமாநுஜரை அவர் காணவில்லை; 'அவர் இருட்டிலே பின்தங்கி நின்றிருக்கலாம்; காட்டு மிருகங்கள் ஏதேனும் அடித்துக்கொண்டு போ

யிருக்கலாம்!' என்று அவர்கள் தீர்மானித்துக்கொண்டு வழி நடந்தார்கள்.

பிறகு யாதவப்பிரகாசரும் அவருடைய சிஷ்யர்களும் கங்கா தீரத்தை யடைந்து அங்குக் காலம் கழித்து வருகையில், ஒருநாள் யாதவப்பிரகாசரும் அவருடைய சிஷ்யர்களும் கங்கையிலே ஸ்நாநம் செய்துகொண் டிருக்கையில், கோவிந்தர் தமது உள்ளங் கையிலே ஒரு சிவலிங்கம் ஒட்டிக்கொள்ளக் கண்டார். "யாதவப்பிரகாசர் தமது மந்திர சக்தியினாலே கோவிந்தருடைய கையிலே ஒரு சிவலிங்கம் ஒட்டிக்கொள்ளும்படி செய்தார்" என்றும், "மோஹன மந்திரத்தை ஜபித்துக் கோவிந்தருடைய புத்தியை மயக்கிக் கோவிந்தரை சைவ மதஸ்தராக்கினார்" என்றும் வைஷ்ணவர்கள் கூறுகிறார்கள். யாதவப்பிரகாசர் ஆச்சர்யமடைந்தவராகி "நன்று, நன்று; இவ்விதமாகப் பாக்கியம் பெறுவது அபூர்வமேயாம்; எங்க ளெல்லோருக்கும் முன்னே, கங்கையிலே ஸ்நாநம் பண்ணின புண்ணியம் உனக்குக் கைமேலே கிடைத்துவிட்டது. சாட்சாத் பரமேஸ்வரனாகிய கங்காதரன் உனக்கு ஸ்பர்சம் தர்சனம் இரண்டும் கொடுத்துவிட்டார்" என்றார். இதற்குப் பின் யாதவப்பிரகாசரும் அவருடைய சிஷ்யர்களும் கோவிந்தரை அளவுக்கு மிஞ்சிய பக்தியுடனும் கௌரவத்துடனும் பாராட்டி வந்தார்கள்.

காலக்கிரமத்திலே யாதவப்பிரகாசரும் அவருடைய சிஷ்யர்களும் ஜகந்நாதம், அகோபிலம் என்ற க்ஷேத்திரம்

களையெல்லாம் தர்சனம் செய்துகொண்டு, காஞ்சி மாநக ருக்குத் திரும்பி வந்து சேர்ந்தார்கள். வழியிலே கோவிந் தர் யாதவப்பிரகாசரை நோக்கி, "ஸ்வாமி! என்னிடமுள்ள சிவலிங்கத்தைத் தகுந்த இடம் பார்த்துப் பிரதிஷ்டை செய்துவிட்டுவர விரும்புகின்றேன்; உத்தரவு அளிக்க வேண்டும்" என்று வேண்ட, யாதவப்பிரகாசரும் சம்மதித் தார். ஆகையினால், கோவிந்தர் தமது சொந்தக் கிராமத்தி லேயே அந்தச் சிவலிங்கத்தைப் பிரதிஷ்டைபண்ணி, அத னிடத்தே இடைவிடா பக்தி செலுத்திவந்தார். இதற்குள் ளாக, சீகாளத்தி நாதராகிய மஹாதேவர் கோவிந்தரைக் கொஞ்சகாலம் தம்மருகே வைத்திருக்க விரும்பி, தம்மிடம் வரும்படிக் கோவிந்தருக்குக் கனவிலே தோன்றி ஆக்ஞா பிக்க, கோவிந்தரும் புறப்படுவதற்கு ஆயத்தமானார். இதற் குள்ளாக, சீகாளத்திநாதர், காளத்தி க்ஷேத்திரத்திலே யுள்ள பிரதான உத்தியோகஸ்தர்களுக்குக் கனவிலே தோன்றி, கோவிந்தருக்குச் சகல மர்யாதைகளும் செய்து நல்வரவு அளிக்கும்படி ஆக்ஞாபித்தார். கோவிந்தர், கோவில் மரியாதைகள் பலபெற்று, சீகாளத்திக்குச் செல்ல, அங்கே க்ஷேத்திர நிர்வாக மனைத்தும் கோவிந்தர் வசம் ஒப்புவிக்கப்பட்டன; கோவிந்தரும் சாக்ஷாத் மஹாதேவ னுக்குத் தொண்டு புரிந்துகொண்டே காலம் கழித்துவந் தார்.

யாதவப்பிரகாசரும் அவருடைய சிஷ்யர்களும் காஞ்சி மாநகரிலே தங்களுடைய சொந்த மடத்துக்கு வந்து

சேர்ந்த பின்னர், யாதவப்பிரகாசருடைய சிஷ்யர்கள் அவ்வூரிலே ஸ்ரீ ராமாநுஜர் இருக்கக் கண்டு, ஆச்சர்ய மடைந்தவர்களாய், ஓடிச் சென்று யாதவப்பிரகாசரிடம் இதனை உரைத்தார்கள். அவர் "இது ஏதடா? ஒழிந்தானென்று நினைத்தோமே; மறுபடியும் இங்கு முளைத்திருக்கின்றானே; நல்லது, நீங்கள் போய் அவனை மெல்லத் தந்திரம் செய்து இங்கே மறுபடியும் அழைத்துக்கொண்டு வந்து சேர்த்துக் கொள்ளுங்கள், பார்க்கலாம்" என்றார். அப்படியே அவருடைய சிஷ்யர்களுட் சிலர் ஸ்ரீராமாநுஜரிடம் சென்று "ஏ, சகோதர! நீ எங்குப் போயிருந்தாய்? எங்களினின்றும் எப்படித் தவறிவிட்டாய்? 'நீ இருட்டில் எங்கோ தவறிவிட்டாய்' என்றும், 'காட்டு மிருகங்கள் உன்னை இரையாக்கிக் கொண்டிருக்கவேண்டும்' என்றும் நாங்கள் நினைத்தோம். இப்பொழுது உன்னைக் கண்டவுடனே எங்களுக் குண்டான சந்தோஷத்தை என்னென்று சொல்வோம்? நாங்கள் ஓடிக் குருமூர்த்தியினிடம் சொன்னோம். அவரும் அளவிலா ஆநந்தமடைந்து உன்னைக் கையோடு கூட்டிக்கொண்டு வரச் சொன்னார்" என்று சொல்லி, அவரை யிட்டுக்கொண்டு யாதவப் பிரகாசர் முன்னே செல்ல, யாதவப்பிரகாசரும் மிகுந்த அன்புடனே அவரை வரவேற்றார். பின்னர் ஸ்ரீ ராமாநுஜர், காட்டிலே நடந்த அற்புதச் செய்கைகளை யெல்லாம் எடுத்துரைத்தார். யாதவப்பிரகாசர் ஒன்றும் பேசாமல் ஆச்சர்யத்துடனே எல்லாவற்றையும் கவனமாகக் கேட்டுக்கொண்டிருந்தார். ஸ்ரீ ராமாநுஜர் விஷயத்திலே ஏதோ குப்தமான ஒரு மஹா சக்தி வேலை செய்து வருகிறதென்று யாதவப்

பிரகாசர் தெரிந்துகொண்டார்; ஸ்ரீ ராமாநுஜரைப்பற்றி நினைக்கும் பொழுதெல்லாம் அவருக்குப் பெருத்த வொரு சக்தியின் ஞாபகம் வந்தது; 'ஸ்ரீ ராமாநுஜர் ஒரு அதி ரகஸ்ய புருஷர்' என்று யாதவப்பிரகாசர் கருதினார். 'இனி மேல் அவருடனே போர்செய்து விளையாடக் கூடாது' என்றும், 'அவரை அவருடைய இஷ்டப்படி விட்டுவிட்டு நாம் பாடம் சொல்லிக்கொண்டு போகவேண்டும்' என்றும் யாதவப்பிரகாசர் தீர்மானித்துக்கொண்டார். ஸ்ரீ ராமாநுஜர் மறுபடியும் யாதவப்பிரகாச ரிடத்திலே மாணவராகிப் பாடங்கள் கற்கத் தொடங்கினார். "அக்காலத்திலே யாதவப் பிரகாசரைப் பார்க்கிலும் பெரியோர் எவருமில்லாததினாலே, ஸ்ரீராமாநுஜர் மறுபடியும் அவரிடமே போகவேண்டி வந்தது" என்று சிலர் கூறுகின்றார்கள்.

சின்னாட்கள் கழிந்தன; யாதவப்பிரகாசர் தமது சிஷ்யர்களுக்குச் சுருதிகளைப்பற்றித் தினந்தோறும் வியாக்கியானங்களுடனே பாடம் சொல்லிக் கொடுப்பது வழக்கம். "இவை யாவும் பிரஹ்மமே," "வேற்றுமை யென்பதே யில்லை" முதலான சுருதிகளுக்கு ஒருநாள் யாதவப்பிரகாசர் வியாக்கியானம் செய்துகொண் டிருந்தபொழுது, "அத்வைத உரையே மிகவும் சிறந்தது" என்று கூறினார். ஸ்ரீராமாநுஜர் "ஸ்வாமி! அவ்விடத்திலே எனக்குப் பெரும் சந்தேகம் ஏற்படுகின்றது; நான் வித்தியாசப்படுகிறேன்" என்று கூறித் தர்க்க வாயிலாக வாதித்தார். யாதவப்பிரகாசருக்குக் கோபம் வந்துவிட்டது; "நல்லது, இப்போது நீ என்னை

எதிர்த்தது மூன்றாவது தடவை; இதுதான் கடைசித் தடவையாயிருக்கட்டும்; உனக்கு இன்னும் நன்றாகப் போதிக்கக் கூடிய வேறு எவரிடமாவது போ; இனிமேல் எனக்கும் உனக்கும் சரிப்படாது; நீ பிஞ்சிலே பழுத்துவிட்டாய்; உனக்குக் கர்வம் தலைக்குமேலே ஆய்விட்டது" என்றார் யாதவப்பிரகாசர். ஸ்ரீராமாநுஜருக்கு இதனால் வருத்தம் உண்டாகவில்லை. சிறிது சந்தோஷமென்றுகூடச் சொல்லலாம். அவர் தமது வீட்டுக்குத் திரும்பிச் சென்று, தமது தாயாரிடத்திலே நடந்த விஷய மெல்லாவற்றையும் கூறினார். அவ்வம்மையார் "நல்லது, நல்லது; எனது அருங் குழந்தாய்! யாதவப் பிரகாசரிடத்திலே நீ வேதாந்தம் வேண்டியமட்டும் படித்துவிட்டாயென்று தோன்றுகிறது. 'திருக்கச்சி நம்பியார் வரதராஜப் பெருமாளுக்கு நிரம்ப வேண்டியவர்' என்று கேள்வி; அவரிடம் போய்ச் சொல்லு; நீ இன்னது செய்ய வேண்டுமென்று அவர் உனக்குக் கூறுவார்" என்றார். அப்படியே ஸ்ரீ ராமாநுஜர் திருக்கச்சியாரிடம் சென்று, நடந்தவிஷயங்களை யெல்லாம் கூறி, "இனிமேல் நான் என் செய்வது?" என்று கேட்க, அந் நம்பியார் புந்நகை புரிந்து கொண்டே "ரஸ்தா ஓரத்திலே யுள்ள கிணற்று ஜலத்தினிடத்தில் எம்பெருமானுக்குப் பிரத்யேக பிரிய முண்டு போலத் தோன்றுகின்றது; நீ தினந்தோறும் அபிஷேகத்திற்கு அந்த ஜலத்தில் ஒரு குடம் கொண்டுபோய்க் கொடுத்தால் நன்றாயிருக்குமே" என்றார். "உத்தரவுப்படியே செய்கிறேன்" என்றார் ஸ்ரீ ராமாநுஜர். இவர் முன்னமேயே தினந்தோறும் அந்தக் கிணற்றிலிருந்து ஒரு குடம் ஜலம்

கொண்டுபோய்க் கொடுத்துக்கொண் டிருந்தவர், காசியி லிருந்து யாதவப்பிரகாசர் திரும்பி வந்ததுமுதல் அப்படிக் கொண்டு போய்க் கொடுப்பதை நிறுத்திவிட்டார்; இப் பொழுது மறுபடியும் திருக்கச்சி நம்பியாருடைய உத்த ரவுப் பிரகாரம் மறுபடியும் கொண்டுபோய்க் கொடுக்க ஆர ம்பித்தார்.

ஸ்ரீராமாநுஜருடைய விஷயம் இப்படியிருக்க, ஸ்ரீயாமு நாசார்யர் ஒருநாள் தமது சிஷ்யர்களுக்கு "இலிங்கத்திட்ட புராணத்தீருங்" என்று ஆரம்பிக்கின்ற பாடலை யெடுத்துப் போதித்துக்கொண் டிருக்கையில், அவருடைய மனத்திலே ஏதோ ஒரு சிந்தனை யுண்டாய்விட்டது; அவர் ஆழ்ந்த சிந்தனையிலே அமிழ்ந்தினுர். "அந்தோ! எனக்குப் பின்னே என்னுடைய வேலையைச் செய்வதற்கு எவரும் இல்லையா? இச் சிறந்த ஆத்மரக்ஷைக் கொள்கை, போதிப்பதற்கு ஆளில்லாமல் என்னுடனே மரித்துவிடவா? ஏ, கிருபாநிதி! அவ்விதம் கூடாது. உன்னுடைய லக்ஷக்கணக்கான குழந்தை களை அநாதைகளாக நீ விட்டுவிடாதே. ஆ! யாதவப்பிரகாச ரிடமிருந்து ஸ்ரீ ராமாநுஜர் பிரிந்துவிடமாட்டாரா? என் னுடைய வேலையை ஸ்ரீ ராமாநுஜர் எடுத்துக்கொள்ளமாட் டாரா! காஞ்சீபுரத்திலே யிருக்கும் கருணாநிதியே! என்னு லானமட்டும் நான் வஞ்சகமில்லாமல் உனக்குத் தொண்டு புரிந்துவிட்டேன்; உனக்கு என்மீது கிருபை யுண்டானல் ஸ்ரீ ராமாநுஜரை என்னிடம் வரும்படி செய்வாய்" என்று ஸ்ரீ யாமுநாசார்யர் பிரார்த்தனை செய்தார்.

இதற்குள்ளே ஸ்ரீ யாமுநாசார்யருக்கு விருத்தாப்பிய பர்வம் அதிகரித்துவிட்டது; இதனால் அவர் தினந்தோறும் மேன்மேலும் பலவீனமடைந்து தமது ஊக்க மிழந்தவரானார். இச்சமயத்திலே காஞ்சீபுரத்தி லிருந்து இரண்டு வைஷ்ணவர்கள், யாமுநாசார்யரைத் தர்சிக்க வந்தவர்கள், "ஸ்ரீ ராமாநுஜர் யாதவப்பிரகாசரை விட்டு நீங்கிவிட்டார்" என்றும், "இப்பொழுது ஸ்ரீ வரதராஜப்பெருமானுக்குத் தொண்டு செய்துகொண் டிருக்கிறார்" என்றும் கூற, ஸ்ரீயாமுநாசார்யர் அடைந்த சந்தோஷத்துக்கு ஓர் அளவே யில்லை. அவர் அருகிலே யிருந்த மகா பூர்ணரைப் பார்த்து, "புத்திரா! காஞ்சிநாதருடைய பாத மலர்களிலே நான் சமர்ப்பித்துள்ள ஸ்தோத்திரப்பா இதோ உள்ளது. கடைசியாக அவர் எனது பிரார்த்தனைகளுக் கிணங்கி, ஸ்ரீ ராமாநுஜரைத் தமக்குத் தொண்டுபுரியும்படி எடுத்துக்கொண்டு விட்டார். நீ சென்று அவரை என்னிடம் கூட்டிக்கொண்டு வா" என்றார். மகா பூர்ணர் "உத்தரவு" என்று கூறிவிட்டு, காஞ்சீபுரத்துக்குப் புறப்பட்டார்.

இதற்குச் சில காலத்துக்கு முன்னமேயே, யாமுநாசார்யர் வியாதியினால் பீடிக்கப்பட்டவராய்விட்டார்; அவருடைய சரீரத்திலே ஒரு பெரிய பிளவை யுண்டாகி, அது ஆறாப் புண்ணாக ஆயிற்று; 'அது கர்ம வியாதி' என்றும், அதைச் சொஸ்தப்படுத்த முடியாது' என்றும் அவர் நன்றாக அறிந்துகொண்டாராதலினாலே, அவர் அந்த வியாதியை மிகுந்த பொறுமையுடனே சகித்துக்கொண்டிருந்தார்.

அவருடைய மிகவும் பிரியமுள்ள சிஷ்யர்களுள் ஒருவராகிய மாரனேரி நம்பி யென்பார் அந்த வியாதியைத் தம்மீது மாற்றிவிடும்படி அநேகம் தடவை ஸ்ரீ யாமுநாசார்யரைக் கெஞ்சிக் கேட்டுக்கொண்டார். ஆனால், ஸ்ரீயாமுநாசார்யர் அதற்குச் சம்மதிக்கவில்லை. கடைசியாக, மரணத்துக்குச் சற்று நேரத்துக்கு முன், ஸ்ரீ யாமுநாசார்யர் மாரனேரி நம்பியைத் தம்மிடம் கூப்பிட்டு, "புத்திரா! நான் இந்த வியாதியை நெடுங்காலம் பொறுமையுடனே சகித்துக்கொண்டிருந்தேன். இப்பொழுது நீ அடிக்கடி கேட்டுக்கொண்டிருந்த வேண்டுகோளை உபயோகப்படுத்திக் கொள்ள விரும்புகின்றேன்; கொஞ்ச நேரத்துக்கு இந்த வியாதியை நீ எடுத்துக்கொள்; நீ என்றும் எனக்கு அருமையானவனே; இப்பொழுது நீ இரட்டிப்பு மடங்கு அருமையானவனாகிறாய்; மகா பூர்ணர் உன்னைப்பற்றி மிகவும் கவலை எடுத்துக்கொண்டு, உனக்கு ஒரு குறைவும் நேரிடாது பார்த்துக்கொள்வார்" என்றார்.

"ஸ்ரீ யாமுநாசார்யர் இனிமேல் பிழைப்பது அரிது" என்று பலரும் கூறிவிட, கோஷ்டி பூர்ணரும் மகா பூர்ணரும் அவரை யணுகி, வரரங்கநாயகர் மூலமாகச் சரணாகதி யடைவதற்குள்ள ஏதேனும் ஒரு உண்மையைத் தங்கட்கு உபதேசிக்கும்படி கேட்டுக்கொண்டார்கள்.

ஸ்ரீ யாமுநாசார்யர் "அப்படியே யாகட்டும்; உங்களுடைய நித்திய உபாசனையே உங்களுடைய உயிருக்குயிராகும்; அவரிடத்தில் நீங்கள் சரண்புகுந்து கொள்ளுங்

கள். எப்பொழுதும் எம்பெருமான் பக்கல் நின்றுகொண்டு வீணாகீதங்களினாலே அவருடைய ஹிருதயத்தைச் சந்தோஷப் படுத்திக்கொண்டே யிருக்கின்ற திருப்பாணாழ்வாரை எப்பொழுதும் உங்கள் முன்னே லக்ஷியமாக வைத்துக் கொள்ளுங்கள்! திருப்பாணாழ்வாரைப்பற்றி நீங்கள் கேட்டதில்லையா? இவர் எம்பெருமானுடைய சரீரத்திலேயுள்ள ஸ்ரீ வத்சத்தின் அம்சமாவார்; இவர் திருச்சிராப்பள்ளிக் கருகேயுள்ள உறையூரிலே கலியுகம் பிறந்து 343-வருஷங்கட்குப் பின் பிறந்தவர். முதலில் சில பஞ்சமர்கள் இவரை ஒரு நெல் வயலிலே கைக் குழந்தையாகக் கண்டெடுத்தார்கள். இவர் ஸ்திரீகளின் ஸ்தன்னியங்களி லிருந்து க்ஷீரம் உண்ண மறுத்துவிட்டார்; ஆகையால், இவரைப் பசுவின் பால் கொடுத்து வளர்த்தார்கள். இவர் பிறவியிலேயே பக்தராதலால், வீணையை மீட்டிக்கொண்டு எப்பொழுதும் ஈஸ்வரநாம ஸ்தோத்திரம் செய்வதிலேயே காலங்கழித்து வந்தார். அவர், இரண்டு ஆறுகளுக்கும் மத்தியிலேயுள்ள பரிசுத்த ஸ்தலத்தை மிதிப்பதற்குத் தாம் அசுத்தரே யென்று கருதி, காவிரியின் தென்கரையிலே வசித்து வந்தார். ஒருநாள் ஜகன்மாதா ஈஸ்வரனை நோக்கி, "எனது புத்திரன் பாணன் ஏன் தூரத்திலேயே நின்றுகொண்டிருக்கிறான்? நம்மருகில் ஏன் ஒருபொழுதும் வருகிறதில்லை.?" என்று கேட்க, எம்பெருமான் "வணக்கமும் விநயமுமே தவிர வேறொன்றுமில்லை காரணம்" என்று மறுமொழி கூறிவிட்டு, அருகே யிருந்த லோகசாரங்க முனியைப் பார்த்து, உடனே சென்று பாணனை யிட்டுக்கொண்டு

வரும்படி ஆக்ஞாபித்தார்; இன்னும் பாணர் வருவதற்கு இசையாவிட்டால், தோளின்மீது வைத்துத் தூக்கிக் கொண்டு வந்து விடும்படிக்கும் ஆக்ஞைசெய்து அனுப்பினுர். சாரங்கமுனிவர் உடனே திருப்பாணுழ்வாரைத் தேடிக் கண்டுபிடித்து, மிகுந்த சந்தோஷத்தோடே அவரைத் தோளின்மீது வைத்துத் தூக்கிக்கொண்டு வரவே, எம்பெருமான் கோபமுடையவர்போல பாவனைபண்ணிக் கொண்டு, "கடைசியாக வந்துவிட்டாயா? நாம் அடிக்கடி உனக்குச் சொல்லி யனுப்பினேம் என்பது உனக்குத் தெரியாதா?" என்றுர். திருப்பாணுழ்வார், "ஆம், தெரியும்; ஆனுல் தங்களுடைய கிருபை யிருக்கிற தென்று தைர்யமாகத் தாங்களே விதித்துள்ள சமுதாய விதிகளெல்லாவற்றையும் நான் அலக்ஷியம் செய்துவிடலாமா?" என்று மறுமொழி சொன்னுர். எம்பெருமான் "அவை உன்போன்றவர்கட்காக விதிக்கப்படவில்லை; நல்லது, நீ இங்கே யிருக்கிறதினுலே எங்கள் பக்கத்திலேயே எப்பொழுதும் இரு" என்று ஆக்ஞாபித்தருளினுர். பெரும் ஜனக் கூட்டத்தின் மத்தியிலே திருப்பாணுழ்வார் எம்பெருமான் எதிரே நின்று நிஷ்டையி லிருந்தார். சட்டென்று ஒரு ஜோதி தோன்றிற்று. எல்லோருடைய கண்களும் கூச்சமடைந்து மூடிக்கொண்டன; ஜனங்கள் கண்களைத் திறந்து பார்த்தார்கள்; திருப்பாணுழ்வாரைப் பூமியிலே காணவில்லை. அவர் இருபது வயதா யிருந்தபொழுது இயற்றியதும் அமலனுதிப்பிரான் என்று ஆரம்பிக்கின்றதுமான பத்துப் பாடல்களை வைத்துவிட்டுப் போயிருக்கின்றுர். இந்தத் திருப்பாணுழ்வாரை மறந்துவிடாதீர்கள்.

ஸ்ரீ வேங்கடேச நாதனுடைய ஹிருதயத்தைக் குறும்பறுத்த நம்பி யடைந்த விதம் உங்களுக்குத் தெரியாதா? இந்தக் குறும்பறுத்த நம்பிக்குப் பீமன் என்று ஒரு பெயர் உண்டு; இவர் ஜாதியிலே குயவன்; திருப்பதிக்குச் சிறிது தூரத்திலேயுள்ள ஒரு கிராமத்திலே வசித்து வந்தார். அவரும் அவருடைய மனைவியரும் ஸ்ரீ வேங்கடேச நாதரிடத்திலே பரம பக்தி செலுத்துபவர்கள்; இவர்கள் ஏழை ஜனங்களாகையினாலே தங்களுடைய களிமண் விக்கிரகத்தின் முன்னே மிகுந்த பக்தி விநயத்துடனே களிமண் தாமரைப் புஷ்பங்களை வைத்துப் பூஜிப்பார்கள். இப்பொழுது எம்பெருமானுக்கு மிகவும் வேண்டியவனென்று தானே நினைத்துக்கொண்ட தொண்டமான் அரசன் ஒருவன் இருந்தான்; அவன் சுத்தப்பொன்னாலாய தாமரைப் புஷ்பங்களினால் தினந்தோறும் பூஜிக்கத் தவறுகிறதில்லை; ஒருநாள் இவனுடைய பொற்றாமரைகள் கீழே தள்ளப்பட்டு, மண் தாமரைகள் அவ்விடத்திலே வைக்கப்பட் டிருந்ததைக் கண்டு அவன் பிரமிப் படைந்தான். அதுவும் தினந்தோறும் இப்படியே நடந்துகொண்டு வந்தது; 'அரசனை இவ்விதம் அவமானப் படுத்துகின்ற குற்றவாளியைக் கண்டு பிடிக்கவேண்டும்' என்று அதிக ஜாக்கிரதையாகக் காவல் வைத்திருந்தபொழுதிலும் இப்படி நடந்துகொண்டு வந்தது. அநேக நாட்களாகியும் அவ்வரசனால் இது கண்டு பிடிக்க முடியவில்லை; பின்னர், 'ஸ்ரீ வேங்கடேச நாதரிடத்திலே பிரத்யேக பக்தி செலுத்துகிறவர்கள் எவரேனும் இருக்கிறார்களா?' என்று ஆராயத் தொடங்கினான்;

நெடுநாட்கள் கழித்து, குயவனையும் அவன் மனைவியையும் கண்டுபிடித்தான். அவர்கள் ஸ்ரீவேங்கடேச நாதனுடைய மண் விக்கிரகங்களின் முன்னே தங்கள் மண் தாமரைகளை வைப்பதைக் கண்டு, அவர்களுடைய பக்தியைப் பார்த்து அதிசயித்து, அப்படியே பிரமித்து நின்றான்; உடனே அந்தக் குயவனாகிய குறும்பறுத்த நம்பியைத்தனக்குக்குரு வாகக்கொண்டு, அவரிடத்திலே சரண் புகுந்துகொண்டான். இத்தகைய குறும்பறுத்த நம்பியை மறந்துவிடாதீர்கள்

வரதராஜப் பெருமானுடைய ஹிருதயத்திலே பதிந்துகொண் டிருக்கும் காஞ்சிபூர்ணரைப் பாருங்கள். காஞ்சிபூர்ணர் பகவானுக்குப் பிரத்தியேக பக்தர். எம்பெருமான் திருக்கச்சி நம்பியாருடன் இரவில் வெகுநேரம் வரையில் சம்பாஷித்துக்கொண் டிருப்பார்; எம்பெருமான் திருக்கச்சி நம்பியாருடைய சிஷ்யர்களுள் ஒருவர்போல வேஷம் பூண்டு அவருடைய பாதரக்ஷைகளை யெடுத்துக் கொண்டுவந்து கொடுப்பார்; கோவில் வேலைக்காரனைப் போல வந்து, நம்பியாருக்கு விளக்குப் பிடித்துக்கொண்டு வழி காட்டி வீட்டுவரையில் கொண்டுபோய் விட்டு வருவார். எம்பெருமான் செய்கின்ற இப் பணிவிடைகளை யெல்லாம் நம்பியார் அறிய அறிய, அவருக்கு வெட்கமும் விசனமும் அதிகரித்தன. ஆகையால், ஒருநாள் அவர் "சீக்கிரத்திலே எம்பெருமான் என்னை மெய் மறந்து விடும்படிக்கும், நான் இவருக்குக் கடமைப்பட் டுள்ளதை மறந்துவிடும் படிக்கும் செய்துவிடுவார். நான் திருப்பதிக்குச் சென்று

விடுகிறேன்; அங்கே இவ்வளவு கஷ்ட மிராது', என்று தானே யோசித்துக்கொண்டு அப்படியே தீர்மானித்தார். ஆனால், சிறிது நேரத்துக்குள்ளே ஸ்ரீ வேங்கடேசப் பெருமான் எதிரே வந்து நின்றதைக் கண்டு ஆச்சர்ய முற்றார்; அப்பெருமான் நம்பியாரைப் பார்த்து, "நீ நெடுங் காலம் இங்கேயே தங்கிவிட்டாய்; காஞ்சீபுரத்துக்குச் சென்று எனக்குச் சாமரம் வீசுவாய்! அங்கே நாம் உற்பத்தியானது அக்கினியி லிருந் தாகையினாலே, வெப்பம் சகிக்க முடிய வில்லை" என்று கூறினார். நம்பியார் விசனத்துடனே காஞ்சீபுரத்துக்குத் திருப்பிப் புறப்பட்டுச் சிறிது தூரம் வருவதற்குள்ளே, எம்பெருமான் அவரைச் சந்தித்து, "நீ நம்மிட மிருந்து ஓடிவிடப் பிரியப்படுகிறாயா?" என்று கேட்டார். "ஸ்வாமி! இல்லை. தங்களுடைய அன்பு எனக்கு வெட்கத்தை யுண்டுபண்ணுகிறது" என்றார் திருக்கச்சி நம்பியார். "சீக்கிரத்திலே நீ அதை ஜயித்துவிடுவாய்" என்றார் எம்பெருமான். எம்பெருமான் ஜகன்மாதாவுடனே கை கோர்த்து க்ஷேத்திரப்பிரகாரங்களிலே உலாவி வரும் பொழுது, திருக்கச்சி நம்பியாருடைய கண்களுக்கு மாத்திரம் அது தெரியும். இத்தகைய பெருமை வாய்ந்த திருக்கச்சி நம்பியாரைப் பாருங்கள். திருப்பாணாழ்வார் அருகிலே யில்லாவிட்டால் ஸ்ரீரங்கநாதப் பெருமானுக்கு ஊண் இறங்குகிறதில்லை, உறக்கம் வருகிறதில்லை; அப்படி மயக்கி வைத்திருக்கிறார் ரங்கநாதப்பெருமானை திருப்பாணாழ்வார். இன்னும் அதோ அங்கு மிகுந்த விநயத்துடனே நிற்கின்ற ரங்கநாயகரைக் கவனியுங்கள். அவரைப் பார்த்தமாத்திரத்

திலே, அவர் திருப்பாணாழ்வாருக்கு மிகவும் அருமையா யுள்ளவரென்று எவரேனும் கனவிலேனும் கருதுவார்களா?''

இப்படி யெல்லாம் ஸ்ரீ யாமுனாசார்யர் கூறிவிட்டு, மிகுந்த குழப்பத்துடன் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டிருந்த ரங்கநாயகரைப் பார்த்து, "அருமைப் புதல்வா! உனது நித்திய வாழ்க்கையின் நம்பிக்கைகளை எந்தப் பரம வஸ்துவினிடத்திலே நிலைநிறுத்தி யிருக்கிறாயோ, அந்தப் பரம வஸ்துவினிடத்திலே நான் சரண்புகுந்து கொண்டேன்'' என்றார். வர ரங்கர் தமது உணர்ச்சிகளை யடக்கிக்கொண்டு சும்மா இருக்க முடியவில்லை; ஆனால், அவர் தமது பிதாவாகிய ஸ்ரீ ஆளவந்தாருடைய பாதங்களிலே விழுந்து, "பிரபு! ஸ்ரீ வைகுண்டத்திலே சென்று அடியார்கள் கூட்டத்திலே சேர்ந்து ஆநந்தத்தில் லயித்து விடத் தீர்மானித்து விட்டீர்களோ?'' என்று கேட்டுத் தேம்பித் தேம்பி யழுதார். அதற்கு ஸ்ரீ ஆளவந்தார் "எனது புத்திரா! இல்லை, இல்லை, விசனப்படாதே; 'ஒருவருடைய அதிர்ஷ்டத்தைப் பார்த்து நீ பொறாமைப்பட்டாய்' என்று எவரும் கூறாதிருக்கட்டும். நீங்கள் எல்லோரும் எனது வார்த்தைகளைக் கவனியுங்கள். மனிதன் ஈச்வரனிடத்திலே சரணாகதி யடைந்த பின்னர் தன்னுடைய பிற்காலத்தைப்பற்றி விசனப்படுவானானால், அவன் தப்பிதம் செய்தவனாகிறான்; அவன் எவ்விதத்திலாவது தன்னுடைய சரீரத்தைப்பற்றிக் கவலைப்பட வேண்டியவன் என்று நினைத்துக்கொண்டானானால், அவன் தப்பிதம்

செய்தவனுகிறுன்; அவன் ஈஸ்வர னிடத்திலே சாணு கதி யடைந்தது போலியேயாகும். ஏனெனில், அவனுக்குத் தன்னுடைய பிற்கால விஷயத்திலே ஈஸ்வரனை நம்புகிற தில்லை. அவன் நாஸ்திக வாதியைவிட எவ்விதத்திலும் உயர்ந்தவனல்லன். அவன் தனது பிற்காலத்தைப்பற்றித் திரிகரணத்தில் எக் காணத்தின் மூலமாகவேனும் கவலைப் படலாகாது. "ஈசா! உன்னை நமஸ்கரிக்கின்றேன்'' என்று சொல்லாதவர்களுக்குக்கூட ஸ்ரீ வைகுண்டத்திலே நித்திய வாழ்க்கை யளிக்கும்படியான அவ்வளவு பரம காருண்ய சொரூபி நம்பெருமான். ஜீவனும் சகல பாரங்களையும் ஈசன்மீது போட்டுவிட்டு, ஈச னிடத்தில் சரணுகதி யடைந்துவிடுவதே நியாயம். ஆனல், மனிதன் தனது சொந்த முயற்சிகளினலே மோக்ஷமடைய முயற்சிப்பானுல், அது பிரகிருதி நியதிகளுக்கு விரோதமாம். ஆனல், மனிதன் எல்லாவற்றுக்கும் ஈஸ்வரனை எதிர்பார்த்துக் கொண்டு சோம்பேறியாகவும் காலம் கழித்தல் கூடாது. இப்படிக் காலம் கழிப்பானுல் அவன் ஈஸ்வர பக்தனுவதற்குள்ள யோக்கியதை யடையமாட்டான். அப்பொழுது எஜமானன், தாசன் என்ற சம்பந்தம் இருத்தல் முடியாது" என்று கூறினர்.

"குருமூர்த்தி! அப்படியானல் இங்கு எங்களுக்கு ஆதாவு என்ன?"

"நீங்கள் யோக்கியதை யில்லாத என்னிடத்திலே சான் புகுந்து, உங்கள் நம்பிக்கைகளை என்னிடத்திலே

வைப்பீர்களேயானால், அது எனக்குக் கெடுதலாக முடியும்; நீங்கள் அப்படிச் செய்யமாட்டீர்களென்று நம்புகின்றேன். 'ஈஸ்வர ஸேவையில் தங்களைத் தாங்களே சமர்ப்பித்துக் கொண்டிருப்பவர்களே எனது கடவுள், அவர்கள் எனது ஆழ்ந்த ஹ்ருதயத்திலே பிரதிஷ்டை செய்யப்பட்டிருக் கிறார்கள்' என்று ஸ்ரீ சடகோபர் சொன்ன வாக்கியத்தி லுள்ள உண்மையை உங்களுக்கு வழிகாட்டும் தீபமாக வைத்துக்கொள்ளுங்கள்'' என்றார் ஸ்ரீ யாமுநாசார்யர்.

சிஷ்யர்களுக்குக் கண்களிலே கண்ணீர் ததும்பிவிட் டது; அவர்களுடைய ஹிருதயங்கள் விசனம் நிறைந்து துடித்துக்கொண்டிருந்தன. ஸ்ரீ யாமுநாசார்யர் இதைப் பார்த்து, "உபயோகமற்ற எனக்காக வருத்தப்படாதீர்கள்; இன்னும் ஒன்று கூறுகின்றேன்: ஸ்ரீ வைகுண்டத்திலே மூன்று மாளிகைகளுக்கு—பரிசுத்த மந்திரம், இறுதி வார்த் தை, கருணைகள்—ஆநந்தகாமான சொந்தக்காரர்களா யிருக்க நீங்கள் பாக்கியம் பெற்றவர்க ளல்லவா?''

குறிப்பு:—மூன்றுமண்டபங்களாவன்:—போக மண்ட பம், புஷ்ப மண்டபம், தியாக மண்டபம். போக மண்டபம்: எம்பெருமான் சயனம் செய்கின்ற ஸ்ரீரங்கமாகும்; புஷ்ப மண்டபம்: புஷ்பத் தோட்டங்கள் யதேஷ்டமாக இருக் கின்ற காரணத்தினாலே திருப்பதியாகும்; தியாகமண்டபம்: ஸ்ரீ வரதராஜப் பெருமாள் வசிக்கின்ற காஞ்சீபுரமாகும். இம் மூன்றும் முறையே யோகார்த்தத்தில் அஷ்டாக்ஷரி

மந்திரம், சரம ஸ்லோகம், துவயம் என்பவற்றோடு சம் பந்தப்பட்டிருக்கின்றன.

“நித்திய மார்க்கத்திலே சென்றுள்ள திருப்பாணாழ் வாரும் லக்ஷக்கணக்கான மற்றவர்களும்நான் சொல்லுகிறது உண்மை யென்பதற்குச் சாக்ஷிகளல்லவா?” என்று ஸ்ரீயாமு நாசார்யர் சொல்ல, ரங்கநாயகர் சிறிது துணிந்து “ஸ்வாமி! தாங்கள் இப் பூமியிலே இருக்கிறதில்லை யென்று நிச்சயி த்துவிட்டபொழுது எங்களைப் போன்ற அற்பப் புழுக்கள் தங்களைவிட்டுப் பிரிந்திருக்க முடியாமல், துணிந்து இச் சரீரத்தை உதறி யெறிந்துவிட்டுத் தங்களுடன் பின்னே வந்துவிட்டாலென்ன?” என்று கேட்டார். ஸ்ரீ யாமுநாசார் யர் இவ் வார்த்தைகளைக் கேளாதவர்போல மௌனமா யிருந்தார்.

மற்ற இரண்டு சிஷ்யர்களும் குரு மௌனமாயிருந்ததி னாலே தாங்களும் கூட வருவது அவருக்குச் சம்மதமே யென்று நினைத்துக்கொண்டு, அவரிடத்தினின்றும் விடை பெற்றுப் போய்விட்டார்கள். ஆனால், சீக்கிரத்திலே இவர்க ளும் தங்கள் சரீரத்தை விட்டுவிடப் போகிறார்களென்ற சங் கதி எங்கும் பரவி, ஸ்ரீ யாமுநாசார்யருடைய காதுக்கும் எட்டிற்று; க்ஷேத்திரத்திலே எம்பெருமான் அர்ச்சகர் மூலமாக அம் மூன்று பெயர்களையும் வரவழைக்கும்படி செய்து, “என்னிடத்திலே உங்களுக்குக் கொஞ்சமேனும் மதிப்புண்டானால், ஸ்ரீ யாமுநாசார்யர் இவ் வுலகினின்றும் போய்விடுகிற பக்ஷத்தில் நீங்கள் முட்டாள்தனமாக

யோசித்திருக்கிற செய்கையைச் செய்தல் கூடாது'' என்று ஆக்ஞை யிட்டார். இன்னும் வர ரங்கரை நோக்கி, "ஜாக்கிரதை! இவர்களுக்கு நீ தான் ஜவாப்தாரி'' என்று கூறினர். வர ரங்கர், "கேட்பதே கீழ்ப்படிவது'' என்று சொல்லிவிட்டு, தமது பிதாவிடம் சென்று சங்கதியைச் சொன்னர்; ஸ்ரீ யாமுநாசார்யர் பெருமூச்சுவிட்டு, "இவர்கள் என்னிடத்திலே எவ்வளவு பொறுமை யுள்ளவர்களா யிருக்கின்றர்கள்? நான் அடைய விரும்புகின்ற உபசாந்தியை இவர்களுக்கு அளிப்பதற்கு எனக்கு மனம் இல்லைபோலும்!'' என்று கூறினர்.

பின்னர் அவர் உரக்கக் கூறியதாவது:—"இன்னொரு முறை கூறுகின்றேன். இது தான் கடைசித்தடவை; இதை நன்றாக ஞாபகத்தில் பதிந்து கொள்ளுங்கள். நான் இப்பூவுலகினின்றும் போய்விட்டால், நீங்கள் முட்டாள் தனமாக எக்கார்யமும் செய்துவிடக் கூடாதென்று நான் வற்புறுத்துகிறேன். நீங்கள் பிடிவாதமா யிருப்பீர்களாயின், என் முன்னே சென்றுள்ள ஈஶ்வர பக்தர்களாகிய ஸ்ரீ புண்டரீகாக்ஷர், ஸ்ரீராமமிச்ரர் முதலிய மஹான்களுக்கு அபராதம் செய்தவர்களாவீர்கள்.'' சிஷ்யர்கள் இதைக்கேட்டு பயந்து நடுங்கினர்கள்; ஸ்ரீ ஆளவந்தாருடைய வார்த்தைகள் அவருடைய மனத்திலே ஆழ்ந்து பதிந்துகொண்டன. ஸ்ரீ ஆளவந்தார் இன்னும் கூறியதாவது:— ஈஶ்வரனுக்கும், ஈஶ்வர பக்தர்களுக்கும் எவ்வித வித்தியாசமும் பாராட்டாதீர்கள். எம்பெருமானுடைய திருவடிகளின் தீர்த்தத்தினல் நீங்கள்

புரோக்ஷித்துக் கொள்ளும்பொழுது, அவருடைய பாதார விந்தத்திலே பரமபத மெய்தியிருக்கின்ற ஆழ்வாராதி யர்களேயும் தியானித்து, உங்கள் மனத்தைப் பரிசுத்தம் பண்ணிக் கொள்ளுங்கள். இதரர்களுடைய மனத்தையும் நீங்கள் பரிசுத்தம் செய்யவேண்டி வந்தால், அதனு லுண் டாகும் லௌகிக நன்மை உங்களுடைய மனத்தை யொரு நிமிஷமேனும் அழுக்குப்படுத்தக் கூடாது. உங்களுடைய மனத்திலே எம்பெருமானேயும், எம்பெருமானுடைய அடி யார்களாகிய ஆழ்வாராதிகளேயும் எப்பொழுதும் தியானம் செய்துகொண்டே யிருங்கள்; எக்காலமும் ஈருண்மைகளே மனனம் பண்ணிக்கொண்டே யிருங்கள். அது அளிப்பவ னுக்கும், அடைபவனுக்கும் நல்லதேயாம். இன்னும், நீங் கள் இதரர்களுடனும், ஆத்மீகாபி விருத்தியிலே பல வித மான படிகளே யுடைத்தானவர்களுடனும் இருக்கும்படி நேரிடும்பொழுது, நீங்கள் உங்கள் மனங்களே உலக நன் மைகளினுலே அழுக்குப் படுத்தி, உள்ளேயுள்ள மரண மற்ற ஜீவனே மூடியிருக்கும் ஸ்தூலக் கூண்டை மாத்திரம் கவனித்து, உங்களுடன் இருக்கின்ற மற்ற ஈஃவர னடி யார்களே அலக்ஷியம் செய்துவிடுவீர்களானுல், நீங்கள் எண்ணற்ற சிஷ்ய கோடிகளே யுடைத்தாகி, ஒரு பெரிய ஆசார்ய ராகலாம்; ஆனுல், உங்களுடைய சிஷ்யர்களுக்கு உங்களுடைய திருவடித் தீர்த்தத்தினுலே எவ்வித நன் மையு முண்டாக மாட்டாது. இன்னெரு விஷயம்: இது தான் மிகவும் முக்கியமானது; நான் கடைசியாகக் கூறு வது. உங்களிட முள்ள எல்லாவற்றையும் எம்பெருமா

னுடைய பாதார விந்தங்களிலே ஒப்புவித்துவிடுங்கள்; இதை மாத்திரம் எப்பொழுதும் மறக்கவேண்டாம்; ஒரு சிறிய புஷ்பமேயாயினும் அதையும் ஈஸ்வரனுடைய பாத மலர்களிலே போட்டுவிடுங்கள். உங்களுடைய குருவினிடத்திலே அபய மடைந்துவிடுங்கள்; முதற்படியை கடைசிப்படியாக நினைத்துப் புறப்படுங்கள். ஈஸ்வர பக்தியிலே மூன்று படிகளுள்ளன:—முதலாவது, எம்பெருமானிடத்தில் பக்தி; இரண்டாவது, எம்பெருமானுடைய தாசர்களிடத்தில் பக்தி; மூன்றுவது, தாசாதி தாசர்களிடத்தில் பக்தி. மூன்றுவது படி ஏறிவிட்டால், முக்தி யெய்துவது நிச்சயம். இவையே மோக்ஷத்துக்குத் தவறுதலற்ற மார்க்கங்களாம். ஆகையால் நீங்கள் எம்பெருமானிடத்து மாத்திரமன்று, எம்பெருமானுடைய அடியார்களிடத்தும் பக்தி செலுத்துதல் வேண்டும். பின்னர், அவர் வரரங்கரைக் கூப்பிட்டு, கோஷ்டி பூர்ணரையும் மகா பூர்ணரையும் அவர் வசம் ஒப்புவித்து, "இவர்களைப் பார்த்துக்கொள்ள வேண்டியது உன்னுடைய கடமை" என்றார். வரரங்கர் குருவினுடைய ஆக்ஞையைச் சிரமேற்கொண்டு, கோஷ்டி பூர்ணரையும் மகா பூர்ணரையும் நோக்கி, "நமது குருமூர்த்தி நம்மைவிட்டுப் பிரியும்பொழுது நீங்கள் உங்களுடைய முட்டாள்தனமான செய்கையிலே பிடிவாதமாயிருந்தால், நீங்கள் நித்திய முக்தர்களுடைய சங்கத்திலே சேர்வதற்குச் சந்தர்ப்பமே வாய்க்காமல் நீக்கப்பட்டு விடுவீர்கள்" என்றார். வரரங்கருடைய இவ் வார்த்தைகளைக் கேட்டவுடனே ஆளவந்தாருடைய ஹிருதயத்திலே ஆநந்

தம் பொங்கிற்று; அவர் "இந்த வரரங்கருடைய பிரதிமை யானது உங்களுடைய ஹிருதயங்களிலே ஆழ்ந்து பதிந்து கொள்ளட்டும். அவரிடத்திலே சரணாகதி யடைந்து விடுங்கள்; இதுவே மோக்ஷ மடைதற்கு மார்க்கம்" என்றார். அவ் விருவரும் "அப்படியே செய்கிறோம்" எனவே, ஸ்ரீ ஆளவந்தார் மனப்பூர்வமாக அவர்களுக்கு ஆசி கூறினார்; அந்தநிமிஷம் முதல் வரரங்கரை அவ் விருவரும் தங்கட்குக் குருவாகவும், தங்கட்கு ஈஶ்வரனாகவும் பாவிக்கத் தலைப்பட்டார்கள்.

பின்னர், யாமுநாசார்யருடைய வியாதி கொஞ்சம் சொஸ்தமாகவே, அவர் கோவிலுக்குச் சென்று, சிரம் தாழ்த்தி இருகரங்களையும் ஸ்ரீ ரங்கநாதரின் முன்னே கூப்பிக் கொண்டு நிற்க, அவருடைய மனத்திலே நிகழ்ந்துகொண்டிருந்ததை ரங்கநாதர் அறிந்து, வர ரங்கர் மூலமாக மறுமொழி யளித்ததுபோல, வர ரங்கர் பிரபந்தத்திலே யுள்ளதும், "சூழ்விசும்பு" என்று ஆரம்பிக்கின்றதுமான 99-வது பாடலைப் பாடினார். இப் பாடல் சுப சந்தர்ப்பங்களிலே, அதுவும் க்ஷேத்திரத்திலே பாடப்படும் பாடலன்று. இப் பாடல் எம்பெருமானுடைய திருவடிகளை யடையச் செல்லும் மார்க்கத்திலேயுள்ள பல மண்டலங்களையும் அங்கே, வைகுண்டத்திலே அவர்கள் அநுபவிக்கும் ஆநந்தத்தையும் பற்றி விவரிக்கின்றது. மகாத்மா, அல்லது பரமபக்தர் எவரேனும் பரமபதம் அடைந்துவிட்டால், அச் சந்தர்ப்பத்திலே பாடப்படும் பாடல் இது. இங்கு இப்பொழுது சீக்கிரத்திலே

யாமுநாசார்யர் பரமபத மடையப் போகிறு ரென்பதைக் குறிப்பிடுவதற்கே ஸ்ரீரங்கநாதப் பெருமாள் வர ரங்கரை அப் பாடலைப் பாடும்படி செய்தார்போலும்! என்ன இது? க்ஷேத்திரத்திலே, ஈச்வர சந்நிதானத்திலே, இன்பம் அடையவேண்டிய இடத்திலே இழவைக் குறிக்கும் பாடலைப் பாடலாமா? அங்கிருந்த எல்லோரும் ஆச்சர்யத் துடனே ஒருவரை யொருவர் பார்த்தார்கள்; மூக்கிலே கையை வைத்து விழித்தார்கள்; இப்படி யிவர்கள் பிரமித் திருக்கும்பொழுது, ஸ்ரீ ரங்கநாதருடைய சிரசின்மேலே போட்டிருந்த புஷ்பமாலை யொன்று அச் சிரசினின்றும் நழுவிக் கீழே தரையில் விழுந்தது. அர்ச்சகர் அதை யெடுத்து மறுபடியும் ஸ்ரீரங்கநாத மூர்த்தியினுடைய சிரசிலே வைக்கப் போனுர்; ஆனுல், வர ரங்கர் ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து, அதை யெடுத்து யாமுநாசார்யருடைய கழுத்திலே போட்டுவிட்டு, அவரை நோக்கி "ஸ்வாமி! தங்களுக்கு ஈச்வரனுடைய அநுக்கிரகம் பரிபூர்ணமா யிருக்கிறது!" என்றுர். யாமுநாசார்யர் பின்னர் அந்த க்ஷேத்திரத்திலே யிருந்தவர்களிடம் விடை பெற்றுக்கொண்டு, தமது மடத்துக்குத் திரும்பி வந்து, அங்கிருந்த ஒவ்வொருவரையும் தம் முன்னே போஜனம் உண்ணும்படி செய்தார்; போஜனம் அருந்திவிட்டு, எல்லோரும் ஒன்றுக உட்கார்ந்து சம்பாஷிக்க ஆரம்பித்தபொழுது, யாமுநாசார்யர் அவர்கள் எல்லோர் முன்னும் சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்கரித்து, "நான் தெரிந்தும் தெரியாமலும் உங்களில் எவருக்

கேனும் ஒரு குற்றமாவது செய்திருந்தால், அக்குற்றத்தை தயவு செய்து மன்னிக்குமாறு கேட்டுக்கொள்ளுகிறேன்'' என்றார். இதைக் கண்டவர்கள் எல்லோர் கண்களிலும் நீர் ததும்பிவிட்டது; வரரங்கருக்குத் துக்கம் பொறுக்க முடியவில்லை; ஹிருதயம் உடைந்துவிட்டது; அன்பு என்பையுருக்கிவிட்டது; அனைவருக்கும் கண்ணீர் ஆறாக ஓடிற்று; வரரங்கர் அத்தியந்த அநுதாபத்தோடும் அன்புடனும், "ஸ்வாமி! எங்களை அநாதைகளுக்கு ஆளாக்கி, அடியோடு அழித்துவிட விரும்பிவிட்டீர்களா? நீங்களா எங்கள் முன்னே பணிந்து வீழ்வது! எங்கட்கு நீங்களா குற்றம் செய்தவர்கள்! பரிபூர்ணத்துவமே தங்களுடைய லக்ஷணமாயிருக்க, தங்களால் குற்றமும் செய்ய முடியுமோ? இங்கும், இனிமேலும் எங்களுடைய லக்ஷியமும் நீங்களே; எங்களுடைய ஈஸ்வரனும் நீங்களே; நாங்கள் வைத்திருக்கும் நம்பிக்கையெல்லாம் நீங்களே'' என்றார்.

ஆளவந்தார் இப்பொழுது வியாதியினின்றும் கொஞ்சம் சொஸ்தமடைந்து, முன்போலச் சிஷ்யர்களுக்கு போதித்துக்கொண்டிருந்தார். இச்சமயத்திலேதான் ஸ்ரீ ராமாநுஜர் யாதவப்பிரகாசருடனே அபிப்பிராய பேதத்தினால் பெரும் வாதங்கள் செய்து, அவரிடத்திலிருந்து பிரிந்துவிட்டாரென்று சமாச்சாரம் வந்தது; அப்பொழுதுதான் அவர் ஸ்தோத்திர ரத்நம் என்ற நூலையியற்றி மகாபூர்ணர் வசம் கொடுத்து, மகா பூர்ணரை ராமாநுஜரிடம் அனுப்பி வைத்தார்.

சிறிது காலத்துக்குப் பின்னர் ஆளவந்தார் மறுபடியும் வியாதியாய் விழவே, அவருடைய சிஷ்யர்கள் மேன்மேலும் வருந்தத் தொடங்கினார்கள்; ஆளவந்தாருக்கு நாளுக்குநாள் பலஹீனம் அதிகரித்துக்கொண்டு வந்தது; இதனோடுகூட, இவ் வாழ்க்கைச் சுமையை எங்கே போட்டுவிடலாமென்ற எண்ணமும் அதிகரித்துக்கொண்டே வந்தது; இன்னும் 'இறைவனடி சேர்ந்து, இறப்புப் பிறப்பு அற்று இன்பாநுபூதி யெய்தும் நாள் என்னாளோ?' என்ற ஏக்கமும் அதிகரித்துக்கொண்டே வந்தது. இதை யெல்லாம் சிஷ்யர்கள் கவனித்தார்கள்; "ஆ! ஆ! நமது குரு என்று, எந்த நிமிஷத்திலே இவ்வுலகினின்றும் நீங்கி விடுவாரோ? எம்பெருமானுடைய சித்தம் எப்படியோ?" என்று ஒருவரோடொருவர் வாடிய முகங்களுடனும், அழுத கண்களுடனும் சொல்லிக்கொண்டார்கள். யாமுநாசார்யரே எம்பெருமான் எப்பொழுது தம்மைக் கூப்பிட்டுக்கொண்டு விடுவாரோ? என்று அடிக்கடி சந்தேகப்பட்டுக்கொண் டிருந்தார்; தாம் இப்பூமியிலிருந்து போவதற்கு முன்னே, ஸ்ரீ ராமாநுஜரைப் பார்க்கவேண்டு மென்னும் ஆசை யொன்று அவரைப் பலமாகப் பீடித்திருந்தது; ஆனால், அவர் 'ஸ்ரீ ராமாநுஜரை பார்க்க முடியுமா? என்ற விஷயத்தில் பெருஞ் சந்தேகங்களையுடையவராய்' தமது பிரதான சிஷ்யர்களுக்குப் பிரத்தியேகமான உபதேசங்கள் சில செய்து, தாம் இராமாநுஜரைப் பார்க்க முடியாது போய்விடும் பக்ஷத்தில் ஜாக்கிரதையாக ராமாநுஜருக் களிக்கவேண்டு மென்று இவ் வுபதேசங்களை ஆக்ஞாபித்தார்.

"பிற்கால ஆசார்யர் அவரே யென்பதில் சந்தேகமில்லை; நீங்கள் அவரைத் தேடிக்கொண்டு, அவர் செய்யப்போகின்ற பெரிய வேலைக்கு அவரைப் பரிபூர்ணராக்கவேண்டும்" என்றார் ஆளவந்தார்.

ஒரு நேர்த்தியான தினம்; அத் தினம் மிக அழகியதாயிருந்தது; ஆகாயம் தெளிவாயிருந்தது; ஆதித்தன் தனது வெப்பத்தை யடக்கியே கிரணங்களை வீசினான்; அன்று சாதுக்களுடைய மனம் பூரித்திருந்தது; பாபிகள் கவலைகொண்டவர்களாயிருந்தார்கள்; தென்றற்காற்று 'ஜிலுஜிலு' என்று வீசிக்கொண்டிருந்தது. அன்று வைசாக நக்ஷத்திரம் கூடிய சுபதினம். ஆளவந்தார், க்ஷேத்திரத்துக்குச் சென்று ஸ்ரீரங்கநாதமூர்த்தியினுடைய சந்நிதானத்திலே நின்றார்; அம் மூர்த்தத்தின் அழகை உச்சந்தலை முதல் உள்ளங்கால் வரையில் திரும்பித் திரும்பிப் பார்த்து ஆநந்தித்தார்; அவருடைய கண்கள் அப்படியே அம்மூர்த்தியினிடத்து ஏகாக்கிரப்பட்டு நின்றன; அப்படி யிப்படி அசையவில்லை; ஆடவில்லை. பின்னர், ஆளவந்தார் பரந்தாமனுடைய பாதாரவிந்தத்தினடியிலே எழுந்தருளி யிருக்கும் மகா பக்தரைப் பார்க்க ஆரம்பித்தார்; அவருக்கு, வைகுண்டம்கூட வேண்டாமென்றும், பரந்தாமனுடைய பாத மலரடி கிடைத்தாற் போதுமென்றும் கூறுவதுபோய், கண்கள் அம் மகா பக்தரையே பார்த்து நின்றன. சற்று நேரம், இப்படி யிருந்துவிட்டு, ஆளவந்தார் தமது மடத்துக்குத் திரும்பிச் சென்றார்; தமது சிஷ்யர்களை யெல்லாம் தம் முன்னே யுட்கார்ந்து

பந்தி போஜனம் செய்யும்படி சொன்னார்; தாம் அழைப்ப தாகக் கூறி, அவ்வூர் ஜனங்களையெல்லாம் அங்கே வரும்படி அழைக்கவேண்டு மென்று ஆக்ஞாபித்தார். எல்லோரும் கூட்டமாக வந்து கூடின பிறகு, அவர் மறுபடியும் வெகு விநயமுடைவராய், "நான் உங்களில் எவருக்கேனும், ஏதே னும்குற்றம் செய்திருந்தால், நீங்கள் மன்னித்து விடுங்கள்" என்று கைகூப்பிக் கேட்டுக் கொண்டார். எல்லோரும் அழுத கண்ணும் சிந்திய மூக்குமாய், தொண்டை கம்மிய குர லுடன், "தாங்கள் குற்றம் செய்தீர்க ளென்பது ஸ்ரீரங்க நாதர் குற்றம் செய்தா ரென்பதை யொக்கும்" என்று ஏகோபித்து ஓரே குரலாகக் கூறினார்கள். ஆளவந்தார் பின்னர் அங்குக் கூடிய அவ்வூர் ஜனங்களை நோக்கி, "எனது ஞான புத்திரர்களாகிய இக் குழந்தைகளை (தமது சிஷ்யர் களை) உங்கள் வசம் ஒப்புவிக்கிறேன்; இவர்களுக்கு எத் தீங்கும் வாராமல் பார்த்துக்கொள்ள வேண்டியது உங்கள் கடமை; இது விஷயத்தில் நான் உங்களை மிக மிக வேண்டிக் கொள்ளுகிறேன்" என்று கூறிவிட்டு, கோவில் அதிகாரி களை நோக்கி "உபாசனை மார்க்க முறைகள் பலவற்றையும் ஒன்றும் விடாமல் ஒழுங்காக ஆசரிக்கும்படி நான் உங்க ளைப் பன்முறையும் பணிந்து கேட்டுக் கொள்ளுகிறேன்; ஆசார்ய புருஷர்களையும், அவர்களுடைய சிஷ்யர்களையும், அதிதிகளையும் எப்பொழுதும் அன்புடனே உபசரியுங்கள்! இதுதான் நான் உங்களுடன் கடைசியாகப் பேசுவது!" என்றார்.

பிறகு, ஆளவந்தார் பத்மாசனத்திலே யமர்ந்து யோக நிஷ்டையிலே யுட்கார்ந்து ஆழ்வாராதிக ளிடத்திலே அபய மடைந்துவிட்டார். அவருடைய குருவாகிய ஸ்ரீ ராமமிச்ர ருடைய பரிசுத்த விக்கிரகமானது அவர் முன்னே கொண்டு வந்து வைக்கப்பட்டது; ஆளவந்தார் ஆநந்த பூரிதராய், தமது குரு ஸ்ரீராமமிச்ரருடைய அப் பாதரக்ஷைகளைத் தம் முன்னே வைத்துக்கொண்டு, அவற்றினிடத்துத் தம் மனத் தைச் செலுத்தினர். பின்னர் அவர் அப் பாதரக்ஷைகளைத் தமது சிரசின்மேல் வைத்துக்கொண்டு, அவற்றைத் தமது கண்களில் ஒத்திக்கொண்டார். சிஷ்யர்கள் அவரைச்சூழ்ந்து உட்கார்ந்துகொண்டு ப்ரஹ்மவல்லி, புருஷ சூக்தம், "சூழ்வி சும்பணி முகில்" என்று ஆரம்பிக்கும் பாடல் முதலியவற் றைப் பாராயணம் செய்ய, ஸ்ரீ ஆளவந்தாராகிய மஹான் தமது ஸ்தூல சரீரத்தைப் போட்டுவிட்டு, சுஷும்ந நாடி வழியாகபிரஹ்மரந்திரம்சென்று, அங்கிருந்து வைகுண்டப் பிராப்தி யடைந்து விட்டார்.

சுஷும்ந நாடி வழியாகப் பிரஹ்மரந்திரம் சென்று பரமபதம் அடையும் மார்க்கத்தைப் பற்றிப் பின் கூறப் படும் மேற்கோள்கள் வாசகர்களுக்கு உபயோககரமா யிருக்கும்:—

சாந்தோக்கி யோபநிஷத் VIII. 6. 5.

(1) ஹிருதயத்திலிருந்து நூற்றொரு நாடிகள் புறப் படுகின்றன; அவற்றுள் ஒன்று மண்டையின் உச்சிக்கு ஊடுருவிச் செல்கிறது; அதன் மூலமாக மேனோக்கிச்

சென்று, மனிதன் அமிருதத் தன்மையை அடைகின்றான்; மற்றவைகள் பிற வெவ்வேறு மார்க்கங்களிலே செல்வதற்கு உபயோகப்படுகின்றன.

யாக்ஞவல்கிய ஸ்மிருதி. III. 167.

(2) அங்நாடிகளுக்குள்ளே, ஒன்று மேலே யிருக்கிறது; அது சூர்ய கோளத்தின் மூலமாக ஊடுருவி, அப்பாலுள்ள பிரஹ்ம உலகம் செல்கின்றது; அம் மார்க்கமாக, ஜீவன் மிகமிகச் சிரேஷ்டமான லக்ஷியத்தை யடைகிறது.

சாந்தோக்கிய உபநிஷத். VIII. 6. 5.

(3) சத்தியஞான முடையவனுடைய ஆத்மா சிரசின் உச்சியிலுள்ள நூற்றொராவது நாடிமார்க்கமாகவேதான் போகிறது. புருஷோத்தமனைச் சந்தோஷிப்பிக்கும் தன்மையுள்ள, தெளிந்த, உத்கிருஷ்ட ஞானத்தின் மூலமாகவும், மார்க்கத்தின் ஞாபகத்தை யுபயோகப்படுத்திக் கொள்ளுதலினாலும்—அந்த ஞாபகமானது அந்த ஞானத்தின் ஒரு அம்சமேயாகும்—ஞானமுள்ளவனுடைய ஆத்மா ஹிருதய நிவாசியாகிய புருஷோத்தமனுடைய கிருபையைப் பெற்று அவனால் உபகரிக்கப்படுகிறது. இதனாலேதான் ஆத்மாவினுடைய வாசஸ்தானமாகிய ஹிருதயமானது பிரகாசம் அடைகிறது; அதன் முனையிலே ஒளி பெறுகிறது; இவ்விதமாகப் பரமாத்மாவினுடைய கிருபையினாலே ஜீவாத்மா வாசற்கதவு ஒளியளிக்கப் பெற்று, அந்த நாடியை அறிந்து கொள்ள வல்லதாகிறது......ஞானமுள்ளவனுடைய ஆத்மா

............சூர்யனுடைய கிரணங்களைப் பின்பற்றிச் சென்று, இவ்விதமாகச் சூர்ய மண்டலத்தை யடைகிறது; அவன் இச் சரீரத்தை விட்டுப் போகிறபொழுது, அவன் இந்தக் கிரணங்களின் மூலமாகத்தான் மேனேக்கிச் செல்லுகிறான்.''

[ஸ்ரீபாஷ்யம்: பக்கம் 738, 739. தீபோ என்பவரின் மொழி பெயர்ப்பு.]

முக்தி பெற்ற ஜீவன் பின்னர் செல்லும் மார்க்கத்தைப் பற்றித் தீபோ என்பவர் ஸ்ரீ பாஷ்யத்தை மொழிபெயர்த்துள்ள புத்தகத்திலே, பின் வருமாறு 744-வது முதல் 755-வது வரையிலுமுள்ள பக்கங்களிலே பின் வருமாறு கூறப்பட்டிருக்கிறது:—

இவ் வுலகிலிருந்து பரமபதம் அல்லது வைகுண்டத்துக்குச் செல்லும் மார்க்கம் அர்ச்சிராதி மார்க்கம், அல்லது தேவாயனம் எனப்படுகிறது. மோக்ஷமடைகின்ற மனிதன் தனது சரீரத்தை விட்டுவிட்டுப் போகிறபொழுது, ஜீவன் ஹிருதயத்திலிருந்து புறப்பட்டு, ஹிருதயத்தையும் சிரசையும் சேர்க்கின்ற நாடியாகிய சுஷும்னையின் மூலமாகச் சென்று, சிரசின் உச்சியிலேயுள்ள பிரஹ்மரந்திரம் போகிறது; அதை யுடைத்துக்கொண்டு அவன் சூர்யகிரணங்களின் மூலமாகச் சூர்யமண்டலம் செல்கிறான்; கடைசியாகச் சூர்யனிலே யுள்ள இருண்டப் பிரதேசம் ஒன்றின் மூலமாகப் பரமபதம் செல்கிறான்.

அவன் யோகத்தினாலே அடையப்படும் பரமோத்தம ஞானத்தினாலே பரமபதத்துக்குச் செல்லும் மார்க்கத்திலே வழி காட்டப்படுகின்றான். இவ்விதமாக ஜீவன் அர்ச்சிஸ், அஹஸ், பூர்வபக்ஷன, உத்தராயணன், சம்வத்ஸரன், ஆதித்தன், சந்திரன், வைத்யுதன், வருணன், இந்திரப்ரஜாபதி, அமானவன் என்னும் ஆதிவாஹிகர்களுடைய உதவியினாலே பரமபதம் செல்கின்றான். இங்குக் கூறப்பட்ட அர்ச்சிஸ்ஸும், மற்றவர்களும் தேவர்களுள் பிரதானிகளாயுள்ள சிலரேயாம்; சாதாரணமான பகல், இரவு, மாதம், வருஷம் முதலியவை அல்ல.

... ... ... ... ...

இப்பொழுது ஸ்ரீ ஆளவந்தார் பரமபத மடைந்தாரென்று சொன்னோம். ஆனால் இவருக்கு 'ஸ்ரீராமாநுஜரைப் பார்த்துவிட்டு உயிர் துறக்கவேண்டும்' என்னும் ஆசை பலமாயிருந்த தென்றும், அதனால் அவர் ஸ்தோத்திர ரத்நம் என்னும் சிறு நூல் ஒன்றை யியற்றி மகாபூர்ணர் கையிலே கொடுத்து ஸ்ரீ ராமாநுஜரை யழைத்துவரும்படி யனுப்பினாரென்றும் முன்னமேயே கூறினோம். அப்படியே மகா பூர்ணரும், ஸ்ரீ ராமாநுஜருமாக ஸ்ரீ யாமுநாசார்யரைப் பார்ப்பதற் கென்று புறப்படுகிறபொழுது, எம்பெருமான் "நான் இவர்களை ஒருவரை யொருவர் சந்திக்க விடமாட்டேன்; ஏனெனில், இவர்கள் இருவருமாகச் சேர்ந்து எல்லோரையும் இங்கு எனது உலகத்துக்கு அனுப்பிவிடுவார்கள்" என்று தமக்குள் தாமே சொல்லிக் கொண்டு, ஸ்ரீ யாமுநாசார்யரை அழைத்து அவரிடத்தி

லே, "பரமபதம் திரும்பிச் செல்வதற்கு உனக்கு அநுமதி யளிக்கின்றேன்; இன்றே நீ புறப்பட்டுவிடு" என்று கூறினா ரென்றும், ஆனால், ஸ்ரீ யாமுநாசார்யர் ஸ்ரீ ராமாநுஜரைப் பார்க்கவேண்டு மென்னும் ஆசையுடனே, "இன்னும் எட்டு நாட்கள் நான் இங்கிருக்க உத்தரவு கொடுக்கவேண்டும்; அதன் பின்னர் புறப்பட்டுவிடுகிறேன்" என்று பகவா னிடத்தில் விஞ்ஞாபித்துகொண்டா ரென்றும், பகவான் இதற்குச் சம்மதிக்க, ஸ்ரீ ஆளவந்தார் ஸ்ரீராமாநுஜருடைய வரவை எதிர் பார்த்துப் பார்த்துக் கண்கள் பூத்துப் போயின வென்றும், கடைசியாக அவர் ஹிருதயத்திலே விசனம் மிகுந்தவராய் இவ் வுலகினின்றும் நீங்கினா ரென்றும் ஒரு ஐதிகம் வழங்குகிறது.

ஸ்ரீ ஆளவந்தார் இவ் வுலகை விட்டு நீங்கும் தறு வாயில், பின் வரும் சம்பவம் நிகழ்ந்ததென்றும் கூறப்படு கின்றது:—

அவர் நீங்கும் தறுவாயில், அவருடைய கன்னங்களி லே கண்ணீர் வழிந்தோடுவதைச் சிஷ்யர்கள் கண்டு ஆச்சர் யப்பட்டார்கள். அவர்கள் ஸ்ரீ ஆளவந்தாரை நோக்கி, "எங்கள் குருமூர்த்தியின் ஹிருதயத்திலே விசன மளிக் கக் கூடியது யாது உள்ளது? எங்களுக்கு அறிவிக்கும்படி பிரார்த்திக்கின்றோம்" என்று கெஞ்சிக் கேட்டுக்கொள்ள, அவர், "அந்தோ, வரப்போகும் ஆசார்ய புருஷராகிய ஸ்ரீ ராமாநுஜரைச் சந்திக்காமல் நான் போகிறேனே; ஆக்ஷே பணைகளுக் கெல்லாம் சமாதானங் கூறி, சந்தேகங்கள்

எல்லாவற்றையும் நிவிருத்தி செய்து, எந்த விதத்திலும் அசைக்க முடியாதபடி வியாச சூத்திரங்களுக்கு ஒரு பாஷ்யம் எழுதி வைக்கவேண்டு மென்பது எனது விருப்பம். நான் இருவருடைய பெயர்களைக் கூற விரும்புகிறேன்:— ஒருவர் ஸ்ரீபராசரர் இவர் தமது விஷ்ணு புராணத்திலே இரண்டு உண்டு என்னும் கொள்கையை மிகவும் தெளிவாகவும், எவ்வித ஆக்ஷேபனையும் கூற முடியாதவண்ணமும் ஸ்தாபித்திருக்கிறார்; மற்றவர் ஸ்ரீ சடகோபர்; இவர் தமது பாடல்களிலே வேதாந்தத்தின் சாராம்சமாகிய பரிசுத்த அஷ்டாக்ஷரியின் ரகஸ்யங்களை வெளிப்படுத்தி யிருக்கின்றார்'' என்று மறுமொழி கூறினார்.

அவர் இக் கொள்கைகளைத் தமது விரல்களினால் எண்ணினார்; அவை மூடப்பட்டன. அவருடைய சிஷ்யர்கள், ''எல்லாம் வல்ல இறைவன் தமது பக்தருடைய ஹிருதய ஆசைகள் நிறைவேறாமல் அவரைத் தமது உலகுக்கு எடுத்துக்கொள்ளமாட்டார்'' என்று ஒரே கூச்சலாகக் கூறினார்கள். ஸ்ரீ ஆளவந்தார், ''நல்லது, நான் ஈஸ்வர சந்நிதானத்துக்கு இன்று திரும்பிச் சென்று, பாதமலர்ப் பரிசுத்த நீரினாலே என்னை நான் சுத்தீகரித்துக்கொள்வேன்'' என்று சொல்ல, சிஷ்யர்கள் ''ஸ்வாமி, குருநாதா! இங்குள்ளவர்களெல்லோரும் சிஷ்யர்கள் என்பதையும், பாதங்களைக் கழுவி அதைப் பரிசுத்த தீர்த்தம் என்று புரோக்ஷித்துக்கொள்ளும்படியான பெரியோர்கள் இங்கு எவரும் இல்லை யென்பதையும் குருமூர்த்தியாகிய தாங்கள் மறந்து

விட்டீர்கள்போலத் தோன்றுகிறதே" என்று உரைக்க, அவர் "இல்லை, அப்படியன்று; எனது பாட்டனார் தமது பரிசுத்த பாதங்களைத் தமது சிஷ்யராகிய ஸ்ரீ புண்டரீகாக்ஷரின் சிரசின்மீது வைத்தபொழுது, ஸ்ரீ புண்டரீகாக்ஷர் அதற்குப் பின் அவருடைய பரிசுத்த பாதரக்ஷைகளைப் பூஜிப்பதற்கு உத்தரவளிக்கவேண்டுமென்று கேட்டுக் கொண்டார்; அப்பாதரக்ஷைகள் எனக்கு அளிக்கப்பட்டிருக்கின்றன; அவையே எனது மதிப்புக்குரிய மிகவும் சிரேஷ்டமான வஸ்துவாயிருக்கின்றன; நான் அவற்றைக் கழுவிய பரிசுத்த தீர்த்தத்தை யெடுத்துக்கொள்வேன்" என்றார்.

நிற்க, அவருடைய கடைசி உபதேசமாவது:—

எவர்களுக்கு அவர்களுடைய குரு பிரபத்திக் கொள்கையிலே சரணாகதி புகுந்துகொள்ளும்படி போதித்தனரோ, அவர்கள் அவருக்கும் அவருடைய சந்ததியாருக்கும் தங்கள் சக்தியினாலாய ஒவ்வொரு உபாயத்தின்மூலமாகவும் தங்கள் நன்றியறிதலைக் காண்பிக்கவேண்டும்; அவர்களுடைய ஆக்ஞைகட்கு விஸ்வாசத்துடனே கீழ்ப்படிய வேண்டும்; என்றும் ஈஸ்வர பக்தர்களுக்குப் பணிவிடை செய்ய வேண்டும்; எவருக்கும் எவ்விதத்திலும் இச்சையளிக்காதிருக்கவேண்டும்; சரணாகதி மார்க்கத்திலே எத்தனை பேரை நடத்தி வைக்க முடியுமோ, அத்தனை பேரையும் நடத்தி வைக்கவேண்டும்.

ஸ்ரீ ஆளவந்தார் வைசாக மாதம் 6-ம் தேதி ச்ராவண நக்ஷத்திரத்திலே வைகுண்டப் பிராப்தி யடைந்தார். இவருக்கு யமுனைத்துறைவர் என்றும், யாமுநார்யரென்றும்கூடப் பெயர்கள் உண்டு.

---

3-வது அதிகாரம்:

# ஸ்ரீ ராமாநுஜர் உபதேசம் பெறல்



ஸ்ரீ ஆளவந்தார் பரமபத மடையப்போகிறு ரென்பது அவருடைய சிஷ்யர்களுக்கும், நண்பர்களுக்கும் முன்னமேயே தெரியும்; ஸ்ரீ ஆளவந்தாரே மிகத் தெளிவாக அனைவருக்கும் எச்சரிக்கை செய்திருக்கிறார்; ஆயினும், ஸ்ரீ ஆளவந்தார் ஸ்தூல சரீரத்தை விட்டு நீங்கியது அனைவரையும் துக்க சாகரத்தில் அமிழ்த்திவிட்டது. சிஷ்யர்கள் புரண்டு புரண்டு அழுதார்கள்; உருண்டு உருண்டு கதறினார்கள்; ஆ வென்று அலறினார்கள்; 'ஐயோ! நாங்கள் அநாதைகளானோமே' என்று அரற்றினார்கள். எவ்வளவு தான் அழுதும், இறைவனடி சேர்ந்து இன்பநிழ லெய்தியவர் இவ் வுலகுக்குத் திரும்பி வருவாரோ? வரரங்கரும் மிகமிக விசனப்பட்டா ராயினும், தமது விசனத்தைச் சீக்கிரத்தில் ஆற்றிக்கொண்டு, அம் மகாத்மாவுக்குச் செய்யவேண்டிய சமாதியடக்கக் கிரியைகளை அவருடைய ஜேஷ்ட புத்திரராகிய ஸ்ரீ பிள்ளைக்கரசு நம்பியைக்கொண்டு செய்விப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்தார். பின்னர் சிஷ்யர்கள் அச் சரீரத்தை யெடுத்துக் காவிரி தீரத்துக்குக் கொண்டு சென்று, ஆழமாக ஒரு பள்ளம் தோண்டி, அச் சரீரத்தை சமாதியடக்கம் செய்வதற்காக அதிலே யிறக்கும் சமயத்திலே ஒரு விசேஷம் நடந்தது.

'ஸ்ரீ ராமாநுஜரைக் கூட்டிவருதற்கு மகா பூர்ணர் என்பார் காஞ்சிமாநகர் சென்றார்' என்று முன்னமேயே கூறியுள்ளோம். அவர் காஞ்சிபூர்ணரிடத்திலே சென்று ஸ்ரீராமாநுஜரை 'ஸ்ரீ ஆளவந்தார் அழைத்து வரச்சொன்னார்' என்று சொல்ல, காஞ்சிபூர்ணர் ஸ்ரீ ராமாநுஜர் பிற்காலத்திலே பெரியோராவா ரென்று தெரிந்துகொண்டா ராதலினாலே, மகா பூர்ணரை ஸ்ரீ வரதராஜப்பெருமான் சந்நிதானத்துக்கு இட்டுச் சென்றார். அங்கே மகாபூர்ணர் ஸ்ரீ யாமுநாசார்யர் இயற்றிய ஸ்தோத்ர ரத்நத்தை ஸ்வாமி சந்நிதானத்திலே பாராயணம் செய்து, ஸ்ரீ யாமுநாசார்யருடைய வேண்டுகோளையும் தெரிவித்தார். பின்னர், திருக்கச்சி நம்பியா ரென்னும் காஞ்சி பூர்ணர் மகா பூர்ணரை நோக்கி, "நீங்கள் ஸ்ரீ ராமாநுஜர் கிணற்றிலிருந்து நீரெடுத்து க்ஷேத்திரத்துக்கு வரும் மார்க்கத்திலே நின்றுகொண்டு இந்த ஸ்தோத்திர ரத்தினத்தைப் பாடுங்கள்" என்று கூற, மகா பூர்ணரும் அப்படியே ஸ்ரீ ராமாநுஜர் வரும் வழியிலே காத்துக்கொண்டிருந்தார்; ஸ்ரீ ராமாநுஜர் மிகுந்த பக்தி சிரத்தையுடனே கிணற்றிலிருந்து அபிஷேகத்துக்கு நீரெடுத்துக்கொண்டு வருவதை மகாபூர்ணர் கண்டு, ஸ்தோத்திர ரத்நத்திலே யுள்ள ஸ்லோகங்களை ஒன்றன்பின் ஒன்றாகக் கூறிவர, அருகே வந்துவிட்ட ஸ்ரீ ராமாநுஜர் இவற்றைக் கேட்டுக்கொண்டே சற்றுநேரம் நின்றார்; மகாபூர்ணர் பத்து ஸ்லோகங்களைக் கூறிவிட்டு, "சிருஷ்டி கர்த்தாவாகிய பிரமனும், சம்ஹார கர்த்தாவாகிய சிவனும் நினது பெருமையும் மகிமையுமாகிய பிரஹ்மாண்ட

சமுத்திரத்திலே துளிகளேயாவர்! நினது சர்வ சக்தித்துவம் இயற்கையானதே யென்பதையும், காலதேசப் பொருளினுலே வரையறுக்கப்படாததென்பதையும் உண்மையில் எவரும் மறுக்கார்" என்று பொருள்படும் பதினோராவது சுலோகத்தைக் கூறி முடித்தவுடனே, அங்கு நின்று கேட்டுக்கொண்டிருந்த ஸ்ரீ ராமாநுஜர் மகாபூர்ணரை நோக்கி, "இந்த ஸ்தோத்ரங்கள் பாடியவர் யாவர்?" என்று கேட்டார். "ஸ்ரீ யாமுநாசார்யர் என்னும் பெயருடன் மகா பரிசுத்த புருஷராய் ஸ்ரீரங்கத்திலே விளங்குகின்ற ஒரு மஹாத்மா" என்றுர் ஸ்ரீ மகா பூர்ணர்.

"ஆ! அப்படியா? அப் பெரியோரின் தர்சனம் எனக்குக் கிடைக்குமா?"

"அவருடைய தர்சனம் எல்லோருக்கும் எளிதிலே கிடைக்கும். நீங்கள் வருவதானுல், நான் உங்களை அங்குக் கூட்டிக்கொண்டு செல்ல முடியுமென்று நினைக்கிறேன்."

"நான் இத் தீர்த்தத்தை ஸ்ரீ வரதராஜப்பெருமானுக்கு அபிஷேக நிமித்தம் கொண்டு செல்கிறேன். இதைக் கொண்டுபோய்க் கொடுத்துவிட்டுத் திரும்பி வருமளவும், தயவுசெய்து இங்கே சற்றுநேரம் எனக்காகக் காத்துக் கொண்டிருப்பீர்களா?"

"மிகவும் சந்தோஷம்; அப்படியே செய்கிறேன்."

உடனே ஸ்ரீ ராமாநுஜர் வெகு வேகமாக க்ஷேத்திரத்துக்குச் சென்று, அபிஷேக தீர்த்தத்தை அங்குக் கொடு

த்துவிட்டு, ஆபத் பாந்தவனுடைய அருமையான சந்நிதானத்திலே நின்று அவரைத் துதித்து, அவரிடம் விடை பெற்றுக்கொண்டு காஞ்சி பூர்ணரிடம் வந்து சேர்ந்து, அந்த ஸ்தோத்திர ரத்நப் பாக்களை இன்னொரு முறை படிக்கும்படி கேட்டு, மிகவும் சந்தோஷ பூரிதராய், தாமும் ஸ்ரீரங்கத்துக்கு ஸ்ரீ யாமுநாசார்யரைத் தர்சிக்க வருவதாகக் கூறினார். காஞ்சிபூர்ணர், "அன்பேயுருக்கொண்ட ஸ்ரீராமாநுஜா! நீ ஸ்ரீரங்கம் சென்று எனது குருமூர்த்தியின் சந்நிதானத்திலே நிற்கப்போகிறா யென்பதைக் கேட்க, எனக்கு அளவற்ற சந்தோஷம் உண்டாகின்றது. ஏனெனில், ஸ்ரீ யாமுநாசார்யர் எனது குரு, எனக்கு ஞான பிதா; உன்னை இட்டுச் செல்ல வந்திருக்கும் மகா பூர்ணருக்கும் குரு, ஞானபிதா; செல்வாய்! உனக்குச் சகல நன்மைகளும் பலிக்கக்கடவன!" என்று வாழ்த்தி யனுப்ப, ஸ்ரீராமாநுஜர் மகா பூர்ணரிடம் வந்து சேர்ந்தார்; பின்னர் அவரும் மகா பூர்ணருமாக ஸ்ரீரங்கத்துக்குப் பிரயாணமாகி, வழியிலே அநேக ஸ்தலங்களைத் தர்சித்துக் கடைசியாக ஸ்ரீரங்கத்துக்குள் நுழையவே, ஒரு பெருங் கூட்டம் எதிர்ப்பட்டது; எங்கு பார்த்தாலும் "கோவிந்தா! கோவிந்தா!" என்னும் சப்தம் குமுறிக் கோஷித்தது; அக் கூட்டத்திலிருந்தவர்களில் ஒருவர் முகத்திலாவது "ஈயாட" வில்லை; எல்லோரும் விசனத்தி லாழ்ந்திருந்தார்கள்.

மகா பூர்ணர் அங்கே வழியில் நின்றுகொண்டிருந்த ஒருவனை நோக்கி, "விசனகரமான இப்பெருங் கூட்டம்

இப் பக்கம் நோக்கி வரும் காரண மென்ன?" என்று கேட்டார். அம் மனிதனுக்கு மகா பூர்ணரைத் தெரியும்; இவர் ஸ்ரீயாமுநாசார்யருடைய மிகமிகப் பிரிய சிஷ்யர்களுள் ஒருவர் என்பது அவனுக்குத் தெரியும்; ஆதலால் அவன் மகா பூர்ணரை நோக்கி, "என்ன, ஸ்வாமி! ஒன்றும் தெரியாதவர்போலக் கேட்கிறீர்களே; தாங்கள் எங்குப் போயிருந்தீர்கள்? நமது ஆசார்யர் வைகுந்தப் பிராப்தியடைந்த விஷயம் தங்களுக்குத் தெரியாதா? அவருடைய ஸ்தூல சரீரத்தை யடக்கம் செய்தற் பொருட்டு நாங்கள் கூடப் போகிறோம்" என்றான்.

ஸ்ரீராமாநுஜரும், மகா பூர்ணரும் இவ் வார்த்தைகளைக் கேட்டதுதான் தாமதம்; உடனே அவர்கள் அப்படியே மூர்ச்சித்துவிட்டார்கள்; சில நிமிஷங்கள் அப்படியே கிடந்து, பின்னர் தெளிந்து, "ஐயகோ! எங்கள் ஆசார்யர், எங்களை ஆளவந்தார் போய்விட்டாரே!" என்று புரண்டு உருண்டு புலம்பி யழுதார்கள். இச் சங்கதி ஸ்ரீ ராமாநுஜருக்கு இடிவிழுந்ததுபோல் ஆய்விட்டது; அவர் நான் எங்குச் சென்றாலும் எனது (துரதிர்ஷ்ட) நிழல் என்னைப் பின் தொடர்ந்து வருகின்றதே. எனது முதற் குருவுடனே நான் அடிக்கடி வாதாடிப் போர் புரியும்படி நேர்ந்தது; அவருக்கு என்மீது இரண்டு மூன்று முறை வெறுப்பு உண்டாகி, அவர் என்னை வெளியே போய்விடும்படி சொன்னார்; என்னைக் கொன்றுவிடவும் முயற்சி செய்யப்பட்டது; நான் தப்பிப் பிழைத்தது ஆச்சர்யத்திலும் ஆச்சர்யம்! இம் மகா

னிடத்திலே ஏதோ ஒரு சக்தி யிருந்துகொண்டு என்னை ஆகருஷித்தது; இவரிடமிருந்து நான் ஞானவொளி பெறலாமென்று நினைத்தேன்; எனது துரதிர்ஷ்டம், நான் அவரைத் தர்சிக்கக்கூடக் கொடுத்துவைக்கவில்லை; எனக்கு இனிமேல் விமோசன மில்லைபோலத் தோன்றுகிறது; குருவை நாடிச் செல்லும் வேலையை விட்டுவிடுதலே நலமாகத் தோன்றுகிறது; நடக்கிறபடி நடக்கட்டும்'' என்று தமக்குள் தாமே சொல்லிக்கொண்டார் ஸ்ரீ ராமாநுஜர். மகாபூர்ணர் இவ் வார்த்தைகளைக் கேட்டு, "ஐயா! அப்படியன்று; நீங்கள் இருவரும் சந்திக்க நேரிடாமற் போனதிலே, ஏதோ ரகஸ்ய மிருக்கிறது; எம்பெருமான் கிருபாநிதி! அவர் எவருக்கும் ஒருபொழுதும் கெடுதல் செய்ததில்லை; செய்யவும்மாட்டார்; எல்லாம் நமது நன்மைக்கே என்று நம்புவோருள் நானும் ஒருவன்; 'அவசரப்படாமலிருந்தால் அவனுக்கு வேண்டியதெல்லாம் கிடைக்கின்றது' என நம்புவோருள் நானும் ஒருவன்; ஆகவே, நாம் இப்பொழுது விசனப்பட வேண்டியதில்லை. சரீரத்திலடைபட்டுக் கிடந்த நமது குருமூர்த்தி இப்பொழுது கட்டுகள் அற்று எம்பெருமானது அடி நிழலில் இன்பமனுபவித்துக்கொண் டிருக்கிறு ராதலால், அப்பொழுதைப் பார்க்கிலும் இப்பொழுதுதான் அவர் நமக்கு நன்கு அநுக்கிரகிக்க முடியும். ஆனல், வாருங்கள்! நமது குருமூர்த்தி உலகிலே ஜீவராசிகளை உய்விப்பதற்குக் காரணமாயிருந்த கருவியை நாம் கடைசியாக ஒருமுறை தர்சித்துவிடுவோம்'' என்று தேறுதல் சொன்னர்.

பின்னர் அவர்கள் சமாதி ஸ்தலத்தை யணுகவே, ஸ்ரீ ஆளவந்தாருடைய சிஷ்யர்கள் மகா பூர்ணரைக் கண்ட வுடனே, அவர்களுக்கு ஒரு பக்கத்திலே சந்தோஷ முண்டாயிற்று; இன்னொரு பக்கத்திலே துக்கம் பொங்கிற்று. 'சில நாட்களாகப் பிரிந்திருந்த மகா பூர்ணர் இப்பொழுது மறுபடியும், அதுவும் மகதாசார்யராகப் போகின்ற ஸ்ரீ ராமாநுஜரையும் கூட்டிக்கொண்டு, தங்களுக்கு மனச் சமாதானம உண்டுபண்ண வந்து சேர்ந்தாரே' என்று ஒரு பக்கத்திலே சந்தோஷம்; 'குருமூர்த்தி போய்விட்டாரே, என் செய்வோம்! என்னும் குறிப்பை யுணர்த்துபவர்கள் போல, இன்னொரு பக்கத்திலே துக்கம்.'' அவருடன்கூட வந்திருப்பவர் ஸ்ரீ ராமாநுஜரே யென்று தெரிந்துகொள்ள முடியாத சிலர் மகாபூர்ணரிடத்திலே "இவர் யார்?" என்று கேட்க, மகாபூர்ணர் "இவரா? நமது குருமூர்த்தி இரவும் பகலும் எவரைப் பார்க்கவேண்டு மென்று ஆசை மிகுந்து ஏக்கம் கொண்டிருந்தாரோ, அவரே இவர்; எவரை யழைத்து வரும்படி யனுப்பினாரோ, அவரே யிவர்; இவர்தான் நமது குருநாதரின் ஆசைகளை யெல்லாம் கொள்ளை கொண்ட ஸ்ரீ ராமாநுஜர்!'' என்றார். எல்லோரும் ஸ்ரீ ராமாநுஜரை உடனே ஆச்சரியத்துடனும், அன்புடனும் பார்த்தார்கள்; கூட்டத்தில் பின்னே யிருந்தவர்கள் எட்டி எட்டி எறிட்டுப் பார்த்தார்கள். சிலர் "இவர்தானா ஸ்ரீ ராமாநுஜர்? இவர்தானா ஸ்ரீ ராமாநுஜர்?'' என்று ஒருவரோ டொருவர் காதோடு காது பேசிக்கொண்டார்கள். ஆனால், ஸ்ரீ ராமாநுஜரோ இதைக் கவனிக்கவே யில்லை. ஸ்ரீ ஆளவந்தா

ருடைய ஸ்தூல சரீரத்தினிடம் சென்று, ஸ்ரீ ராமாநுஜர் அதையே நெடுநேரம் உற்று உற்றுப் பார்த்து, "ஆ! ஆ! கடைசியில் இப் பெரியோருடைய பிணச் சரீரத்தையா வது தர்சிப்பதற்குள்ள பாக்கியம் பெற்றேனே! ஆனல் இது என்ன? அவருடைய விரல்களுள் மூன்று மூடி யிருக் கின்றனவே; அவை எப்பொழுதுமே இப்படித்தான் இருந் தனவா?" என்று கேட்டார்.

விரல்கள் மூடப்பட்டுள்ள இந்த விஷயத்தை எவரும் கவனிக்கவே யில்லை; இப்பொழுது ஸ்ரீ ராமாநுஜர் கவனி த்து அதைப்பற்றிக் கேட்டவுடனே, அவர்கள் எல்லோரும் ஆச்சர்ய மடைந்து பிரமித்தார்கள்.

"அவர் உயிருட னிருக்கும்பொழுது, அவ் விரல்க ளெல்லாம் சரியா யிருந்தனவே; எப்படி அவ் விரல்கள் மூடிக்கொண்டன?"

"அவர் எதையேனும் கோரிக்கொண் டிருந்திருப்பார், அது நிறைவேருமற்போ யிருக்கும். அவர் உங்களுக்குப் போதனை செய்துகொண் டிருந்தபொழுது, அத்தகைய விருப்பங்கள் எவற்றையேனும் வெளியிட்டதைக் கேட்ட வர்கள் எவரேனும் உண்டா?"

"ஆம்; இப்பொழுதுதான் எங்களுக்கு ஞாபகம் வரு கின்றது; அவர் எப்பொழுதும் வியாசரையும், பராசரரை யும் ஸ்தோத்ரம் செய்துகொண்டே யிருந்தார்; அவரு க்கு ஸ்ரீ சடகோப ரிடத்திலே யிருந்த பக்தியை இத்

தகையதென்று கூற முடியாது; தமக்கு வயதும் பலஹீநமும் அதிகமாய்விட்டனவே, இதனால் பிரஹ்ம ஸூத்திரங்கட்கு ஒரு விஸிஷ்டாத்வைத பாஷ்யம் இயற்றத் தம்மால் முடியவில்லையே! என்று அடிக்கடி விசனித்தார்.”

உடனே ஸ்ரீ ராமாநுஜருக்கு விஷயம் தெரிந்துவிட்டது; ஸ்ரீ ஆளவந்தாருடைய இச்சையைத் தாம் பூர்த்தி செய்வதாகக் கங்கணம் கட்டிக்கொண்டார். “நல்லது! இவ் வுலகில் நான் போதுமான அளவு நாட்கள் ஜீவித்து இருப்பேனேயானால், எம்பெருமானுக்கு என்னிடத்திலே கிருபை யுண்டாகுமானல், நான் பெருத்த கார்யங்கள் செய்யுமாறு எம்பெருமான் என்னை யனுப்பி யிருப்பது உண்மையானல், எம்பெருமான் எனது கோரிக்கைகளை ஈடேற்ற அருள் புரிவாரானல், உங்கள் எல்லோருக்கும் முன்னே நான் இங்கு இப்பொழுது ஒரு பிரதிக்ஞை பண்ணிக்கொள்ளுகிறேன்; என்னுடைய சக்தியால் இயன்ற அளவு அவருடைய கடைசி விருப்பங்களைப் பூர்த்தி செய்வேன். நான் இப்பொழுது கூறியது நமது குருமூர்த்திக்குச் சம்மதமானல், அச் சம்மதத்தைக் காண்பிக்கும் அறிகுறியாக அவருடைய மூடியிருக்கும் விரல்கள் மூன்றும் திறக்குமாறு பிரார்த்திக்கிறேன்!” என்றார். உடனே, ஆ! ஆ! ஆச்சர்யம்! ஆச்சர்யத்திலும் ஆச்சர்யம்! மூடி யிருந்த விரல்கள் மூன்றும் திறந்துகொண்டன; ஸ்ரீ யாமுநாசார்யருடைய ஸ்தூல சரீரம் அங்குப் பிணமாகக் கிடந்தபோதிலும், அப் பிணச் சரீரத்தின் முகத்திலே ஒருசில நிமிஷங்

கட்கு ஒருவித தேஜஸ் ஜ்வலித்தது. அங்குக் கூடிய ஆயிரக் கணக்கான ஜனங்களும் அதைக் கண்டு அச்சமும் ஆச்சர்யமு மடைந்தவர்களாய், அப்படியே பிரமித்து நின்றார்கள்!

ஸ்ரீ ஆளவந்தாருடைய விரல்கள் மூன்றும் மூடியதற்கும், பின்னர் அவை திறந்ததற்கும் பின் வருமாறு ஒரு கதையும் வழங்குகின்றது:—

ஸ்ரீ ராமாநுஜர் ஸ்ரீ ஆளவந்தாருடைய சரீரத்தைப் பார்த்தவுடனே, "நான் அவரைச் சந்திக்கும்படிமாத்திரம் ஈச்வர கிருபை யிருந்தால், நான் வைகுண்டத்திலே பரந்தாமனுடைய பாதாரவிந்தம்வரையிலும் இங்கிருந்து ஒரு ராஜபாட்டை போட் டிருப்பேன்; அம் மார்க்கத்தின் மூலமாக மனுஷ்ய வர்க்கம் நித்திய பதவிக்குச் சுலபமாகச் செல்ல முடியும்" என்றார். இவ் வார்த்தைகள் சொல்லி முடிந்ததுதான் தாமதம்; ஸ்ரீ யாமுநாசார்யருடைய கை விரல்கள் மூன்று மூடிக்கொண்டன. "நான் எனது ஹிருதயத்திலே மிகமிக அருமையாகக் கொண்டுள்ள விருப்பங்களை நிறைவேற்றுபவர் இவரே யாவர்; வேறு எவராலும் முடியாது" என்று சூக்ஷ்ம சரீரத்தில் ஸ்ரீ யாமுநாசார்யர் நினைத்திருக்கலாம். ஸ்ரீ ராமாநுஜர் தமது வார்த்தைகளை ஸ்ரீ ஆளவந்தார் ஏற்றுக்கொண்டார் என்று அறிந்து கொண்டார்; உடனே ஸ்ரீ ராமாநுஜர் "நான் இதோ வைஷ்ணவ மதத்தை ஆசரிப்பதாக வாக்களிக்கிறேன்; எனது காலத்தையும் எனது சக்திகளையும், சுருக்கிச் சொல்லில்

என்னையே, மனுஷ்ய வர்க்க ரக்ஷணைக்காகச் சமர்ப்பித்த தாக நான் வாக்களிக்கிறேன். நான் அவர்களை புண்மையான மார்க்கத்தி விட்டுச்சென்று, பிரபந்தத்தின் சூக்ஷமார்த்தங் களை அவர்கள் தெளிவாக அறிந்து, பிரபத்திக் கொள்கை யை அவர்கள் பின்பற்றும்படி செய்வேன்'' என்று கூற வும், ஸ்ரீ யாமுநாசார்யருடைய மூடிய விரல்களுள் ஒன்று திறந்துகொண்டது.

இன்னும் ஸ்ரீ ராமாநுஜர், "நான் வியாச சூத்திரங் களுக்கு ஒரு வியாக்கியானம் எழுதி, வேதங்கள், சாஸ்தி ரங்கள், ஆன்றோர்கள் இவர்களுடைய போதனைகளை யெல்லாம் அந்த வியாக்கியானத்திலே அடக்கி, மோக்ஷ மார்க்கம் எல்லோருக்கும் எளிதாகும்படி செய்வேன்'' என்றார்.

உடனே ஸ்ரீ யாமுநாசார்யருடைய மூடிய விரல்களுள் இன்னொன்று திறந்துகொண்டது.

மறுபடியும் ஸ்ரீ ராமாநுஜர், "நான் ஒரு பரிசுத்த வைஷ்ணவரைத் தெரிந்தெடுத்து, எவரும் எவ்வித ஆக்ஷே பனையும் கூறுதற்கு இடமில்லாமல், பரமாத்மாவினுடைய மகத்துவத்தையும், பரமாத்மாவுக்கும் ஜீவாத்மாவுக்கு முள்ள சம்பந்தத்தையும், மோக்ஷ மார்க்கத்தையும் தமது விஷ்ணு புராணத்திலே ஸ்திரமாக ஸ்தாபித்திருக்கின்ற ஸ்ரீ பராசர மஹரிஷியின் பெயரை அவருக்குவைப்பேன்!'' என்றார்.

உடனே ஸ்ரீ யாமுநாசார்யருடைய மூடிய விரல்களுள் மூன்ருவது விரலும் திறந்துகொண்டது.

இவ்விதமாக, ஸ்ரீ ராமாநுஜருடைய வார்த்தைகளினுலே மூடிய விரல்கள் திறக்கவே, ஸ்ரீ ஆளவந்தாருக்கு ஸ்ரீ ராமாநுஜரிடத்தில் பிரத்தியேக வாத்சல்யம் உண்டு என்பதற்கு இதுவும் ஒரு அத்தாக்ஷியாயிற்று.

வரரங்கர் ஸ்ரீ ராமாநுஜரை யணுகி, "நமது குருநாதருடைய பிரத்தியேக வாத்சல்யத்துக்குப் பாத்திரமானவர் நீங்களேயாவீர்! அவருடைய ஜீவித வேலையும் திவ்ய சக்திகளும் சமர்த்து முறையில் தங்களுக்கே கிடைத்திருக்கின்றன' என்று கூறிவிட்டு, சுற்றியிருந்தவர்களை நோக்கி, "நமக்கு ஆசார்யராகவும், குருநாதராகவும் வரப்போகின்றவரைப் பாருங்கள்; இவரைப் பார்க்க வேண்டுமென்றுதான் நமது குருமூர்த்தி அத்தியந்த அவாவுடையவரா யிருந்தார்; தாமே நேரில் தமது பாரத்தை ஒப்புவித்துவிடலாமென்று நினைத்தார்; இவரே மனுஷ்யவர்க்கத்துக்கு, எண்ணற்ற லக்ஷக்கணக்கான ஜனங்களுக்கு ரக்ஷகர். இதோ இவர் சத்தியமாகிற தீவர்த்தியை எடுத்துக்கொண்டு வந்திருக்கிருர்; அது அந்தகாரத்திலே யுள்ள ஆத்மராசிகளுக்கு உயிரும் ஒளியும் அளித்து, வாசுதேவனுடைய பாதார விந்தங்கட்கு வழி காண்பிக்கக் கடவது," என்ருர்.

அங்குக் கூடியிருந்த ஜனங்கள் எல்லோரும் ஒரே குரலாக, "ஆம்! ஆம்!" என்று ஆர்ப்பரித்தனர்; கொஞ்ச

நேரம் வரையில் ஸ்ரீ ராமாநுஜரை வாழ்த்துகின்ற சப்தங்க ளும், புகழ்கின்ற சப்தங்களும், ஆசிகூறுகின்ற சப்தங்களும் தவிர வேறு எவ்வித சப்தங்களும் கேட்கவில்லை. ஸ்ரீராமா நுஜர் தமது சிரத்தைத் தாழ்த்தி, அவர்களெல்லாரையும் கைகுவித்துக் கும்பிட்டு, அவர்களுடைய ஆசிமொழிகளை யெல்லாம் ஏற்றுக்கொண்டார். இதுமாத்திரமன்று; இன் னும் ஸ்ரீ ராமாநுஜர் "என்னிடம் ஒப்புவிக்கப்படும் வேலை யோ மிகப் பெரிதா யிருக்கின்றது; எனக்கோ அவ்வளவு சக்தி யில்லை; நான் எனது தர்மத்தைச் சரிவரச் செய்ய வல்லவனுக்குமாறு எம்பெருமானையும் குருமூர்த்தியையும் பன்முறையும் பணிந்து பிரார்த்தித்துக்கொள்ளுகிறேன்" என்று எல்லோருக்குமாக மறுமொழி யளித்தார்.

ஸ்ரீ ராமாநுஜர் மறுபடியும் மறுபடியும் ஸ்ரீ யாமுநா சார்யருடைய ஸ்தூல சரீரத்தைப் பார்த்துப் பார்த்து "ஆ! ஆ! குருமூர்த்தியை அவர் உயிருடனிருந்தபொழுது ஒரு தரமாவது நேரில் தர்சிக்கக் கொடுத்து வைக்கவில்லை யே; அவருடன் ஒரு மொழிகூட உரையாடக் கொடுத்து வைக்கவில்லையே; ஸ்ரீ ரங்கநாதப்பெருமான் இவ் விஷயத் தில் மாத்திரம் இவ்வளவு கடின சித்தம் காண்பித்ததேனோ? அவருடைய சந்நிதியில் செல்வதற்கு எனக்கு இப்பொ ழுது மன அமைதி யில்லை. எம்பெருமான் எங்கள் இருவ ருக்கும் இந்த அபிப்ராயம் செய்தாரே யென்று நான் உணராம லிருக்க முடியவில்லை; இச் செய்கை ஈஸ்வர கிருபைக்குப் பொருத்த முடையதாகாது" என்று எம் பெருமானைச் சிறிது நிந்தித்தார்.

ஸ்ரீ யாமுநாசார்ய ருடைய சரீரமானது மகாத்மாக்க ளுக்குச் செய்யப்பட வேண்டிய பலவித மர்யாதைகளும் கௌரதைகளும் செய்யப்பெற்று, சமாதிபடக்கம் செய்யப் பட்டது. பின்னர் ஸ்ரீ ராமாநுஜர், வரரங்கர் மகாபூர்ணர் முதலியவர்க ளிடத்திலே விடை பெற்று, காஞ்சீபுரத்திற் குத் திரும்பி வந்து சேர்ந்தார். உடனே ஸ்ரீ ராமாநுஜர் திருக்கச்சி நம்பியா ரிடம் சென்று, நடந்த சங்கதிகள் எல்லாவற்றையும் கூற, நம்பியாருடைய ஹிருதயம் உடை ந்து உருகிப் பொங்கிக் கண்களின் வழியாய்க் கண்ணீர் உரு வெடுத்துத் தாரை தாரையா யோடிற்று; அவர் அழுவதைக் கண்ட ஸ்ரீ ராமாநுஜருக்கும் துக்கம் பொங்கிவிட்டது; பார்த்தார் திருக்கச்சி நம்பியார்; தமது துக்கத்தைத் ஆற் றிக்கொண்டு, ஸ்ரீ ராமாநுஜரையும் தேற்றக் கருதி, திருக் கச்சி நம்பியார் ஸ்ரீ ராமாநுஜரை நோக்கி, "காஞ்சிநாத ருடைய சர்வஞ்ஞத்துவத்திலும் சர்வ சக்தித்துவத்திலும் பரிபூர்ணமாக நம்பிக்கை வை; விசனிக்காதே; ஈற்றில் எல்லாம் நன்மையாகவே முடியும்; பொறு; அவசரப் படாதே; ஆத்திர மடையாதே" என்று கூறி ஸ்ரீ ராமா நுஜருடைய துக்கத்தைப் போக்கடித்தார்.

ஸ்ரீ ராமாநுஜர் மெல்ல மெல்லத் தேறுத லடைந்து எம்பெருமானுக்கு முன்போலத் தொண்டு செய்து வந்தார். அவருக்குத் திருக்கச்சியா ரிடத்து இருந்த பக்தியும் சிரத் தையும் நாளுக்குநாள் அதிகரித்தது; நம்பியாருக்கும் நாளுக்குநாள் ஸ்ரீ ராமாநுஜரிடத்து வாத்சல்யம் அதி

கரித்தது. இவ்விதமாக இருவரும் அந்யோந்யம் அதிக அந்தரங்கமாகப் பழக ஆரம்பிக்கவே, திருக்கச்சி நம்பியார் மகிமை பொருந்தியவ ரென்பதும், மகா ஞானி யென்பதும் ஸ்ரீ ராமாநுஜருக்கு மெல்ல மெல்லப் புலப்பட ஆரம்பித்தது. திருக்கச்சி நம்பியாரைப் பார்க்கிலும் சிரேஷ்டமான குரு வேறொருவர் கிடைப்ப தரிதென்று ஸ்ரீ ராமாநுஜர் தீர்மானித்துக்கொண்டு, அவரை யணுகி, "ஸ்வாமி! என் மீது கிருபை பாலிக்கவேண்டும்; தங்களுடைய சிஷ்யர்களுள் ஒருவராக என்னை ஏற்றுக்கொள்ளவேண்டும்; பரந்தாமனிடம் செல்லும் பாவன மார்க்கத்தை எனக்குக் காண்பித்தருளல்வேண்டும்" என்று பிரார்த்தித்து நின்றார். இதற்குத் திருக்கச்சி நம்பியார், "ஐய! அப்படியன்று; அத்தகைய குரு ஸ்தானம் வகிப்பதற்கு நான் யோக்கியனல்லன்; ஸ்ரீ வரதராஜப்பெருமான் என்னிடம் சிறிது அன்பு பாலிக்கிறா ரென்றதனால் நீ என்னிடத்தில் சிஷ்யனாக விரும்புகிறாய் போலிருக்கிறது"—என்று சொல்லிக்கொண் டிருக்கையில், ஸ்ரீ ராமாநுஜர் "மகான்கள் எல்லா ஜாதிகளிலும் பிறப்பு எடுக்கிறார்க ளென்றும், மாயா திரையைக் கிழித்தெறிந்து எம்பெருமானைப் பிரத்தியக்ஷத்தில் தர்சிக்கவல்ல பாக்கியம் பெற்ற மஹான்களின் விஷயத்திலே பிறப்புப் பிரதானமன்றென்றும் சாஸ்திரங்கள் கூறுகின்றன" என்று சொல்லவே, திருக்கச்சி நம்பியார் "இல்லை, இல்லை; நீ எனக்கு அளவு கடந்து மர்யாதை செய்கிறாய்; நான் அதற்குச் சற்றும் உரித்தானவனல்லன். ஆனால், நான் அப்படிக் குருஸ்தானம் வகிக்கத் தகுந்தவனே யென்று வைத்துக் கொண்டா

னும், 'ஜாதியாசாரங்கள் சரிவர பரிசுத்தமாக நடைபெறு கின்றனவா?' என்பதை நாமே கவனிக்காவிட்டால், பின்னர் யார் கவனிப்பர்? ஆன்றோர் ஜனசமுகத்தினுடைய அமைப் புக்கு ஜாதியாசாரங்களையே ஆதாரமாக்கி யிருக்கின்றன ரன்றோ? சாக்ஷாத் பகவானே ஸ்ரீ பகவத்கீதையில் என்ன சொல்லுகிறார்?— 'பெரியோன் எக்கார்யம் செய்கிறானோ, அக் கார்யத்தையே பிறரும் செய்கிறார்கள்; அவனுடைய மாதிரியைத்தான் ஜனங்கள் பின்பற்றுகிறார்கள். ஏ, பார்த் தா! மூவுலகங்களிலும் நான் செய்யவேண்டிய தர்மம் ஒன்று மில்லை; நான் அடைய விரும்பக்கூடியதும் ஒன்று மில்லை; ஆயினும், எனது கடமைகளை நான் செய்துகொண்டே போகிறேன். ஏ, பார்த்தா! நான் பிறரைப்போல ஆவலுட னே கர்மங்களைச் செய்யாவிட்டால், எங்குப் பார்த்தாலும் ஜனங்கள் என்னுடைய திருஷ்டாந்தத்தைப் பின்பற்றி விடுவார்கள். நான் எனது கடமையைச் செய்யாவிட்டால், இவ் வுலகங்கள் அழிந்துவிடும். சக்திகளும் செய்கைகளும் பற்பல விதமாக வேறுபட்டுள்ளபடி நான்கு ஜாதிகளும் என் னால் ஏற்படுத்தப்பட்டன. நானே ஜாதிகளின் குழப்பத்துக் குக் காரணமாகி, இந்தப் பிராணிகளை யழித்துவிடுவது நன்று யிருக்குமா? குல தர்மத்தை, அல்லது ஜாதி தர்மத் தைப் பின்பற்றாதவர்கள் உண்மையில் நரகமாகிற அந்த காரத்திலே விழுந்துவிடுகின்றார்கள்; அதனின்றும் வெளி யேறுவது அருமையினும் அருமை. ஆகையால், ஜனசமு தாயத்தினுடைய ஒற்றுமையைக் கருதி, நீ உனது கடமை யைச் செய்தல் வேண்டும். மூடர்கள் செய்கையினிடத்துப்

பற்றுதல் வைத்து வேலை செய்கிறதுபோல, ஏ, பரதனே! ஞானிகளும் பற்றற்று, ஜனசமுகத்தினுடைய ஒற்றுமையைக் கருதி வேலை செய்யவேண்டும். செய்கையினிடத்துப் பற்றுதலுள்ள மூட ஜனங்களுடைய மனங்களை ஞானியானவன் குழம்பச்செய்யாம லிருப்பானாக. நன்கு செலுத்தப் பெற்ற இன்னொருவனுடைய தர்மத்தைப் பார்க்கினும், பலனற்றதே யாயினும் ஸ்வதர்மமே மேல். ஸ்வதர்மாநுஷ்டானத்திலே மரணமும் சிறந்ததாகும்; ஏனெனில், இன்னொருவனுடைய தர்மம் அபாயம் நிறைந்துள்ளது. பரிபூர்ண ஞானமுடைய மனிதன் அரைகுறை யறிவையுடைய மூட ஜனங்களைக் கலைத்துவிடுதல் கூடாது'' என்றார்.

ஸ்ரீ ராமாநுஜர் ''ஸ்வாமி! நான் தங்களை மிகவும் நம்பியிருந்தேன்; அந்தநம்பிக்கைநிறைவேறாமற் போய்விட்டது; ஆயினும் பாதக மில்லை; தங்களிடத்து எனக்குள்ள பக்தி அணுவளவும் குறைவுபடாது'' என்று மிகுந்த விசனத்தோடு கூறி, திருக்கச்சிநம்பியாரிடம் விடைபெற்றுச் சென்றார்.

ஆனால், ஸ்ரீ ராமாநுஜருக்கு மனம் சமாதான மடையவில்லை; 'மகாத்மாவாகிய நம்பியாருடைய அருளுக்கு எப்படியாவது பாத்திர மாகவேண்டும்? அவருக்குத் தெரியாமலாவது அவருடைய கிருபையை அடைந்துவிட வேண்டும்; இதற்கு என்ன செய்யலாம்' என்று அன்றிரவெல்லாம் யோசனை செய்தார். அன்றிரவு கண் இமை மூடவேயில்லை. மறுநாள் பொழுது விடிந்தது. ஸ்ரீ ராமாநுஜர் எழுந்திரு

ந்து தமது காலைக்கடன்களை முடித்துக்கொண்டு, திருக்கச்சி நம்பியாருடைய வீட்டுக்கு ஓடினார். அங்குத் திண்ணையிலுட்கார்ந்திருந்த நம்பியார் சட்டென்று எழுந்திருந்து "என்ன, அப்பா! என்ன? இவ்வளவு வேகமாக ஓடிவருகிறாயே! என்ன சங்கதி?" என்று கேட்க, ஸ்ரீ ராமாநுஜர் "ஸ்வாமி! நேற்றுத்தான் என்னை ஏமாற்றிவிட்டீர்கள்; அது போனால் போகட்டும்; இன்று தங்களிடம் ஒரு வேண்டுகோள்; இன்றைய தினம் தாங்கள் என்னுடைய கிரகத்திலே போஜனம் வைத்துக்கொள்ள வேண்டும்" என்று மிகுந்த விநயத்தோடு வேண்டிக்கொள்ள, நம்பியார் "இதற்குத்தானா இவ்வளவு வேகமாக ஓடிவந்தாய்?" என்றார். ஸ்ரீ ராமாநுஜர் தமது வேண்டுகோட்கு இணங்கியதாக இன்னும் மறுமொழி திருக்கச்சி நம்பியாரிட மிருந்து வாராததினாலே அவரை நோக்கி, "ஸ்வாமி! இதனினும் அவசர காரியம் வேறொன்று முளதோ? பெரியோருடைய கிருபைக்கு எவ்வளவு சீக்கிரத்தில் பாத்திரமாக வேண்டுமோ அவ்வளவு சீக்கிரத்தில் ஆய்விட வேண்டுமல்லவா? அதிருக்கட்டும்; இன்று கட்டாயமாகத் தாங்கள் எனது கிருகத்திலே வந்து போஜனம் செய்தல் வேண்டும்" என வற்புறுத்தி வேண்ட, நம்பியார் புந்நகை யுடனே "அப்படியேயாகட்டும்" என்றார்.

ஸ்ரீ ராமாநுஜர் சந்தோஷ பூரிதராய்த் தமது கிருகத்துக்குத் திரும்பி வந்து, தமது மனைவியை விளித்து, "அடியே! இன்று நமது கிருகத்துக்கு எம்பெருமானுடைய

பரம பக்தர்களுள் ஒருவர் வரப்போகின்ருர். அவருக்குப் பச்சடிகிச்சடியாதிய பதார்த்தங்கள் பலவற்றுடனும், பாயச பரமாந்நாதிகளுடனும் போஜனம் படைத்தல் வேண்டும். அவருடைய கிருபை நமக்குக் கிடைத்துவிட்டால், ஆபத் பாந்தவனுகிய ஆதிமூலமூர்த்தியின் கிருபை நமக்கு நிச்சயமாகக் கிடைத்துவிட்டதென்று சொல்லலாம்; ஜாக்கிரதை! ஜாக்கிரதை! அடுக்கடுக்காக அறுசுவை யுண்டிகளுமாகட்டும்; சீக்கிரமாகட்டும். அவருடைய கிருபைக்கு நாம் இன்று பாத்திரமாவதும் ஆகாததும் உன்னுடைய சமர்த்திலே யிருக்கிறது," என்று வேண்டியபடி வற்புறுத்தித் தாக்கீது பண்ணி, சமையல் செய்யும்படி ஏற்பாடு செய்து விட்டு, தமது மாத்தியாந்நிக கிருத்தியங்களை யெல்லாம் செய்து முடித்துக்கொண்டு, திருக்கச்சி நம்பியாரை யிட்டு வரும் பொருட்டுத் தெற்குத் தெருவின் வழியாகத் திருக்கச்சி நம்பியாரின் வீட்டை நோக்கி நடந்தார்.

திருக்கச்சி நம்பியாரோ உண்மையை ஊகித்துக் கொண்டார். 'நம்பியார் உண்ட எச்சிற் கலத்திலே யுட்கார்ந்து உச்சிஷ்டத்தை யுண்டு, இதன் மூலமாகவாவது, நம்பியாருக்குத் தெரியாமல், நம்பியாருடைய கிருபா சக்தியை அடைந்து விடுவது' என்று ஸ்ரீ ராமாநுஜர் நினைத்திருந்ததை நம்பியார் ஊகித் தறிந்துகொண்டு, வடக்கு வீதி வழியாக ஸ்ரீ ராமாநுஜருடைய வீட்டுக்கு வந்து சேர்ந்தார். அப்பொழுது ஸ்ரீ ராமாநுஜர் தெற்கு வீதி வழியாக நம்பியாருடைய வீட்டுக்குப் போயிருந்தார்.

நம்பியார், 'இதுதான் ஸ்ரீ ராமாநுஜரை ஏமாற்றுவதற் கேற்ற தருணம்' என்று நினைத்து, அவருடைய மனைவியை நோக்கி, "அம்மே! ஸ்ரீ ராமாநுஜர் எங்கோ போயிருக்கிறார் போலவும், வருவதற்கு நேரமாகும் போலவும் தோன்றுகிறதே; நான் கோவிலிலே திருத்தொண்டு புரிவதற்குச் சீக்கிரம் செல்லல் வேண்டும்; ஆகலின், எனக்கு இத்தனை சோறிட்டு அனுப்பிவிடுங்கள்! நான் வந்து உண்டுவிட்டுப் போனதாக, அவர் வந்தால், அவரிடம் கூறிவிடுங்கள்!" என்று சொல்ல, அவ் வம்மையாரும் நம்பியாருடைய ஜாதிக்குத் தகுந்த மர்யாதைப்படி, நடையிலே இலையிட்டு போஜனம் பரிமாறினர்; நம்பியார் அதிக சந்தோஷத்துடனே "நன்றாயிருக்கிறது, நன்றாயிருக்கிறது" என்று சொல்லிக்கொண்டே சாப்பிட்டு எழுந்து கை கழுவி அவ் வம்மையாரிடம் விடைபெற்றுக்கொண்டு தமது வீடு சென்றார். அவ் வம்மையார் ஒரு கோல் கொண்டு அவ் வெச்சிலிலையை யெடுத்து எறிந்துவிட்டு, அவ்விடத்தைச் சாணமிட்டுச் சுத்தி செய்தார். "அவ் வம்மையார் நம்பியாரையே, இலையெடுத்து எறியச் சொன்னதாகவும், அப்படியே அவர் செய்தார் என்றும் சிலர் கூறுகின்றனர்."

நம்பியார் உண்ட இடத்தைச் சுத்தி செய்துவிட்டு, ஸ்ரீ ராமாநுஜருடைய மனைவியார் இரண்டாம் முறை ஸ்நானம் செய்துகொண்டிருந்தார்; அப்பொழுது ஸ்ரீ ராமாநுஜர் நம்பியாருடைய வீட்டுக்குச் சென்று அவரைக் காணாதவராய், அவர் தமது கிருகத்துக்குச் சென்றிருப்பா ரென்று

நினைத்துக்கொண்டு, திரும்பி வந்தார்; அங்கே ஸ்ரீ ராமாநுஜருடைய மனைவி இரண்டாம் முறை ஸ்நாநம் செய்வதைக் கண்டு "நம்பியார் வந்திருந்தாரா? நீ ஏன் இப்பொழுது ஸ்நாநம் செய்கிறாய்?" என்று கேட்க, அவ்வம்மையார் "ஆம், இங்கு வந்திருந்தார்; 'கோவிலுக்குச் சீக்கிரம் செல்லவேண்டும்' என்றும், 'ஆதலால், உடனே போஜனம் படைக்கவேண்டும்' என்றும், என்னை அவசரப்படுத்தினார். ஆதலால், நான் சற்றும் தாமதியாது அவருக்குப் போஜனம் இட்டேன். அவர் சூத்திர ராகையினாலே, அவருடைய எச்சிலிலையை நான் ஒரு கோல்கொண்டு எடுத்துத் தூர எறிந்துவிட்டு, சாணமிட்டு, அவ்விடத்தைச் சுத்தி செய்து, அத்தீண்டல் போவதற்காக இரண்டாம் முறை ஸ்நாநம் செய்கிறேன்" என்றாள். ஸ்ரீ ராமாநுஜர், "தீண்டலா! 'மகாநுபாவன் நமது கிருகத்திலே எழுந்தருளுவதற்கு நாம் எப்புண்ணியம் செய்தோமோ?' என்று கருதாமல், 'தீண்டல்' என்று சொல்லுகிறாய்? நினது மூடத்தனந்தான் என்னே?" என்று தமது மனைவியின்மீது உண்டான கோபத்தைப் பெரியதோர் முயற்சி செய்து அடக்கிக்கொண்டு, "நாயகி! நாயகி! நீ எனக்கு இப்பொழுது செய்து வைத்த நஷ்டம் இவ்வளவு அவ்வளவு அல்ல; என்னுடைய கிருகத்திலே போஜனம் அருந்தும்படி நான் எவரை வேண்டிக்கொண்டேனோ, அவர் உன்னிலும் பரிசுத்தரே தான் என்று நான் நினைக்கிறேன். உனது மூட ஆசாரத்தை நீ பெரிதாகப் பாராட்டிக்கொண்டு, நீ அறிய முடியாத விஷயங்களிலே தலையிடாதே! ஜாக்கிரதை! இன்னொரு முறை நீ இம்

மாதிரி மூடத்தனம் புகன்று, மஹான்களைக் குறைவு படுத்துவரியானால், நீ உனது தாய்வீடு போய்ச் சேரவேண்டி வரும்'' என்றார்.

ஒரு சாரார் "இங்ஙனம் நிகழவில்லை" என்றும், "வேறொரு மாதிரி நிகழ்ந்தது" என்றும் கூறுகின்றனர். இவர்கள் கூறுவதாவது:—

"ஒரு நாள் திருக்கச்சி நம்பியார் தெரு வழியே நடந்து சென்றுகொண் டிருந்தார்; ஸ்ரீராமாநுஜர் அப்பொழுது அவரைச் சந்திக்கும்படி நேரிட, அவரைக் கூட்டிக்கொண்டு தமது கிருகம் சென்று, ஆசன மளித்து உட்காரும்படி செய்து, அவருடைய பாதங்களை ஸ்பர்சித்துக் கண்களில் ஒத்திக்கொள்ளப் போனார்; அப்பொழுது நம்பியார் திடுக்கிட் டெழுந்து, "கில்லு! எனது குருமூர்த்தி ஸ்ரீயாமுநாசார்யரின்மீது ஆணை; தர்மத்துக்கு எவ்விதத்திலும் பங்கம் நேரிட நான் சகிக்கமாட்டேன்; இது சத்தியம், இது சத்தியம்'' என்று கூச்ச லிட்டார்; பின்னும் "என்னுடைய பாதங்களை ஸ்பர்சிக்கலாமா? மெய் மறந்திருந்த ஒரு சமயத்திலே ஒரு அரசன் பின்னே நடந்ததற்காக மஹா புருஷராகிய நாதயோகியையே ஸ்ரீ புண்டரீகாக்ஷர் கடிந்திருக்கிறாரே'' என்றார். ஸ்ரீ ராமாநுஜர் "உத்தரவு; எண்ணற்ற மேற்கோள்களும், எத்தனையோ திருஷ்டாந்தங்களும் எனக்கு என்? தங்களுடைய ஒரு வாக்கே எனக்குப் போதுமானது'' என்று மறுமொழி கூற, நம்பியார் விடைபெற்று வீட்டுக்குச் சென்றார். உடனே ஸ்ரீ ராமாநுஜரும்

க்ஷேத்திரத்துக்குச் சென்று எம்பெருமானுடனே லயித்திருந்து, பின்னர் வீட்டுக்குத் திரும்பிவர, அப்பொழுது அவருடைய மனைவியார், நம்பியார் வந்து உட்கார்ந்திருந்த இடத்தைச் சுத்தி செய்து தானும் ஸ்நாநம் செய்தாளென்பதை ஸ்ரீ ராமாநுஜர் கண்டு தமது மனைவியின்மீது கோபித்துக்கொண்டார்."

எப்படியும் ஸ்ரீ ராமாநுஜர் தமது மனைவி திருக்கச்சி நம்பியாரைச் சூத்திர ரென்று கருதியதற்காகத் தமது மனைவியைக் கோபித்துக்கொண்டார் என்பதில் இவர்களுடைய கூற்றுக்கள் வித்தியாசப்படுகிறதில்லை.

ஸ்ரீ ராமாநுஜர் "ஆ! ஆ! இரண்டு முறை ஏமாந்து விட்டோம்; இதில் ஏதோ விசேஷம் உள்ளது; இம் முறையாவது நான் ஏமாரமாட்டேன்" என்று தாமே சிந்தித்துத் தீர்மானித்துக்கொண்டு, நம்பியாரைத் தேடிச் சென்று கண்டு "ஸ்வாமி! எனது ஹிருதயத்திலே ஆழ்ந்து பதிந்து சில ஆசைகள் உள்ளன; அவ்வாசைகள் எப்பொழுதேனும் நிறைவேறப் பெறுமா என்பதைத் தயவு செய்து ஸ்ரீ வரதராஜப்பெருமானிடமிருந்து தெரிந்து கூறவேண்டுகிறேன்; நீங்கள் கேட்பது எதையும் அவர் மறுக்க முடியாது என்பதை நான் அறிவேன்," என்று தெரிவித்துக்கொண்டார்.

அன்றிரவு நம்பியார் தனித்து சாக்ஷாத் பகவானுடைய சந்நிதியில் இருக்கையில், எம்பெருமான் அவரை நோக்கி, புந்நகை புரிந்துகொண்டே, "நம்பி! நீ என்னவே

என்னைக் கேட்கவேண்டுமென்று நினைத்திருக்கிறாய்போலத் தோன்றுகிறது" என்றார்.

"ஸ்வாமி! ஆமாம்; இன்று மாலையில் ஸ்ரீ ராமாநுஜர் என்னிடம் வந்து தமது ஹிருதயத்திலே யுள்ள சில ஆசைகள் நிறைவேறப் பெறுமா என்று தங்களிட மிருந்து தெரிந்து உரைக்கும்படி என்னைக் கெஞ்சிக் கேட்டுக்கொண்டார்; அவர் மிகவும் மனம் நொந்தவர்போலவும் தோன்றுகிறார்; அவருக்கு அவருடைய விருப்பங்கள் நிறைவேறுமா? நிறைவேறாதா? என்ற இக் கேள்வியிலேயே சகலமும் சார்ந்திருப்பதுபோலத் தோன்றுகிறது."

"அப்படியா? சங்கதி இது. எனது பக்தர்களுக்குள்ளே, மிகவும் சிரேஷ்டமாகிய பக்தர்களுக்குள்ளே, வாலிபன் ஒருவன் இருக்கிறான். அவனுக்கு எனது சித்தத்தைத் தவிர வேறு சித்தம் கிடையாது. இந்த ஜன்மத்திலே அவன் ஒருவரினும் அதிகம் ஜனங்களிடமிருந்து உபதேசங்கள் பெறுவான்; ஆனால், அதெல்லாம் உலகத்துக்காகவே யொழிய உண்மையிலன்று; நான் சாந்திபினி மகரிஷியி னிடத்தில் சிஷ்யனாக யிருக்கவில்லையா? அதுபோல, இந்த வாலிபனும் அநேக ரிடத்தில் சிஷ்ய னாவான். அவன் அறிய விரும்புவதை யுன்னிடம் சொல்லவில்லை. நீ அவனிடம் கொண்டு போய்க் கூறவேண்டிய மறுமொழியை மாத்திரம் உனக்குக் கூறுகிறேன்:— (1) உத்தம சத்தியம் நானே. (2) ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் உள்ள முக்கிய வித்தியாசமே உண்மையான கொள்கை. (3) எனது

பாதங்களை யடைவதற்கு மிகவும் சுலபமானதும், மிகவும் நேரானதுமான மார்க்கம் சரணுகதியும் பிரபத்தியுமேயாம். (4) மனிதன் சரீரத்தை விடுகிறபோழுது, அவன் தனது மனதை என்னிடத்து ஏகாக்கிரப்படுத்த வேண்டு மேன்பதுகூட அவசியமில்லை. (5) இந்த ஜன்மத்தின் அந்தியத்திலே அத்தகையோர் நித்திய காலமேல்லாம் என் முன்னே நிற்கிறார்கள். (6) கேள்வி கேட்பவன் தனது ஞான பிதாவாகிய மகா பூர்ணருடைய பாதங்களி னடியில் உட்கார வேண்டும்.

நம்பியார் இம் மறுமொழிகளைக் கேட்டுக்கொண்டு வீடுவந்து சேர்ந்து, மறுநாள் 'எப்பொழுது விடியுமோ?' என்று காத்துக்கொண் டிருந்தார். மறுநாள் பொழுது விடிந்தது. நம்பியார் அதிகாலையிலேயே எழுந்திருந்து பகவந்நாமஸ்மரணம் செய்து, பின்னர் ஸ்ரீ ராமாநுஜரை யழைத்து வரும்படி ஒரு ஆள் அனுப்பினர்; ஸ்ரீராமாநுஜர் அதிக சந்தோஷத்துடனே ஓடோடி வந்து "ஸ்வாமி! தங்கள் ஸ்ரீ வரதராஜப் பெருமானைக் கேட்டீர்களோ? என்ன சொன்னர்?" என்று கேட்க, நம்பியார் எம்பெருமான் கூறிய மறுமொழியை உரைத்து "இறைவ னிடமிருந்து நீ அறிய விரும்பியவை இவைதானு?" என்று கேட்டார். "குருமூர்த்தி: இவைதா மென்பதில் சந்தேகம் என்ன? எம்பெருமானுடைய கிருபை இவ்வளவு என்மீது உண்டாவதற்கு நான் யாது செய்தேன்?" என்று ஸ்ரீ ராமாநுஜர் ஆநந்தமடைந்தார். "ராமாநுஜ! உனக்கொப்ப புண்

ணியம் செய்தவர்கள் உலகிலே யில்லை; ஈஸ்வர கைங்கர்ய மானது இதற்கு முன் எந்நாளும் இம்மாதிரி நடைபெற வில்லை யென்று எல்லோரும் சொல்லும்படி அவ்வளவு நன்ருக உன் மூலமாய் நடைபெறப் போகின்றது'' என்ருர் திருக்கச்சி நம்பியார்.

இங்கு காஞ்சீபுரத்திலே யிப்படி யிருக்க, ஸ்ரீரங்கத்தி லே ஸ்ரீ யாமுநாசார்ய ருடைய சிஷ்யர்க ளெல்லோரும் சேர்ந்து, மகா பூர்ணரைச் சூழ்ந்துகொண்டு, "ஸ்வாமி! தாங்கள் ஸ்ரீ யாமுநாசார்யராகிய நமது குருமூர்த்திக்கு மிகமிக அந்தரங்கமான பக்தராயிற்றே; இனிமேல் உலகி லே தர்மோபதேசம் செய்யும் ஆசார்யர் யாவரா யிருக்கலா மென்று தாங்கள் சொல்லக் கூடுமா?" என்று கேட்டார்கள்.

அதற்கு அவர் "என்ன நமது குருமூர்த்தியினுடைய சரீரம் பூமியிலே அடக்கம் செய்யப் பெற்ற காலத்திலே நடந்த அற்புதமான விஷயங்களை யெல்லாம் நீங்கள் இவ்வளவு சீக்கிரத்தில் மறந்துவிட்டீர்களா? அவருடைய ஹிருதயமானது எப்பொழுதும் ராமாநுஜரையே அத்தி யந்த ஆவலுடனே நாடிக்கொண் டிருந்தது என்பதை நீங்கள் அறியீர்களா? அவர் மிகமிகச் சிறந்தவராயிருப் பவரைத் தவிர, வேறு எவரையேனும் தெரிந்தெடுத் திருப்பாரா?'' என்ருர்.

அவர்கள் "ஸ்வாமி! தாங்கள் சொல்வது சரியே யாயி னும், தாங்கள் உடனே காஞ்சீபுரம் சென்று, அவரை

யிங்குக் கொண்டுவந்து, எங்க ளெல்லோருக்கும் ஆசார்யரா யிருக்கும்படி செய்யுமாறு நாங்கள் தங்களை வேண்டிக் கொள்கிறோம்; தாங்கள் ஏழைகளாகிய எங்கள்மீது கிருபை புரியவேண்டும்; ஒரு நிமிஷமும் தாமதிக்காது தேவரீர் உடனே காஞ்சிமாநகர் செல்லல் வேண்டும்'' என்றார்கள்.

ஸ்ரீ மகாபூர்ணரும் ''அப்படியே யாகட்டும்'' என்று கூறிக் காஞ்சீபுரத்துக்குப் புறப்பட்டார். இதற்குள்ளாக ஸ்ரீ ராமாநுஜர் முன்னே கூறியுள்ளபடி மகாபூர்ணரிடம் சேர்வ தற்கு ஸ்ரீரங்கம் நோக்கிப் புறப்பட்டார். அவர் ஸ்ரீ வரத ராஜப்பெருமாளிடத்திலும் திருக்கச்சி நம்பியாராகிய காஞ்சி பூர்ணரிடத்திலும் விடை பெற்றுக்கொண்டு புறப்பட்டு வரும் மார்க்கத்தில் மதுராந்தகத்திலே தங்கி அங்குள்ள ஸ்ரீ தடாகபாலக நாதருடைய க்ஷேத்திரத்தினுள்ளே அம் மூர்த்தியைத் தர்சிக்கும் பொருட்டு நுழைய, அங்கே மகா பூர்ணரைச் சந்திக்கும்படி நேர்ந்தது. மகாபூர்ணர் ஸ்ரீரங்கம் விட்டுப் புறப்பட்டுக் காஞ்சீபுரம் வரும் மார்க்கத்திலே மது ராந்தகத்திலே யிறங்கினர்; அங்கே ஸ்ரீராமாநுஜரும் வந்து சேர்ந்தார். இருவரும் ஒருவரை யொருவர் சந்தித்தார்கள். ஆனல், இருவரும் தங்கள் கண்களை நம்பவில்லை. 'என்ன இது? உண்மைதானு? இது நான் தேடிச் செல்லும் ஸ்ரீ மகா பூர்ணர்தானு? கும்பிடப்போன தெய்வம் குறுக்கிட்டது போல, இவர் எதிர்ப்பட்டுவிட்டார்; எனக்கு இனிமேல் நற்காலம்தான்; நான் இவரை நாடி ஸ்ரீரங்கம் புறப்பட, இவர் இங்கே வந்து என்னை எதிர்கொண்டார். எனக்கு ஈஸ்

வர கிருபை யிருக்கிறது என்பது இதனாலே தெரிகிறது' என்று ஸ்ரீ ராமாநுஜர் தாமாகவே சிந்தித்துக்கொண்டு, மகாபூர்ணரை பணிந்து, அவருடைய அடிகளிலே அடியற்ற பனைமரம்போல விழுந்து, ஆநந்தக் கண்ணீர் பொழிந்து, அவரிடத்திலே காஞ்சிநாதர் தமக்கு அளித்த விடைகளை யெல்லாம் புகன்றார்.

மகா பூர்ணருக்கே இது ஆச்சரியத்தின்மேல் ஆச்சரியமாயிருந்தது. ஸ்ரீ ராமாநுஜர் மகா பூர்ணரை நோக்கி, "ஸ்வாமி! ஒரு வேண்டுகோள்: நான் அந்தகாரத்திலே அலைந்து திரிகிறேன்; அஞ்ஞானத்திலே யமிழ்ந்தி யிருக்கின்றேன்; என்னை ரக்ஷிப்பார் எவரையும் காணவில்லை; தங்களிடத்திலே சரண் புகுகின்றேன்; தாங்கள் என்னை ரக்ஷித்தருளல் வேண்டும்; என்னை சிஷ்யனாக ஏற்றுக்கொண்டு, இனிய தளித்து என்னை ஈடேற்றல் வேண்டும்; இனித் தாங்கேன்; இப்பொழுது, இங்கேயே, இந்த நிமிடத்திலேயே என்னை ஏற்றுக்கொள்ளல் வேண்டும்; சரணம், சரணம், ஸ்வாமி!'' என்று கதறினர்.

மகா பூர்ணர், "ஏன் அவ்வளவு அவசரம்? காஞ்சீபுரத்திலே எழுந்தருளுபவரும் நம்மை யிருவரையும் ஒன்று சேர்த்தவருமான எம்பெருமானுடைய சந்நிதானம் போய்ச் சேருமளவும் பொறுக்கலாகாதா? நான் உன்னை ஈஸ்வர சேவகர்களிலே யொருவனாக ஆக்கிவிடுகின்றேன்" என்றார்.

ஸ்ரீராமாநுஜர் "என்ன? தாமத மென்று சொல்கின்றீர்கள்? தாமதிக்கவா சொல்கின்றீர்கள்? உங்களுடைய குருமூர்

த்தியினிடத்திலே நான் உபதேசம் பெறப்போனபொழுது நடந்ததையெல்லாம், நடந்த சங்கதிகள் எல்லாவற்றையும் நீங்கள் நேரில் கண்டிருந்தும், நான் அவசரப்படுகிறே னென்று சொல்கின்றீர்கள்? நாம் காஞ்சிபுரம் போகும் வரையில் நமக்கு இச் சரீரம் நிலையுள்ளதுதான் என்பது உங்களுக்கு நிச்சயந்தானா?'' என்றார்.

“ஆ! ஆ! என்ன தாபம்! ஆத்மஞான மடைதற்குள்ள ஆவல்தான் என்னே! இப்படியும் உண்டா?'' என்று மகா பூர்ணர் தமக்குள் தாமே சிந்தித்துக்கொண்டு, அந்த க்ஷேத்திரத்திலேயே ஒரு பிரகாரத்துக்கு ஸ்ரீ ராமாநுஜரைத் தனிமையாய் ஒரு வகுள விருக்ஷத்தினடிக்கு இட்டுச் சென்று, அவருக்கு ஸ்ரீவைஷ்ணவமத உபதேசம் செய்து, அதற்குரிய முத்திரைகளையும் அணிவித்தார்.

ஸ்ரீ வைஷ்ணவர்கள் உபதேசம் பெறுதல் பஞ்ச சம்ஸ்காரங்களை யாதாரமாகக் கொண்டுள்ளது. அவையாவன:—

(1) தாபம், அதாவது இரண்டு புஜங்களிலும் சங்க சக்கர முத்திரை தரித்துக் கொள்ளுதல்.

(2) புண்டரம், அதாவது நெற்றியிலே இரண்டு இரண்டு வெள்ளைக்கோடு இழுத்து, நடுவில் ஒரு சிவப்புக் கோடு இழுத்தல்; வயிற்றிலே மூன்றும், மார்பிலே யொன்றும், புஜங்களிலே இரண்டும், கழுத்திலே மூன்றும், முதுகிலே யிரண்டுமாக, சரீரத்தின் வேறு பதினொரு இடங்களில் கூடப் புண்டரம் தரித்துக்கொள்ளல் வேண்டும். இப் பன்

னிரண்டு இடங்களிலும் புண்டரம் தினந்தோறும் தரித்துக் கொள்ளப்படவேண்டும்; இவை ஸ்ரீ விஷ்ணுவினுடைய பன்னிரண்டு திருநாமங்களால், அதாவது, கேசவா, நாராயணு, மாதவா, கோவிந்தா, விஷ்ணு, மதுசூதனு, திருவிக்ரமா, வாமனு, ஸ்ரீதரா, ஹிருஷிகேசா, பத்மநாபா, தாமோதரா என்ற பன்னிரண்டு நாமங்களால் அழைக்கப்படுகின்றன.

(3) நாமம்:—வைஷ்ணவர்கள் ஸ்ரீ விஷ்ணுவினுடைய திருநாமங்களேயே தரித்துக்கொள்ளல் வேண்டும்.

(4) உபதேச காலத்திலே குருவினல் உபதேசிக்கப் படுகின்ற ஸ்ரீவிஷ்ணு மந்திரங்கள் பலவாயிருக்கின்றன:—அவற்றுள் மிகமிக முக்கியமானவை:- ஸ்ரீவிஷ்ணு சடாக்ஷரி; ஸ்ரீ நாராயண அஷ்டாக்ஷரி; ஸ்ரீ வாசுதேவ துவா தசாக்ஷரி. இவற்றுள் நாராயண அஷ்டாக்ஷரியும் சரணுகதி மந்திரமும் சரம சுலோகமும் ரஹஸ்யத்திரயம், மந்திரத் திரயம் என்று சொல்லப்படுகின்றன; இவை வைஷ்ணவன் ஒவ்வொருவனுக்கு உபதேச காலத்திலே கட்டாயம் உபதேசிக்கப்படுகின்றன. இவ் வுபதேசம் எந்த ஜாதியைச் சேர்ந்தவனுக்கும்—மிலேச்சனுக்குங்கூட, சண்டாளனுக்குங் கூட—அளிக்கப்படும். இவ் வுபதேசம் அடைந்துவிட்டால் அவன் வைஷ்ணவனுய்விடலாம். வைஷ்ணவர்கள் இம் மந்திரங்களேத் தினந்தோறும் ஜபம் செய்யவேண்டும்.

(5) யாகம், அதாவது சிஷ்யனுக்கு உபதேச காலத்திலே குரு அளிக்கின்ற ஏதேனும் மூர்த்தங்களேப் பூஜித்

தல்; உபதேசம் பெற்றது முதற்கொண்டு, சிஷ்யன் அதை யேதான் பூஜிக்கவேண்டும்; வேறெதையும் பூஜித்தல் கூடாது.

மகா பூர்ணர் இப் பஞ்ச சம்ஸ்கார மூலமாக ஸ்ரீ ராமாநுஜருக்கு உபதேசம் செய்தருளினர்.

ஸ்ரீ மகாபூர்ணர் ஸ்ரீராமாநுஜரைத் தமது வலது பக்கத்திலே யுட்காரும்படி சொல்லி, அவரது சிரசின்மீது தமது வலது கையையும் அவரது ஹிருதயத்தின்மீது தமது இடது கையையும் வைத்து, தமது சிஷ்யர்களுடைய கண்களுக்குள்ளே தமது தீக்ஷண்யமான பார்வையைச் செலுத்தி நோக்கிய வண்ணமாய், தமது குருவைத் தியானித்து, ஆழ்வாராதியர்களின் நாமங்களை யெல்லாம் ஜபித்து, தமது சிஷ்யனுடைய வலக் காதிலே இரு பெரும் உண்மைகளை உபதேசம் செய்தருளினர். பின்னர் மகாபூர்ணர் ஸ்ரீ ராமாநுஜரை நோக்கி, "முற்காலத்திலே ஸ்ரீ ராமச்சந்திரர் காட்டுக்குப் போகும்படி நேர்ந்தபொழுது, அவர் தமக்குப் பிரதிநிதியாகத் தமது பாதரக்ஷகளைப் பரதனிடம் வைத்துவிட்டுக் காட்டுக்குச் சென்றார்; அதுபோலவே, எனது குருமூர்த்தியும் உனக்கு நேரே உபதேசிக்க முடியாமற்போய், அவனுடைய பரிசுத்த பாதங்களை எனது சிரசின்மீது வைத்து, உனக்கு உபதேசிக்கும்படி என்னிடம் ஆக்ஞாபித்துவிட்டுப் போனார். ஆகையால், இப்பொழுது நீ உபதேசம் பெற்றது அவரிட மிருந்தே யொழிய, என்னிட மிருந்தன்று" எனவும், ஸ்ரீ ராமாநுஜர் "ஸ்வாமி!

தாங்கள் கூறியது எனக்கு விளங்கவில்லை; தயவு செய்து அதைத் தெளிவிக்க வேண்டுகின்றேன்" என்று கேட்டார், "அடையப்படவேண்டிய லக்ஷியம் யாது? அதை யடைவதற்குள்ள உபாயங்கள் யாவை? முமுக்ஷு எவன்?"

"காஞ்சிபுரத்தில் யானை மலையிலே யுள்ள ஸ்ரீ வரதராஜப் பெருமானே அடையப்படவேண்டிய லக்ஷியம்; இப்பொழுது உனக்கு உபதேசிக்கப்பட்ட இரு பெரும் உண்மைகளே உபாயங்கள்; நீயே முமுக்ஷு; உனக்கு உபதேசிக்கப்பட்ட உபாயங்களைப் பற்றி லக்ஷியத்தை யநுபவத்தில் அடைந்துவிடு."

இவ்விதமாக மகாபூர்ணர் ஸ்ரீ ராமாநுஜருக்கு உபதேசித்து, பின்னர் அன்று முழுதும் இருவரும் சந்தோஷ சம்பாஷணைகள் செய்து காலம் போக்கிக்கொண் டிருந்துவிட்டு, மறுநாள் காஞ்சிபுரம் நோக்கிப் புறப்பட்டார்கள். திருக்கச்சி நம்பியாராகிய காஞ்சிபூர்ணருக்கு இவர்களுடைய வருகை எப்படியோ தெரிந்துவிட்டது. அவர் இவர்களை எதிர்கொண் டழைத்து, தமது வீட்டுக்கு இட்டுச் சென்று, உபசாரணைகள் பல புரிந்தார். பின்னர் மகாபூர்ணர் நம்பியாரும் ஸ்ரீ ராமாநுஜரும் தம்மைப் பின்பற்றிவர, க்ஷேத்திரத்துக்குச் சென்று, ஸ்ரீவரதராஜப்பெருமான் சந்நிதியிலே மெய்மறந்து நிஷ்டையி லிருந்தார். மகா யோகிப் வராகிய ஸ்ரீ நாதமுனிவர் இனிமேல் பிறக்கப்போகும் தமது பேரப்பிள்ளைக்கு உபதேசிக்கும்படித் தமது சிஷ்யராகிய ஸ்ரீபுண்டரீகாக்ஷரிடம் ஆக்ஞாபித்துவிட்டுப் போனார்;

அவர் தமது அந்திய காலத்திலே தமது சிஷ்யராகிய ஸ்ரீ ராமமிச்ரரிடம் ஆக்ஞாபித்து விட்டுப் போனர். ஸ்ரீ ராமமிச்ரர் ஆறுமாத காலம் ஸ்ரீ யாமுனாசார்யருக்காகக் காத்திருந்து, அவரை யடைந்து, அவருக்கு உபதேசம் செய்து, அவரை ஸ்ரீரங்கத்துக்கு இட்டுச் சென்று, அங்கே யுள்ள மஹா ரஹஸ்யத்துக்கு நேரே நிறுத்திவிட்டார். அதுபோலவே, ஸ்ரீ ஆளவந்தாரால் ஆக்ஞாபிக்கப்பட்ட மகா பூர்ணர் ஸ்ரீ ராமானுஜரைத் தேடி அவருக்கு உபதேசம் செய்து, ஸ்ரீ வரதராஜப் பெருமானுக்கு நேரே கொண்டு போய் நிறுத்திவிட்டார். மகா பூர்ணர் ஸ்ரீ ராமானுஜருக்கு உபதேசிப்பதற்கு ஸ்ரீ ஆளவந்தாருடைய ஒரு கருவி மாத்திரமா யிருந்தாரே யொழிய, ஸ்ரீ ராமானுஜருக்கு குரு வன்று; ஸ்ரீ யாமுனாசார்யரே ஸ்ரீ ராமானுஜருக்குக் குரு.

## மகா தியாகம்

பின்னர் ஸ்ரீ ராமானுஜர் மகா பூர்ணரைத் தமது கிருகத்துக்கு இட்டுச் சென்று, அங்கே அவருக்கு வேண்டிய சௌகர்யங்களெல்லாம் செய்து கொடுத்து, தம்முடனேயே வசிக்கும்படி ஏற்பாடு செய்தார். "ஸ்ரீ ராமானுஜருடைய மனேவியும் மகாபூர்ணரிடம் உபதேசம் பெற்றுக்கொண்டார்" என்று ஒரு சிலர் கூறுகின்றனர். மகாபூர்ணர் அங்கு ஆறு மாதகாலம் தங்கி, பிரபந்தத்திலே முதல் இரண்டாயிரம் பாடல்களையும் வியாச சூத்திரங்களையும் வியாக்கியான உரைகளுடனே நன்கு தெளிவுபடப் போதித்து வர, ஸ்ரீ ராமானுஜரும் நாளுக்குநாள் அதிகரிக்கின்ற பக்தி

சிரத்தையுடனே அவற்றை ஏற்றுக் கிரகித்துத் தெளிந்து மனச் சமாதானம் பெற்றுவந்தார்.

ஒரு நாள் ஸ்ரீ ராமாநுஜருக்கு எண்ணெய் தேய்க்க வந்த ஒரு ஸ்ரீ வைஷ்ணவன் பசியினால் களைத்துச் சோர்வுற்றிருந்தான்; ஸ்ரீ ராமாநுஜர் அதைக் கவனித்து, தமது மனைவியை நோக்கி, "பிராஹ்மணன் பசியாயிருக்கின்றான்; அவனுக்கு அன்னமிடு" என்றார். "நாதா! இன்னும் அன்னம் தயாராக வில்லை" என்றாள் அவருடைய மனைவி.

"அப்படியானால், நேற்று ஆக்கிய சோற்றில் எஞ்சியுள்ளதை யுடனே யிடு!"

"என் செய்யலாம்? அதுகூட யில்லையே."

ஸ்ரீ ராமாநுஜருக்குத் தமது மனைவியிடத்திலே நம்பிக்கை கிடையாது; ஆதலால், அவளை ஏதோ கார்யார்த்தமாக அனுப்புபவர்போல வெளியே அனுப்பிவிட்டுச் சமையலறைக்குள்ளே சென்று பார்த்தார்; பழஞ் சோறு ஏதேஷ்டமாக இருந்தது; இதற்குள்ளாக வெளியே சென்றிருந்த மனைவியும் திரும்பி வந்தாள்; அவர் மனைவியை மிகுந்த கோபத்தோடு நோக்கி "ஆ! பாதகி! ஈஸ்வர னடியார்கட்கு நீ குற்றம் செய்தது இது இரண்டாம் முறை; அந்த வைஷ்ணவன் பசியினால் கீழே விழுந்துவிடுவான்போல யிருந்தும், நீ வீட்டில் சோற்றை வைத்துக்கொண்டே, வேண்டுமென்று என்னிடம் பொய் சொல்லி, அவருக்கு ஆகாரம் அளிக்க மறுத்துவிட்டாய். ஆ! ஆ! எனக்கு இத்தகைய ஸ்திரீயா

இல்வாழ்க்கைத் துணையாகக் கிடைக்கவேண்டும்? நல்லது, ஜாக்கிரதை! இனிமேல் இம்மாதிரி எனக்குத் தெரியவந்தால், நான் மிகவும் கொடுமையாக இருக்கவேண்டி வரும்" என்றார்.

சின்னாட்கள் சென்றன; ஒரு நாள் ஸ்ரீ ராமாநுஜருடைய மனைவி கிணற்றிலே தண்ணீர் எடுத்துவரச் சென்றாள்; அப்பொழுது மகாபூர்ணருடைய மனைவியும் தண்ணீர் எடுக்க அக் கிணற்றுக்குச் சென்றாள்; இருவரும் அக் கிணற்றினின்று தண்ணீர் இறைத்துக்கொண்டிருக்கையில், மகா பூர்ணருடைய மனைவியின் குடத்தி லிருந்து சில நீர்த்துளிகள் தெறித்து ஸ்ரீ ராமாநுஜருடைய மனைவியின் குடத்தில் விழுந்தன; உடனே ஸ்ரீ ராமாநுஜருடைய மனைவிக்குக் கோபம் வந்துவிட்டது; மகா பூர்ணர் முன்குடுமிச் சோழியப் பிராஹ்மணராதலாலே, அவர் தாழ்ந்த ஜாதியினரென்று ஸ்ரீ ராமாநுஜருடைய மனைவி நினைத்து, மகா பூர்ணருடைய மனைவியை நோக்கி "அடியே! உனக்கு அவ்வளவு கர்வமா? நீங்கள் இருக்கிற இருப்பு எனக்குத் தெரியாதா? அன்புடன் அடுப்பங்கரையில் பூனை யுறங்குகிறதே; இவ்வளவு தரித்திரத்திலிருந்தும் உனக்கு இவ்வளவு மமதையா? இன்னும் நீ, என்னடி? சோழிய ஜாதிதானே. நீ உன்னுடைய தண்ணீரினால் என்னைத் தீண்டலாமா?" என்று பலவாறு திட்டிக் கடுமையாகப் பேசினாள். இச் சமயத்திலே ஸ்ரீ ராமாநுஜர் ஊரி லில்லை; ஏதோ காரியார்த்தமாக ஸ்ரீபெரும்பூதூருக்குச் சென்றிருந்தார்.

ஸ்ரீ ராமாநுஜருடைய மனைவிக்கும் தமது மனைவிக்கும் சச்சரவுண்டாயிற் றென்ற சங்கதி மகா பூர்ணருக்குத் தெரியவந்தது; பெரியநம்பி யென்றும் பெயரையுடைய மகாபூர்ணர் தமது மனைவியைக் கடிந்துகொண்டு ஸ்ரீ ராமாநுஜர் இச் சங்கதியை அறிவதற்கு முன்னால் தமது குடும்பத்தைக் கூட்டிக்கொண்டு ஸ்ரீரங்கத்துக்குப் புறப்பட்டு விட்டார்.

ஸ்ரீ ராமாநுஜர் திரும்பி வந்தார்; அவருடைய குரு அவசரமாகப் புறப்பட்டுப் போய்விட்டா ரென்பதும் அதற்குக் காரணமும் தெரிந்துகொண்டார். 'ஆ! ஆ! குருமூர்த்தி பிரிந்து செல்லும்படி நேரிட்டதே' என்று கண்ணீர் ஆறு யொழுக்கினர்; கோபம் ஒரு பக்கம் பொங்கிவிட்டது; கண்களில் நெருப்புப் பொறி பறக்க, கடுகடுத்த முகத்துடனே தமது மனைவியைத் திரும்பிப் பார்த்து "ஏ, பாதகி! உனக்கும் எனக்கும் இனிமேல் சரிப்படாது; நீ மகா துஷ்டை; பெரும் பிசாசம். திருக்கச்சி நம்பியார் விஷயத்திலே நீ என்னுடைய விருப்பம் ஈடேறாதபடி செய்தாய்; இது முதலாவது தடவை; நான் அப்பொழுதும் மன்னித்தேன். இன்னொரு சமயத்திலே நீ, பசித்துக் களைத்த ஒரு வைஷ்ணவனுக்கு அன்னமிட மறுத்துவிட்டாய்; இது இரண்டாவது குற்றம் நான் அப்பொழுதும் மன்னித்தேன். இப்போது எனது உயிருக்குயிரான, திரிலோகங்களினும் அருமையான எனது குருமூர்த்தியையே துரத்திவிட்டாய். ஆ! ஆ! நல்ல மனைவி வாய்த்தாய். நீ பேயோ? பெண்டோ?

உண்மையைக் கூறு! நான் எப் பாபம் செய்து உன்னை யடைந்தேன்? இனிமேல் உன்னை யிங்கு வைத்துக்கொண்டிருக்க என்னால் முடியாது; நீ உனது பிறந்த அகத்திலிருந்து என்ன வெல்லாம் கொண்டுவந்தாயோ அவற்றை யெல்லாம் எடுத்துக்கொண்டு உனது பெற்றோரிடம் போய்ச் சேர்,'' என்று கூறி, அனுப்பிவைத்துவிட்டார்.

ஸ்ரீ ராமாநுஜர் தமது மனைவியை இச் சமயத்தில் அவளுடைய பிறந்தகத்துக்கு அனுப்பவில்லை யென்றும், வேறொரு சமயத்தில் அனுப்பினா ரென்றும், அச் சமயம் பின் வருமாறு என்றும் சிலர் கூறுகின்றனர்:—

ஸ்ரீ ராமாநுஜருடைய மனைவியின் பெயர் தஞ்சமாம்பாள்; இவர் ஸ்ரீராமாநுஜருக்குண்டான அபாரகோபத்தைக் கண்டு நடுநடுங்கி, பயந்து, மன்னிப்புக் கேட்டுக்கொள்ள, சாந்தமே உருவாக உடைய ஸ்ரீ ராமாநுஜர் தமது கோபமடங்கப்பெற்றார்; ஆனால், 'எப்படியாவது சீக்கிரத்திலே இந்த மனைவியை அவளுடைய பிறந்த அகத்துக்கு அனுப்பிவிடவேண்டும்' என்று தீர்மானித்துக்கொண்டார்.

ஒருநாள் ஸ்ரீ வரதராஜப் பெருமானுடைய க்ஷேத்திரத்திலே பெரியதோர் உற்சவம் நடந்தது; அப்பொழுது ஸ்ரீ ராமாநுஜர் க்ஷேத்திரத்தில் திருப்பணிகள் செய்துகொண்டிருக்கையில், ஒரு ஸ்ரீ வைஷ்ணவன் அவரிடம் வந்து ''ஸ்வாமி! எனக்குப் பசியினால் உயிர் போகிறது; இப்பொழுது கொஞ்சம் அன்ன மளிக்கவேண்டும்'' என்று

கேட்க, ஸ்ரீராமாநுஜர் "நிரம்பச் சந்தோஷம்; ஆனால், இப்பொழுது நான் திருச் சந்நிதானத்திலிருந்து வர முடியாது; எனது கிருகத்துக்குச் சென்று, எனது மனைவியைக் கண்டு, நான் அனுப்பியதாகக் கூறி, அன்ன முண்டு போங்கள்; நானே வந்து கவனிக்க முடியாதிருத்தல்பற்றி என்னை மன்னிக்குமாறு வேண்டுகிறேன்," என்று கூறினார்.

பிராஹ்மணன் அப்படியே ஸ்ரீ ராமாநுஜருடைய வீட்டுக்குச் சென்று, சங்கதியைச் சொல்ல, ஸ்ரீ ராமாநுஜருடைய மனைவி இப் பிராஹ்மணனை யொரு கடுகடுத்த பார்வையோடும்பார்த்து, "நன்று, நன்று; எங்களுக்கே இங்குச் சோற்றுக்குத் திண்டாட்டமா யிருக்கின்றது; இன்னொருவருக்கு எங்கிருந்து போடுவது? தவிர, நீர் என்ன? ஐயா! கூனா, குருடா, செவிடா, நொண்டியா; வேலை செய்து பிழைக்கக்கூடாதா? எருமைக்கடாப்போ விருந்துகொண்டு இரந்துண்கின்றீரே! உமக்கு வெட்கமில்லையா? இவர் (ஸ்ரீ ராமாநுஜர்) எப்பொழுது பார்த்தாலும் கோவில், குளம் என்று போயிருந்துவிடுகிறது; நினைத்த பேர்களை யெல்லாம் சாப்பாட்டுக்கு மாத்திரம் அனுப்பிவிடுகிறது; குடும்ப சங்கதியைக் கவனிப்பதே யில்லை. இவருடைய வேதாந்தமும் பக்தியும் வயிற்றுக்குச் சோறிடுமா? ஆ! ஸ்ரீவரதராஜப் பெருமானே! எனக்கு இத்தகைய புருஷனை யா அருளவேண்டும்?. நான் செய்த பூஜா பலன் இவ்வளவுதானோ? போ! ஐயா! போ! வெட்கம் மானம் இருந்

தால் இம்மாதிரி இன்னொரு வீட்டிற்குப் போஜனத்துக்குப் போகாதே" என்று பலவாறு இகழ்ந்து அனுப்பினாள்.

அந்தப் பிராஹ்மணன் திரும்பவும் ஸ்ரீராமாநுஜரிடம் சென்று, கோபமும் துக்கமும் பொங்க, "ஐயா! என்னுடைய தரித்திரமல்லவா எனக்கு இத்தகைய இகழ்ச்சியை உண்டாக்கியது? என்ன? ஐயா! என்னை நிந்திக்க வேண்டுமென்றால், நீரே நிந்தித்திருக்கக் கூடாதா? ஒரு பெண்பிள்ளையினிடம் அனுப்பி, அவளைக் கொண்டா நிந்திக்கும்படி செய்யவேண்டும். நான் பசித்து உயிர் போகிறதென்றால், என்னை யிப்படிப் பரிகாசம் பண்ணலாமா?" என்று கூற, ஸ்ரீ ராமாநுஜர் அந்தப் பிராஹ்மணனுடைய பாதங்களில் விழுந்து "ஐயா! சற்று அமைதி யடைந்து, நடந்ததைக் கூறுங்கள்!" என்று கேட்டு, சங்கதிகளை யெல்லாம் தெரிந்துகொண்டு, "ஸ்வாமி! தாங்கள் என்னைத் தப்பாக அறிந்திருக்கின்றீர்கள். அவள் காட்டிய கொடுமைக்கு நான் பாத்திரவானாக முடியுமா? நல்லது, தாங்கள் பட்டதோ பட்டீர்கள்; எனக்காக இன்னும் கொஞ்சம் சிரமம் எடுத்துக் கொள்ளும்படியாக வேண்டுகிறேன்," என்று சொல்லிவிட்டு, தமது மனைவிக்கு அவருடைய பெற்றோர் எழுதுவதுபோல, அவளுடைய சகோதரனுக்கு விவாகமென்றும், அதற்கு அவளும் அவளுடைய புருஷனும் சீக்கிரம் வரவேண்டுமென்றும் எழுதி, பிராஹ்மணருடைய கையிலே கொடுத்து, அவளுடைய பெற்றோர் அனுப்பியது போல, விலை யுயர்ந்த ஆடையாபரணாதிகள் சிலவற்றையும் அனுப்பிவைத்தார்.

பிராஹ்மணனுக்குப் பசியாயிருந்தபொழுதிலும் அந்த ஸ்திரீ தனக்குச் செய்த தீமையை நினைத்துப் பசியைப் பொறுத்துக்கொண்டு, ஸ்ரீ ராமாநுஜருடைய மனைவியிடம் சென்றான். அவள் இந்த பிராஹ்மணனைப் பார்த்தவுடனே "திரும்பவும் நீ வந்துவிட்டாயா? எனது புருஷன் இப்பொழுது என்ன சொல்லி யனுப்பினார்?" என்று கூக்குரலிட்டாள். பிராஹ்மணன் சிரித்துக்கொண்டே "அம்மா! நான் உங்கள் வீட்டுக்குச் சாப்பிட வரவில்லை. சென்ற முறை உன்னிடம் வந்தபொழுது, உன்னைப் பரிசோதனை செய்து பார்த்தேனே யொழிய, உண்மையில் உங்கள் வீட்டில் உண்பதற்கு வரவில்லை; நான் உன் பெற்றோரிடமிருந்து வந்தவன்; உனது சகோதரனுக்குச் சீக்கிரத்திலே விவாகம் ஆகப்போகின்றது; அதற்காக உன் பெற்றோர் உனக்கு ஒரு கடிதம் எழுதி, உன்னையும் உன் புருஷனையும் கூட்டி வரும்பொருட்டு என்னை யனுப்பிவைத்தார்கள்; இதோ அக் கடிதம்; இதோ உன் பெற்றோர்கள் உனக்கனுப்பிய சீதனங்கள்" என்று சொல்ல, அவள் அந்தக் கடிதத்தை வெகு ஆவலுடனே வாங்கிப் படித்துவிட்டு, தனக்குத் தன் பெற்றோ ரனுப்பிய ஆடை யாபரணாதிகளைப் பார்த்துப் பார்த்து மகிழ்ந்து மனம் பூரித்தாள்.

அவள் தன் பெற்றோருடைய யோக க்ஷேமங்களைப் பற்றி விவரமாகப் பல கேள்விகள் கேட்க, அந்த பிராஹ்மணனும் அதிக புத்திசாலித்தனத்துடனே, ஸ்ரீ ராமாநுஜர் தமக்குக் கற்றுக்கொடுத்திருந்த பிரகாரம், மறுமொழி கூறி

வந்தாள். பின்னர் அவள் "ஆ! ஆ! மறந்துவிட்டேனே! நான் என்ன மூட ஜன்மம் எடுத்தேன்! நான் புத்தியில்லாமல் கேள்விகள் கேட்டுக்கொண்டேயிருக்கிறேனேயொழிய யாத்திரையினால் களைத்துப் பசித்துத் துடிக்கும் தங்களுக்கு ஆகார மளிக்கவேண்டு மென்ற எண்ணம் எனக்குண்டாகவேயில்லையே! கொஞ்சம் இருங்கள்!" என்று சொல்லிவிட்டுச் சென்று, வெகு சீக்கிரத்திலே அதி ருசியான ஆகாரம் தயார் செய்து, அதிக உபசாரத்துடனும் அன்புடனும் அந்த அதிதிக்கு அளித்தாள். விவாக மானதுமுதல் ஸ்ரீ ராமாநுஜருக்குக்கூட இவள் இவ்வித உபசாரம் செய்ததில்லை.

இதற்குள்ளாக ஸ்ரீ ராமாநுஜர் வீட்டுக்குத் திரும்பி வந்து சேர்ந்தார்; அவருடைய மனைவி அவரிடத்திலே தமது பெற்றோரிடமிருந்து வந்த கடிதத்தைக் கொடுத்து, அவர்கள் தனக்கு அனுப்பிய சீதனங்களையும் காண்பித்து மகிழ்ந்தாள். அவரும் அதிக சந்தோஷ மடைந்தவர் போலவும், ஆச்சர்ய மடைந்தவர் போலவும் அபிநயித்து, கடிதத்தைப் படித்துப் படித்துப் பார்த்து, சீதனங்களை யெல்லாம் கண்ணுற்றுக் களித்து, "நாயகி! கட்டாயம் நாம் போய்த் தீரவேண்டும்; ஆனால், எனக்கு இப்பொழுது இங்குக் கொஞ்சம் அவசர வேலை யிருக்கின்றது; நானே அவ் வேலையை நேரே பார்த்துத் தீரவேண்டி யிருக்கிறது; ஆகையால், நான் இப்பொழுது உன்னுடனே வர முடியாது; ஆனால், நான் முகூர்த்தத்துக்குக் கட்டாயம் வந்து சேர்வேன்; இது நிச்சயம்" என்று கூறி, அந்த பிராஹ்மணனுக்குத் தகுந்தபடி

சன்மானங்கள் செய்து, அவளை அவளுடைய பெற்றோரிடம் கொண்டுபோய் விட்டுவிடும்படி அந்தப் பிராஹ்மணனைக் கேட்டுக்கொண்டார். உடனே அவருடைய மனைவி தனது ஆடையாபரணங்களெல்லாவற்றையும் எடுத்துக்கொண்டு, தன்னுடைய பெற்றோரிடம் சென்றாள். ஸ்ரீ ராமாநுஜர் பின்னர் அவளைப் பற்றி யொருபொழுதும் நினைக்கவேயில்லை; அவள் மரித்துவிட்டதாக அவர் நினைத்துக்கொண்டார்.

பின்னர் தமக்கு இல்லற வாழ்க்கை போதுமென்றும், இனிமேல் இல்லறத்தில் இருக்க முடியாதென்றும் தீர்மானித்துக்கொண்டார். அறிவும் கீழ்ப்படிதலு முள்ள மனைவியில்லாவிடில் இல்லற வாழ்க்கை எங்ஙனம் நடைபெறும்? ஆகையால் அவர் கிரகஸ்தாச்ரமத்தைத் துறந்து சந்நியாசியாவதாக நிச்சயித்துக்கொண்டார். அவர் அநந்த சரஸ் தீர்த்தத்திலே ஸ்நாநம் செய்து, ஸ்ரீ வரதராஜப் பெருமானுடைய க்ஷேத்திரம் சென்று! "எம்பெருமானே! இறைவா! இல்லறவாழ்க்கை எனக்குப் போதும், போதும்; நான் உன்னையும் உனது அடியார்களையும் ஒரு மனத்துடனே உபாசிப்பதற்காக உத்தமமான சந்யாசாச்ரமம் வகிக்க விரும்புகின்றேன். பிரபு! என்னை உனது பாதாரவிந்தங்கட்குப் பாத்திரவானாக்கு; திரிதண்டமும் காஷாயமும் எனக்கு அளிப்பாய்" என்று பிரார்த்தித்தார். எம்பெருமானுக்கு அதிக சந்தோஷம் உண்டாயிற்று. அவர் தமது அர்ச்சகரிடத்திலே ஆவேசமாகத் தோன்றி "அவற்றை யெடுத்துத்

தரித்துக்கொள்வாய்; இனிமேல் நீ மனிதர்களுக்குள்ளே யதிராஜ ஸ்ரீராமாநுஜ முனி என்று அழைக்கப்படுவாய்'' என்றார். பின்னர் அவர், நம்பியாருக்குச் சொல்லியனுப்பி, அவரை நோக்கி, “நமது ஸ்ரீ ராமாநுஜருக்குத் தகுந்ததாக ஒரு மடம் பார்த்து, அவருக்குத் தகுந்த மரியாதைகள் செய்து, அவரை ஒரு பெரிய அதிபதியாக்கிவிடு!'' என்று ஆக்ஞாபிக்க, நம்பியாரும் மனமகிழ்ந்து “வெகு சந்தோஷம்; நான் சுகிர்த னானேன்'' என்று கூறிக்கொண்டு, அம் மஹாத்மாவுக்குச் சௌகர்யமான விடுதிகள் ஏற்பாடுசெய்து கொடுத்தார்.

ஸ்ரீ ராமாநுஜர் அவ்விடத்திலே ஒருசில மாதங்கள் வசித்து, சந்யாசாச்ரமத்தின் விதிகளெல்லாம் வழுவாது ஒழுகி வருங் காலையில், ஒருநாள், அவர், தமது குரு ஸ்ரீ யாமுநாசார்யரை நினைந்துகொள்ளும்படி நேரிட்டது 'மஹாத்மாவாம் எனது குரு எளியேனிடத்தில் அபார கிருபை காட்டிவிட்டார்; நான் செய்த பாக்கியந்தான் என்னே? எனது மார்க்கத்திலே தோன்றிய இடையூறுகளை யெல்லாம் ஒன்றன்பின் ஒன்றாக அவர் நீக்கி வைத்துவிட்டார்; நான் நெடு நாட்களாக ஆசித்துக்கொண்டிருந்த ஆச்ரமத்தை நான் அடையுமாறு கிருபை புரிந்துவிட்டார். எனது குருமூர்த்தியின் கடைசி விருப்பங்களைப் பூர்த்தி செய்ய நான் இப்பொழுது முயலுவேன். ஆனால், நான் அந்தோ! தனித்திருக்கிறேனே! எனக்கு எவரும் உதவி யில்லையே! எனக்குப் பழைய தோழனாகிய கோவிந்தன் இங்கு என்னுடன் இருப்

பானே யாகில், போதும். அவன் ஒருவனே என் ஹிருதயத்துக் கிணங்கியவன்; உலக சுகங்களும் கௌரவங்களும் அவனை அசைக்க முடியா; நமது மதத்தைப்பற்றி, அவன் அறியாதது ஒன்றுமே யில்லை; அவனுக்கு நல்ல, கூர்மையான, க்ராஹ்ய புத்தி யுண்டு; என்னிடத்திலே அளவற்ற அன்பும் ஆசையு முண்டு. ஆனால், அவன் இப்பொழுது என்ன தீய கர்மம் செய்தானோ, எனது காஞ்சிநாதரினும் வேறொரு கடவுளைப் பூஜிக்கின்றான்; அவனுடைய தப்பிதத்தை யவனுக்கு எடுத்துக் காட்டி, அவனை எனது பக்கம் திருப்பிக் கொண்டுவருவதற்கு எவரைப் பிடிக்கலாம்?'

இவ்விதமாகச் சிந்தனை செய்து, சிறிது நேரம் ஆலோசனையி லிருந்து, ஸ்ரீ ராமாநுஜர் 'ஆ! சரிதான்; எனக்கு ஏன் இவ்வளவு மூடத்தனம் உண்டாகிறது? எனது மாமன் ஸ்ரீ சைலபூர்ணர் இருக்க, எனக்கு என்ன குறை? அவர், நற்குணங்க ளெல்லாம் அவதாரமாய் வந்தவர்; ஆழ்ந்த ஞான ஊற்று; ஸ்ரீ வரதராஜப் பெருமானிடத்திலே எப்படிக் காஞ்சிபூர்ணர் அரியவரா யிருக்கிறாரோ, அப்படியே இவரும் ஸ்ரீ வேங்கடேசப் பெருமானிடத்திலே அரியவரா யிருந்து வருகின்றார். கோவிந்தரை என் பக்கம் திருப்பிக் கொண்டு வருவதற்கு அவர் ஒருவரே தகுந்தவர்' என்று தீர்மானித்துக்கொண்டு, அவருக்கு ஒரு கடிதம் எழுதித் தமது நண்பர் ஒருவரை யனுப்பிவைத்தார். அக் கடிதத்திலே பின் வருமாறு எழுதப்பட் டிருந்தது:—

"தங்களுடைய மருமகனும் எனது சகோதர சிஷ்யனுமான கோவிந்தர் அவர் செய்த ஏதோ தீய கர்மத்தினாலே

அந்நியக் கடவுளர்களிடத்து பக்தி செலுத்துகின்றான்; இப்பொழுது காளத்தியில் இருக்கின்றான்; தயவு செய்து என் பொருட்டு அவனிடம் சென்று அவனுடைய அந்தகார வாழ்க்கையினின்றும் அவனைத் தப்புவித்து, மறுபடியும் அவனைச் சன்மார்க்கத்தில் கொண்டுவரும்படி நான் வேண்டிக் கொள்கிறேன்."

ஸ்ரீ ராமாநுஜருக்கு பூமி, கமலா என்ற பெயர்களுடன் இரண்டு சகோதரிகள் இருந்தனர். பூமியென்பாள் புருஷமங்கலம் அநந்த தீக்ஷிதர் என்பவருக்கு விவாகம் செய்விக்கப்பட் டிருந்தாள்; இவர்களுக்கு முதலியாண்டான் என்ற பெயருடன் சாதாரணமாக எல்லோருக்கும் தெரிந்த தாசரதி யென்பவர் புத்திரனாக ப்ரபவ வருஷம் மீனமீ உரு-ம் தேதியன்று கிருஷ்ண பக்ஷம் தசமி திதி புநர்வசு நக்ஷத்திரத்திரமும் கும்ப லக்னமும் கூடிய சுபதினத்தில், வடம ஜாதியில், கந்தாதை குடும்பத்தில், வாதுல கோத்திரத்தில், ஆபஸ்தம்ப சூத்திரத்தில், யஜுஸ் சாகையில், பாத அம்சத்தில் பிறந்து வளர்ந்து பெரியோராகி, ஸ்ரீ ராமாநுஜருடைய மகிமையைப்பற்றிக் கேள்விப்பட்டு, ஆநந்த பூரிதராய்க் காஞ்சீபுரம் சென்று அவருடைய பாதங்களில் விழுந்து, "ஸ்வாமி! குருமூர்த்தி! என்னைத் தங்களுடைய சிஷ்யனாக ஏற்றுக்கொள்ளவேண்டும்" என்று வேண்டி நிற்க, ஸ்ரீ ராமாநுஜர் "அப்படியே யாகட்டும்" என்றார். அன்று முதல் ஆண்டான் ஒரு நிமை நேரமும் ஸ்ரீ ராமாநுஜரிடமிருந்து பிரிந்த தில்லை; ஆண்டான் ஸ்ரீ ராமாநுஜருக்கு

அவருடைய திரிதண்டம்போ லிருந்தான்; குருமூர்த்தியி னுடைய பரிசுத்த பாத ரக்ஷைகள் ஆண்டான் பெயரால் அளிக்கப்பட்டன. ஆண்டான் உலகிலே நூற்றைந்து வருஷங்கள் உயிருட னிருந்தார்; இவர், ரகஸ்யத்திரயம் என்று ஒரு நூலை யியற்றியுள்ளார்.

ஸ்ரீராமாநுஜரை முதன்முதலில் அணுகி அவருக்குச் சிஷ்யர்களானவர்களுள் ஆள்வான் என்பவர் ஒருவராம் இவருடைய உண்மைப் பெயர் ஸ்ரீ வத்சாங்கர் என்பதாம். இவர், காஞ்சிபுரத்துக் கருகாமையி லுள்ள கூரம் என் னும் கிராமத்திலே ஸ்ரீ ராம சோமயாஜி அல்லது அநந்தர் என்பவருக்கும் ஸ்ரீ பெருந்தேவி என்னும் மாது சிரோ மணிக்கும் சௌம்ய வருஷம் - மகர மாசம்-பஞ்சமி-குரு வாரம்-அஸ்த நக்ஷத்திரத்திலே, ஹாரித கோத்திரத்தில் ஆபஸ்தம்ப சூத்திரத்திலே, யஜுஸ் சாகையில் பிறந்தவர். இவர், ஆண்டாள் என்னும் பெயரையுடைய ஒரு பெண்ணை விவாகம் செய்துகொண்டார். இவருக்குப் பராசரர் என்றும், வேதவியாசபட்டர் என்றும் இரண்டு புத்திரர்கள் உண்டு. பிள்ளைப்பிள்ளையாழ்வான், நாலூரான், திருவரங்கத் தமுத னார் ஆகிய இம்மூவரும் இவருடைய சிஷ்யர்கள். இவர் உல கிலே 108வருஷங்கள் உயிருட னிருந்தார். (1) ஸ்ரீ வரத ராஜஸ்தவம், (2)சுந்தரபாகு ஸ்தவம், (3) அதிமாநுஷ ஸ்த வம், (4) ஸ்ரீவைகுண்ட ஸ்தவம், (5) ஸ்ரீஸ்தவம், (6) யமக ரத்னாகரம், (7)கத்யத்ரய வியாக்கியானம் ஆகிய இந்நூல்களை யெல்லாம் இவர் இயற்றியுள்ளார்.

இவர் பெருத்த தனவந்தரா யிருந்தது மன்றியில், சற்குணங்கள் யாவும் சம்பூர்ணமாய் நிறையப் பெற்றவரா யும் இருந்ததினாலே, இவர் சாதாரணமாகக் கூர நாதர் என வழங்கப்பட்டு வந்தார். 'இல்லை' என்று சொல்லாது எவருக்கும் எக் காலத்தும் எதுவும் தவறாது ஈயும் தன்மை யுள்ளவரா யிருந்ததினாலே, 'அவர் மகா தாதா' என்று உலகப் பிரசித்தி யடைந்திருந்தார்; காலைமுதல் மாலை வரை யில் பலவித ஜனங்களும் அவரிடம் வந்துகொண்டே யிருப் பார்கள்; அவர் தயாள குணமே உருவாக வந்தவர்; ஏழை யெளியவர்களுக்கு அவர் ஒருபொழுதும் இல்லை யென்று சொன்னதில்லை. ஒரு நாள் இரவு காஞ்சீபுரத்திலே ஜகன் மாதா தூரத்திலே யிருந்து ஒரு சப்தம் வருவதைக் கேட் டாள்; "அர்த்த ராத்திரியிலே அசாதாரணமான அச்சப் தத்துக்குக் காரண மென்ன?" என்று அறிந்துகொள்ளும் பொருட்டு, அவள் காஞ்சிநாதனிடம் "ஸ்வாமி! அந்த காரமும் நித்திரையும் அரசு செய்யும் இச் சமயத்திலே இந்தச் சப்தம் எங்கிருந்து வருகிறது?" என்று கேட் டாள்.

காஞ்சீபுரத் தெம்பெருமான் "கண்மணி! இந்தச் சப் தம் ஆச்சரியமு மன்று, அசாதாரணமு மன்று; நான் இந் தச் சப்தத்தைத் தினந்தோறும் கேட்கின்றேன்; எனது காதுகட்கு இது அதிக இன்பகரமா யிருக்கின்றது. இந் நகருக்கு அருகி லுள்ள ஒரு கிராமத்திலே அன்ன தாதா ஒருவன் இருக்கின்றான்; அவன் அன்னதானம் செய்துவிட்

டுப் படுக்கப் போகு முன் அடைக்கின்ற வாசற் கதவுகளின் சப்தமாம்'' என்று மறுமொழி கூறினர்.

"ஆ! அப்படியா? அவனை என் நான் பார்ப்பதற்குக் கொண்டுவரவேண்டுமென்று தாங்கள் இதுகாறும் நினைக்கவில்லை. ஆ! தங்களுக்கு என்ன ஸ்வய நலம்! இப்படியொரு தாதா இருக்கிறான் என்ற எண்ணத்தைத் தாங்களே வைத்துக்கொண்டு ஆநந்த மடைந்துகொண் டிருந்தீர்களே!''

ஸ்ரீ வரதராஜப் பெருமான் தம் மருகிலே தொண்டு செய்திருந்த காஞ்சீ பூர்ணரை நோக்கி, கூரநாதரைத் தங்களிடம் அழைத்து வரும்படி யாக்ஞாபித்து அனுப்பினர். மறுநாட் காலையிலே திருக்கச்சி நம்பியாராகிய காஞ்சீ பூர்ணர் ஸ்ரீ வத்சாங்கருடைய வீட்டுக்கு வந்து, அவரைக் கண்டு, ஈஶ்வர சித்தம் இத்தகைய தென்று தெரிவிக்க, ஸ்ரீ வத்சர் ஒரு நிமிஷ நேரம் யோசனை செய்தார். "சாஸ்திரங்கள் என்ன கூறுகின்றன? 'உனது இடது கை கொடுப்பதை வலது கை அறிதல் கூடாது.' நான் ஒரு பெரிய அன்ன தாதா வென்று தெரிந்துவிட்டதா? எனக்குத் தெரியாமலே என்னிடத்தில் அகங்காரம் உண்டா யிருக்கின்றது. சர்வ தாதாவினுடையவும் கவனத்தை யிழுக்கும்படியாக அவ்வளவு அகங்காரம் என்னிடத்தில் உண்டா யிருக்கின்றது. பாபிகளுக்குள் மகா பாபியாய் அகங்காரக் கிரந்தியாய் இருக்கும் நானு ஈஶ்வர சந்நிதானத்திலே செல்வது? எனக்கு உண்மையை உணர்த்திய எம்பெருமானுக்கு நான் என்றென்றும் அடிமை. எப்பெருமானுடைய சந்நிதானத்

திலே நான் நிற்பதற்கு இன்னும் யோக்கியதை யற்றவன் என்பதை விநய பூர்வகமாக நான் தெரிவித்துகொண்டே னென்று தயவு செய்து அறிவித்துவிடுங்கள்'' என்று ஸ்ரீ வத்சர் திருக்கச்சி நம்பியா ரிடத்திலே புகன்றார்.

பின்னர், அவர் தமது அளவற்ற ஐச்வர்யத்தை எளிய வர்களுக்குள்ளே சூறையாடும்படி இறைத்துவிட்டு, காஞ்சி மாநகருக்குப் பிரயாணப்பட்டார். அவருடைய மனைவி மகா உத்தம குணம் வாய்ந்தவள்; பதிவிரதா சிரோமணி. இவ் வம்மையாரும் தனது புருஷனுக்குத் தெரியாமல், புருஷன் போகும் மார்க்கத்தைப் பின்பற்றிக் கொஞ்ச தூரத்திலே நடந்தாள். அவர்கள் ஒரு பெருத்த, இருண்ட காட்டின் வழியாகச் செல்லும்படி நேர்ந்தது; அவ் வம்மையார் பயந்து "நாதா! எனக்குப் பயமா யிருக்கின்றது'' என்றாள்.

ஸ்ரீ வத்சர் தமது மனைவியின் சப்தத்தைக் கேட்டு திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தார்; தமது மனைவி பின் தொடர்ந்து வருவதைக் கண்டு, ஆச்சர்ய மடைந்தவராய், "உனது வீடு வாசல்களை, உற்றார் உறவினரை எல்லோரையும் விட்டுவிட்டு ,வீடுவாச லற்று வெட்ட வெளியிலே திரிகின்ற என்னைப் பின் தொடரும்படி உனக்குப் போதித்தவர் யாவர்?'' என்று கேட்டார்.

அவ் வம்மையார் "நாதா! எனது ஹிருதயம் தங்களிடத்தி லல்லவா பதிந்திருக்கின்றது; உங்களை மறந்தால் எனக்கு உலகமேது? இகத்தும் பரத்தும் எனது நம்பிக்

கைக்கு ஆதாரமானவர் தாங்கள்தானே; எப்பொழுதே னும் இவ் வெண்ணத்திலே நான் வேறுபட்டு நின்றதுண் டா?" என்று மறுமொழி கூறினள்.

"அதிருக்கட்டும்; விலை பெறத் தகுந்ததாக ஏதேனும் நீ கொண்டுவந்துள்ளாயா?"

"ஆம், நாதா! கொண்டுவந்திருக்கின்றேன்; எனது நாதர் தீர்த்தம் அருந்துவதற்கு ரத்தினங்க ளிழைத்த இந்தப் பொற்செம்பை எடுத்துகொண்டு வந்தேன்."

மனைவியினுடைய இம் மறு மொழியைக் கேட்டு ஆழ்வான் சிரித்தார், சிரித்தார்; விழுந்து விழுந்து சிரித் தார்; கக்கட கக்கட வென்று சிரித்தார். "ஏ, கள்ளங் கப டற்ற விஸ்வாசமுள்ள ஹிருதயமே! பிச்சை யெடுப்போன் எப்பொழுதாவது ரத்தினங்க ளிழைத்த பொற்செம்பிலே தீர்த்த மருந்தியதுண்டா? அதை யிங்குக் கொடு!" என்று கூறி, அப் பொற்செம்பை மனைவியினுடைய கையிலிருந்து வாங்கி, வெகு தூரத்திலே சுழற்றி எறிந்துவிட்டு, புன்னகை புரிந்துகொண்டே "இப்பொழுது உன்னுடைய பயமானது உன்னிடத்தி லிருந்து வெகு தூரத்திலே போய்விட்டது" என்றார்.

பின்னர் அவர்கள் காஞ்சீபுரம் சென்று, இரண்டு வாழ்ந்து, எம்பெருமா னிடத்திலே பக்தி செலுத்தி வந்தார்கள். சற்குருவினுடைய கண்கள் அவரைக் கண்டு கொண்டன; குருமூர்த்தியாகிய ஸ்ரீ ராமாநுஜர் அவரைத்

தமது மடத்துக்கு அழைத்துத் தமது சிஷ்யர்களுள் ஒருவராக ஏற்றுக்கொண்டார். ஸ்ரீ ராமாநுஜருடைய சிஷ்யர்களுக்குள்ளே இவர்தாம் மிகமிகப் பரிசுத்த புருஷர்; மிகமிகச் சிறந்த வித்துவான்; ஸ்ரீ ராமாநுஜருக்கும் இவரிடத்திலே அத்தியந்த மதிப்பும் மர்யாதையும் உண்டு; அதிக வாத்சல்யம் வைத்திருந்தார்.

காஞ்சீபுரத்திலே யாதவப்பிரகாசர் என்று ஒருவர் அத்வைதியென்று பெயர் வைத்துக்கொண்டு, ஆனால் அத்வைதமல்லாத ஒரு நூதனமான கோட்பாட்டைப் போதித்துக்கொண்டு வந்தாரென்றும் அவரிடத்திலேதான் முதல் முதல் நமது ஸ்ரீ ராமாநுஜர் வேதாந்த பாடம் கேட்கச் சென்றதென்றும் நாம் முன்னமேயே கூறியிருக்கின்றோம். இவருக்குத் தாம் போதித்து வந்த கோட்பாடுகளிலே நம்பிக்கை யில்லை; ஆனால், சிறிது புத்திசாலியாகையால், குயுக்திகள் பேசி, எதிர்த்தவர்களுடைய மூளைகளைக் கலங்கச் செய்து, அகங்கார கோஷம் செய்துவந்தார். தாம் அத்வைதியென்று சொல்லிக்கொண்டா ராயினும் ஆசார்யர் ஸ்ரீ சங்கருடைய சித்தாந்தப் போக்கை அநுசரிக்காமல், தாமே நூதனமாக ஒரு போக்குக் கற்பித்துக்கொண்டு, 'அது தப்பும் தவறுமா யுள்ளது' என்பதை நன்கு யறிந்திருந்தா ராயினும் அவர் அதையே ஸ்தாபித்து வந்தார். ஸ்ரீ ராமாநுஜர் அவரிடம் மாணவரா யிருந்தபொழுது வாதாடும்படி நேரிட்ட இரண்டொரு சந்தர்ப்பங்களிலேயே, தம்மினும் புத்திசாலி யொருவர் தோன்றிவிட்டாரென்று நன்குக அறிந்துகொண்டார் யாதவப்பிரகாசர்.

இங்ஙனமிருக்க, யாதவப்பிரகாசருடைய தாயார் காஞ்சி வரதராஜப் பெருமானிடத்திலே நிச்சல பக்தி செலுத்தி நியமநிஷ்டைகளுடனே யிருந்துவந்தார்; இவ் வம்மையார் வேதாந்த விசாரத்திலே சிறிது பிரியமுள்ளவர்; தமது புத்திரன் மகா வேதாந்தியாய் அநேக ஜனங்களால் ஆசார்ய ரென்று கருதப்பட்டு வந்தது அவ் வம்மையாருக்கு அள வற்ற மகிழ்ச்சியை அளித்தது. ஸ்ரீ ராமாநுஜருடைய கல் வித் திறத்தையும் ஞான மகிமையையும் இவ் வம்மையார் கேள்விப்பட்டு ஒருநாள் அவரிடத்திலே சென்று வேதாந்த விஷயங்களைப்பற்றி விசாரணை செய்து பார்த்து, விசிஷ் டாத்வைத மதத்தின் மேன்மையை உணர்ந்துகொண்டார். இவ் வம்மையாருக்கு ஸ்ரீராமாநுஜரிடத்திலே ஒருவித வாத் சல்யம் ஏற்பட்டது; ஒருநாள் இவர், க்ஷேத்திரத்தினுள்ளே போய்க்கொண் டிருக்கையில், 'ஆ! எனது புத்திரனுடைய ஆபாச அத்வைதக் கொள்கைகளைப் பார்க்கிலும் இந்த மஹான் ஸ்ரீராமாநுஜருடைய விசிஷ்டாத்வைதக் கொள்கை கள் யுக்திக்குப் பொருந்தியவையா யிருக்கின்றன; ஹிரு தயத்தை யுருக்குகின்றவையா யிருக்கின்றன; எல்லோரை யும் ரமிக்கச் செய்கின்றவையா யிருக்கின்றன; எனது புத்திரன் இக் கோள்கைகளை யநுசரித்துவிட மாட்டானா?' என்று தாமே சிந்தித்துக்கொண்டு செல்கையில், "நல்லது! மிகவும் நல்லது" என்ற சப்தம் காதிலே விழுந்தது. சம யோசிதமான இந்த உபஸ்ருதி நன்மைக்கு அறிகுறியே யென்று நினைத்துக்கொண்டவராய், வீட்டுக்குச் சென்று தமது புத்திரனைக் கண்டு, 'அரும் புதல்வனே! கேட்பாய்!

நினது அன்னை சொல்வதைக் கேட்பாய்! உனக்குக் கெடுதலாக நான் ஒன்றும் உரையேன் என்பது உனக்குத் தெரியாதா? நான் அவசரப்பட்டு ஒன்றும் உரையேன் என்பதும் உனக்குத் தெரியும். உனது பழைய மாணவனாகிய ஸ்ரீ ராமாநுஜன் சில சிறந்த அருமையான கொள்கைகளைப் பிரசாரகஞ் செய்து வருகிறானென்று நீ அறிந்திருப்பாய்; நீ அக் கொள்கைகளைச் சற்றுக் கவனமாகக் காது கொடுத்துக் கேட்டு, உண்மையை உணர்ந்துகொள்வாயென்று நம்புகிறேன்" என்றனர்.

யாதவப்பிரகாசர் தமது தாயாருடைய விருப்பத்தை மறுக்க முடியவில்லை. தாம் போதித்து வந்த மதத்திலே அநேக குறைகள் உள்ளனவென்று அவர் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டி வந்தது; ஸ்ரீராமாநுஜர் அவரிடத்திலே படித்தபொழுது செய்த ஆக்ஷேபனைகளெல்லாம் அவருடைய மனத்திலே உறுத்திக்கொண்டிருந்தன; அரசனுடைய அரண்மனையிலே பிரஹ்ம ரக்ஷஸு ஸ்ரீ ராமாநுஜருக்குப் பெருமையை அளித்து, அவருடைய மகிமையை அவ்வூரிலே விளக்கிவைத்தது யாதவருடைய மனத்திலே ஆழமாகப் பதிந்திருந்தது; இன்னும் ஸ்ரீ ராமாநுஜர் விந்திய பர்வதக் காடுகளிலே தப்பி யோடிப் பிழைத்து ஈஸ்வர கிருபையால் காஞ்சீபுரம் வந்து சேர்ந்தது யாதவருடைய மனத்தைப் பிளந்துகொண்டிருந்தது; இக் காரணங்களினாலெல்லாம் யாதவப்பிரகாசருக்கு ஸ்ரீ ராமாநுஜரிடத்திலே பயமும் பக்தியும் ஏற்கனவே அதிகமா யுண்டாயிருந்தன.

தவிர, யாதவப் பிரகாசருக்கு மாதாவினிடத்திலே பக்தி யதிகம்; அவள் மகா புத்திசாலி யென்றும், நியாயமானதை யும் நன்மையானதையுமே தமக்கு என்றும் எடுத்துரைப் பவ ளென்றும் யாதவப்பிரகாசர் பரிபூர்ணமாக நம்பி யிருந்தார்.

ஆதலால், அவர் தமது மாதாவினிடத்திலே "அம்மே! உனது வாக்கே எனக்கு வேதம்; ஆனால், நான் சிகையையும் யக்ஞோபவீதத்தையும் எடுத்துவிட்டேனே; இதற்குப் பிராயச்சித்தம் செய்துகொள்ள வேண்டுமே; இதற்கு விதிக்கப்பட்டிருக்கும் பிராயச்சித்தம் யாதெனில், பூப்பிர தக்ஷிணம் செய்யவேண்டும். ஆனால், நானோ விருத்தாப்பிய னாய்விட்டேன்; பலஹீனனா யிருக்கின்றேன்; ஆகையால், பூப்பிரதட்சிணம் செய்ய என்னால் முடியுமா? நீ கூறுவது உண்மைதான்; ஸ்ரீ ராமாநுஜர் போதிப்பது சத்தியமே; ஆனால், நான் என் செய்வேன்? பிராயச்சித்தம் செய்து கொள்ளச் சக்தியற்றவனா யிருக்கிறதினாலே, அம் மார்க்கத் தை யநுசரிக்க நான் கொடுத்துவைக்கவில்லை," என்று வருந்தினார்.

அன்றிரவு காஞ்சி வரதராஜப்பெருமான் அவருக்குக் கனவிலே தோன்றி, "ஏ, யாதவா! எனது ராமாநுஜனை நீ ஒரு முறை பிரதக்ஷிணம் செய்துவிடு; காஷாயமும் திரி தண்டமும் அவனிடமிருந்து வாங்கிக்கொள்; இப்படிச் செய் தால், இதுவே பிராயச்சித்தமாகும்" என்று சொல்லி மறை ந்தார். யாதவர் இக் கனவினிடத்து நம்பிக்கை வைக்காமல்,

'கனவில் கண்டது உண்மைதானா?' என்று நிச்சயமாய்த் தெரிந்துகொள்ள விரும்பித் திருக்கச்சி நம்பியாரிடம் சென்று, "ஸ்வாமி! தாங்கள் காஞ்சி வரதராஜப் பெருமானுக்கு மிகமிக வேண்டியவராயிற்றே; 'என் மனத்திலே யொரு பிரார்த்தனை யுள்ளது; அது நிறைவேறுமா?' என்று எம்பெருமானிடத்திலிருந்து தெரிந்து தாங்கள் எனக்குக் கூறுமாறு வேண்டுகிறேன்" என்று சொல்லிப் பணிந்து நின்றார். நம்பியார் "அப்படியே ஆகட்டும்" என்று சொல்லி, யாதவப்பிரகாசரை யனுப்பிவிட்டு, ஸ்ரீவரதராஜப்பெருமான் சந்நிதிக்குச் சென்றார். அன்று பூஜை முதலியன வெல்லாம் முடிந்தது; நம்பியார் ஸ்ரீ வரதராஜப் பெருமானிடத்திலே விடை பெற்றுக்கொள்ளச் சென்றபொழுது "ஸ்வாமி! இவ் வூரிலே மகா வித்துவான் என்று அகங்காரம் கொண்ட யாதவப்பிரகாசனுக்கு இப்பொழுது புத்தி வந்திருக்கிறது போலத் தோன்றுகிறது; அவனுடைய மனத்திலே ஏதோ ஒரு கோரிக்கை யிருக்கிறதாம்; அது இன்னதென்று என்னிடம் சொல்லவில்லை; அது நிறைவேறுமா? என்று தங்களைக் கேட்டு வரும்படி என்னை மிகமிக வேண்டிக்கொண்டான்," என்று விண்ணப்பித்து நிற்க, இறைவன் "அப்படியா? அவனுடைய மாதா அவனை விசிஷ்டாத்வைத மதத்தை யநுசரித்து ஸ்ரீ ராமாநுஜர் போன்று திரிதண்டம்தாங்கும்படி அவனுக்குப் புத்தி போதித்தாள். அவன் இதுவரைதான் சிகையையும் எக்ஞோபவீதத்தையும் எடுத்துவிட்ட குற்றத்துக்காகப் பூப்பிரதக்ஷிணம் செய்து பிராயச்சித்தம்செய்து கொள்ள முடியாதே யென்று மிகவும் வருந்தினான். அப்

பொழுது நான் அவனுடைய கனவிலே தோன்றி, ஒருமுறை ராமாநுஜனைப் பிரதக்ஷிணம் செய்துவிட்டு சந்யாசாச்ரமம் வகித்துக் கொள்ளும்படி கூறினேன். அவன் தான் கனவில் கண்டது நான் உண்மையிலேயே சொன்னதுதானா? என்று தெரிந்து கொள்வதற்காக இப்பொழுது உன் மூலமாகக் கேட்டு அனுப்பியிருக்கின்றான்'' என்று திருவாய் மலர்ந்தருளினார். நம்பியார் எம்பெருமானிடம் விடை பெற்றுக்கொண்டு, வீடு சென்று சகமே நித்திரை செய்து, மறு நாள் விடிந்தவுடனே தாம் செய்யவேண்டிய காலைக்கடன்களை முடித்துக்கொண்டு, யாதவப்பிரகாசருக்குச் சொல்லியனுப்பி, முந்திய இரவு தாம் ஈஸ்வரனிடத்தி லிருந்து அறிந்த விஷயத்தை அவரிடம் தெரிவிக்க, அவர் சர்வ சந்தேகங்களும் நீங்கி, விசிஷ்டாத்வைத மதத்தைக் கைக் கொள்ளத் தீர்மானித்தார்.

யாதவப்பிரகாசருடைய மனத்தை மூடியிருந்த மாயவிருள் விலகிவிட்டது; அகங்காரம் அழிந்துவிட்டது; மமதை குன்றிவிட்டது; அவருடைய மனமானது அழுக்கற்ற கண்ணடிபோல நிர்மலமாய்விட்டது; ஸ்ரீ ராமாநுஜர் அவதார புருஷரே யென்று நன்குணர்ந்தார். ஸ்ரீராமாநுஜரிடம் உபதேசம் பெற்றுக்கொள்ள வேண்டுமென்று தீர்மானித்துக் கொண்டு, யாதவப்பிரகாசர் அவருடன் சென்று, அவர் தமக்கு முன்னமே மாணவராயிருந்ததையும் மறந்து, அவருடைய பாதங்களில் விழுந்து பணிந்து எழுந்து, ''ஸ்வாமி! எனக்குக் காஷாயமும் திரிதண்டமும்

அளித்து, என்னைத் தங்களுடைய சிஷ்யர்களுள் ஒருவனாக ஏற்றுக் கொள்ளும்படி கிருபை புரியவேண்டுகின்றேன்" என்று இறைஞ்சி நிற்க, ஸ்ரீ ராமாநுஜர் "ஆ! ஆ! மெத்தச் சந்தோஷம்; ஆனால், முதலில் நீங்கள் பெரியதொரு பிராயச்சித்தம் செய்துகொள்ளவேண்டி வருமே" என்றார்.

யாதவப்பிரகாசர் "ஸ்வாமி! ஈச்வரனே வேறு விதம் ஆக்ஞை செய்திருக்கிறார்; தங்களையொருமுறை பிரதக்ஷிணம் செய்தால், இப் பூமியை வலம் வந்ததற்குச் சமானமென்று எம்பெருமானுடைய ஆக்ஞையாயிருக்கிறது; ஆதலால், எனக்கு வேறு பிராயச்சித்தம் வேண்டியதில்லை" என்று சொல்லி, மிகவும் பயபக்தி யுடனே ஸ்ரீ ராமாநுஜரை ஒருமுறை பிரதக்ஷிணம் செய்து, இரு கைகளையும் கூப்பிக்கொண்டு அவர் முன்னே நின்றார்.

யாதவப்பிரகாசருடைய விருப்பமும் எம்பெருமானுடைய சங்கற்பமும் ஒன்றாயிருப்பதுபற்றி ஆண்டானும் ஆழ்வானும் ஆச்சர்யப்பட்டு, "குருமூர்த்தி! ஸ்ரீ வைகுண்டத்திலே துவார பாலகர்களாகிய ஜயனும் விஜயனும் எம்பெருமானுடைய சந்நிதானத்திலே சனக, சனற்குமார முனிவர்களாதியோரை விட மறுத்ததினாலே அவர்கள் அவரைச் சபித்துப் பூமியிலே போய்ப் பிறக்கும்படி கூறிவிட, அவர்கள் பயந்து எம்பெருமானைக் கண்டு வணங்கி க்ஷமிக்குமாறு பிரார்த்திக்க, பகவான் அவர்கள்மீது இரக்கமுற்று "நல்லது, நீங்கள் மகரிஷிகளுடைய சாபத்துக்குப் பாத்திரமாய்விட்டதினாலே, என்னால் அச் சாபத்தை இப்

பொழுது நிவிர்த்திக்க முடியாது. ஆனால், ஒன்று செய்கிறேன். ஏழு பிறப்புக்கள் எடுத்து, எனக்குப் பக்தர்களாகி விமோசன மடைகின்றீர்களா? அல்லது, மூன்று பிறப்புக்கள் எடுத்து எனக்குச் சத்துருக்களாகி விமோசன மடைகின்றீர்களா?" என்று கேட்டார். அவர்கள் "ஆ! ஆ! ஏழு ஜன்மங்கள் எடுத்துக் காத்திருக்க எங்களால் முடியாது; மூன்று ஜன்மங்க ளெடுத்துச் சத்துருக்க ளாகிறோம்; தவிர, 'நண்பர்களைப் பார்க்கிலும் சத்துருக்கள்மேரிலேதான் அதிகமாக நினைப்புச் செல்லுகிறது' என்று மறுமொழி கூறி, அப்படியே உலகில் மூன்று ஜன்மங்கள் எடுத்துப் பின்னர் விமோசனமடைந்தார்கள்; அதுபோலவே, யாதவப்பிரகாசரும் தங்களுடைய போதனைகட்கு நேர் விரோதமான கொள்கைகளை யுடைத்தானவரா யிருந்து, இப்பொழுது தங்களிடத்திலே சரண் புகுந்துவிட்டார்; எங்களைப்போலவே அவரையும் ஒரு சிஷ்யராக ஏற்றுக்கொள்ளும்படி நாங்களும் வேண்டுகின்றோம்" என்றார்கள்.

ஸ்ரீ ராமாநுஜர் "அப்படியே யாகட்டும்" என்றார். ஆனால், யாதவப்பிரகாசருக்குக் காஷாயமும் திரிதண்டமும் அளித்து விசிஷ்டாத்வைதமத சந்நியாசி யாக்குதல் எளிதான கார்யமன்று; ஏனெனில், அவர் எக்ஞோபவீதத்தைக் களைந்தெறிந்துவிட்டு அத்வைத சந்யாசியாய் அவதூதராய்க் காலம் கழித்து வந்ததினாலே ஜாதிப் பிரஷ்டராய்விட்டார்; ஆகையால், அவர் இப்பொழுது மறுபடியும் பிராஹ்மண தர்மத்தினுட் புகுந்து விசிஷ்டாத்வைத மத

சந்நியாசியாக வேண்டும். ஆதலால், ஸ்ரீராமாநுஜர் யாதவப் பிரகாசருக்குச் சௌளம், உபநயனம் முதலிய சடங்குக் கிரியைகளெல்லாம் செய்விப்பித்து, பின்னர் தமது கூட்டத்தினுட் சேர்த்துக்கொண்டு, அவருக்குக் காஷாயமும் திரிதண்டமும் அளித்து, கோவிந்த ஜீயர் என்ற நாமமும் இட்டார்; இன்னும் பஞ்ச சம்ஸ்காரங்களையும் செய்வித்து, இருபெருண்மைகளையும் உபதேசித்தார்.

இவ்வளவும் செய்துவிட்டு, ஸ்ரீ ராமாநுஜர் கோவிந்த ஜீயரை நோக்கி "உங்களிடத்தில் நான் பாடங் கற்றுக் கொள்ளும்படியான பாக்கியம் பெற்றிருந்ததினாலே, தங்களுடைய வித்தையின் அருமை எனக்குத் தெரியும்; வேறு ஜனங்களுக்கு என்ன தெரியும்? ஆதலால், தங்களுடைய வித்தை யுலகில் என்றும் பிரகாசிக்கவேண்டும்; தங்களுக்கு ஒரு நற்பெயரும் கீர்த்தியும் கிடைக்கவேண்டும். தவிர, உங்களுடைய வாழ்நாட்களெல்லாம் நீங்கள் வைஷ்ணவ சந்யாசிகளை யிகழ்ந்து அவர்களுடைய வாழ்க்கைகளையும் கிரியைகளையும் பரிகசிப்பதிலேயே கழித்திருக்கிறீர்கள். ஆகையால், ஸ்மிருதிகளிலே ஒன்றுக்கொன்று முரணுயுள்ள பற்பல சுலோகங்களையும் ஒற்றுமைப் படுத்தி, சந்யாசிகளுடைய தர்மத்தைப்பற்றி யொரு நூல் இயற்றுங்கள்" என்று கூறினர்.

அப்படியே கோவிந்த ஜீயரும் யதிதர்ம சமுச்சயம் என்னும் ஒருநூல் பதினொரு அத்தியாயங்களிலே எழுதி முடித்தார். பின்னர் அதை யெடுத்துக்கொண்டு, ஸ்ரீ ராமா

நுஜரிடம் சென்று, அவருடைய பாதங்களினடியில் வைத்து, "ஸ்வாமி! தங்களுடைய உத்தரவுப்படி எழுதிக் கொண்டு வந்தேன்; தயை செய்து ஏற்றருள்க" எனலும், ஸ்ரீ ராமாநுஜர் நன்றாக அதைப் படித்துப் பார்த்துத் திருப்தியடைந்து, "நன்று, நன்று; வெகு நன்று" என்று கொண்டாடினர்.

இதற்குப் பின் கோவிந்தஜீயர் ஸ்ரீ ராமாநுஜரிடத்திலே மிகுந்த பக்தி சிரத்தை யுடையவராகி, இதற்கு முன் யாதவப்பிரகாசர் என்ற பெயருடன் இருந்தபொழுது ஸ்ரீ ராமாநுஜரை எவ்வளவுக்கெவ்வளவு அலக்ஷியமாகவும் சந்தேகமாகவும் கருதி யிருந்தாரோ, அவ்வளவுக்கவ்வளவு இப்போது அன்பு மிகுந்தவரானர்; ஆனல், சீக்கிரத்திலே இவர் இவ்வுலகினின்றும் நீங்கிப்பரமபதமடைந்துவிட்டார்.

இங்கிப்படியிருக்க, ஸ்ரீரங்கத்திலே யிருந்த ஆளவந்தாருடைய சிஷ்யர்கள் ஸ்ரீ ராமாநுஜரைப்பற்றி அடிக்கடி விசாரித்துக்கொண்டே யிருந்தார்கள்; ஸ்ரீ ராமாநுஜர் சந்யாசியானதும் மற்றும் கேள்விப்பட்டு, ஆநந்தம் பொங்கியவர்களாய், தாங்களே யொருவர்க்கொருவர் ஆலோசனை செய்துகொண்டு, எல்லோரும் சேர்ந்து ஒரே கூட்டமாக ஈஸ்வர சந்நிதானம் சென்று, ஏகோபித்த மனமுடையவர்களாய், "ஸ்வாமி! எங்களுடைய ஆசார்யர் ஸ்ரீ ராமாநுஜர் இங்கு வசிக்கும்படி கிருபை செய்யலாகாதா!" என்று பிரார்த்தித்தார்கள்.

அவர்களின் பிரார்த்தனைகட் கிணங்கி ஸ்ரீ ரங்கநாதப் பெருமான் ஸ்ரீ வரதராஜப் பெருமானுக்கு ஒரு ஆள் அனுப்பிக் கேட்க, ஸ்ரீ வரதராஜர், "தற்கொலை செய்துகொள்ளப் பிரியப்படுவோர் எவரேனும் உண்டா? ஸ்ரீ ராமாநுஜர் இங்கே யிருக்கிறதினால்தானே எனக்கு ஆநந்தமும் ஒளியும் மிகுகின்றது; அவரை யிங்கிருந்து நீங்கும்படி நாம் சம்மதித்து விடுவோமானால், நமக்கு உயிரே போய்விட்டதுபோ லாய்விடும்; இதற்கு மனமொப்பிச் சம்மதிக்க முடியுமா?" என்று மறுமொழி யனுப்பினர்.

ஸ்ரீ ரங்கநாதப் பெருமான் இத்தகைய மறுமொழியை யொருபொழுதும் எதிர்பார்க்கவில்லை; ஆகையால், அவர் திடுக்கிட்டு, இம் மறுமொழியை ஸ்ரீரங்கவாசிகளுக்கு உரைக்கவே, அவர்கள் பிரமித்து "என்ன இது? ஸ்ரீ ராமாநுஜரை யிங்கு வரவழைக்க நமது ஸ்ரீரங்நாதப் பெருமானும் முடியாதுபோயிற்றே" என்று ஏங்கி வருந்தினர்கள்.

"அதிகார தோரணையிலே கேட்டு, கார்யம் பலிக்கவில்லை; இனிமேல் தந்திரமாக எப்படியாவது ஸ்ரீ ராமாநுஜரை வரவழைத்துக்கொள்ளவேண்டும்" என்று ஸ்ரீரங்கவாசிகள் நிச்சயித்தவர்களாய், ஸ்ரீ வரரங்கரைத் தேடிச் சென்று "ஸ்வாமி! எங்களுடைய கோரிக்கை உங்களாலேயே ஈடேறவேண்டி யிருக்கின்றது; காஞ்சி நாதனாகிய ஸ்ரீவரதராஜப் பெருமானால் ஒரு கார்யம் ஆகவேண்டியிருக்கிறது; ஆனால், அக் காரியத்துக்கு அவர் லகுவில் இணங்கார்'

அவரிட மிருந்து எப்படியாவது ஒரு வரம் வாங்கிவிட வேண்டும்; அவர், கேட்ட வரம் கொடுப்பதாக வாக்களித்து விட்டாரானல், பின்னர் ஒருபொழுதும் சொல் பிசகவே மாட்டார். அவருக்குச் சங்கீதத்தினிடத்திலே மிகமிகப் பிரிய மென்று தங்களுக்கே தெரியும்; தாங்களோ சங்கீதத்திலே மகா வித்துவான்; தங்களுடைய சங்கீதத்தினல் தாங்கள் அவரை மெய்மறக்கும்படி செய்து, அவரிடத்தில் ஒரு வரம் கேட்டு, ஸ்ரீராமாநுஜரை யிட்டுக்கொண்டு வந்து விடவேண்டியது; தயை செய்து எங்களுடைய கோரிக்கையை ஈடேற்றிக் கொடுக்கவேண்டியது,'' என்று முறையிட்டுக்கொண்டார்கள்.

வாரங்கர், ''என்னவோ? நான் முயற்சி செய்து பார்க்கிறேன்; என்னு லானமட்டும் முயன்று எப்படியாவது ஸ்ரீ ராமாநுஜரை யுங்களிடம் இட்டுக்கொண்டு வந்துவிடப் பார்க்கின்றேன். ஆனல், நிச்சயமாக நான் எப்படி உங்களுக்கு வாக்களிப்பது? ஸ்ரீ காஞ்சி நாதருடைய கால்களைப் பலமாகப் பிடித்துக்கொண்டு கெஞ்சி மன்றுடுகின்றேன்; இதில் சந்தேக மில்லை,'' என்று மறுமொழி கூறிவிட்டு; காஞ்சிமா நகர் சென்றுர்.

காஞ்சிபுரத்திலே வாதநாயகர் என்று ஒருவர், நமது வர ரங்கருடைய இனத்தார், 'வாரங்கர் காஞ்சிமாநகர் வருகின்றுர்' என்று கேள்விப்பட்டு, அவரை எதிர்கொண் டழைத்து நல்வர வளித்து, தமது வீட்டுக்கு இட்டுக் கொண்டுபோய் உபசரித்தார். வாரங்கர் அன்று அங்குத் தங்கி

இளைப்பாறிக்கொண்டு, மறுநாள் பொழுதுவிடிந்தவுடனே தாம் வந்த காரியத்தைச் சாதிக்கும்பொருட்டு ஸ்ரீ வரத ராஜப் பெருமானுடைய சந்நிதிக்குச் சென்றார்.

எம்பெருமா னிடத்திலே திருத்தொண்டு செய்து கொண்டிருந்த திருக்கச்சி நம்பியாராகிய காஞ்சிபூர்ணர், வர ரங்கர் வருவதைக் கண்டு ஓடோடி வந்து எதிர்கொண்டு சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்கரித்து உபசரித்தார். இருவரும் அந்யோந்யம் க்ஷேம லாபங்கள் விசாரித்துக்கொண்டனர்; பின்னர் வரரங்கர் ஸ்ரீ வரதராஜப் பெருமானைப் பூஜித்து ஸேவிப்பதற்குத் தமக்கு நிரம்ப ஆசையா யிருக்கிறதென்று நம்பியாரிடத்தில் கூற, நம்பியார் வர ரங்கரை எம்பெருமானுடைய சந்நிதானத்துக்கு இட்டுச் சென்றார்; அங்கு அப்பொழுது ஸ்ரீ ராமாநுஜர் எம்பெருமான் சந்நிதியிலே நின்றுகொண்டு, ஸ்ரீ வரதராஜ அஷ்டகத்தைப் பாராயணம் செய்துகொண்டிருந்தார்.

ஸ்ரீவரரங்கர் எம்பெருமானுடைய திருச் சந்நிதியிலே சாஷ்டாங்கமாக விழுந்து, "என் அப்பா! ஆபத்பாந்தவா! அநாத ரக்ஷகா! தீனதயாளு! சர்வலோக சரண்ய மூர்த்தி! நினது அருள் என்மீது எந்நாளும் இருக்க, என்னை மறவாதே! எளியேனை மறவாதே" என்று பலவாறு பிரார்த்தித்து எழுந்து இரு கைகளையும் சிரமேற் கூப்பி, எம்பெருமான்மீது ஏகாக்கிர மனத்தைச் செலுத்தித் தியானம் செய்தார்; எம்பெருமானுடைய உத்தரவினால் வரரங்கருக்குக் கோவில் மர்யாதைகள் அனைத்தும் செய்யப்பட்டன.

ஸ்ரீ வரரங்கர் அவற்றை மிகவும் விநயத்தோடு ஏற்றுக் கொண்டு மனமகிழ்ந்து இருக்கையில், ஸ்ரீ வரதராஜப் பெருமான் வரரங்கரை நோக்கி, "புத்திரா! நீ சங்கீதத்தி லும் நாட்டியத்திலும் மகா வித்துவா னென்று எங்கும் பிரசித்தமாயிருக்கிறதே; நான் கேட்டு மகிழும்பொருட்டுக் கொஞ்சம் பாடு, பார்ப்போம்" என்று ஆக்ஞாபித்தார்.

வரரங்கர் "எம்பெருமானுடைய திருக் கருணைக்கு நான் இவ்வளவேனும் பாத்திர னாயினேனோ?" என்று கூறிக்கொண்டே, பிரபந்தத்திலே "என் நெஞ்சமே யான்" என்று ஆரம்பிக்கின்ற பாடல் முதல் அநேக பாடல் களை உள்ளுருக, உயிருருக, மண்ணுருக, விண்ணுருக, ஆசைகளும் உணர்ச்சிகளும் அப்படி யப்படியே வெளிப் படும்படியாக அதற்குத் தகுந்த சைகைகளை யப்படி யப் படியே அங்கங்களையாட்டிக் குறிப்பிட்டுக்கொண்டு பாடினார். அந்த க்ஷேத்திரம் முழுதும் ஓம் என்று கோஷித்தது. ஸ்ரீ கிருஷ்ணனுடைய புள்ளாங்குழல் ஓசை கேட்டு மெய் மறந்த பசுக்களையும் கோபிகைகளையும் போல, ஸ்ரீ வரத ராஜப் பெருமான் வரரங்கருடைய பாடல்களைக் கேட்டு அப்படியேமெய்மறந்து ஒன்றும் தோன்றாது ஆநந்தத்தில் அமிழ்ந்திருந்தார். அங்கிருந்த எல்லோரும் அத்தியாநந் தம் எய்தியவர்களாய், வைகுண்டத்திலே எம்பெருமான் சந்நிதியில் இன்புற் றிருப்பவர்போலத் தோன்றினார்கள்.

ஸ்ரீ வரதராஜப் பெருமானுக்கு உண்டான சந்தோ ஷம் இவ்வள வென்று சொல்லி முடியாது; தமது அரையி

லே சுற்றி யிருந்த பனாரஸ் பட்டை யெடுத்து அவருக்குக் கொடுக்கும்படி சொன்னார்; தமது கழுத்தைச் சுற்றி யலங்காரமாகத் தொங்கிக்கொண் டிருந்த முத்து ஆரத்தை யெடுத்து அவரது கழுத்திலே போடச் சொன்னார்; தமக்குப் பிடிக்கப்பட்டுச் சிரமேல் நிழல் கொடுத்துக்கொண் டிருந்த வெள்ளைக் குடையை யெடுத்து அவருக்குப் பிடிக்கச் சொன்னார்; தமக்கு விசிறிக்கொண் டிருந்த ஒரு ஜதை சாமரங்களையும் எடுத்து அவருக்கு விசிறச் சொன்னார். இன்னும் தம்மீது என்னவெல்லாம் போடப்பட் டிருந்தனவோ அவற்றை யெல்லாம் எடுத்து அவர்மேல் போடச் சொன்னார்.

ஆனால், ஸ்ரீ வரரங்கர் இவற்றினிடத்தி லெல்லாம் ஆசைப்பட்டா இங்கு ஸ்ரீ வரதராஜப் பெருமான் முன்னே வந்து பாடினார்? அவர் வந்த காரியம் வேறன்றோ? அவர் 'இது எனக்கு வேண்டாம்; இது எனக்கு வேண்டாம்' என்று ஒவ்வொன்றுக்குமாக தலையை யசைத்து மறுத்து, "பிரபு! அடியார்க் கெளியவா! ஆநந்த மூர்த்தி! தங்களுடைய அடிமைக்கு என் இவ்வளவு கௌரதை? இஃதொன்றும் எனக்கு வேண்டாம்; 'கேட்டதெல்லாம் அளிக்கும் ஸ்ரீ கிருஷ்ணராஜப் பெருமான்' என்று உனக்குப் பெயரில்லையா? இப் பெயர் உண்மைதானா? என்று நான் உன்னைப் பரிசோதிப்பதற்கு இப்பொழுது நீ யநுமதி கொடுக்க வேண்டும்; எனக்கு ஒரு வரம் வேண்டும்; அது எதுவாயினும் கொடுப்பாயா?" என்று கேட்டுவிட்டு, மேன்மேலும் உருக்கமாக அநேக பாடல்களைப் பாடினார்.

ஸ்ரீ வரதராஜப் பெருமானுக்கு ஆநந்தம் மடைதிறந்து, பொங்கித் ததுளித்து ஓடத் தொடங்கிற்று; அவரால் எவ்வளவோ அடக்கி யடக்கிப் பார்த்தும் அடக்க முடியவில்லை; பொறுக்க முடியவில்லை; ஆநந்தத்தினால் ஆடத் தொடங்கிவிட்டார். ஆ! ஆ! அவருடைய ஆநந்தத்தை இத்தகைய தென்று ஆயிரம் பண மகுடத்தையுடைய ஆதிசேஷனாலும் சொல்ல முடியாது. இவ் வாநந்தம் மேன்மேலும் தமக்குள் அடங்காமல் மீறி வெளிப்பட ஆரம்பிக்வே, எம்பெருமான் "வர ரங்கா! போதும்! போதும், நிறுத்து! உனக்கு என்ன வரம் வேண்டுமோ அதைக் கேள்; என்னையும் எனது மனைவிமாரையும் தவிர வேறு எதைக் கேட்டாலும் நான் கொடுக்கத் தயாரா யிருக்கிறேன்" என்றார்.

அப்பொழுது வரரங்கர் ஸ்ரீ ராமாநுஜரைக் காண்பித்து, "எம்பெருமானே! தயவு செய்து இவரை (ஸ்ரீ ராமாநுஜரை) என்னுடன் அனுப்பி வையுங்கள்" என்றார்.

"நான் அகப்பட்டுக்கொண்டேன்; என்னை ஏமாற்றிவிட்டாய்; நான் முன்னமேயே இதைப்பற்றி நினைத்திருக்கவேண்டும்; நல்லது, வேறெதையாவது கேட்கலாகாதா?"

"ஸ்வாமி! வாக்கு அளித்துவிட்டுப் பிறகு மாறலாமா? நீங்கள் ஸ்ரீ ராமச்சந்திரராக அவதரித்தபொழுது, 'வாக்கு மாறாதவர்' என்று பெயர் எடுக்கவில்லையா?"

"ஆ! ஆ! நல்ல நல்ல நியாயங்கள் பேசுகிருய்; சரி, சரி; உனது கோரிக்கை நிறைவேறிவிட்டதே; இன்னும் ஏன் தாமதம்?"

இதுதான் சமயமென்று வாரங்கர் ஸ்ரீ ராமாநுஜரை நோக்கி "ஸ்வாமி! தயவு செய்து என் பின்னே- வரலாமோ? எம்பெருமானுடைய உத்தரவுதானுய்விட்டதே. இன்னும் என்ன யோசனை?" என, ஆசார்யர் ஸ்ரீ ராமாநுஜர் எம்பெருமானை சாஷ்டாங்கமாக வணங்கி நமஸ்கரித்து, "ஸ்வாமி! நான் எங்கிருந்தாலும் தங்களுடனேயே இருப்பேன்; தங்களுடைய வேலையையே செய்வேன்" என்று கூறி விடை பெற்றுக்கொண்டார். பின்னர் அவர் தமது பிரதம சிஷ்யர்களாகிய ஆண்டான், ஆழ்வான் இருவரையும் "நீங்கள் நமது மடத்துக்குச் சென்று நான் தினந்தோறும் தவருது பூஜித்து வருகின்ற ஸ்ரீ வரதராஜப் பெருமானுடைய விக்கிரகத்தை யெடுத்து வாருங்கள்" என்று ஆக்ஞாபித்தார். அவ் விருவரும் அவ்வாக்ஞையைச் சிரமேற்கொண்டு வெகு வேகமாக மடத்துக்குச் சென்று, அந்த விக்கிரகத்தை மிகுந்த பயபக்தியுடனே எடுத்துக்கொண்டு வந்து கொடுக்க, ஸ்ரீ ராமாநுஜர் அதிக சந்தோஷத்துடனே அதை வாங்கிக்கொண்டு வாரங்கருடனே ஸ்ரீரங்கத்துக்குப் புறப்பட்டார்; திருக்கச்சி நம்பியாராகிய காஞ்சீபூர்ணர் கொஞ்ச தூரம் கூடவே சென்று, அவர்களை வழியனுப்பிவிட்டு வந்தார்.

---

# கோவிந்தர்

வர ரங்கரும் கோவிந்தரும் ஸ்ரீரங்க நகரை யணுகி, வட காவேரி தீரத்திலே தங்கினர்கள். வர ரங்கர் ஸ்ரீ ராமாநுஜரை யங்கேயே யிருக்கும்படி செய்துவிட்டு, தாம் மாத்திரம் முன்னதாக ஊருக்குள் சென்று, தாம் ஸ்ரீ ராமாநுஜரை யழைத்து வந்துவிட்டதாகவும், அவர் இப்பொழுது வடகாவிரிக் கரையிலே தங்கி யிருப்பதாகவும், அவர் தங்களுக்கு ஆசார்ய புருஷ ராகையினலே அவரைச் சகல மரியாதைகளுடனும் அழைத்து வரவேண்டியது ஸ்ரீரங்கத்தாருடைய கடமை யென்றும் கூறிவிட்டு, ஸ்ரீ ரங்கநாதப்பெருமானுடைய க்ஷேத்திரத்தினுள்ளே சென்று, திரிகரணமும் ஒரு கரணமாக்கிப் பணிந்து நிற்க, எம்பெருமான், "போன காரியம் என்ன? யாது விசேஷம்?" என்றார்.

வர ரங்கர் "ஸ்வாமி! எல்லாம் ஜயம்தான்; இறைவனுகிய நின் அருள் இருக்கும்பொழுது, என்னல் முடியாத காரியமு முண்டோ? ஸ்ரீ ராமாநுஜரை யிங்குக் கொண்டு வந்துவிட்டேன்" என, பகவான் "ஆ! ஆ! அப்படியா? நல்லது; உன்னைப்போலச் சமர்த்தன் உலகில் எவனுளான்? எனக்குகந்தவன் என்றும் நீயே; நான் ஆக்ஞாபிக்கின்ற ஒன்றும் நீ தவறுகின்றதில்லை; இங்கு, என்னல் முடியாத காரியத்தையும் நீ செய்துவிட்டாய்" என்று பலவாருகப் புகழ்ந்து, சீக்கிரம் ஸ்ரீ ராமாநுஜரைத் தமது சந்நிதிக்கு இட்டுவரும்படி கூறியனுப்பினர்.

ஸ்ரீ வராங்கர் அங்கிருந்து புறப்பட்டு, ஸ்ரீ ராமாநுஜ ரிடம் வருவதற்குள்ளாக, ஸ்ரீரங்கத்திலே யுள்ளவர்கள் ஸ்ரீ ஆளவந்தாருடைய சிஷ்யர்கள், ஜீயர்கள், ஏகாங்கிகள், ஸ்ரீ வைஷ்ணவர்கள்முதலியோர்—மகா பூர்ணருடைய தலைமை யின் கீழ்த் திரண்டு சகல மர்யாதைகளையும் எடுத்துக்கொ ண்டு ஸ்ரீ ராமாநுஜர் இருக்கும் இடம் வந்து ஸ்ரீ ராமா நுஜரைச் சுற்றிச் சூழ்ந்துகொண்டார்கள்.

ஸ்ரீ ராமாநுஜரும் அதிக சந்தோஷத்துடனும் விநயத் துடனும் இந்தக் கௌரதைகளை யெல்லாம் ஏற்றுக்கொ ண்டு, ஸ்ரீ மகாபூர்ணர் முதலிய பெரியோர்களுடைய பாதங் களிலே விழுந்து நமஸ்கரித்து, பின்னர் சகல ஜனங்களும் புடை சூழ, ஸ்ரீரங்கத்தினுள்ளே நுழைந்தார். அந்நகரத் துத் தெருக்களை யெல்லாம் பிரதக்ஷிணம் செய்து ஊர் வலமாகச் சென்று, ஸ்ரீ ராமாநுஜர் க்ஷேத்திரத்தின் வெளிப்பிரகாரத்திலே சந்நிதிக்கு எதிரே நின்று தியானம் செய்தார்; பின்னர் ஸ்ரீ ரங்கநாயகி க்ஷேத்திரத்தினுள்ளே நுழைந்து தர்சனம் செய்தார்; பின்னர் பரிசுத்த சந்திர புஷ்கரணியிலிருந்து தீர்த்தம் எடுத்து வாரி வாரிக் குடித் தார்; பின்னர்க் கோபுர தேவதைகளைக் கும்பிட்டார்; ஸ்ரீ கோபர் முதலிய ஆழ்வார்களை நமஸ்கரித்தார். பின்னர் ஸ்ரீராமாநுஜர் க்ஷேத்திரத்தின் உட்பிராகாரங்களுக்குள்ளே நுழைந்து ஓங்காரத்தை புருவகப்படுத்திக் கட்டப்பட் டிருக்கின்ற விமானத்தை வெகு விநயபக்தி பூர்வமாகப் பார்த்தார்; ஸேனநாத க்ஷேத்திரத்தைக் கண்டு களித்தார்.

இவற்றையெல்லாம் ஒவ்வொன்றாகப் பார்த்துவிட்டு, ஸ்ரீ ராமாநுஜர் அழகிய மணவாளன் திருமண்டபம் அடைந்தபொழுது, ஸ்ரீ ரங்கநாதப் பெருமானே தமது பக்தரை எதிர்கொண்டு நல்வரவு அளிப்பதற்காக, தமது மூலஸ்தானத்தினின்றும் வெளிப்பட்டு, அழகிய மணவாளன் திருமண்டபம் வரையிலே வந்து, ஸ்ரீ ராமாநுஜரைக் கண்டு ஆசி கூறி யோக க்ஷேமம் விசாரிக்க, ஸ்ரீராமாநுஜர் எம்பெருமானைக் கண்டு ஆநந்த பாஷ்பசகிதராய், "ஸ்வாமி! நாயினும் கடையேனாகிய எளியேனுக்குத் தாங்கள் இப் பெரும் பெருமை செய்யத் தரமோ? தங்களுடைய தாசாதி தாசர்களுடைய திருவடித் தாமரைகளிலே பதிந்து கிடக்கும் தூசியை நக்கி ருசிப்பதற்குக்கூட யோக்கியதையில்லாத எனக்குத் தேவர் மூவர் யாவருள்ளும் முதல்வனாகிய தாங்கள் இத்தகைய கௌரவம் அளிக்கலாயா? வேதங்களும் தேடிக் காணாத விமலனாகிய நீங்கள் என்னைத் தேடி வரலாமா?" என்று பற்பலவாறு ஸ்தோத்திரஞ் செய்து, பின்னர் எம்பெருமான் முன்னே செல்ல, ஸ்ரீராமாநுஜர் அவரைத் தொடர்ந்து, அந்தரங்கப் பள்ளியறைக்குள்ளே சென்று, பழமைக்கும் பழமையானவனாய், பக்தவத்சலனாயுள்ள பகவானுடைய அழகைக் கண்டு கண்டு களித்தார். இன்னும் ஸ்ரீ ராமாநுஜர் எம்பெருமானுடைய பாதாரவிந்தங்களிலே அடியற்ற பனைமரம்போல விழுந்து, ஆநந்தத்திலிருந்து, பிரபஞ்சப் பிரக்ஞையே யற்றவராய்த் திருவரங்கப் பெருமானையே தியானித்துக்கொண் டிருந்தார். கொஞ்ச நேரம் இங்ஙனம் இருந்துவிட்டுப் பின்னர்,

ஸ்ரீ ராமாநுஜர் எழுந்திருந்து இரு கைகளையும் கூப்பிக் கொண்டு எம்பெருமானெதிரே நின்று, தமது குருமூர்த்தி ஆளவந்தாராலே இயற்றப்பட்ட திருப்பல்லாண்டு, திருப் புகழாண்டு முதலியவற்றை யெடுத்து, பக்தகோடிகளனைவ ரும் பரவசமடையும்படியாகப் பாடினார்; எம்பெருமான் ஸ்ரீ ராமாநுஜருடைய உருக்கமான ஸ்தோத்திரங்களிலே லயமாகி, க்ஷேத்திரத்துக் கௌரதைகளெல்லாம் அவருக்கு அளிக்கும்படி செய்தார்; பரிசுத்த பாதரக்ஷைகளை அவ ருடைய சிரசின்மீது வைக்கும்படிக்கும் ஆக்ஞாபித்தார்.

ஸ்ரீ ராமாநுஜருக்கு உண்டான ஆநந்தத்தை என் னென்று கூறுவது: ஆடினார், பாடினார்; ஆநந்தக் கூத்தாடி னார்; ஆநந்தமானது அவருடைய ஹிருதயத்தினின்றும் பொங்கித் தத்தளித்து, கண்களின் வழியாக ஆறாக ஓடிற்று. ஸ்ரீ ராமாநுஜர் மிகுந்த பக்தி விநயத்துடனே அந்தக் கௌரதைகளை யெல்லாம் ஏற்றுக்கொண்டு, அந்தப் பாத ரக்ஷைகளைச் சிரசிலே தரித்து, கண்களிலே ஒத்திக்கொண் டார்.

ஸ்ரீரங்கநாதப் பெருமான் ஸ்ரீ ராமாநுஜரை நோக்கி, "எனது புத்திரா! நீ யொரு அரும் புதல்வன்; எனக் குள்ள அதிகாரத்தையும் ஐசுவர்யத்தையும், எல்லாவற்றை யும் ஆள்வதற்கு நீயே தகுந்தவன்; ஆகலின், இகத்தும் பரத்தும் இரு உலகத்தும் உனக்கும் உனது சிஷ்ய பரம் பரைகளுக்கும் சர்வாதிகாரமும் ஆக்ஷியும் கொடுத்தருள் கிறோம். நமது கிரகத்தினுடைய சகல பொறுப்பையும்

ஏற்றுக்கொண்டு, கார்ய நிர்வாகம் செய்வாய்'' என்று திருவாய்மலர்ந்தருளினர்.

ஸ்ரீ ராமாநுஜருக்கு இன்னது செய்வதென்றும், இன்னது சொல்வதென்றும் தெரியவில்லை; ''உத்தரவு'' என்று எல்லாவற்றுக்கும் பதில் சொன்னரே யொழிய வேறென்றும் சொல்லவில்லை; அருகிலே மகாபூர்ணர் நின்றுகொண்டிருந்தார். ஸ்ரீ ராமாநுஜர் திரும்பி, அவரை நோக்கி, ''ஸ்வாமி! இவ்வெல்லாவற்றுக்கும் காரண கர்த்தா தாங்கள் தானே; நான் தங்களிடத்தில் என்றென்றும் கடமைப்பட்டிருக்கிறேன்'' என்று கூறினர்.

மகாபூர்ணர் ஆகிய பெரிய நம்பியார் ''அன்று; அப்படியன்று; ஸ்ரீ சடகோபர் ''கலியுங்கெடுங் கண்டுகொண்மின்'' என்று இபற்றியுள்ள பாடலிலே குறிப்பிடப்பட்டது இப்பொழுது நிறைவேற்ற மடைகின்றது, அவ்வளவுதான். என்னுலொன்றும் இல்லை. எம்பெருமானுடைய கைக்கருவி மாத்திரமாகவே நான் இருக்கிறேன். உலகில் எம் மனிதனுல் யாது செய்ய முடியும்? எல்லாம் எம்பெருமான் செயலே'' என்று கூறிவிட்டு, ''நல்லது, எம்பெருமான் தங்களுக்கு இட்ட கட்டளைகளை நிறைவேற்றத் தாங்கள் தொடங்கலாமே'' என்றார்.

ஸ்ரீ ராமாநுஜர் ''அப்படியே யாகட்டும்'' என்று சொல்லி, திருச்சபா மண்டபத்தினுள்ளே நுழைந்து, கோவில் பணியாளர்க ளனைவருக்கும் சொல்லியனுப்பி

வரவழைத்து அவர்கள் செய்யும் வேலைகளையும் காலா காலத்தில் நடத்தப்படும் பூஜா முறைகளையும் இன்னின்ன வை யென்று அறிந்துகொண்டு, எல்லாவற்றையும் தாமே நேரில் பரிசோதனை செய்து பார்த்து, சகல கார்யங்களும் ஒழுங்குப்படி நடக்குமாறு ஏற்பாடு செய்தார்.

ஆண்டானை ஸ்ரீ ராமாநுஜர் மடப்பள்ளியை மேல் பார்க்கும்படி நியமித்து, எம்பெருமானுக்குக் காலம் தவறாது கட்டளை தவறாது நைவேத்தியம் சரிவர நடந்து வரும்படி ஏற்பாடு செய்தார்; தவிர, ஸ்ரீ ராமாநுஜர் ஆடையாபரணாதிகள், ஹாரங்கள், தீபங்கள் முதலியவற்றைப் பார்வையிட்டுச் செப்பனிடவேண்டியவற்றைச் செப்பனிடும்படி செய்தார்; புஷ்பத் தோட்டங்கள் உத்தியானவனங்கள் வசந்த மண்டபங்கள், வாகனங்கள் இவற்றையும் பார்வையிட்டுத் திருத்த வேண்டியவற்றைத் திருத்தும்படி செய்தார்; கோவில் பணியாளர்களுடைய குறைகளை யெல்லாம் கேட்டு, அவற்றை நிவிர்த்தி செய்துவந்தார்; க்ஷேத்திரத்திலே செப்பனிடவேண்டிய பாகங்கள் செப்பனிடப்பட்டன; புதுப்பிக்கவேண்டிய பாகங்கள் புதிப்பிக்கப்பட்டன.

இன்னும் ஸ்ரீ ராமாநுஜர் தமது சிஷ்யர்களுள் ஒருவராகிய அகளங்கர் என்பவரைக் கோவில் பணியாளர்களுக்கெல்லாம் மேலதிகாரியாக்கி, கோவில் கார்யங்கள் எவ்வித இடையூறு மின்றி நடைபெறும்படி செய்தார்; தினகால உற்சவம், பக்ஷ உற்சவம், மாசோற்சவம், வருஷோற்சவம் முதலிய சகல உற்சவங்களும் எல்லா விதமான வேடிக்கைக

ளுடனும் விமர்சைகளுடனும் நடைபெறும்படி வேண்டிய ஏற்பாடுகள் செய்தார்.

தவிர, ஸ்ரீ ராமாநுஜர் பிரபந்தப் பாடல்களை அவ்வவற்றிற்கேற்ற ஸ்வரத்துடனும் சங்கீதத்துடனும் கற்றுக்கொள்ள விரும்பி, தமது விருப்பத்தை ஸ்ரீ மகா பூர்ணரிடத்திலே தெரிவித்தார்; மகா பூர்ணர் ஸ்ரீ சடகோபரால் இயற்றப்பட்ட திருவாய்மொழியையும் ஸ்ரீ பரகாலரால் இயற்றப்பட்ட பெரிய திருமொழியையும் ஸ்ரீ வரரங்கரிடம் சென்று கற்றுக்கொள்ளும்படி சொல்ல, ஸ்ரீ ராமாநுஜர் அப்படியே வரரங்கரிடம் சென்று அவரிடத்தில் சில காலம் சிஷ்யராகி, இவ்விரண்டு பிரபந்தங்களையும் கற்றுத் தேர்ந்தார். பிரபந்த சங்கீத நாட்டியத்திலே பாண்டித்தியம் மிகுந்தவராகி, ஸ்ரீ ராமாநுஜர் இதை யநேகருக்குக் கற்றுக்கொடுத்து, இவர்கள் தனித்து வசிப்பதற்கு ஒரு பெரிய தெருவையும் ஸ்ரீரங்கத்திலே கட்டி, இவர்கள் உற்சவ காலங்களிலே எம்பெருமான் முன்னே நின்று ஆடிப்பாடவேண்டுமென்று ஏற்பாடு செய்தார்.

இன்னொரு பெரிய விசேஷம் நடந்தது. ஸ்ரீ சைதந்நியர் இரண்டு பரம துஷ்டர்களைப் பக்தி மார்க்கத்தை யநுசரிக்கும்படி செய்ததுபோல, நமது ஸ்ரீ ராமாநுஜரும் தநுர்தாசன் என்ற மல்லனொருவனைத் தமது மதத்திலே சேரும்படி செய்து, பக்தி மார்க்கத்தினால் உண்டாகும் இன்பத்தை யவனுக்கு ஊட்டுவித்தார்.

திரிசிராப்பள்ளிக்கருகே உறையூர் என்று ஒரு ஊர் இருக்கின்றது. இதற்கு முற்காலத்திலே நிச்சுளாபுரி யென்று பெயர். இவ்வூரிலே தநுர்தாசனென்னொரு மல்ல னிருந்தான்; அவன், குஸ்தி, சிலம்பம் முதலிய வித்தைக ளிலே மகா வல்லவன். அக்காலத்திலே அவனுக்கு இணை யெவருமே யில்லை; சுற்றுப் பிரதேசங்களிலே யுள்ள மல்லர் கள் யாவரும் இவனுடைய சமர்த்தை ஒப்புக்கொண்டு இவ னுக்குக் கப்பம் கட்டிவந்தார்கள். இவனுக்கு ஹேமாம்பாள் என்று ஒரு மனைவி யிருந்தாள்; இவள் அத்தியற்புதமான அழகு வாய்ந்து, அவனியி லுள்ளோர் அனைவருடையவும் ஆசைகளை யெல்லாம் ஒருங்கே கவர்ந்து, 'வனப்பெல்லாம் திரண்டு இவ் வடிவெடுத்ததோ?' என்று எல்லோரும் பிர மிக்கும்படி விளங்கிவந்தாள். தநுர்தாசன் அவளிடத்திலே திரிகரணமும் அடிமைப்பட்டு, அவளுடைய கண்களை மேன்மேலும் உற்றுற்று நோக்கி, அக் கண்களின் ஆழம் காண முடியாதவனாகி, அவற்றினிடத்திலேயே லயித்து, ஆநந்தக் கனவு கண்டுகொண் டிருந்தான்.

ஸ்ரீரங்கத்திலே வசந்தோற்சவம் நடந்தது. ஹேமாம் பாளுக்கு அவ் வுற்சவம் பார்க்கவேண்டு மென்ற ஆசை யுண்டாயிற்று; அவள் இவ் வாசையைத் தனது புருஷனு க்குத் தெரிவிக்க, அவன் அவ் வாசையை நிறைவேற்றா திரு க்க முடியுமோ? தநுர்தாசன் அவளை யிட்டுக்கொண்டு ஸ்ரீரங்கத்துக்கு வசந்தோற்சவம் பார்க்கச் சென்றான். ஆயி னும், அவனுடைய மனமானது உற்சவத்தினிடமாவது

ஸ்வாமியினிடமாவது செல்லவில்லை; ஹேமாம்பாளுடைய கண்களே அவனுடைய மனத்தைக் கவர்ந்தன. அவனுடைய சித்தமானது ஒரு நிமிஷமேனும் அவளுடைய கண்களை விட்டு அகலவில்லை; 'அவளுடைய மெல்லிய சரீரம் வெயிலினால் வாடிவிடுமோ?' என்று பயந்து, அவன் ஒரு குடையை விரித்து அவளுடைய சிரத்துக்கு மேலே பிடித்துக்கொண்டு, அவளுடைய அருகே மெல்ல அவளுக்கு ஆதாரவாக நடந்து சென்றான்; அவளுடைய அழகாகிற விஷத்தை 'ஆநந்தம் ஆநந்தம்' என்று அளவு கணக்கில்லாமல் அருந்தினான். ஆயிரக்கணக்கான ஜனங்கள் கூட்டம் கூடி அருமையாக உற்சவம் நடத்துகின்ற இச் சமயத்திலே இதோ ஒரு பைத்தியக்காரன், தநுர்தாசனென்பான், தனது மனைவியினிடத்திலேயே கண்ணையும் காதலையும் செலுத்தித் திருவிழாவையும் தேவனாகிய திருமாலையும் ஏறிட்டுப் பார்க்காமல் செல்வதை எல்லாரும் பார்த்து ஆச்சர்யப்பட்டு, "இவன் உலகத்திலே பெயர் பெற்ற மல்லனாயிருந்தும் இப் பெண்பாலுக்கு இப்படி அடிமைப்பட்டுக் கிடக்கிறானே" என்று வாயில் வந்தவாறெல்லாம் இகழ்ந்து வசை மொழி கூறினார்கள். இச் சமயத்திலே ஸ்ரீ ராமாநுஜரும் அவருடைய சிஷ்யர்களும் காவிரிக்கு ஸ்நாநத்துக்குச் சென்று, ஸ்நாநம் செய்து திரும்பி மடத்துக்கு வருகின்ற வழியிலே, தநுர்தாசனுடைய சிறு காதற் செய்கைகளைக் கண்ணுறும்படி நேரிட்டது.

ஸ்ரீ ராமாநுஜர் தமது சிஷ்யர்களை நோக்கி "இதோ பாருங்கள்! காதலினுடைய சக்தியை; இவன் எவ்வளவு

பெரிய பலசாலி? எவ்வளவு பெரிய மல்லன்? இவ் வுலகி லெங்கணும் பெயர் பெற்றவன்; இவன், இந்த மஹா பல சாலி, காதல் வசப்பட்டுக் கலங்கி நிற்பதைப் பாருங்கள்! அந்த ஸ்திரீ அவனுடைய மனைவிபோலத் தோன்றுகிறதே; இல்லையென்றால், அவனுடைய வைப்பாட்டியாக இருந் தால்தா னென்ன? அவன் அவளுக்குப் பணிவிடை செய்வ திலே தன்னையும் மறந்துவிட்டான், உலகையும் மறந்துவிட் டான்; மானம், வெட்கம் எல்லாவற்றையும் விட்டுவிட்டான். இந்தக் கடுங்காதலை எம்பெருமானிடத்துச் செலுத்தப்படும் பக்தியாக மாற்றிவிட நான் கருதுகின்றேன். இருக்கட்டும், இன்றே நான் இவனை மகா பக்தனுக்கி விடுகின்றேன்,'' என்று சொல்லி, மடத்துக்குச் சென்றவுடன், தநுர்தாச னைக் கூட்டிக்கொண்டு வரும்படி ஆள் அனுப்பினர்.

மகாப் பிரக்கியாதி பெற்ற வைஷ்ணவாச்சார்யர் ஸ்ரீ ராமாநுஜர் தன்னைக் கூட்டிக்கொண்டு வரச்சொன்னு ரென்று தநுர்தாசனுக்குத் தெரியவரவே, அவன் உடனே புறப்பட்டு மடத்துக்கு வந்து, ஸ்ரீ ராமாநுஜருடைய பாதங் களிலே விழுந்து நமஸ்கரித்து, "ஸ்வாமி! திருவுளம் யா தோ? அடியேனை லக்ஷியம் செய்து இட்டுவரச் சொன்ன தின் கருத்து யாதோ?" என்று கேட்க, ஸ்ரீ ராமாநுஜர் முதலில் அவனுடன் ஒன்றும் உரையாடாமல், அவ னுடைய கண்களினுள்ளே தமது பார்வையைச் செலுத்தி, அவனுடைய மனத்திலே நிகழ்பவற்றை யெல்லாம் பரி சோதனை செய்து பார்த்துக்கொண்டார்.

16

பின்னர், ஸ்ரீ ராமாநுஜர் "உனக்கு இன்று ஒரு புத்தி மதி கூறப்போகிறேன்; அதற்காக நீ வருத்தப்படலாகாது. காதலென்பது ஒரு கடுங்கோல் மன்னனென்பதையும், எவ்வளவு பலவானு யிருந்தாலும், எவ்வளவு பராக்ரம சாலியா யிருந்தாலும், எவ்வளவு படித்தவனு யிருந்தாலும் அக் கடுமையாளனுடைய கைகளினின்றும் தப்புவது அருமை யென்பதை எவரும் மறுக்கார். ஆயினும், நீ இன்று நடுரஸ்தாவிலே, ஆயிரக் கணக்கான ஜங்களுக்கு மத்தியிலே, வெட்கம் மானம் எல்லாவற்றையும் விட்டுவிட்டு, நீ உன்னையும் மறந்து, சுற்றியுள்ள உலகையும் மறந்து, கேவலம் ஒரு ஸ்திரீயினுடைய கண்களுக்கு அடிமையாகி நிற்பது உனக்கே அவமானமா யிருக்கவில்லையா? நீ தீரர்களுக்குள்ளே மகா தீரனெனப் பெயர் பெற்றிருக்கிறுய்; எமன் வந்தால் அவனை யெதிர்த்து நிற்க நீ வல்லவனு யிருக்கிறுய்; இவ்வளவு வல்லமை யெல்லாம் நீ வாய்ந்தவனு யிருந்த பொழுதிலும் இப்படி ஒரு ஸ்திரீக்கு அடிமைப்பட்டிருக்கலாமா? இது ஆச்சர்யமாகவே யிருக்கிறது; எனக்கு மிக மிக வருத்தத்தை யுண்டாக்கிவிட்டது; இது உன்னைத் தனியே சம்பந்தித்த விஷயமாகையால், எனக்குச் சொல்லக்கூடக் கொஞ்சம் கூச்சமா யிருக்கிறது," என்றுர்.

தநுர்தாசன் இரு கைகளையும் கூப்பிக்கொண்டு "ஸ்வாமி! எனக்குக் காமப்பித் தொன்றுமில்லை; நான் அந்நிய ஸ்திரீ எவளையும் பின்பற்றிச் செல்லவு மில்லை; தாங்கள் பார்த்த ஸ்திரீ எனது மனைவியே யாவள்; அவளுக்கு நிகர்

த்த அழகையுடையவர்கள் எவரேனும் இவ் வுலகில் இருக்கின்றனரா? ஆ! ஆ! அவளுடைய கண்களின் ரம்யமே ரம்யம். என்ன அழகு! என்ன வசீகரம்! அவற்றின் ஆழத்தைக் கண்டுபிடிக்க இயலுமா? 'நான் அக் கண்களினுள்ளே என்னையும் இவ் வுலகையும் மறந்துவிடுகிறேன்' என்பது உண்மையே; நான் அவற்றைப் பார்த்துக்கொண்டே யிருந்தால், அதுவே எனக்கு இன்பமா யிருக்கிறது. 'சூர்யனுடைய உஷ்ண கிரணங்கள் அவளுடைய கண்களைக் கூசச் செய்து, அவளுடைய சரீரத்தை வாட்டிவிட்டால் என் செய்வது' என்று கருதி நான் அவளுக்குக் குடைபிடிக்கும்படி நேர்ந்தது. பிரபு! ஸ்வாமி! நான் தங்களிடம் உண்மையை யுரைத்தேன்; தாங்கள் எப்படி யுத்தரவு செய்தாலும் அப்படி நடக்கச் சித்தமா யிருக்கின்றேன்'' என்றான்.

''நல்லது, உனது மனைவியைப் பார்க்கிலும் இன்னும் அதிக அழகும் ரம்யமும் வாய்ந்த ஒருவரை யுனக்குக் காண்பித்தால், அப்பொழுது நீ என்ன செய்வாய்?''

''அப்பொழுதென்னசெய்வது? 'கிருதார்த்தனானேன்' என்று நான் என்னையே புகழ்ந்துகொள்வேன். அப்படி இன்னும் அதிக அழகு வாய்ந்தவர் ஒருவர் இருந்தால், அவரிடத்திலே அடி பணிந்து நிற்க நான் தயாரா யிருக்கின்றேன்.''

''நல்லது, கூடவா!'' என்று ஸ்ரீ ராமாநுஜர் கூறி, உடனே அவனை யிட்டுக்கொண்டு ஸ்ரீரங்கநாதப் பெருமா

னுடைய சந்நிதானத்திலே சென்றார். அங்கே ஸ்ரீ ராமானுஜர் அந்தத் தநுர்தாசனுக்கு ஸ்ரீரங்கநாதப் பெருமானைச் சுட்டிக் காட்டி, “அழகே யுருவெடுத்து வந்தவர் அதோ யிருக்கிறார், பார்! உனக்கு முன்னமேயே இன்னொருவர் அவரிடத்திலே காதல் செலுத்தி, அவருடைய பாதாரவிந்தங்களி னடியிலே, இன்பகீத மெடுத்து எப்பொழுதும் பாடிக்கொண் டிருக்கும் பாக்கியம் பெற்றிருக்கிறார்; நீ அடிமைப்பட்டுக் காதல் செலுத்தும் அந்த ஸ்திரீயினுடைய அழகையும், இந்தத் திவ்ய தேஜோமயமான அழகையும் ஒத்திட்டுப்பார்” என்றார்.

தநுர்தாசன் அப்படியே அவ் வற்புதமான கண்களை யுற்று நோக்க, அக் கண்களினிட மிருந்து ஒருவிதமான ரம்யசக்தி அவனை யாகருஷித்தது; அவன் அக் கண்களினிடத்தே லயமாகி, தன்னை மறந்து நின்றான், எம்பெருமானுக்கும் அவனிடத்தே ஒருவித பிரத்தியேகப் பிரியம் விழுந்தது; காமப்பித்துப் பிடித்திருந்த அம் மல்லன் கால தேசமற்ற இன்பப் பிரதேசத்திலே லயித்து விட்டான். இவன் பூவழுக்குக்களெல்லாம் நீங்கி, ஆகார நித்திரையற்று, அக் கண்களையே பார்த்துப் பார்த்துப் பார்த்துப் பார்த்து ஆநந்த மெய்தி அப்படியே காலங் கழித்துக் கொண்டிருந்தான்.

‘இவன் பக்தியிலே எவ்வாறு அபிவிருத்தி யடைந்து வருகிறான்?’ என்பதைஸ்ரீராமானுஜர் கவனித்துக்கொண்டே வந்தார்; இவனுடைய நிச்சலபக்தி அவருக்கு அதிக சந்

தோஷத்தை யுண்டுபண்ணிற்று. ஸ்ரீ ராமாநுஜர் அவனைக் கூட்டி வரும்படி சொல்லியனுப்பி, அவன் வந்தவுடனே, தமது பாத தீர்த்தத்தை யவனுக்கு அளித்து, தமது உச்சிஷ்டப் பிரசாதத்தையும் கொடுத்தார்; இன்னும் அவனுக்கு அதி ரகஸ்ய மந்திரோபதேசம் செய்து, அவனைத் தமது மிகமிக அருமையான சிஷ்யர்களுள் ஒருவனாக்கிக் கொண்டார்.

தநுர்தாசனுடைய காமக்கிழத்தியாகிய ஹேமாம்பாளுக்கு நடந்த சங்கதி தெரியவந்தது; அவள் உலக வாழ்க்கையை உடனே துறந்து, ஸ்ரீ ராமாநுஜரை நாடியோடி வந்து, அவருடைய பாதங்களிலே விழுந்து, "ஸ்வாமி! எனது புருஷனை ரக்ஷித்து ஈடேற்றியதுபோல என்னையும் ரக்ஷிக்குமாறு வேண்டுகின்றேன்," என்று பிரார்த்தித்தாள். தயாநிதியாகிய ஸ்ரீ ராமாநுஜர் அதிக சந்தோஷத்துடனே அவளைத் தமது சிஷ்யவர்க்கத்திலே சேர்த்துக்கொண்டார்; அவள் வெகு சீக்கிரத்திலே பக்திப் பழமாகி, அனைவரும் ஆச்சரியப்படும்படி ஆசார்யர் ஸ்ரீ ராமாநுஜருடைய பிரத்தியேக கவனத்துக்கும் வாத்சல்யத்துக்கும் பாத்திரமானாள்.

ஸ்ரீ ராமாநுஜர் தநுர்தாசனை எம்பெருமானுக்கு மெய்காப்பாளனாக நியமித்தார். அவன் தனது மருமக்கள் வந்தன், சுந்தன் என்னும் இருவரையும் தன்னுடன் இட்டுக்கொண்டு வந்து, அவர்களை ஸ்ரீ ராமாநுஜருடைய பாதங்களிலே விழுந்து அபயம் கேட்கும்படி சொன்னான்; அப்

படியே ஸ்ரீ ராமாநுஜர் அவர்களுக்கு அபயம் அளித்து, உபதேசம் செய்து, தமது சிஷ்யர் குழாத்துடனே சேர்த்துக்கொண்டார். அவர்கள் இருவரும் தாங்கள் தினந்தோறும் மடத்துக்கு வேண்டிய பொருள்களைக் கொண்டு வந்து கொடுக்குமாறு ஸ்ரீ ராமாநுஜர் அநுமதி யளிக்க வேண்டுமென்று வேண்ட, அவ்வாறே யநுமதி யளிக்கப் பட்டது; அன்றுமுதல் மடத்துக்குவேண்டிய பொருள்கள் எல்லாவற்றையும் அவர்களே கொண்டுவந்து கொடுத்துக் கொண் டிருந்தார்கள்.

தவிர, ஸ்ரீராமாநுஜர், க்ஷேத்திரத்திலே அதுவரையில் வழங்கி வந்த வைகானச முறை யுபாசனையை நீக்கிவிட்டு, ஸ்ரீ யாமுநாசார்யர் எழுதிய "ஆகமப்ராமாண்யம்" என்ற க்ரந்தத்திலே பிரமாதமாகப் புகழ்ந்து கூறப்பட்டுள்ள பாஞ்சராத்ர முறையை யநுசரிக்கும்படி ஏற்பாடு செய்தார்.

சின்னாட்களுக்கு முன்னே கோவிந்தரைத் தமது மதத்துக்குத் திருப்புவதற்காக ஸ்ரீ சைல பூர்ணரிடம் கூறும் படி ஒரு ஸ்ரீவைஷ்ணவரைத் திருப்பதிக்கு அனுப்பிவைத்தாரென்று முன்னமேயே கூறியிருக்கிறோம். இப்பொழுது திருப்பதிக்குச் சென்ற அந்த ஸ்ரீவைஷ்ணவர், ஸ்ரீரங்கத்துக்குத் திரும்பி வந்து ஸ்ரீ ராமாநுஜருடைய பாதங்களிலே பணிந்து நின்றார். ஸ்ரீ ராமாநுஜர் அவரைப் பார்த்த வுடனேயே 'அவர் நல்லதொரு சந்தோஷ சமாசாரம் கொண்டு வந்திருக்கிறார்' என்று தெரிந்துகொண்டு, அவர் போய்

வந்த விஷயத்தைப் பற்றி விவரமாகக் கூறும்படி ஆக்ஞாபித்தார்.

"'நான் திருப்பதிக்குச் சென்று, ஸ்ரீசைல பூர்ணரைக் கண்டு, தாங்கள் கூறியதைச் சொன்னேன். அவர் 'நானே இது செய்திருக்கவேண்டியது; எனக்கு ஞாபகப்படுத்த வேண்டி வந்தது பற்றி நான் வெட்க மடைகின்றேன்; ஆ! ஆ! ஸ்ரீ ராமாநுஜருடைய புத்திசாலித்தனந்தான் என்னே! அவருடையதைப் போன்ற அகன்ற ஹிருதயம் வேறொன்று உண்டோ? இப்பொழுதாயினும் அக் கார்யத்தை நான் செய்திடுவேன்" என்று கூறி, என்னையும் இட்டுக்கொண்டு காளத்தி நகருக்குப் புறப்பட்டார். நாங்கள் அங்குச் சென்று ஒரு தடாக தீரத்திலே ஒரு பெரிய விருக்ஷத்தினடியிலே தங்கினோம். சீக்கிரத்தில் கோவிந்தர், கோவில் பூஜைக்குத் தீர்த்தம் எடுக்கும் பொருட்டு அங்கு ருத்ர ஸ்தோத்ரமாகச் சில சுலோகங்களைக் கூறிக் கொண்டு வந்து சேர்ந்தார். அவர் எங்களுக்குச் சமீபத்தில் வந்தவுடனே, ஸ்ரீ சைலபூர்ணர் அவரை நோக்கி, "ஜடா மகுடத்தைக் கொன்றைப் புஷ்பங்களினால் அலங்கரித்துக் கொண்டிருக்கிறவனை அவ்வளவு பக்தியுடனே ஸேவை செய்தால் உனக்கு என்ன லாபம் கிடைக்கும்?" என்றார். கோவிந்தர் மறுமொழியாக ஒரு புன்னகை புரிந்துவிட்டுப் போய்விட்டார். ஸ்ரீ சைலபூர்ணர் என்னைப் பார்த்து, "விதை விதைத்தாய்விட்டது; அது முளை கிளம்பி வளர வளர எம்பெருமான் பார்த்துக்கொள்வார்; நாம் இன்

ளொரு முறை அறுப்பு அறுக்க வரலாம்'' என்று கூற; நாங்கள் இருவருமாகத் திருப்பதிக்குத் திரும்பி வந்துவிட்டோம்.

"சின்னுட்கள் கழித்து நாங்கள் மறுபடியும் காளத்திக்குச் சென்று, அதே விருக்ஷத்தி னடியில் தங்கினேம்; முன்போலவே, கோவிந்தர் அங்கு வந்தார்; அப்பொழுது ஸ்ரீ சைல பூர்ணருக்குத் திடுக்கென்று ஒரு எண்ணம் உண்டாயிற்று; அவர் ஸ்ரீ ராமாநுஜரைத் திடுக்கிடச் செய்து ஸ்ரீ யாமுநாசார்யரிடத்திலே பக்தி செலுத்தும்படி செய்ததும், ஸ்ரீ யாமுநாசார்யருடைய நூல்களில் ஒன்றிலே யுள்ளதுமான ஒரு பாடலை ஒரு பனையோலையிலே எழுதி, கோவிந்தர் வரும் வழியிலே எறிந்தார். கோவிந்தர் தமது வழியிலே கிடக்கும் அப் பனையோலையைக் கண்டு, அதை யெடுத்து, நன்ருக வாசித்துப் பார்த்து, அதைக் கீழே போட்டுவிட்டுப் போய்விட்டார்; ஆனுல், சிக்கிரத்திலே அவர் மறுபடியும் திரும்பிவந்து, அப் பனையோலையைக் கையி லெடுத்துக்கொண்டு, ஏதோ சிந்தனையி லாழ்ந்தவர் போல எங்களை யணுகி, "இப் பாடலிலுள்ள கொள்கை நீங்கள் நீக்கிவிட்டதொன் றல்லவா?'' என்று கேட்டார்.

ஸ்ரீ சைல பூர்ணர்:— "சிலருக்குச் சில அபிப்பிராயங்கள் உண்டு; ஆனுல், 'அவர்கள் மிகவும் சீக்கிரத்தில் அவற்றை மாற்றிக்கொள்ளவேண்டி வரும்' என்று எனக்குத் தெரியும்; ஆனுல், எனது மதம் அசைக்கமுடியாதது; ஒரு

தாம் எடுத்துக்கொள்ளப்பட்டுவிட்டால் எப்பொழுதும் நன்மையாகவும் உண்மையாகவுமே யிருக்கும்."

கோவிந்தர்:— "வேற்றுமை யென்பது பிரபஞ்ச நியதி யல்லவா? இரண்டு வஸ்துக்கள் ஒரே மாதிரி யிருக்கக் காண வில்லை. 'மிருகங்களினும் நாம் சிரேஷ்டமானவர்கள்' என்று நாம் சொல்லிக்கொள்வதற்கு முக்கிய காரணம் யாதெனில், நமது ஸ்வபுத்தியும் ஸ்வதந்திரமாக நினைக்கும் தன்மை யுமேயாம். அப்படியிருக்க, நீங்கள் எல்லோரும் ஒன்றும் அறியாத மிருகங்கள் போல ஒரே மார்க்கத்தில் செல்வ தென்ன?"

ஸ்ரீ சைல பூர்ணர்— "மார்க்கமானது நல்லதாய், பந் தோபஸ்தானதாய், குறுகியதாய், சௌகர்யம் வாய்ந்ததா யிருக்கிறபொழுது, 'தனித்து ஒரு மார்க்கம் செல்லவே ண்டும்' என்ற ஒரே காரணத்தை யுத்தேசித்துக் குறுக்கே ஒரு பாதை வெட்டுபவன் மூடனே யல்லவா?"

கோவிந்தர்:— "மனிதன் சர்வத்துடனே லயமாய் விடு கிறபொழுது, அவனுக்குப் பந்தோபஸ்தல்லாத மார்க்கம் எது?"

ஸ்ரீ சைல பூர்ணர்:—"ஏகேனும் சரக்கு உள்ளவன் இந்த ரஸ்தாவிலேயே நடப்பான்; ஆனால், பிச்சைக்கார னுக்கு எல்லா ரஸ்தாக்களும் பந்தோபஸ்தே."

கோவிந்தர்:— "எனது மதத்துக்குச் சிலரைப் புதி தாகச் சேர்ப்பதற்கு வந்தீர்களோ?"

ஸ்ரீ சைல பூர்ணர்:— "எங்கள் மதத்துக்குப் புதிதாக ஜனங்கள் சேர்க்க வந்தோம்; நாங்கள் பசுக்கள் வாங்க வந்தோம்."

கோவிந்தர்:— "பசு வாங்க வந்தீர்களோ? பசுக்களின் பாதங்களிலிருந்து கிளம்பும் தூசி மிகவும் பரிசுத்தமான தல்லவா? எங்களுடைய மதத்தின் பெருமையை நீங்களே, தெரியாமல், ஒப்புக்கொண்டுவிட்டீர்கள்."

ஸ்ரீ சைல பூர்ணர்:— "பசுக்கள் நல்ல இனத்தினவாயிருந்தால் தாங்கள் கூறுவது உண்மையே; எம்பெருமானுடைய பக்தர்களின் பாததூளி இத்தகைய தென்று சொல்ல முடியாதபடி அவ்வளவு பரிசுத்தமான தென்பது உண்மையே. ஆனால், ஏகமாய் எங்குமுள்ளவனாயுள்ள இறைவனுடைய பக்தர்களுக்கே இப் பெருமை யுள்ளது; வேறு கடவுளர்களைப் பூஜிக்கு மவர்களுக்கு இப் பெருமை கிடையாது."

கோவிந்தர்:— "குறுக்குக் குறிகளைப் பார்க்கிலும் நேர் நெட்டுக் குறிகள் எப்படிச் சிலாக்கியமாம்?"

ஸ்ரீ சைல பூர்ணர்:— தீயதும் தொந்தரவு மிகுந்ததுமான பாதையைப் பார்க்கிலும் நேர்மையும் நன்மையும் வாய்ந்த பாதை எப்படிச் சிலாக்கியமோ அப்படியேதான். நேர் நெட்டுக் குறிகள் சாஸ்திரங்களினாலும், புராணேதிகாசங்களினாலும், வேதங்களினாலும் அருளப்பட்டிருக்கின்றன; குறுக்குக் குறிகளுக்கு நீங்கள் கூறும் நியாயங்கள்

பொய்யானவையாய், கட்டப்பட்டவையாய், சுற்றுப் போக்குடையவையாய், நியாய விரோதமானவையாய் இருக்கின்றன.”

கோவிந்தர்:— “உங்களுடைய கொள்கை மெத்த மெத்தப் புதிதாக இருக்கிறதே.”

ஸ்ரீசைலபூர்ணர்:— “அன்று, அன்று; அது மிகமிகப் பழமையானதென்றும், நீங்கள் பரிசுத்தமானவை யென்றும் ஆசாரம் மிகுந்ததென்றும் ஒப்புக்கொள்ளுகின்ற மேற்கோள்களையே ஆதாரமாகக் கொண்டுள்ளதென்றும் நான் நிரூபிக்கக்கூடும்.”

கோவிந்தர்:— “நல்லது; அது என்னவோ? பார்க்க வேண்டும். ஒவ்வொன்றையும் நாம் முதலிலிருந்து கடைசி வரையில் வாதிக்கவேண்டி யிருக்கின்றது; முன்பின் சம்பந்தம் தெரிந்துகொள்ளாது, நாம் எதையும் எடுத்துக் கொண்டுவிடக்கூடாது.”

ஸ்ரீ சைலபூர்ணர்— “அப்படியன்று; நாம் எல்லோரும் நெடுந்தூரம் ஒன்றாகவே செல்கின்றோம்; லக்ஷிய விஷயத்திலேயே, முடிபு விஷயத்திலேயே நமக்கு வித்தியாசம் உள்ளது; அங்குத்தான் நாம் தர்க்கிக்கவேண்டும்.”

கோவிந்தர் இதற்குப் பதில் ஒன்றும் சொல்லவில்லை; ஆனால், ஸ்ரீ சைலபூர்ணரை உற்று உற்றுச் சிறிது நேரம் பார்த்துவிட்டுத் தலையை அசைத்துக்கொண்டு போய்விட்டார்.

ஸ்ரீ சைலர் என்னை நோக்கி "நம்முடைய முயற்சிகள் வீண்போகவில்லை. கோவிந்தர் நிச்சயமாக நம்முடையவரே" என்று சொன்னார். பின்னர் நாங்கள் இருவருமாகத் திருப்பதிக்குத் திரும்பி வந்துவிட்டோம்."

இப்படி யிவர் சொல்லிக்கொண்டே போகையில், ஸ்ரீ ராமாநுஜர் குறுக்கே சில வார்த்தைகள் ஆண்டானையும் ஆள்வானையும் நோக்கிச் சொன்னார்:— "எனது குருமூர்த்தியின் வாக்கு விசேஷத்தைப் பார்த்தீர்களா? அவை கோவிந்தருடைய ஹிருதயத்திலே ஆழ்ந்து ஊன்றிவிட்டன; ஆனாலும், இத்தனை நாட்களாகத் தாம் அநுசரித்து வந்த மதத்தைத் திடீரென்று விட்டுவிட முடியுமா? ஆதலால், வெளித் தோற்றத்துக்குக் கோவிந்தர் நியாயம் பேசி வாதிக்கவேண்டி வந்தது. ஆனால், கோவிந்தர் மகா புத்திசாலி யல்லவா? ஆதலால், ஸ்ரீ சைலபூர்ணர் கூறிய நியாயங்களை யெல்லாம் கேட்டுவிட்டு, மறுமொழி யொன்றும் கூறாது சென்றார். சுருதி, ஸ்மிருதி புராணேதிகாசங்களிலே ஜீவாத்ம பரமாத்ம சம்பந்தங்களையும், நேர் நெட்டுக் குறிகளின் பிரயோஜனத்தையும், நம்பெருமானுக்கு ருத்திரன் தாழ்ந்தவரே யென்பதையும் போதிக்கின்ற எண்ணற்ற ஸ்லோகங்கள் திடீரென்று ஏக காலத்தில் அவருடைய ஞாபகத்தினுள்ளே பிரவேசித்து, அவரைக் கலங்கச் செய்திருக்கும்; இல்லாவிட்டால், கோவிந்தரா மறுமொழி கூறாது செல்பவர்? நமது ஸ்ரீ சைலபூர்ணரின் சமர்த்துதான் என்னே? சாதாரணக் கல்வியும் யுக்தியும் கோவிந்த

ரிடத்திலே பயன்படாது. நல்ல திருக்கட்டும். எங்கே? அதற்கு மேல் சொல்லும், பார்ப்போம்.''

"எல்லாம் அநுகூலமாக முடியாமல் எப்படித்தான் முடியும்? தங்களுடைய ஸ்பர்சமாத்திரத்தினாலே, அல்லது தங்களுடைய கிருபா கடாக்ஷத்தினாலே உயிரற்ற பொருள்களும் உயர்வை யடைந்துவிடுகின்றன வென்றால், கோவிந்தர் உய்வதற்குக் கேட்கவும் வேண்டுமோ? நாங்கள் இருவரும் மறுபடியும் காளத்திக்குச் சென்று, ஊருக்கு வெளியேயுள்ள ஒரு தோட்டத்திலே தங்கி யிருந்தோம். ஸ்ரீ சைலபூர்ணர் பிரபந்தத் திரட்டின் ஆந்தரார்த்தங்களைப் பற்றி என்னுடனே யுரையாடிக்கொண்டிருந்தார். அப்பொழுது கோவிந்தர் அத் தோட்டத்தினுள்ளே வந்து, சிவ பூஜைக்குப் புஷ்பங்க ளெடுக்கும்பொருட்டு ஒரு விருக்ஷத்தின்மீ தேறினர். அச் சமயத்தில் ஸ்ரீ சைலபூர்ணர் "திண்ணன்வீடு'' என்று ஆரம்பிக்கின்ற பாடலைப் பாடி, வியாக்கியானம் செய்தார்.

"ஸ்ரீ கோவிந்தர் புஷ்பங்கள் எடுக்கும் வேலையை நிறுத்திவிட்டு, கவனமாக முதல் மூன்று பாடல்களையும் கேட்டார்; ஸ்ரீ சைலபூர்ணர் நான்காவது பாடலுக்கு உரை கூறியபொழுது "எவருடைய பாதங்களிலே நாம் புஷ்பங்களைப் போடவேண்டும்? எவரை நாம் பூஜிக்கவேண்டும்? ஒரே மறுமொழிதான் உள்ளது—நாராயணமூர்த்தி யொருவரையே நாம் பூஜிக்கவேண்டும்'' என்று சொல்ல, விருக்ஷத்தின்மீதிருந்த கோவிந்தர் "ஏன் வேறு கடவுளர்களைப்

பூஜிக்கக்கூடாது?'' என்று கேட்டார். ஸ்ரீ சைலர் முன் கூறியதையே மறுமொழியாகக் கூறினர். கோவிந்தர் மொத்தம் மும்முறை அக் கேள்வியையே கேட்டார்; ஸ்ரீ சைலர் மும்முறையும் அப்படியே மறுமொழி கூறினர்.

''உடனே கோவிந்தர் விருக்ஷத்தினின்றும் கீழே யிறங்கி, கையிலிருந்த புஷ்பக் குடலையைத் தூர எறிந்தார்; கழுத்தி லணிந்திருந்த ருத்திராக்ஷமாலையைக் கழற்றி யெறிந்தார்; ஸ்ரீசைலபூர்ணருடைய அடிகளிலே விழுந்து வணங்கி, ''பிரபு! என்னை ரக்ஷிக்கவேண்டும்; உனது அபார கிருபையிலே நான் சரண் புகுந்து கொள்கிறேன்; நான் அந்தகாரத்திலே நெடு நாட்கள் அலைந்து திரிந்தேன்; எனக்கு அறிவு புகட்டினீர்கள்; என்னைச் சன்மார்க்கத்திலே திருப்பி இறைவனுடைய பாதார விந்தங்கட்குச் செல்லும் மார்க்கத்தைப் போதிக்கவேண்டும். நான் அநந்த உலகங்களுக்கும் ஆண்டவனாகிய ஆதிமூலமூர்த்தியை மறந்து—அலக்ஷியம் செய்து—சடை தரித்துப் பிச்சைக்காரனைப் பின்தொடர்ந்தேன்; அழகிய தாமரைக் கண்ணனை அலக்ஷியம் செய்து, அக்கினிக் கண்ணனைப் பின்தொடர்ந்தேன்; ஒரு கையினால் கோவர்த்தன கிரியைத் தூக்கிக்குடையாகத் தாங்கி, உற்றார் உறவினர் எல்லோரையும் காத்தருளிய கோபாலனை யலட்சியம் செய்து மண்டையோடு தாங்கிப் பிச்சையேற்றுத் திரியும் பேயாண்டியை நான் பூஜித்து வந்தேன்; ஸ்ரீ லக்ஷ்மி தேவியை மார்பகத்தே சேர்த்து அணைத்துக்கொண்டு ஸ்ரீநிவாசனாய் விளங்கும் ஜகந்நாதனை மறந்து, ஒன்றுமில்

லாமல் ஒட்டாண்டியாய்த் திரிபவனைப் போற்றிக்கொண் டிருந்தேன். பரிசுத்த கங்கை யுற்பத்தியாகின்ற பாதார விந்தங்களை யுடையவனை மறந்து, சுடலைக்குச் சுடலை சுற்றித் திரிகின்ற சோம்பேறியை ஸ்தோத்திரம் செய்து வந்தேன்'' என்று கூறினர்.

"ஸ்ரீ சைலபூர்ணர் என்னையும் கூடவந்த மற்றவர்களை யும் நோக்கி "இவருடைய லக்ஷணங்களை யெல்லாம் நன் ருகப் பரிசோதித்துப் பார்த்துவிட்டேன்; இவருக்குப் பந் தம் நிவிருத்தியாகும் காலம் வந்துவிட்டது; அவர் சீக்கிரத்தி லே ஆளவந்தாருடைய கிருபைக்குப் பாத்திர ராய்விடுவார்'' என்று சொல்லிவிட்டு, கோவிந்தரைக் கட்டி யணைத்து, அவருக்குத் தேறுதல் கூறினர்.

"இதற்குள்ளாகச் சமாச்சாரமானது காளத்திக் குடி ஜனங்களுக்கெல்லாம் தெரிந்துவிட்டது; முதலில் எங்களைச் சந்தித்ததிலிருந்தே அவர்களுக்கு எங்கள்மீது சந்தேகம் ஏற்பட்டிருந்தது. இப்பொழுது அவர்கள் ஒரு பெருங் கூட்டமாகத் திரண்டு எங்களிடம் வந்து, ஸ்ரீ சைலரை நோக்கி, "ஐயா! தாங்கள் பெரியோராகத் தோன்றுகிறீர் கள்; வயதிலும் பெரியவரா யிருக்கின்றீர்கள்; இப்படி யெல் லாம் இருந்தும், எங்களுக்குள்ளே எல்லோரையும் பார்க்கி லும் அதிகம் படித்தவராயும் தலைவராயுமுள்ள இவரை வஞ்சகம் செய்து, ஏமாற்றிக் கொண்டுபோவது நியாய மா?'' என்று கேட்டார்கள்.

ஸ்ரீசைலர்:—"நான் அவருக்கு மாமன் முறையாக வேண்டும். 'நான் அவரை ஏமாற்றுகிறேன்' என்று சொல்

கிறீர்கள்; இவர் எங்கும் போய்விடவில்லையே; இதோ யிருக்கிறாரே; என்னிடம் கேட்ட கேள்வியை அவரிடமே கேட்டுவிடுங்கள்! உங்களுக்கும் எங்களுக்கும் எவ்விதத்திலும் ஒற்றுமை யில்லை; உங்களுடைய மார்க்கங்களிலே நாங்கள் ஒருபொழுதும் பிரவேசிக்கமாட்டோ மென்பது நிச்சயம்.''

“அவர்கள் இதைக் கேட்டுவிட்டு, கோவிந்தரைக் கையைப் பிடித்துக்கொண்டு, “ஸ்வாமி! வாருங்கள்! எங்களைக் கைவிட்டுவிடாதீர்கள்! இவ் வேமாற்றக்காரர்களுடைய வலைகளிலே அகப்பட்டுக் கொள்ளாதீர்கள்! இங்கிருந்து போகலாம் வாருங்கள்!'' என்று அழைக்க, கோவிந்தர் கையை உதறிப் பிடுங்கிக்கொண்டு, “என்னைக் கையைப் பிடித்திழுக்க உங்களுக்கு அவ்வளவு துணிச்சலா? இதோ உங்களுடைய பொக்கிஷத்தின் சாவி; இதோ முத்திரை மோதிரம்; இரண்டையும் பெற்றுக்கொள்ளுங்கள்! இனிமேல் எனக்கும் உங்களுக்கும் எவ்வித சம்பந்தமு மில்லை'' என்று கூச்சலிட்டார்.

“அவர்கள் “இப்படியெல்லாம் நேருமென்று எங்களுக்கு நேற்றே தெரியும். ஆயினும், எப்படியாவது தங்களைத் திருப்பிக் கொண்டுபோய் விடலா மென்று நினைத்தோம்; இவர்களை யடித்துத் துரத்திவிட்டு, தங்களை மீட்டுக் கொண்டு போய்விடுவ தென்றுகூட நினைத்தோம்; ஆனால், நேற்றிரவு, காளத்திநாதர் எங்களுடைய கனவிலே தோன்றி, “பௌத்தர்கள், சார்வாகர்கள், பாஷண்டர்க

ளாதியோருடைய முயற்சிகளினாலே வைதீக தர்மமானது அழிந்துவிடுந் தறுவாயிலிருக்கின்றது. முன்னொரு காலத்திலே தர்மத்தை ரக்ஷிப்பதற்கு ஈஸ்வரன் தத்தாத்திரேயராக அவதரித்ததுபோல, இப்பொழுது அவர்: சேஷன், கருடன் முதலியவர்களை ஸ்ரீ ராமாநுஜர், கோவிந்தர் என இப் பூவுலகுக்கு அனுப்பியிருக்கின்றார்; சங்கமும், சக்கரமும்: ஆண்டானும், ஆள்வானுமா யிருக்கின்றார்கள்; இது போன்றே இன்னும் அநேக தேவர்கள் மனுஷ்ய சரீரம் எடுத்துள்ளார்கள். கோவிந்தர் காசியிலேயே தங்கிவிட நினைத்ததினாலே, அவர் அங்கு அப்படித் தங்கிவிடா திருக்கும்பொருட்டு, நான் அவருடைய கையிலே தோன்றி, இதுவரையில் அவரை என்னுடனேயே வைத்துக்கொண்டிருந்தேன். இப்பொழுது அவர் வேலை செய்யவேண்டிய காலம் வந்துவிட்டது; அவ் வேலையினின்றும் அவரைத் தடுக்காதீர்கள்.'' (ஸ்ரீ சைலரையும் அவருடன்கூட வந்தவர்களையும் பார்த்து) ''நீங்கள் அவரை உங்களுடன் கூட்டிக்கொண்டு போங்கள். எல்லா நன்மையும் உங்களுக்கு உண்டாகக் கடவது'' என்று கூறினார்; ஆகவே, நாங்கள் இப்பொழுது தடை சொல்லவில்லை'' என்று கூறி, எங்களை மிகுந்த மர்யாதை செய்து அனுப்பிவைத்தார்கள்.

''ஸ்ரீ சைல பூர்ணர் கோவிந்தருக்குச் செய்யவேண்டிய பிராயச்சித்தக் கிரியைகளெல்லாம் செய்து, வைஷ்ணவ மார்க்கத்திலே அவருக்கு உபதேசமும் செய்து வைத்தார். இதற்குள்ளாகக் கோவிந்தருடைய மனைவி இச்

சமாச்சாரத்தைக் கேள்விப்பட்டுத் தானும் வைஷ்ணவமதத்திலே சேரப் பிரியங்கொண்டு ஸ்ரீ சைலபூர்ணரிடத்திலே அபயம் புகுந்தாள். இப்பொழுது கோவிந்தர் ஸ்ரீ சைலபூர்ணரைத் தமது பரமகுருவாகக் கொண்டு, திரிகரணத்தோடு அவரிடம் பக்தி செலுத்திவருகின்றார். நான் இது வரையில் அவர்களுடைய சந்தோஷகரமான சங்கத்திலேயிருந்தேன். இப்பொழுது, தங்களிடம் இச் சந்தோஷ சமாச்சாரத்தை தெரிவிப்பதற்காக ஸ்ரீ சைலபூர்ணர் என்னை யனுப்பிவைத்தார்.''

''நீ சென்று கார்யத்தை முடித்துக்கொண்டு வந்ததற்காக அநேக வந்தனம்; இனிமேல் என்னுடனேயே யிருப்பாய்'' என்று ஸ்ரீ ராமாநுஜர் அந்த ஸ்ரீ வைஷ்ணவரைத் தம்மிடத்திலேயே என்றும் இருக்குமாறு ஏற்பாடு செய்தார்.

---

## 4-வது அதிகாரம்:

# ஸ்ரீ ராமாநுஜருடைய ஆசிரியர்கள்.



ஸ்ரீ ராமாநுஜர் மகா வித்துவானுய், எல்லாவற்றையும் எளிதில் கற்றுக்கொள்ளும் சமர்த்து வாய்ந்தவராய், ஏகசந்த க்ராஹியாயிருந்தபோதிலும், 'வேத ரஹஸ்யங்களை ஆசார்ய பரம்பரைகளிடமிருந்து அறிந்துகொள்ளவேண்டும்' என்று ஆசைப்பட்டார். மனிதன் எவ்வளவு தான் கல்வியிலே தேர்ந்தவனுயினும், பரம்பரையாக வருகின்ற உண்மைப் பொருளை யறியவேண்டுமென்ருல், அவன் பாம்பரை யாகக் கையாண்டு வருகின்ற ஆசார்யர்களிடமிருந்தே தெரிந்து கொள்ளவேண்டும். இதனுல், ஸ்ரீ ராமாநுஜரும் 'பெரியோர்களிட மிருந்து தெரிந்துகொள்ளவேண்டும்' என்று நினைத்து, ஸ்ரீமகா பூர்ணரிடத்திலே சென்று, அவருடைய பாதங்களை நமஸ்கரித்து, "ஸ்வாமி! நமது குருமூர்த்தியினுடைய பாதங்களினடியில் உட்கார்ந்து வேத ரஹஸ்யங்களை யறிந்துகொள்ளும்படியான பாக்கியம் யான் கொடுத்து வைக்கவில்லை; ஆனுல், தங்களுடைய சிஷ்யன் எனப் பெயர் பெற்றதே எனது பெரும் பாக்கியமாம். ஆகையால், அந்த ரஹஸ்யங்களை எனக்கு அறிவுறுத்துமாறு வேண்டிக் கொள்கின்றேன்" என்று வேண்டினுர்.

ஸ்ரீ மகா பூர்ணர் "மெத்தச் சந்தோஷம்" என்று கூறி, இருபெருண்மைகளில் அடங்கிக் கிடக்கும் ஆழ்ந்த ரஹஸ்யங்களை யெல்லாம் போதித்தார்.

"இம் மந்திரத்தின் பெருமை வாக்குக் கதீதமானது; அதன் சக்தியோ நினைப்புக் கெட்டாததது; அது வேத ஞான மெல்லாவற்றினுடையவும் சாராம்ச மாகும்; விரும் பத் தகாத கர்மபந்தங்கள் எல்லாவற்றையும் அது தகித்து விடுகின்றது; ஆத்மஞானபிவிருத்தியிலே பக்தனை அதி சீக் கிரத்திலே கிளப்பிவிடுகின்றது; இம் மந்திரோபதேசம் பெற்றவனுக்கு நன்மையே யுண்டாகின்றது; தீமை யொரு பொழுதும் உண்டாகின்றதில்லை; அது நித்திய வாழ்க்கைக் கும் ஆநந்தத்துக்கும் திறவு கோலாம்; இம் மந்திரோப தேசம் பெற்றவன் மீண்டும் ஜனனம் எடுப்பதில்லை. இது ஒரு பிச்சைக்காரனுக்குக் கிடைத்த அக்ஷயநிதி போன்ற தாம்" என்று ஸ்ரீ ஆளவந்தார் கூறியுள்ளார். "ஆசார்யரே ஞாதா" என்றும், "மூர்த்தியின் பிரத்தியக்ஷப் பிரதிமையே ஞேயப் பொருள்" என்றும், "இரு பேருண்மைகளும் உபா யங்கள்" என்றும், ஸ்ரீபுண்டரீகாக்ஷர் கூறியுள்ளார். "இம் மந்திரமானது ஜடவாழ்க்கையாம் பயங்கரமான சர்பத்தி னாலே கடிக்கப்பட்ட ஜீவனுக்குத் திரும்பவும் உயிர் அளிக் கிறது" என்று ஸ்ரீராமமிச்ரர் கூறினார். ஆகையால், இம் மந் திரம் மகா விசேஷமானது. இதைப்பற்றியுள்ள வேறு சில ரஹஸ்யங்களை நீ கோஷ்டி பூர்ணரிடம் சென்று அறிந்து கொள்வாய். நமது குருமூர்த்திக்கு மிகமிக அன்பு வாய்ந்த சிஷ்யர்களுள் அவர் ஒருவர் ஆயிற்றே; ஆகையால், அவ ரிடம் செல்வாய்."

ஸ்ரீ ராமாநுஜரும் சம்மதித்து, உடனே ஸ்ரீ கோஷ்டி பூர்ணரிடம் சென்று, அவருடைய பாதங்களிலே விழுந்து

நமஸ்கரித்து, ''ஸ்வாமி! எனக்கு மகா வாக்கியோபதேசம் செய்யவேண்டும்; ஸ்ரீ மஹாபூர்ணர் என்னைத் தங்களிடம் அனுப்பிவைத்தார்.'' என்று விண்ணப்பித்து நிற்க, ஸ்ரீ கோஷ்டிபூர்ணர் 'உண்மையிலேயே ஸ்ரீராமாநுஜருக்கு ஞானம் அடைய வேண்டுமென்ற ஆசை யிருக்கின்றதா?' என்று பரிசோதித்துப் பார்க்க விரும்பி, ஸ்ரீ ராமாநுஜரை லக்ஷியம் செய்யாதவர் போல, ''அதிகாரியானவன் வருகின்ற பொழுது, நான் அதைப்பற்றி நினைக்கிறேன்'' என்று மறுமொழி கூறினர். ஸ்ரீ ராமாநுஜர் மிகுந்த வியாகுல மடைந்தவராய்த் திரும்பி வந்தார்.

சின்னாட்களுக்குப் பின் ஸ்ரீ கோஷ்டிபூர்ணர் ஸ்ரீரங்கத்துக்கு ஒரு திருவிழாக் கண்டு தர்சிக்கும் பொருட்டு வந்திருந்தார்; திருவிழா வெகு மும்முரமாகவும் விமர்சையுடனும் நடந்தேறியது; கோஷ்டி பூர்ணர் அவ்வூரை விட்டு நீங்கிப் புறப்படுங்கால், ஸ்ரீரங்கநாதப் பெருமானிடம் சென்று செலவு பெற்றுக்கொள்ளப் போனர்; அப்பொழுது ஸ்ரீரங்கநாதர் அவரை நோக்கி, ''கோஷ்டி பூர்ணா! என் உனக்கு எனது ராமாநுஜனிடத்திலே இவ்வளவு அலக்ஷியம்? ரஹஸ்ய மந்திரங்களை யவனுக்கு உபதேசிப்பாய்'' என்று ஆக்ஞாபித்தார்.

கோஷ்டி பூர்ணர் ''ஸ்வாமி! உண்மைதான். வேறு விதமாக ஆக்ஞாபித்துள்ளதும் தாங்கள்தானே. 'ஒருவன் ஒரு வருஷம் உன்னுடன் இருந்த பின்னரே நீ அவனைச் சிஷ்யனாக ஏற்றுக்கொண்டு உபதேசிக்கவேண்டும். அவன்

தன்னடக்க முள்ளவனா? குருவினிடத்திலே திரிகரண சுத்தியுடன் அடியோடு தன்னை யர்ப்பணம் செய்துகொண் டவனா? என்பதையும் பார்க்கவேண்டும்' என்று நீங்கள் தானே ஆக்ஞாபித் திருக்கின்றீர்கள்.'' என்று கூறினார்.

எம்பெருமான், ''வாஸ்தவம்தான்! ஆனால், விதிக்கு விலக்கானவர்களும் உண்டே. ஸ்ரீராமாநுஜனைச் 'சாதாரண சிஷ்யன்' என்று கருதாதே. அவன் உலகை யுய்விக்கப் பிறந் தவன்; ஆதலால், அவனுக்கு உபதேசம் செய்யப் பின் வாங்காதே'' என்றார்.

கோஷ்டிபூர்ணர் இவ்விதம் எம்பெருமானால் ஆக்ஞை யிடப் பெற்றவராய், தமது ஊருக்குப் புறப்படுகையில், ஸ்ரீ ராமாநுஜரை நோக்கி, ''என்னுடைய ஊரிலே வந்து என்னைக் கண்டுகொள்'' என்றார்.

அப்படியே ஸ்ரீ ராமாநுஜர் சின்னாட்கள் கழித்து, ஸ்ரீ கோஷ்டி பூர்ணரிடம் சென்று, ''ஸ்வாமி! உத்தாரப்படி வந்துள்ளேன்'' என்றார்; ஆனால், கோஷ்டி பூர்ணர் அவ ரை நோக்கி, ''நல்லது! இப்பொழுது எனக்குச் சாவகாச மில்லை; இன்னொரு சமயம் வா!'' என்று சொல்லி யனுப்பி விட்டார். இவ்விதமாக ஸ்ரீ ராமாநுஜர் பதினெட்டு தரம் சென்றார்; பதினெட்டுதரமும் கோஷ்டி பூர்ணர் ''இன் னொருதரம் வா! இன்னொருதரம் வா!'' என்று சொல்லி யனுப்பிவிட்டார்; ஒருதரமாவது அவர் உற்சாக மடையும் படியான வார்த்தை கூறவில்லை; உபதேசம் செய்வதாக

வாக்கு அளிக்கவு மில்லை. ஆயினும், இராமாநுஜர், கோஷ்டி பூர்ணரைக் குறை கூறி ஒன்றும் சொல்லவு மில்லை.''

சின்னுட்களுக்குப் பின்னே, கோஷ்டிபூர்ணருடைய சிஷ்யர்களுக்குள்ளே யொருவர் ஸ்ரீரங்கம் வந்து சேர்ந்து, ஸ்ரீ ராமாநுஜரைக் கண்டு தர்சித்தார்; ஸ்ரீ ராமாநுஜர் அவரிடத்திலே தமது துக்கத்தை யெல்லாம் தெரிவித்து, ஆறுதலடைய விரும்பி, ''எல்லா ஜீவராசிகளுக்கும் இதத்தையே செய்வதாகக் கங்கணம் கட்டிக்கொண் டிருக்கும் எம்பெருமானுக்கு இது அழகா? எளியேன்போன்றவனை இம்மாதிரி திண்டாட வைப்பது தர்மமா? நியாயமா?'' என்று பலவாருக, எம்பெருமானைக் கடிந்து நிந்தா ஸ்துதியாகக் கூறினுரே யொழிய, கோஷ்டிபூர்ணரைப்பற்றி ஒரு குற்றமும் கூறவில்லை; எம்பெருமானினும் எம்பெருமானுடைய அடியார்கள் சிறந்தவர்களென்பது ஸ்ரீ ராமாநுஜருடைய கருத்து.

கோஷ்டி பூர்ணருடைய இந்தச் சிஷ்யர் கோஷ்டி பூர்ணரிடத்திலே ஸ்ரீ ராமாநுஜருக்காக மெத்தமெத்தப் பரிந்து பேச, கோஷ்டி பூர்ணர் அச் சிஷ்யரை நோக்கி, ''நீ கூறுவதெல்லாம் உண்மையேயா மாயின், ஸ்ரீ ராமாநுஜன் உபதேசம் பெறற்குத் தகுந்தவனே; நல்லது, அவன் தனது தண்டு கமண்டலத்தை மாத்திரம் எடுத்துக்கொண்டு இங்கு வரட்டும்,'' என்று சொன்னுர்.

அந்தச் சிஷ்யர் உடனே ஸ்ரீ ராமாநுஜரிடம் வந்து இச் செய்தியைத் தெரிவிக்க, ஸ்ரீ ராமாநுஜர் ஆண்டான்,

ஆள்வான் ஆகிய தமது அந்தரங்கச் சிஷ்யர்கள் இருவரையும் கூட்டிக்கொண்டு கோஷ்டி பூர்ணரிடம் ஓடிச் சென்று அவருடைய பாதங்களிலே விழுந்து நமஸ்கரித்தார். அவர் ஸ்ரீ ராமாநுஜரைப் பார்த்து "நல்லது, நான் உன்னைத் தண்டு கமண்டலம் மாத்திரம் எடுத்துக்கொண்டு வரச் சொன்னேனே; நீ ஏன் இவர்களைக் கூட்டிக்கொண்டு வந்தாய்?" என்று கேட்டார்.

"ஸ்வாமி! நான் தனியாகத்தான் வந்திருக்கின்றேன்; இந்தத் தாசரதியே (ஆண்டான்) எனது தண்டு; மற்ற ஸ்ரீ வத்சாங்கனே (ஆள்வான்) எனது கமண்டலம்."

ஸ்ரீ கோஷ்டி பூர்ணர் ஸ்ரீ ராமாநுஜருக்கு அவருடைய சிஷ்யர்களிடத்துள்ள வாத்சல்யத்தைக் கண்டு சந்தோஷித்து, புன்னகை புரிந்தவராய், "நல்லது, இப்பொழுது நான் கூறுவது உங்கள் மூன்று பேருக்கும், வெளியே போகக் கூடாது" என்று ஆக்ஞாபித்து, அம் மூவருக்கும் அஷ்டாக்ஷரி மந்திரத்தை யுபதேசம் செய்தார்.

பின்னர் கோஷ்டி பூர்ணர் அவர்களைப் பார்த்து, ராமாநுஜா! நீ வேண்டியதை உனக்கு அளித்துவிட்டேன்; ஆனால், ஜாக்கிரதை! எவருக்கும் சொல்லிவிடாதே!" என்று மறுபடியும் தாக்கீது செய்து, போகும்படி விடைகொடுத்தனுப்பினார்.

ஆனால், ஸ்ரீ ராமாநுஜர் போகாமல் அவ் வூரிலேயே தங்கியிருந்து, மறுநாள் பொழுது விடிந்ததும் அவ் வூரி

ளுள்ள ஸ்ரீ ஸௌம்ய நாராயணமூர்த்தியினுடைய க்ஷேத்திரம் சென்று, அங்கே அவ்வூர் வைஷ்ணவர்களை யெல்லாம் கூடும்படி செய்து, அதற்குமுந்திய நாள் தாம் ஸ்ரீ கோஷ்டி பூர்ணரிடமிருந்து பெற்ற உபதேச மந்திரமாகிய அஷ்டா க்ஷரியை எல்லோருக்கும் உரக்கச் சத்தமிட்டு உபதேசித்து விட்டார். கோஷ்டி பூர்ணருக்கு இது சங்கதி தெரியவந்தது. என்ன இது? அஷ்டாக்ஷரி தெருவிலே யுரைக்கத்தகும் மந்தி ரமா? மஹா மந்திரமாயிற்றே; அதிகாரியாகிய சிஷ்யனு க்கு உபதேசம் செய்யவேண்டிய இந்த அதி ரகஸ்ய மந்திர த்தை ஸ்ரீ ராமாநுஜர் கண்மூடித்தனமாய் எல்லோருக்கும் எடுத்துச் சொல்லிவிட்டாரே' என்று கோஷ்டிபூர்ணர் ஆச்சரியமடைந்தவராய், ஸ்ரீ ராமாநுஜருக்குச் சொல்லி யனுப்பி, அவரை வரவழைத்து, அவரை நோக்கி, "ராமா நுஜா! நான் உன்னிடம் என்ன சொன்னேன்? 'நான் உனக்கு உபதேசிப்பதை நீ வெளியே எவருக்கும் சொல்லக் கூடாது' என்று சொல்லவில்லையா? ஊரிலுள்ள உபயோக மில்லாதவர்கள் எல்லாரையும் சேர்த்துப் பெருங் கூட்ட மிட்டு, அவர்களுக்கு இதை யெடுத்துச் சொல்லிவிட்டா யாமே; இது உண்மைதானா?" என்று கேட்டார்.

ஸ்ரீ ராமாநுஜர் "ஸ்வாமி! உண்மைதான். தங்க ளுடைய கிருபையிலே அடைக்கலம் புகுந்துவிட்டேன்; எனது ஹிருதயத்திலே தங்களுடைய திருவடிகளை ஸ்மரித் துக்கொண்டு இவ்வாறு செய்தேன்" என்றார்.

ஸ்ரீ கோஷ்டிபூர்ணருக்கு இன்னது சொல்வதென்று தெரியவில்லை. ஸ்ரீ ராமாநுஜர் செய்ததே பெருந் தப்பிதம்; அவர் இப்பொழுது சொல்லிய மறுமொழியோ இன்னும் பெரிய தப்பிதம். "நல்லது, ராமாநுஜா! எனது ஆக்ஞைக்குக் கீழ்ப்படியாததால் இன்ன பலன் கிடைக்குமென்று உனக்குத் தெரியுமா?"

"நித்திய நரகந்தானே."

"உனக்குத் தெரிந்துமா நீ அப்படிச் செய்தாய்?"

"தங்களிடத்திலே சரண் புகுந்தவர்கள் எவரும் தம்மைப்பற்றிக் கவலை கொள்ளவேண்டிய அவசியமில்லையே. நான் எனது மனத்தினிடத்தே தங்களுடைய பாதங்களை ஸ்மரித்துக்கொண்டு இந்த வைஷ்ணவர்களுக்கு உபதேசித்துவிட்டேன்; இவர்களும் தங்கள் சந்ததியாருக்குப் பரம்பரை முறையிலே உபதேசித்து வருவார்கள்; இவ்விதமாக இவர்களும் தங்களுடைய சிஷ்யர்களாய்விட்டார்கள்; ஆகையால், சர்வ பந்தங்களினின்றும் என்றுமே நிவிர்த்தி யடைந்துவிட்டார்களல்லவா? இதனால் பயனில்லையா? ஜீவராசிகள் கரையேறினார்களே."

ஸ்ரீ கோஷ்டிபூர்ணருக்கு இன்னது சொல்வதென்று தெரியவில்லை; ஆழ்ந்த நினைப்பிலே அமிழ்ந்தி யிருந்தார். "ஆ! ஆ! என்ன பொன்னிருதயம்! என்ன தன்மறுப்பு! மனுஷ்ய வர்க்கத்தினிடத்திலே எவ்வளவு பச்சாத்தாபம்! இவருக்கு நானா குருவா யிருப்பது? எம்பெருமான் இவரை

அவதார புருஷர் என்று கூறியபொழுது, பொய் சொல்ல வில்லை; மெய்யேதான் சொன்னார். அவருடைய பாதரக்ஷை களை ஸ்பர்சிக்கக்கூட எனக்கு யோக்கியதை யில்லை.'' என்று கோஷ்டிபூர்ணர் தாமே சிந்தித்துக் கொண்டவராய், பின்னர் ஸ்ரீ ராமாநுஜரை நோக்கி, "ஸ்வாமி! இதுவரையில் நான் தங்களை ஏக வசனத்தில் அழைத்துவந்ததற்காக மன்னிக்கவும்; நீங்களே எங்களுக்கு ஈசன்; எம்பெருமான். வாருங்கள்! அருகே வாருங்கள்! எங்கள் உயிருக்கு உயி ராம் உத்தமனே!" என்று பலவாறாகப் புகழ்ந்து, அவரைக் கட்டி யணைத்துக்கொண்டு "இறைவனே இவ்வுருவெடு த்து வந்துளரோ? இக் கொள்கை இதுவரை வைதீகக் கொள்கை யென்று வழங்கிவந்தது, இனிமேல், இந்த நிமி ஷம் முதல், இது எம்பெருமான் கொள்கை என்று வழங் கட்டும்; தங்கட்குக் கூறுவதற்கு இன்னும் ஓர் உண்மை யுளது; இதுதான் மிகமிகச் சிரேஷ்டமானது; மிகமிகப் பவுத்திரமானது; ஆனால், தாங்கள் திருப்தி யடைந்து விட்டதுபோலத் தோன்றியதினாலே, நான் கூறவில்லை," என்றார்.

ஸ்ரீ ராமாநுஜர் "ஸ்வாமி! உபதேசித்ததிலே குறை யுண்டென்று நான் நினைக்கலாமா? அதனால்தான் நான் தங்களை மேலே கேட்கவில்லை; எப்படிக் கேட்பதென்று இருந்தேன்," என்று மொழிந்தார்.

"தங்களுடைய குணந்தான் என்ன விநோதகரமான குணம்! சின்னாட்கள் பொறுத்து என்னிடம் வாருங்கள்!

ஆனால், அப்பொழுது தனியே வாருங்கள்'' என்றார் கோஷ்டி பூர்ணர்.

ஸ்ரீ ராமாநுஜர் "நல்லது'' என்று கூறிவிட்டு, ஸ்ரீரங்கம் வந்துவிட்டார்.

சின்னாட்களுக்குப் பின்னர், ஸ்ரீ ராமாநுஜர் மறுபடியும் ஸ்ரீ கோஷ்டிபூர்ணரிடம் சென்று, "ஸ்வாமி! நான் மறுபடியும் வரும்படி உத்தரவாயிற்றே; அதன் பிரகாரம் இதோ வந்துள்ளேன்'' என்று விண்ணப்பிக்க, கோஷ்டி பூர்ணர் மேலே ஒரு அறைக்குத் தனித்து இட்டுச் சென்றார்; அங்கு வேறெவரும் வாராதபடி வேண்டிய காவலும் வைத்துவிட்டு, கோஷ்டி பூர்ணர் தமது பாதங்களின் ஆணைப்படி ஸ்ரீ ராமாநுஜர் வெளியே சொல்வதில்லை என்று பிரதிக்ஞை செய்யும்படி செய்து, பகவான் ஸ்ரீ கிருஷ்ணனுடைய ஸ்ரீபகவத்கீதா போதனையின் கடைசி சுலோகமாகிய சரம ச்லோகத்தில் அடங்கியுள்ள ரஹஸ்யங்களையெடுத்து உபதேசித்தார்.

"எம்பெருமானே போதித்துள்ள இதை நன்றாக மனத்தில் பதித்துக்கொள்! 'தன்னடக்க மில்லாதவனுக்கும், பக்தி யில்லாதவனுக்கும் கேட்பதற்குப் பிரியமில்லாதவனுக்கும், என்னைப்பற்றிக் கெடுதலாகவே சொல்லிக்கொண் டிருப்பவனுக்கும் இது சொல்லப்படக் கூடாது. என்னிடத்திலே மிகமிக அதிகமான பக்தி பாராட்டி, எனது பக்தர்களின் மத்தியில் இப் பரம ரகஸ்யத்தைக்

கூறுபவன், சந்தேகமில்லாமல் என்னிடம் வந்து சேர்வான்'— பாபிகளுடைய காதிலே இந்த ரஹஸ்யம் விழாமலிருக்கட்டும்.''

''ஸ்வாமி! அத்தகைய பயங்கரமான பாபத்தை நான் ஒருபொழுதும் செய்யேன்; ஆனால், என்னிடத்திலே அத்தியந்த அன்புள்ள ஸ்ரீவத்சாங்கன், எம்பெருமானிடத்திலே அற்புதமான பக்தி பாராட்டுபவன்; இதை நான் அவனிடம் மாத்திரம் சொல்லாமல் இருக்க முடியாது.''

''நல்லது; அவன், நீ சொல்லுகிறபடி யாதலினாலே, இந்த ரகஸ்யத்தைப் பெறுதற்கு அதிகாரியாயிருக்கலாம்; ஆனால், அவனுடைய விஷயத்திலே கூட, அவன் உன்னிடம் ஸேவை செய்து ஒரு வருஷம் காத்திருக்கட்டும்; அவனிடத்திலே உனக்கு முழுத் திருப்தி யுண்டாய்விட்டால், பின்னர் நீ அவனுக்குப் போதிக்கலாம்.''

ஸ்ரீ ராமாநுஜர் ''அப்படியே யாகட்டும்'' என்று கூறிவிட்டு, கோஷ்டிபூர்ணரிடம் விடைபெற்றுக்கொண்டு, அவரிடம் செலவுபெற்று ஸ்ரீரங்கம் போய்விட்டார்.

இப்பொழுது ஸ்ரீ ராமாநுஜர் சரம சுலோக உபதேசம் செய்யப்பெற்றவராய்விட்டதினாலே ஆநந்த பூரிதரானார்; பிரபத்திக் கொள்கையின் அழகும் பெருமையும் அவருக்கு உள்ளங்கை நெல்லிக்கனிபோல ஒளி மிகுந்து அவர் முன்னே விளங்கின. அவர் சமஸ்த பாரங்களையும்

இறைவனிடத்திலே போட்டுவிட்டு, அவருடைய கிருபை யிலே சரண் புகுந்துவிட்டார். இந்தச் சரம சுலோகம் சாக்ஷாத் பகவானாலேயே அர்ஜுனனுக்கு உபதேசிக்கப் பட்டது; ஆனால், அர்ஜுனன் அதை மறந்துவிட்டான்; இப்பொழுது ஸ்ரீ ராமாநுஜர் அதை மறக்க முடியவில்லை. அவருடைய ஹிருதயத்திலே பரிபூர்ண சாந்தி விளங்கி ற்று; சர்ப்பத்தினின்றும் சட்டை யுரிவதுபோல, அஹம் என்ற நினைப்பு அவரிடமிருந்து நீங்கிவிட்டது; அவரும் மனுஷ்ய வர்க்கமும் ஒன்றேயென அவர் கண்டுகொண்டார்.

ஸ்ரீ ராமாநுஜர் ஸ்ரீரங்கம் திரும்பி வந்ததும், ஸ்ரீ வத் சாங்கர் அவரை யணுகி நமஸ்கரித்து, "ஸ்வாமி! எனக்குச் சரம சுலோக உபதேசம் செய்தருளல் வேண்டும்" என்று பிரார்த்திக்க, ஸ்ரீ ராமாநுஜர் "ஆள்வான்! எனக்கே இப் பொழுதுதான் ஆளவந்தாருடைய கிருபை பலனை யளித் தது; இப்பொழுதுதான் கோஷ்டிபூர்ணர் என்னைச் சிஷ்ய னாக ஏற்றுக்கொண்டு எனக்கு இன்ப உபதேசம் செய்தார். எவருக்கும் நான் இதை யுரைக்கக்கூடாதென்று எனக்கு கோஷ்டிபூர்ணர் கண்டிப்பான உத்தரவு அளித்திருக்கிறார்; உன் விஷயத்தைப்பற்றி நான் பிரத்தியேகமாகக் கேட்ட பொழுது, உன் விஷயத்தில்கூட நீ என்னிடம் ஒரு வரு ஷம் காத்திருந்த பின்னரே யுனக்கு உபதேசிக்க வேண்டு மென்று கூறினார். நான் என்செய்வேன்? பொறு ஒரு வரு ஷம்" என்றார்.

ஸ்ரீ வத்சாங்கர் மிகுந்த துக்கமடைந்தவராய் ஆசார்யருடைய சந்நிதியி னின்றும் நீங்கி, தாமே பின் வருமாறு சிந்திக்கலானார்:—

'ஒரு வருஷம் காத்திருக்கவா! இந்தச் சரீரம் இன்னும் ஒரு வருஷம் இருக்குமென்பது என்ன நிச்சயம்! உபதேசம் பெறவேண்டும். நல்லது! இப்பொழுது ஒரு யோசனை தோன்றுகின்றது. குருவினுடைய வாசற்படியிலே ஒரு மாதம் பட்டினி கிடந்தால், அது குருவினிடத்திலே ஒரு வருஷம் காத்திருந்ததற்குச் சமானமென்று ஸ்மிருதிகள் கூறுகின்றன.'

இவ்வாறு சிந்தித்து, அப்படியே ஒரு மாதகாலம் ஸ்ரீ ராமாநுஜருடைய மடத்தின் வாசற்படியிலே ஆகார நித்திரை யில்லாமல் காத்திருந்தார். ஆயினும், அவருடைய முகத்திலே அமைதியும் தெளிவும் உண்டாகவில்லை.

ஸ்ரீ ராமாநுஜருக்கு இது தெரியவந்தது; ஆள்வானுடைய பக்தியையும் சிரத்தையையும் கண்டு மெச்சி, அவர் ஆள்வானை யருகே யழைத்து, அவனுக்கு உபதேசம் செய்தருளினார்.

ஆள்வானுக்கு உபதேசம் ஆய்விட்ட தென்றறிந்த ஆண்டான் ஸ்ரீ ராமாநுஜரிடம் சென்று, அவருடைய பாதங்களிலே நமஸ்கரித்து "ஸ்வாமி! எளியேனாகிய எனக்கும் உபதேசிக்குமாறு வேண்டுகின்றேன்" என்று பிரார்த்தித்து நிற்க, ஸ்ரீ ராமாநுஜர் "நான் ஸ்ரீ வத்சாங்க

னுக்கு மாத்திரம் உபதேசிப்பதற்கு ஸ்ரீ கோஷ்டி பூர்ண ரிடத்திலே அநுமதி கேட்டேன். ஆகையால், நான் உன க்கு உபதேசித்தல் முடியாது. அவரிடம் நீயே நேரில் சென்று உபதேசம் பெற்று வருவாய்'' என்று கூறினர்.

ஆண்டான் அவ்வாறே கோஷ்டி பூர்ணரிடம் சென்று ஆறுமாத காலம் காத்திருந்தான். ஆயினும், அவர் சற்றும் கவனிக்கவேயில்லே. ஒருநாள் அவர் ஆண்டானைப் பார்த்து "நான் உன்னை ஸ்ரீ ராமாநுஜருடனே பார்த்தது போல் ஞாபக மிருக்கிறது'' என்றார்.

"ஆம்! குருமூர்த்தி, நான்தான் தாசரதி.''

"சரி, அப்படியானல் என்ன?''

"ஸ்வாமி! சரம சுலோகத்தின் ரகஸ்யப் பொருள் களை எனக்கு உபதேசித்தருளுமாறு பிரார்த்திக்கின்றேன். தயை செய்யவேண்டும்.''

"நல்லது, நீ உனது வித்யாகங்காரத்தை யொழித்து விடு; 'நான் தனவான்' என்ற எண்ணத்தை நீக்கிவிடு; 'நான் உயர் குலத்தில் பிறந்தவன்' என்ற நினைப்பையும் தள்ளிவிடு. எம்பெருமானே யுனக்கு இந்த ரகஸ்யத்தை போதிப்பார்'' என்று கோஷ்டி பூர்ணர் கூறி ஆண்டா னுடைய சிரசைத் தமது பாதத்தால் ஸ்பர்சிப்பித்து "எங்க முருதே'' என்று சொல்லி யனுப்பிவைத்தார்.

ஆண்டான் ஸ்ரீரங்கத்துக்குத் திரும்பி வந்தான்; ஆனல், அவனுடைய முகத்திலே விசனம் குடிகொண்டிருந்

தது. ஆனால், அவன் தன் கர்வ மனைத்தும் நீங்கினவனாகித் தாழ்மையும் அறிவும் அதிகம் அடையப் பெற்றவனானான். இவன் ஸ்ரீ ராமாநுஜர் முன்னே வெகு விநயத்தோடு போய்நின்று நடந்த சங்கதிகளை யெல்லாம் சொன்னான். ஸ்ரீ ராமாநுஜர் தமது மற்ற சிஷ்யர்களைப் பார்த்து "இங்கிருந்து அன்று போனவன் இவன்தானா? இப்பொழுது எவ்வளவு தாழ்மையுடையவனா யிருக்கின்றான், பார்த்தீர்களா? நல்லது ஆண்டான், நான் இப்பொழுது உனக்கு உபதேசிப்பேன்; இப்பொழுதுதான் நீயும் ஸ்ரீ வத்சாங்கனும் எனக்குத் தண்டும் கமண்டலமு மானீர்கள்," என்றார்.

இதுவரை கூறிவந்த விஷயத்தை இரண்டொருவர் கொஞ்சம் மாறுதலுடனே கூறுகின்றார்கள். ஒருவர் கூறுவதாவது:—"ஸ்ரீ ராமாநுஜர் அஷ்டாக்ஷரியை ஸ்ரீ நரசிம்ஹஸ்வாமி யுற்சவ சமயத்திலே கூடிய ஸ்ரீ வைஷ்ணவர்களுக்குத் தாரதம்மியமின்றி எல்லோருக்கும் உபதேசித்தார். ஸ்ரீ கோஷ்டிபூர்ணர் இதைக் கேட்டுப் பரமானந்தமடைந்து, ஸ்ரீ ராமாநுஜருக்குச் சொல்லியனுப்பி, அவரை வரவழைத்து, "ஸ்ரீரங்கநாதப் பெருமான் சரமசுலோக ரகஸ்யங்களை அதிகாரிகளான சில சிஷ்யர்களுக்கு உபதேசிக்குமாறு எனக்கு ஆக்ஞை செய்தார். "அத்தகைய அதிகாரிகள் இல்லை" என்று நான் விண்ணப்பம் செய்ய, அவர் பார்த்து எவரையாவது அனுப்புவதாக வாக்களித்தார். 'அவர் அனுப்புவதாகச் சொன்னவர் நீரே' என்று நான் நிச்சயமாய் நினைக்கிறேன்; உமக்கு உபதேசிப்பதற்கு

நான் அதிக சந்தோஷமுடையவனு யிருக்கின்றேன்' என்ஞர். பின்னர் அவர் தமது புத்திரனுகிய சௌம்ய நாராயணரை ஸ்ரீ ராமாநுஜருக்கு சிஷ்யராகக் கொடுத்தார். ஸ்ரீ ராமாநுஜர் ஆழ்வானுக்காவது வேறு எவருக்காவது உபதேசிப்பதற்கு ஸ்ரீ கோஷ்டிபூர்ணரிடம் அநுமதி கேட்கவில்லை; ஆனுல், ஸ்ரீ ராமாநுஜர் ஸ்ரீரங்கத்துக்கு வந்தபொழுது, ஆழ்வான் தனக்கு உபதேசிக்குமாறு, அவரை மிகமிக வேண்டினுன்; ஆண்டானும் அதே மாதிரியாகக் கெஞ்சிக் கேட்டுக் கொள்ள, ஸ்ரீ ராமாநுஜர் கண்டிப்பாக மறுத்துவிட்டு, ஸ்ரீ கோஷ்டிபூர்ணரிடம் செல்லும்படி அவனுக்குக் கூறிவிட்டார். "நான் ஆழ்வான் ஒருவனுக்கு உபதேசிப்பேன்; வேறெவருக்கும் உபதேசிக்க மாட்டேன்" என்று ஒரே பிடிவாதமாக ஸ்ரீராமாநுஜர் சொல்லிவிட்டார். ஆண்டான் அத்துணையின் புருஷனுடைய கிருகத்திலே பரிசாரகம் செய்துகொண் டிருக்கையில், அங்கு வந்து கூடிய சில சிஷ்யர்களால் வாசிக்கப்பட்ட ஒரு வாக்கியத்தை அவர் திருத்தினுர். அவர்கள் ஒரு பரிசாரகன் தங்களை நிந்தித்தானென்று கோபம் கொண்டார்கள். ஆனுல், அவன் இன்னுனென்று தெரியவந்தவுடனே, அவனுடைய பாதங்களிலே விழுந்து, குருமூர்த்தியினிடம் திரும்பி வரும்படி அவனைக் கெஞ்சிக் கேட்டுக்கொண்டார்கள். குருமூர்த்தி அவனைத் திரும்பவும் எடுத்துக்கொண்டபொழுது, அவனுடைய கர்வம் தாழ்த்தப்பட்டதென்று அவர் திருப்தியடைந்தார்; அவர் அவனுக்கு வைஷ்ணவதாசன் என்று பெயரிட்டு அவனுக்கு உடனே உபதேசம் செய்தார்."

இன்னொருவர் கூறுவதாவது:— “ஸ்ரீ கோஷ்டிபூர்ணர் ஸ்ரீ ராமாநுஜருடைய பக்தியைப் பரிசோதிக்கவும், மந்திரமானது மகா மகிமை பொருந்திய தென்றும் பெருமை பொருந்திய தென்றும் அவருடைய மனதிலே பதியும்படி செய்யவும் விரும்பி, அவரைப் பதினன்குதரம் திரும்பித் திரும்பிப் போகச் சொல்லிவிட்டார். பின்னர் அவர் ஒருதரம் ஸ்ரீரங்கம் வந்திருந்தபொழுது, சில ஸ்ரீ வைஷ்ணவர்கள் ஸ்ரீ கோஷ்டிபூர்ணருடைய இந் நடத்தையைப்பற்றிக் கண்டித்தார்கள்; அவர் “எம்பெருமான் தடுக்கிறார்” என்று தம்முடைய செய்கைக்கு மேற்கோள் கூற, ஸ்ரீரங்கநாதப் பெருமான் உடனே ஸ்ரீ ராமாநுஜருக்கு உபதேசிக்கும்படி கோஷ்டி பூர்ணருக்கு ஆக்ஞை செய்தார். அவர் தமது ஊருக்குத் திரும்பி வந்தவுடனே, ஸ்ரீ ராமாநுஜருக்குச் சொல்லியனுப்ப, ஸ்ரீ ராமாநுஜர் ஆள்வானையும், ஆண்டானையும், வரதவிஷ்ணு ஆசார்யனையும் தம்முடன் அழைத்துக்கொண்டு சென்றார். அவர் கோஷ்டிபூர்ணரிடத்திலே தனியாகவே சென்றார். அஷ்டாக்ஷரியிலும் சரமசுலோகத்திலும் உபதேசிக்கப்பெற்றார்.

ஸ்ரீ ராமாநுஜர் ஸ்வயநலமற்றுப் போதிக்கக் கேட்டவர்களும், நன்றியறித லுள்ளவர்களுமாகிய ஸ்ரீ வைஷ்ணவர்களால் ஸ்ரீ ராமாநுஜருக்கு ‘எம்பெருமான்’ என்ற பெயர் அளிக்கப்பட்டது; கோஷ்டி பூர்ணர் அதை உறுதிதான் செய்தார்.”

இன்னொருவர் கூறுவதாவது:— “பெரிய நம்பியார் தம்மை அஷ்டாக்ஷரியிலே உபதேசம் பெறுவதற்கு அனு

ப்பி வைத்தா ரென்று ஸ்ரீ ராமாநுஜர் கோஷ்டி பூர்ண ரிடத்திலே தெரிவித்தபொழுது, அவர் சந்தோஷத்துட னே உபதேசம் செய்தார். சரம சுலோகங்களை உபதேசி க்குமாறு ஸ்ரீ ராமாநுஜர் வேண்டிக்கொண்டார்; ஆனுல், கோஷ்டிபூர்ணர் அவரைப் பதினெட்டுதரம் 'அப்புறம் ஆகட்டும், அகட்டும்' என்று அனுப்பிவைத்தார்.

கடைசியாக அவர் வரும்படி அநுமதி கொடுக்கப் பட்டபொழுது, அவர் திவ்யப் பிரபந்தத்தில் ஒரு பாக மாயும், ஆண்டாள் என்பவரால் இயற்றப்பட்டதாயும் உள்ள ஒரு கிரந்தத்தை, அதாவது திருப்பாவையைப் பாராயணம் செய்துகொண்டே ஆசார்யருடைய வாசஸ்தல த்தை யணுகினுர்; "சீரார் வளையொலிப்ப வந்து திறவாய் மகிழ்ந்து" என்ற வாக்கியத்தைச் சொன்னபொழுது, கோஷ்டி பூர்ணருடைய புத்திரியாகிய தேவகிப்பிராட்டி கதவைத் திறந்தாள். அப்பொழுது ஸ்ரீ ராமாநுஜருடைய நினைப்புக்கள் இங்கு இல்லை; ஆதலால், அவள் முன்னே அவர் அடி பணிந்து வணங்கினுர்; அப் பெண்மணி யிடத் தில் அப்பொழுது அவர் சாதாரண ஸ்திரீயைப் பார்க்க வில்லை; ஸ்ரீ லக்ஷ்மி தேவியையே பார்த்தார். அப் பெண் ணுக்கு மனம் கலங்கிவிட்டது; அவள் நடுநடுங்கி மகா பயத் துடனே பிதாவினிடம் ஓடினுள். கோஷ்டி பூர்ணர் பெண் ணைப் பார்த்து "என்ன சங்கதி?" என்று கேட்டார்.

அப் பெண் "பரிசுத்த புருஷராகிய ஸ்ரீ ராமாநுஜர் வந்திருக்கிருர்; அவர் என்னை நமஸ்கரித்தார்" என்ருள்.

"நல்லது! உன்னுடைய மனம் இவ்வளவு கலங்கும்படியாக நடந்ததென்ன?" என்று புன்னகையுடனே அவர் தமது பெண்ணைக் கேட்டுக்கொண்டிருக்கையில், ஸ்ரீ ராமாநுஜர் உள்ளே வந்துவிட்டார்; கோஷ்டிபூர்ணர் அவரைப் பார்த்து, "நல்லது, நீங்கள் 'உந்துமத களிற்றினே' என்னும் பாடலைத் தியானித்துக்கொண்டிருப்பதுபோலத் தோன்றுகிறது; அல்லவா?" என்று கேட்டுவிட்டு, ஸ்ரீராமாநுஜருக்குச் சரம சுலோகத்தை யுபதேசம் செய்துவிட்டு, தாமாகவே "மனுஷ்ய ஞானம், தெய்வ ஞானம் எல்லாவற்றினுடையவும் கடைசி வார்த்தையை உனது வசம் ஒப்புவிக்கின்றேன்; முக்தி யுபாயங்களைப்பற்றி நீ கவலைப் படாதே; ஆனால், லக்ஷியத்தினிடத்தே உனது நினைப்புக்களை நிறுத்தி, அதை யடைவதற்கு உனது சக்திகள் எல்லாவற்றையும் செலுத்து. உனது முழு ஹிருதயத்துடனும், உன்னிடமுள்ள எல்லாவற்றுடனும் எம்பெருமானுக்குத் தொண்டு செய். எம்பெருமான் லக்ஷியமும் ஈஸ்வரபக்தி மார்க்கமுமல்ல; ஆனால், பக்தியே மார்க்கமும் லக்ஷியமுமாம்" என்று கூறினர்.

மறுநாள் ஸ்ரீ ராமாநுஜர் அஷ்டாக்ஷரியையும் சரம சுலோகத்தையும் அங்குக் கூடிய வைஷ்ணவர்களுக்கெல்லாம் பொதுப்படத் தானம் செய்துவிட்டார். முந்தி யொரு சந்தர்ப்பத்திலே சரம சுலோகத்தை யுபதேசித்ததும் ஒரு ராமாநுஜரே (பலராமருடைய இளைய சகோதரராகிய கிருஷ்ணன்) யாவர்; ஆனால், அது ஒருவனுடைய (அர்ஜுன

னுடைய) சந்தேகங்களைப் போக்குவதற்காகவும், அவன் ஒருவனுக்கே உபயோகமாகவு மிருந்தது. அவர் உபதேசிப்பதற்கு மிகவும் தகுதியற்ற ஒருவனைத் தெரிந்தெடுத்தார்; ஏனெனில், அவன் சீக்கிரத்திலே யவற்றை மறந்துவிட்டான்; அவனுக்கு மறுபடியும் போதிக்கவேண்டி வந்தது. ஆனல், இங்கு ஸ்ரீ ராமாநுஜர் மகா ரகஸ்யத்தை எல்லோருக்கும் அவர்கள் மூலமாகப் பின் வருபவர்க ளெல்லோருக்கும் கொடுத்துவிட்டார்; அவர் போதிக்கக் கேட்டவர்கள் ஜடவாழ்க்கையின் பந்தங்களிலிருந்து விடுபட்டு எம்பெருமான் சந்நிதானத்திலே நின்றூர்கள்.''

ஸ்ரீ கோஷ்டி பூர்ணர் ஸ்ரீ ராமாநுஜரை நோக்கிச் சொன்னதாவது, "ப்ரபந்நனைவன் ஆறு விஷயங்களை நீக்கிவிடவேண்டும்; அவையாவன. (1) ஆஸ்ரயண விரோதி. (2) ஶ்ரவண விரோதி. (3) அநுபவ விரோதி. (4) ஸ்வரூபவிரோதி. (5) பரத்துவ விரோதி. (6) ப்ராப்தி விரோதி.

1. ஆஸ்ரயண விரோதி:— 'நான்' 'எனது' என்ற எண்ணம்; அகங்காரமும் மமதையுமாம்; கர்மத்தின் பலன்களிலே கவலை; ஜகன் மாதாவினுடைய கிருபையை அலக்ஷியம் செய்தல்; லக்ஷியத்தைப்பற்றிச் சந்தேகம்.

2. ஶ்ராவண விரோதி:— வேற்றுக் கடவுளர்களைப் பற்றிப் போதிக்கின்ற போதனைகளினிடத்தும் கீர்த்தங்களினிடத்தும் மயங்கிவிடுதல்.

3. அநுபவ விரோதி:— ஈஸ்வர ஸேவையிலே சமர்ப்பிக்கப்பட வேண்டிய பொருள்களை ஸ்வயநல போகத்துக்காக உபயோகித்துக்கொள்ளும் தன்மை.

4. ஸ்வரூப விரோதி:— ஈஸ்வரனினின்றும் வேறுபட்டுத் 'தனிச் சுதந்திரமுள்ளவன் நான்' என்ற அகங்காரத்தை யுடைத்தாயிருத்தல்.

5. பரத்துவ விரோதி:— வேற்றுக் கடவுளர்களைப் பரமாத்மா வென்று அறிந்துகொள்ளுதல்.

6. ப்ராப்தி விரோதி:— ஜகன்மாதாவை அலக்ஷிபம் செய்து, எம்பெருமானுடைய கிருபையிலே மாத்திரம் சரண் புகுகின்றவர்களுடைய கருத்துக்களைத் தழுவிக் கொள்ளுதல்.

இவ்விதமாக ஸ்ரீ கோஷ்டிபூர்ணர் ஸ்ரீ ராமாநுஜருக்கு உபதேசம் செய்து முடித்தார்.

பின்னர் ஒரு சமத்திலே கோஷ்டி பூர்ணர் ஸ்ரீரங்கம் போகும்படி நேர்ந்தது; அப்பொழுது அவர் ஸ்ரீ ராமாநுஜருடைய மடத்துக்கு, ஸ்ரீ ஆளவந்தாருடைய இன்னொரு சிஷ்யராகிய மாலாதாரரையும் இட்டுக்கொண்டு சென்றார்.

ஸ்ரீ ராமாநுஜர் அவர்களை வெகு விநயத்துடனே வரவேற்று, கோஷ்டி முன்னே இரு கைகளையும் கூப்பிக் கொண்டு நின்றார். கோஷ்டி பூர்ணர் மாலாதாரரை நோக்கி "தயவு செய்து திவ்யப்பிரபந்தத்தின் சூட்சுமார்த்தங்களை இராமாநுஜருக்குப் போதியுங்கள்" என்றார்.

"வெகு சந்தோஷம்" என்று மாலாதரர் சொல்லி விட்டு, ஸ்ரீ ராமாநுஜரும் மாலாதாரும் கோஷ்டிபூர்ணரிடம் விடைபெற்றுச் சென்றார்கள்.

மாலாதரர் ஸ்ரீ ராமாநுஜருக்குத் திவ்யப் பிரபந்தத்தின் பாடல்களைத் தாம் ஸ்ரீ ஆளவந்தாரிட மிருந்து கேட்டுணர்ந்தபடி போதிக்க ஆரம்பித்தார்; ஆனால், ஸ்ரீ ராமாநுஜர் அடிக்கடி அப் பாடல்களுக்குப் புதிய நூதனமான உரைகள் சொல்லா திருப்பதில்லை. மாலாதரர் "உனது உரைகள் புதியனவா யிருக்கின்றன; பெரியோர்களால் ஆதரிக்கப்பட்டவை யல்ல" என்று அடிக்கடி மாலாதரரும் சொல்லி வந்தார். 'அறியாக் காலத்து' என்ற பாடலை மாலாதரர் வியாக்கியானம் செய்தபொழுது "நான் ஜட அறிவினால் ஸ்பர்சிக்கப்படாமல் கருவிலே யிருந்தபொழுது, தாங்கள் தங்களுக்கும் எனக்குமுள்ள சம்பந்தத்தினுடைய வும் நான் தங்களைச் சார்ந்தவனா யிருப்பதினுடையவும் இரகஸ்யத்தை எனக்குப் போதித்தீர்கள்; பின்னர் என்னைப் பூர்வஞான ஞாபகம் எல்லாவற்றையும் அடியோடு அழித்துவிட்ட இந்த மாம்சச் சிறையிலே தள்ளினார்கள்," என்று பொருள்படுத்தி, 'இப் பாடல் பக்தன் ஈஸ்வரன்மீது குறை கூறுதலைக் குறிக்கின்றது' என்று சொன்னார்.

ஸ்ரீ ராமாநுஜர் அப் பாடலுக்கு "நான் அறியாமையாகிற ஆழ்ந்த பள்ளத்திலே அமிழ்ந்து கிடந்தேன்; தாங்கள் அங்கும் வந்து என்னைத் தேடிப் பிடித்து, தங்கள் முகமாக என்னைத் திருப்பி, தங்கள் பணிவிடைக்கு எனது

ஹிருதயத்தையும் திருப்பிவிட்டீர்கள்.'' என்று பொருள் கூறி, ''முன்னும் பின்னுமுள்ள பாடல்களெல்லாம் எம் பெருமானுடைய எல்லையற்ற கிருபையைப்பற்றியே கூறு கின்றன; இதுமாத்திரம் ஏன் வேறு பொருள்படவேண் டும்?'' என்று சொன்னார்.

ஸ்ரீ மாலாதாருக்குத் தாம் ஒரு பெரிய உபாத்தியாயர் என்ற கர்வம் அதிகமாக உண்டு. ஆகையால், அவருக்குக் கோபம் வந்துவிட்டது. ''இது ஒரு விஸ்வாமித்ர சிரு ஷ்டி; இவ்விதமாக ஸ்ரீ ஆளவந்தார் ஒருபொழுதும் வியாக் கியானம் செய்ததை நான் கேட்டதில்லை,'' என்று மாலா தார் கூறியது மன்றியில், அன்றுமுதல் ஸ்ரீ ராமாநுஜருக் குப் பாடம் சொல்லிக்கொடுப்பதையும் நிறுத்திவிட்டார்.

கோஷ்டி பூர்ணருக்கு இச் சங்கதி தெரிய வந்தது; உடனே அவர், தமக்கு இது தெரியாததுபோல நடித்துக் கொண்டு, மாலாதரரிடம் சென்று, ''ராமாநுஜருக்குத் தாங் கள் சொல்லிக்கொடுக்கும் பாடம் இப்பொழுது எம் மட் டில் இருக்கின்றது?'' என வினவவே, மாலாதரர் ''எனக் குப் பிடிக்கவில்லை; அவன் ஒவ்வொரு பாடலுக்கும் நான் நமது குருநாதரிடமிருந்து ஒருபொழுதும் கேட்டேயிராத புதிய வியாக்கியானங்களெல்லாம் கூறுகின்றான். 'அறி யாக் காலத்து' என்ற பாடலை அவன் நன்றியறிதலைக் குறிக் கும் ஒரு பாடலாகப் பொருள் கூறுகின்றான்.'' என்றார்.

கோஷ்டி பூர்ணர் புன்னகையுடன் ''அப்படியா? அவ் விதமாக நமது குரு வியாக்கியானம் செய்ததை நான்

கேள்விப்பட் டிருக்கிறேன். ஆனால், ஸ்ரீ ராமாநுஜர் தங்களிடத்திலே சிஷ்யனு யிருந்து ஸ்ரீ கிருஷ்ணர் சாந்தீபினி மகரிஷியி னிடத்திலே சிஷ்யரா யிருந்ததுபோலத் தான் என்பதை, இத்தனை நாட்களாகியும் தாங்கள் இன்னும் அறியா திருப்பது ஆச்சர்யமே. போதிக்கப்படாத எதையும் அவர் ஒருபொழுதும் கூறமாட்டார். தாங்கள் அவருக்கு ஏதோ புதிதாக நினைக்கவேண்டாம். அது ஒரு பெரிய ரகஸ்யம். நான் அவரைப் பார்ப்பதுபோல, நீங்களும் அவரை ஞானக் கண்ணுல் பாருங்கள்'' என்றார்.

இப்படிச் சொல்லிவிட்டு, கோஷ்டிபூர்ணர் மாலாதரரையும் மகா பூர்ணரையும் இட்டுக்கொண்டு, ஸ்ரீ ராமாநுஜருடைய மடத்துக்குச் செல்லவே, ஸ்ரீ ராமாநுஜர் எழுந்து இவர்களுக்கு ஆசார உபசாரங்கள் செய்து, வெகு விநயத்துடனே ஒரு பக்கமாக நின்றார். கோஷ்டி பூர்ணர் மாலாதரரை நோக்கி, ''மறுபடியும் பாடம் சொல்லிக்கொடுங்கள்! அவருடைய சௌகர்யத்தைக் கவனித்துப் போகவேண்டியிருந்தாலும், பாடத்தை முடித்துவிடுங்கள்'' என்று கூற, மாலாதரரும் அப்படியே மறுபடியும் பாடம் சொல்லிக் கொடுக்க ஆரம்பித்தார்.

ஆனல், மாலாதரர் ஒரு பாடலுக்கு வியாக்கியானம் சொல்லி வரும்பொழுது, ஸ்ரீ ராமாநுஜர் மறுபடியும் அபிப்பிராய வித்தியாசப்பட்டு ''ஸ்வாமி! ஸ்ரீ ஆளவந்தார் ஒருபொழுதும் இவ்விதமாகப் பொருள்கூறி யிருக்கமாட்டாரென்று நான் சொல்லுகிறேன்'' என்று மொழிந்

தார். மாலாதரர் கோஷ்டி பூர்ணருடைய வார்த்தையைப் பரிசோதிக்க விரும்பி "நீ ஆளவந்தாரைப் பார்த்ததுகூட யில்லையே; அப்படி யிருந்தும் அவருடைய ஹிருதய உணர்ச்சிகளையும் நினைப்புக்களையும் நிரம்ப அறிந்தவன்போலப் பேசுகின்றாயே" என்று ஸ்ரீ ராமாநுஜரை நோக்கிச் சொன்னார்.

ஸ்ரீ ராமாநுஜர் மிகுந்த விநயத்துடனே "ஸ்வாமி! அப்படியன்று; துரோணாசாரியரிடத்திலே ஏகலைவன் என்ற வேடன் எவ்வாறு மாணவனா யிருந்தானோ, அதே மாதிரி நானும் ஸ்ரீ ஆளவந்தா ரிடத்திலே மாணவனா யிருந்தேன் என்பது தங்களுக்கு தெரிந்திருக்கு மென்று நினைத்தேன்" என்றார்.

மாலாதரர் கோஷ்டி பூர்ணர் கூறியதை ஞாபகப்படுத்திக்கொண்டு மௌனமாயிருந்துவிட்டார். "இவர் ஏதோ ஒரு பெருங் கார்யம் செய்வதற்கு உலகில் அவதரித்துள்ள ஒரு மகா புருஷர் என்பதில் சந்தேக மில்லை; ஸ்ரீ ஆளவந்தார் எனக்குப் போதிக்காததை யெல்லாம் நான் கேட்கும் படியான பாக்கியம் பெற்றேன்" என்று எழுந்து ஆநந்த பாவசராய் ஸ்ரீ ராமாநுஜரைக் கை குவித்து வணங்கியது மன்றி, தமது புத்திரன் சுந்தரபாகு என்பவனை ஸ்ரீ ராமாநுஜரிடம் சிஷ்யனா யிருக்கும்படி அனுப்பிக்கொடுத்தார்.

மாலாதரர் போதித்து வந்த பாடம் முடிந்து விட்டது; மகா பூர்ணர் ஸ்ரீ ராமாநுஜரை நோக்கி, "நீங்

கள் வர ரங்கரிடம் சென்று திவ்யப் பிரபந்தத்தின் ரகஸ்யங்களுள் சிலவற்றை அறிந்துகொள்ளவேண்டும்'' என, அப்படியே ஸ்ரீ ராமாநுஜர் ஸ்ரீ வர ரங்கரிடம் சென்று ஆறு மாத காலம் அவருக்குப் பலவிதத் தொண்டுகள் புரிந்து காத்துக்கொண் டிருந்தார். ஆயினும், வர ரங்கருக்கு இவருக்கு உபதேசிக்கவேண்டு மென்ற எண்ண முண்டாகவில்லை. ஒரு நாள் ஸ்நாநம் செய்யும் வர ரங்கரிடத்திலே இவர் காண்பித்த அத்தியற்புதமான பக்தியைக் கண்டு ஸ்ரீவாரங்கர் வியந்து, ஸ்ரீ ராமாநுஜரை எவ்விதம் புகழ்வதென்று தோன்ருது சிறிதுநேரம் விழித்திருந்துவிட்டு, பின்னர், ''எனது புத்திரா! எனது புத்திரா! நீ எனது ஹிருதயத்தைத் திருடிவிட்டாய்; அதைத் திருடியபொழுது அதனுள் புதைந்து கிடந்த ரகஸ்யங்களேயும் திருடிவிட்டாய். ஒரு கிழவனுகிய என்னிடத்து நீ காட்டிய இந்த அன்புக்கெல்லாம் கைம்மாறு நான் என்ன செய்யப்போகின்றேன். நான் உனக்கு என்னிடமுள்ள எல்லாவற்றையும் கொடுக்கின்றேன். அந்தியந்தம் உண்மையான முமுக்ஷுவுக்கு ஆசார்யரே பிரஹ்மம்; அவரே விலைமதிக்கப் பெறுப் பெரு நிதி; சிஷ்யன் அவரை யிச்சித்துவிட்டால், அதற்கு மேல் இச்சிக்கவேண்டிய தொன்றுமில்லை; அவர் வழியிலே பரமலக்ஷியமா யுள்ளவர்; அவரே அதி ரகஸ்யம், வேதாந்த வாக்கு; அவரே எல்லா நன்முயற்சிகளினுடையவும் சாராம்சம்; அவரே உத்கிருஷ்டோத்கிருஷ்டமானவர்; அருமையினும் அருமையானவர்; அவர் நமக்கு நித்திய வாழ்க்கையை யளிக்கிருர்; நம்மை யந்தகாரத்தினின்றும் விலக்

கிப் பரமபதம் செல்லும் மார்க்கத்திலே ஒளி யளிக்கிறார்; அவர் என்னைப் பாபத்தினின்றும் விழிக்கச் செய்தார்; அவர் என்னைக் கொடியோர்களுடைய மார்க்கத்தினின்றும்விலக்கினார்; 'அவர் எனக்கு ஈஸ்வர பக்தி செலுத்தவும், ஈஸ்வரனுக்குத் தொண்டு செய்யவும், அவனுடைய சந்நிதானத்திலே ஆநந்த நிர்த்தனம் செய்யவும் கற்றுக்கொடுத்தார்; அவர் எனது கையைப் பிடித்துக்கொண்டு, அறிவுக் கதீதமான பிரதேசத்திலே யிட்டுச் சென்றார். அணுவிலும் மகத்திலும் அந்தர்க்கதமா யுள்ளவர் இப்பொழுது உலகிலே உயிரும் ஒளியும் அளித்துக்கொண்டு குருவாக உலாவுகின்றார்; அவரே மார்க்கம்; அவரே உயிர்; அவரிடத்திலே நீ சரண் புகுந்துகொள்; இப்பொழுது பரமபத தர்சனம் உனது பார்வைக்குள்ளேயே இருக்கின்றது; அது உனக்கு நேரிலேயே யிருக்கிறது; அதை யடைந்துகொள்'' என்று பெரியதோர் உபதேசம் செய்தார். இன்னும் ஸ்ரீ வாரங்கர் ஸ்ரீ ராமாநுஜருக்கு ஸ்ரீ ஆளவந்தாருடைய ஸ்தோத்திர ரத்நத்தையும் சதுஸ்லோகியையும் கற்றுக்கொடுத்து, அவருக்கு லக்ஷ்மண முனி யென்ற பெயரும அளித்தார்; ''திருவாய்மொழியையும், மதுரகவியினுடைய 'கண்ணிநுண் சிறுத்தாம்பு' என்ற பாடலையும் உபதேசித்தார்'' என்றும் சொல்லப்படுகின்றது; இன்னும் ஸ்ரீ வாரங்கருக்கு பிள்ளையில்லாததினாலே, தமது சகோதரர் சொட்டை நம்பி என்பவரை ஸ்ரீ ராமாநுஜருக்கு சிஷ்யராக அனுப்பிவைத்தார். சின்னாட்கள் கழித்து, அவருடைய புத்திரன் என்னுச்சா

னும், அவருடைய பேரன் பிள்ளையப்பனும் ஸ்ரீ ராமாநுஜ ருக்கு சிஷ்யரானர்கள்.

இப்பொழுது 'ஸ்ரீராமாநுஜருக்கு இத்தனைக் குருக்கள் ஏன்?' என்று ஒரு சந்தேகம் கிளம்புகின்றது. மகா பூர்ணர் ஒருவரே ஸ்ரீ ராமாநுஜருக்குக் குருவா யிருக்கப் போதா தா?' இச் சந்தேகம் எல்லாருக்கும் உண்டாவது நியாயமே. ஸ்ரீ ஆளவந்தார் ஸ்ரீ ராமாநுஜருக்கு நேரே உபதேசிக்க முடியாமற் போகவே அவர் பக்குவ நிலைக்கேற்ற பிரகாரம் வெவ்வேறு சிஷ்யர்களிடம் வெவ்வேறு உண்மைகளை யுப தேசித்துவிட்டுப் போனர். ஆதலால், இவ் வுண்மைகளை யெல்லாம் அறிந்து கொள்வதற்கு ஸ்ரீ ராமாநுஜர் அவர்க ளிடம் எல்லாம் போய்க் கற்கவேண்டி வந்தது. ஸ்ரீ யாமு நாசார்யர் உயிருடனிருந்த காலையில் "ஸ்ரீராமாநுஜரே பிற் கால ஆசார்யர்" என்றும், "அவருக்கு உண்மைகளனைத்தை யும் உபதேசிக்கவேண்டும்" என்று தமது சிஷ்யர்களுக்கும் கண்டிப்பான உத்தரவு அளித்துவிட்டுப் போனர்.

---

5-வது அதிகாரம்:

# ஸ்ரீ ராமாநுஜரின் திருப்பதி யாத்திரை

இச் சமயத்திலே ஸ்ரீமந் நாராயணரே பரப்பிரஹ்ம மென்று எவரும் எவ்வித ஆக்ஷேபணையும் கூற முடியாத படி, எவரும் அசைக்க முடியாதபடி, எவரும் எதிர்க்க முடியாதபடி, தெளிவாகவும் ஸ்திரமாகவும் ஸ்தாபித்து, கத்யத் திரயம் என்றும் நித்திய கிரந்தம் என்றும் இரண்டு நூல்களை ஸ்ரீ ராமாநுஜர் இயற்றினர். கத்யத்திரய மென்னும் சரணு கதி கத்யம் என்பது. நித்திய கிரந்த மென்பது நாராயண னைத் தினசரி பூஜிக்கவேண்டிய முறைகளைப் பற்றிக் கூறு வது. இக்காலத்திலே வெகுதூர தேசங்களிலிருந்துகூட சிஷ்யர்கள் பலர் ஸ்ரீ ராமாநுஜருக்கு வந்து சேர்ந்தார்கள். ஸ்ரீ சேலாஞ்சலாம்பாள் என்ற பெயர் படைத்த கோங்குப் பிராட்டியார் இச் சமயத்திலேதான் ஸ்ரீ ராமாநுஜரிடத்தில் உபதேசம் பெற்றது. ஸ்ரீ சைலபூர்ணருடைய புத்திரன் திருக்குருகைப்பிரான் பிள்ளான் என்பவர் ஸ்ரீராமாநுஜரிடத் திலே சிஷ்யரானர்; ஸ்ரீ சைலபூர்ணருக்கு எங்களாழ்வான் என்று ஒரு சிஷ்யர் இருந்தார். இவர் குழந்தைப்பருவ முதற்கொண்டு உலக வாழ்க்கையைத் துறந்து உத்தம பக்தி வாழ்க்கை வாழ்ந்து வந்தார். திவ்யப் பிரபந்தம் கேட் டுக்கொண்டிருந்தால் போதும் அவருக்கு ஊண் வேண் டாம், உறக்கம் வேண்டாம்; இது பிரஹ்மாநந்தம் அளித்து

விடும். இவர் ஸ்ரீ ராமாநுஜருடைய செயல்களையும் குணங்களையும் கீர்த்தியையும் பற்றிக் கேட்டுக் கேட்டு, 'என்று அவருடைய சந்நிதானத்திலே சென்று நிற்கும்படியான பாக்கியம் கிடைக்குமோ?'' என்று ஏங்கிக்கொண்டிருந்தார். கிடாம்பியாச்சான் என்பவர் தமது அத்தை புருஷனாகிய ஸ்ரீ சைலபூர்ணரிடத்திலே பிள்ளானுடைய ஆசையைத் தெரிவித்துத் தாமும் பிள்ளானும் ஸ்ரீ ராமாநுஜரிடத்திலே சிஷ்யர்களாவதற்கு அநுமதி கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டு அவ்வாறே சென்று சிஷ்யர்களானார்கள். மகா கீர்த்தி வாய்ந்த ஸ்ரீ வேதாந்த தேசிகர் கிடாம்பியாச்சானுடைய சந்ததியில் வந்தவரே யாவர்.

ஸ்ரீராமாநுஜர் தமது சிஷ்யர்களுக்குப் பாடம் மாத்திரம் சொல்லிக் கொடுத்துக்கொண் டிருக்கவில்லை; க்ஷேத்திரத்தில் பூஜை முறையிலே பல சீர்திருத்தங்களை யுண்டுபண்ணினார்; அவரவர்கள் அவரவருடைய கடமையைச் சற்றும் தவறாது ஒழுங்காகச் செய்யும்படி பல கண்டிப்பான திட்டங்கள் ஏற்படுத்தினார்; அவர் நிஷ்பக்ஷபாதமாயும் நியாயமாயும் நேர்மையுடையவராயு மிருந்ததினாலே க்ஷேத்திரத்து உத்தியோகஸ்தர்கள் பலர் அவரிடத்திலே விரோத எண்ணம் கொண்டார்கள்; ஸ்ரீ ராமாநுஜர் க்ஷேத்திர காரியங்களை நிர்வகிக்கும் வரையிலே, தங்களுடைய சமர்த்து பலிக்காது என்று கண்டுகொண்டார்கள். ஆனால், அவரை க்ஷேத்திரத்தினின்றும் எப்படி நீக்குவது? ஊரிலுள்ள பொது ஜனங்க ளெல்லாரும் அவரை யோர் அவதார புருஷரென்று

கொண்டாடுகின்றார்கள். அவருக்காக உயிரையும் கொடுப்ப தற்குத் தயாராக அநேக சிஷ்யர்கள் அவரை எப்பொழு தும் சுற்றிச் சூழ்ந்துகொண்டேயிருக்கின்றார்கள். ஸ்ரீராமா நுஜர் இவ் வுலகிலிருக்கும் வரையில் இந்த ஸ்ரீரங்க க்ஷேத் திரத்தினுடைய கார்ய நிர்வாகம் வேறு எவர் கைக்கும் செல்லுமென்று நாம் நம்புவதற்கு இடமில்லை. ஆதலால், அவரை யெப்படியாவது கொன்றுவிடவேண்டு மென்று அந்த க்ஷேத்திரத்து வேலைக்காரர்கள் தீர்மானித்துக்கொண் டார்கள். ஆனல், அவரை எப்படிக் கொல்வது? அவரோ குறித்த நேரத்தில்தான் வெளி வருவார்; குறித்த நேரத் தில்தான் போஜன முண்பார்; குறித்தவர்களுடைய வீடுகட் குத்தான் செல்லுவார். அவர் ஸ்திரமாக ஏழு கிருஹஸ்தர்க ளுடைய வீடுகட்குச் சென்று இரந்து கிடைத்த அன்னத் தை யுண்பது வழக்கம். இவ்வேழு வீடுகளைத் தவிர, வேறெவ் வீட்டுக்கும் செல்லார். ஆதலால், அந்த க்ஷேத்தி ரத்து வேலைக்காரர்கள் இந்த ஏழு வீட்டுக்காரர்களுக் குள்ளே யொரு வீட்டுக்காரனுக்கு லஞ்சம் கொடுத்துக் கைவசப்படுத்திக்கொண்டு, அவன் வீட்டிலிருந்து ஸ்ரீராமா நுஜருக்கு இடும் அன்னத்திலே விஷம் கலந்து கொடுக்கும் படி ஏற்பாடு செய்தார்கள். ஆ! மகா பாபி! வேறெவ் வீட் டுக்கும் போகாமல் ஏழு வீடுகளுக்குள் இவன் வீட்டை யொரு வீடாக அவர் குறித்திருந்தா ரென்பதினலேயே, இவனிடத்திலே அதிக நம்பிக்கை வைத்திருந்தார் என்று புலப்படவில்லையா? மகா பாபி நம்பிக்கைத் துரோகம் செய் தான்; இந்தப் பாதகன் அன்னத்திலே விஷம் கலந்து தனது

மனைவியை நோக்கி "அப்படியே! ஸ்ரீ ராமாநுஜர் இன்று இரக்க வரும்பொழுது, அவர் இறக்க நீ இவ் வன்னத்தைக் கொண்டுபோய் இடு!" என்று கூற, அவள் "ஐயோ! அப் பாபம் என்னால் சுமக்க முடியாது; நான் மாட்டேன்; மாட்டவே மாட்டேன்" என்று மறுத்தாள். ஆனால், பாதக னுடைய நெஞ்சத்திலே ஈர மிருந்தாலல்லவோ, இரக்க முண்டாகும். அவன் தனது மனைவியைக் கூந்தலைப் பிடித் திழுத்துப்போட்டு நையப்புடைத்துக்கொண் டிருக்கையில், வாசலிலே ஸ்ரீ ராமாநுஜர் பிக்ஷைக்கு வந்து நின்று சப்த மிட்டார்; உடனே யவன் அவளை நோக்கி "எழுந்திருந்து கண்களைத் துடைத்துக்கொண்டு மரியாதையாக இவ் வன் னத்தைக் கொண்டுபோய் போட்டுவிட்டுப்போ; இல்லையேல் —" என்று அதட்ட, அவள் பயந்து அவ் வன்னத்தை யெடுத்துக்கொண்டுபோய் அவருக்குப் போட்டுவிட்டுத் திரு ம்பினாள். ஸ்ரீ ராமாநுஜர் இவ்வம்மையை உற்றுப் பார்த்தார். 'இன்று ஏன் முகம் வாடியிருக்கிறது? ஏன் கண்களி னின் றும் நீர் ததும்புகிறது? ஏன் பெருமூச்சுக் கிளம்புகிறது? என்ன துக்கம் இருந்தாலும் நம்மைக் கண்டவுடனே அந்த துக்கம் பறந்துவிடுமே; ஒளி மிகுந்த அம் முகம் இன்று வாடக் காரண மென்ன? ஏதோ சங்கதி யிருக்கிறது இதிலே' என்று நினைத்தவராய், அவ் வன்னத்தை யுற்று கவனித்தார்; அவ் வன்னத்தைப்பற்றி அவருக்குச் சந்தேக முண்டாயிற்று; அவர் அவ் வன்னத்தைக் காவிரி நதியிலே எறிந்துவிட்டார்; அன்றுமுதல் சுற்றித் திரிந்து இரப்பதை நிறுத்திவிட்டார்; 'பிராணனை அபாயத்துக்குள் ளாக்கு

வதை விடப் பட்டினி கிடந்தாலும் பரவாயில்லை' என்று நிச்சயித்துவிட்டார்.

இக் கதை இன்னொரு விதமாகவும் சொல்லப்படு கிறது:—"அவள் ஸ்ரீ ராமாநுஜரின் முன்னே விஷங் கலந்த அந்த அன்னத்தை வைத்துவிட்டு, சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்கரித்து, தனது கை நகத்தினாலே அவருடைய கால்க ளிலே பிராண்டிவிட்டாள்" என்றும், "இந்தச் சைகையை ஸ்ரீ ராமாநுஜர் அறிந்துகொண்டார்" என்றும், "உடனே அச் சோற்றை யொரு நாய்க்கு இட, அது துடித்து விழு ந்து மரித்தது" என்றும், "அதற்குப் பின்னர் அவர் ஒரு மாத காலம் உபவாச மிருந்தார்" என்றும் சொல்லப் படுகிறது.

இன்னொரு சமயத்திலே அவர்கள் க்ஷேத்திரத்திலே அளிக்கப்படும் தீர்த்தப் பிரசாதத்திலே விஷம் கலந்து கொடுக்க முயற்சித்தார்கள். ஸ்ரீ ராமாநுஜர் அதை யறிந்து கொண்டு, புந்நகை யுடனே அதைக் குடித்துவிட்டார்; இத னால் அவருக்குக் கெடுதல் ஒன்றுமில்லை; திரும்பத் திரும்ப முயற்சித்து அவர்கள் ஒன்றும் பயன்படாது போனது கண்டு ஸ்ரீ ராமாநுஜருடைய பாதங்களிலே விழுந்து மன் னிப்புக் கேட்டுக்கொண்டார்கள்; ஸ்ரீ ராமாநுஜர் அவர்களை யெல்லாம் மன்னித்து இனிமேல் நன்றாக ஒழுகும்படி ஆக் ஞாபித்தார்.

இது கோஷ்டிபூர்ணருக்குத் தெரிய வந்தது; இவர் அதிவேகத்தோடு ஸ்ரீரங்கம் சென்றார். "ஸ்ரீ கோஷ்டிபூர்

ணர் வருகிருர்'' என்று கேள்விப்பட்டு, ஸ்ரீராமாநுஜர் தமது சிஷ்யர்களைக் கூட்டிக்கொண்டு, காவிரி தீரத்திலே கொதிக்கின்ற மணலிலே வந்து சேர்ந்தார். அவர் தமது குருவாகிய கோஷ்டிபூர்ணருடைய பாதங்களிலே விழுந்து, அவராக எழுந்திருக்கச் சொல்லும்வரையில் அப்படியே விழுந்து கிடந்தார். முன்னமேயே உபவாசம கிடந்து ஸ்ரீ ராமாநுஜருடைய சரீரம் இளைத்து மெலிந்து துரும்பாயிருக்கிறது. இப்பொழுதோ கோஷ்டிபூர்ணர், வெய்யிலிலே கொதிக்கின்ற மணலிலே விழுந்து கிடக்கும் அவரை ''எழுந்திரு'' என்று சொல்லாமல், கவனியாதவர் போல மௌனமாயிருந்தார். ஸ்ரீராமாநுஜருடைய சிஷ்யர்களுக்கோ கோபம் பொங்கிவிட்டது. ஆயினும், என் செய்யலாம்? ஸ்ரீ ராமாநுஜரோ அசையக்கூடவில்லை. அப்படியே விழுந்துகிடந்தார். எல்லோருக்கும் கோஷ்டிபூர்ணருடைய அலக்ஷியத்தைப் பற்றிக் கோபம் அதிகம் வந்தும், 'ஸ்ரீ ராமாநுஜருக்குக் கோபம் உண்டாகுமோ?' என்று பயந்து எவரும் பேசவில்லை.

ஆனல், அவர்களுக்குள்ளே பிரணதார்த்திஹரர் அல்லது கிடாம்பியாச்சான் என்ற பெயரையுடைய சிஷ்யர் அதிக தைர்யம் வாய்ந்தவர்; இவருக்கிருந்த குருபக்தி மிகவும் மேம்பட்டது. 'குருவுக்கு அதிருப்தி வந்தாலும் சரி, கோஷ்டிபூர்ணருக்குக் கோபம் உண்டானலும் சரி, குரு இப்படி வெயிலில் விழுந்து கிடக்க நாம் பார்த்திருப்பதா?' என்று கிடாம்பியாச்சான் நினைத்தார்; கோபத்தினல்

கோதித்து, கோஷ்டிபூர்ணரை நோக்கி, "ஸ்வாமி! உமக்கு உம்முடைய சிஷ்யர்களிடத்துள்ள வாத்சல்யமே வாத்சல்யம்; உமக்கேற்ற சிஷ்யன் அவர்; அவருக்கேற்ற குரு நீர். நல்ல மணம் வீசும் மல்லிகை மலரை வெயிலிலே போட்டு வெம்பச் செய்கின்ற மனிதனை என்னென்று கூறுவது? எங்கள் குரு இவ்வளவு நேரம் உங்கள் முன்னே விழுந்து கிடந்தது போதாதா?" என்று கூறி, கோஷ்டிபூர்ணருடைய உத்தரவில்லாவிட்டாலும், ஸ்ரீ ராமாநுஜரைத் தூக்கி நிறுத்தினர்.

"ஏ, கன்னெஞ்சமே! முன் குடுமிச் சோழியா! எனது அன்பார்ந்த குருமூர்த்தியைக் கொல்ல நினைக்கிறாயா?" என்று கோஷ்டிபூர்ணரை நிந்தித்து, கிடாம்பியாச்சான் ஸ்ரீ ராமாநுஜரைத் தூக்கித் தமது முதுகின்மேலே போட்டுக்கொண்டு தாம் கீழே படுத்துக்கொண்டாரென்றும் சொல்லப்படுகிறது.

ஸ்ரீ கிடாம்பியாச்சான் இம்மாதிரி தைர்யமான வார்த்தைகள் புகன்றது பற்றி 'என்ன நேரிடுமோ?' என்று மற்றவர்கள் நடுநடுங்கினார்கள்; ஸ்ரீராமாநுஜர் மிகமிக நடுங்கினார்; ஆனால், கோஷ்டிபூர்ணர் கிடாம்பியாச்சானைப் பார்த்து 'நண்ப! ஈவிரக்கமற்ற மகா பாபியென்று நீ என்னை நினைக்கிறாய்; உனக்கு உன்னுடைய குருவினிடத்துள்ள பக்தியின் மிகுதியினாலே நீ என்னை நிந்திக்கிறாய்; அல்லவா? நீ இவ்வுலகி லெங்கு சென்று பார்த்தாலும் என்னைப்போல் அவரிடத்தி லன்பு செலுத்துபவர்கள் எவரு மில்லையென்று

அவரே கூறுவார்; நான் உங்களை இப்பொழுது பரிசோதித்துப் பார்த்தேன்; இக்கூட்டத்திலே 'தம் உயிரினும் அதிகமாக அவரிடத்தில் அன்பு செலுத்துபவர்கள் எவரேனும் உண்டா?' என்று பார்க்க விரும்பினேன். உன்னைக் கண்டுபிடித்தேன். இதோ அவரை, அவருடைய சரீர சுகத்தையும் உயிரையும் உன் வசம் ஒப்புவிக்கின்றேன்; ஏழாவது தலைமுறைக்கும் நீயே ஜவாப்தாரி; இன்றுமுதல் அவருடைய ஆகாரத்தை நீயே யாக்கு! அவ்வாகாரத்தின் சமீபத்தில் எவரும் வரும்படிகூட விட்டுவிடாதே'' என்றார்.

''எம்பெருமான் சித்தம்'' என்றார் கிடாம்பியாச்சான்; மற்றவர்களெல்லோரும் அவமானமும் ஆச்சர்யமுமடைந்தவர்களாகி, ஒருவரை யொருவர் பார்த்தார்கள்.

இந்தச் சமயத்திலே, காசியிலே எக்ஞ மூர்த்தியென்ற பெயருடனே பெயர்போன சந்நியாசி யொருவர் இருந்தார்; இவர் சகல கலா வல்லவர்; சாஸ்திரங்களை யெல்லாம் தலைமோகக் கற்றவர்; காசியைச் சுற்றிலுமுள்ள பிரதேசங்களிலே பண்டிதர்க ளென்றிருந்தோ ரனைவரையும் இவர் வாது புரிந்து ஜயித்து அவர்களிட மிருந்தெல்லாம் கப்பம் வாங்கி வந்தார்; இவருக்கு எண்ணற்றவர்கள் சிஷ்யர்களாயிருந்தார்கள். 'தெற்கே' ஸ்ரீ ராமாநுஜர் மகா மேதாவியாய், வேத சாஸ்திரங்களிலே வித்துவத் மிகுந்தவராயிருக்கின்றார்' என்று கேள்விப்பட்டு, 'அவருடனே வாது புரியவேண்டும்' என்று ஆசைமிகுந்தவராய்த் தமதுஎண்ணற்ற சிஷ்யர்

கூழாத்துடனே ஸ்ரீரங்கம் வந்து சேர்ந்தார்; இவர் எண்ணிறந்த கிரந்தங்களுக்கு ஆசிரியர்; இவருடைய பெயர் சொன்னாலே எல்லா வித்துவான்களும் கிடுகிடுவென்று நடுங்குவார்கள். இவர் ஸ்ரீரங்கத்திலே வந்து மிகுந்த இறுமாப்புடனே ஸ்ரீராமாநுஜரிடம் சென்று, "ஐயா! நான் தங்களுடன் வாது புரிய வந்தேன். சம்மதமோ? என்றார்.

ஸ்ரீ ராமாநுஜர்:—"வெகு சந்தோஷம்; ஆனால் ஒன்று; நீர் தோற்றுவிட்டால் என்ன செய்கிறீர்?."

எக்ஞ மூர்த்தி:— "நான் என்னுடைய மதத்தை விட்டுவிட்டுத் தங்களுடைய மதத்தை யவலம்பிக்கிறேன்.'

ஸ்ரீ ராமாநுஜர்:— "நல்லது, நானும் அப்படியே செய்கிறேன்."

எக்ஞமூர்த்திக்கும் ஸ்ரீ ராமாநுஜருக்கும் பதினெட்டு நாட்கள் வாது வெகு மும்முரமாக நடந்தது. பதினாறு நாட்களாய்விட்டன: எவரும் தோற்கவுமில்லை, ஜயிக்கவுமில்லை. பதினேழாவது நாள் ஸ்ரீ ராமாநுஜருக்குப் பிரதிகூலமாக முடிந்தது; ஆனால் என்ன? 'பதினெட்டு நாட்கள் வாது செய்வது' என்று முதலிலேயே நிச்சயித்திருக்கிறதினால், இன்னும் ஒரு நாள் இருக்கின்றது. நாளை ஸ்ரீ ராமாநுஜர் ஜயிக்கவேண்டும். பதினேழாவது நாளாகிய இன்று ஸ்ரீ ராமாநுஜர் மனம் இடிந்துவிட்டார்; ஏக்க முற்றார்.

எஜ்ஞமூர்த்தி யடைந்த ஆநந்தத்துக்கு ஒரு அளவேயில்லை; சிரித்தார், குதித்தார்; 'வெற்றி பெற்றேன்" என்று ஆர்ப்பரித்தார்.

ஸ்ரீ ராமாநுஜர் வாடிய முகத்துடனே மடத்துக்குச் சென்று, வியாகுலம் மிகுந்து, ஸ்ரீ வரதராஜப் பெருமானுடைய விக்கிரகத்துக்குத் தாம் வழக்கமாகச் செய்கிற பூஜையைச் செய்துவிட்டு, சந்நிதியிலே சாஷ்டாங்கமாக விழுந்து, “என் உயிருக் குயிரே! இன்றும் என்றும் எனக்கு ஆதாரமா யுள்ளவனே! இந்த விசிஷ்டாத்வைத மதமானது ஸ்ரீ சடகோபரிட மிருந்து எனக்குப் பரம்பரையாக வந்திருக்கின்றது; அவருடைய சந்ததியார் இந்த மதத்தை எங்கும் பரப்பி, எண்ணற்ற ஜீவராசிகளை ஈடேற்றி யிருக்கின்றார்கள்; என்னால் இந்த மதம் அழிந்துவிட வேண்டுமா? இம் மதத்தின் அழிவுக்கு நானா காரண மாக வேண்டும்? மதபாதகன் என்ற தீப்பெயர் எனக்குக் கிடைக்கும்படி, அந்த அவமானத்தை நான் அடையும்படி, நான் யாது செய்துள்ளேன்? சத்திய வஸ்து நீயே யென்றும், உனது அகண்ட கல்யாண குணங்க ளெல்லாம் உண்மையானவை யென்றும் இதுவரை எங்களைத் தெளிவுபட வைத்தாய்; இப்பொழுது என்னுடைய நியாயங்களை யெல்லாம் பறக்கடிக்கும்படி ஒரு எதிரியையும் கொண்டுவந்துவிட்டாய்; உனக்குச் சந்தோஷம் எதுவோ, அதுவே எனக்கும் சந்தோஷம்; உனது சித்தம் நிறைவேறுக” என்று பிரார்த்தித்துவிட்டு, ஆகாரம் செய்வதற்கு உட்கார்ந்தார்; ஆகாரம் செல்லவில்லை; பேசாம லெழுந்திருந்து கை கழுவிவிட்டு, படுத்து அயர்ந்து நித்திரைபோனார்.

ஆ! ஆ! ஆபத்பாந்தவனாகிய ஆதிமூலப் பெருமான் தமது அன்பர்களை என்றேனும் திண்டாட விட்டதுண்டா?

அவருடைய ஹிருதயேச்வரனாகிய ஸ்ரீ வரதராஜப் பெருமான் அவருடைய கனவிலே தோன்றி, புன்னகை புரிந்து, அவரை நோக்கிக் கூறியதாவது:— "இப்பொழுது நான் உன்னைக் கைகளையும் கால்களையும் கட்டி உன்னுடைய எதிரிகளின் வசத்திலே ஒப்புவித்துவிட்டேன் என்றும், நான் உன்னை ஏமாற்றிவிட்டேனென்றும் நீ நிச்சயித்து விட்டாய்; எப்பொழுதேனும் நான் ஆபத்துச் சமயத்திலே அண்டியவனைக் கைவிட்டதுண்டா? அதிலும், உன்னைக் கைவிட்டதுண்டா? நீ அவசரப்பட்டுவிட்டாய். எழுந்திரு! விசனப்படாதே! அத்தியற்புத சக்திகள் வாய்ந்த ஒரு சிஷ்யனை நான் உனக்கு அளித்திருக்கிறேனென்று உனக்குத் தெரியவில்லையா? மாயைக் கொள்கையைப்பற்றி ஸ்ரீ யாமுநாசார்யர் எழுதியுள்ள கண்டனத்தை நீ நினைப்பு மூட்டிக் கொண்டால், நீ நாளை எஜ்ஞமூர்த்தியை ஜயித்துவிடுவாய்" என்று கூறிவிட்டு, மறைந்தருளினர்.

ஸ்ரீ ராமாநுஜர் ஆச்சர்யமும் பயமு மடைந்தவராய், விழித்துக்கொண்டவராய் எழுந்திருந்தார்; விடிந்துவிட்டது; ஸ்ரீவரதராஜப் பெருமானுக்குக்காலே பூஜை நடந்தது. ஸ்ரீ யாமுநாசார்யர் இயற்றியுள்ள நூலை ஞாபகப்படுத்திக் கொண்டார்; ஜயம் தம்முடையதேயென்று நிச்சயமாய் நினைத்துக்கொண்டு, தர்க்க மண்டபம் சென்றார்.

எதிரியாகிய எஜ்ஞமூர்த்தி, அம் மண்டபத்துக்கு முன்னமேயே வந்திருந்தவர், ஸ்ரீ ராமாநுஜருடைய வரவையும் அவருடைய முகத்தையும் ஏறிட்டுப் பார்த்தார்;

ஸ்ரீ ராமாநுஜர் நேற்று மாலையிலே போகும்பொழுது, முகம் வாடி மூச்சடங்கிப் போனாரே; இன்று இவருடைய முகத்திலே என்றுமில்லாத ஒரு ஒளி ஜ்வலிக்கின்றது; ஆநந்தம் பொங்குகின்றது; அவருடைய உதடுகள் மெல்லென நீங்கிப் புந்நகை புரிந்தன; ஜயலட்சுமி அவருடைய பார்வையிலே நிர்த்தனம் செய்கின்றாள். இவற்றை எக்ஞமூர்த்திபார்த்தார்; இன்னும் ஸ்ரீ ராமாநுஜரைப் பார்த்தவுடனேயே அவருடைய ஹிருதயம் திகில்கொண்டு துடித்தது; இன்னும் 'ஸ்ரீ ராமாநுஜர் ஈஸ்வர வரப்பிரசாதம் பெற்று வந்திருக்கிறார்' என்று எக்ஞமூர்த்திக்கு நன்றாகத் தெரிந்துவிட்டது. 'இன்று அவரை எதிர்த்து வாதாடுவதிலே பயனில்லை' என்று நன்றாகக் கண்டுகொண்டார் எக்ஞமூர்த்தி. ஆகையால், 'தோல்வியடைந்து அவமானம் பெறுவதைப் பார்க்கிலும், பேசாமல் வணங்கிவிடுவதே நன்று' என்று தீர்மானித்துக்கொண்டவராய், ஸ்ரீ ராமாநுஜரை நாடியோடினார்; அவருடைய பாதங்களிலே விழுந்தார்; "நான் தோற்றேன்" என்றார்; தமது சிரசின்மீது அவருடைய பாதரக்ஷைகளைத் தூக்கி வைத்துக்கொண்டார். ஸ்ரீ ராமாநுஜர் திடுக்கிட்டார்; ஆச்சர்யம் மிகுந்தார்; அவருக்கு ஒன்றுமே தோன்றவில்லை. ஆ! ஆ! எம்பெருமானுடைய அருள் இருந்தவாறென்னே!

"ஆனால், நீங்கள் இன்னும் தர்க்கத்தை ஏன் தொடர்ந்து செய்யவில்லை" என்றார் ஸ்ரீ ராமாநுஜர்.

எக்ஞமூர்த்தி மிகுந்த விநயத்துடனே "எல்லாம் வல்ல இறைவனே தங்கள் பக்கம் இருக்கும்பொழுது, அவ் விறைவனுக்கும் தங்களுக்கும் வித்தியாசம் என்ன இருக் கிறது? நான் தோற்றேன். என்னைத் தங்களுடைய சிஷ் யர்களுள் ஒருவனாக எடுத்துக்கொண்டு, எனது கண்கள் சத்திய ஒளியை அடையும்படி செய்யவேண்டும்" என்று சொன்னார்.

ஸ்ரீ ராமாநுஜர் "தாங்கள் ஊகித்தது சரியே; தாங்கள் நேற்றுக் கூறிய நியாயத்திலே ஏழு குற்றங்கள் உள்ளன; அவைகளை எடுத்துக் காட்டட்டுமா?" என்று கேட்க, எக்ஞ மூர்த்தி "நான் தங்களுக்குச் சிஷ்யனாய்விட்டேன்; இனி மேல் என்னைக் கேட்பானேன்?" என்று சொன்னார்.

ஸ்ரீ ராமாநுஜர்:— "அக் குற்றங்களைக் கேளுங்கள். (1) ஆச்ராயனுப பத்தி:— இந்த அவித்தைக்கு ஆதார மாக எதையாவது கண்டுபிடிக்கும் கஷ்டம். ஜீவாத்மாவி லுள்ள அகங்காரமே அவித்தையின் வியாபகமா யிருக் கிறதினாலே, அது ஜீவாத்மாவிலே யிருந்து, தான் உத்தர வாதமா யுள்ள மாயைக்குக் காரணமா யிருத்தல் முடியாது. பிரஹ்மமானது ஸ்வயம் ஜோதி ஞானமாம் பிரதான லக்ஷ ணத்தை யுடையதா யிருக்கிறதினாலே, அது அவித்தை யின் இருப்பிடமா யிருக்க முடியாது. ஆகையால், அவித் தை என்று கருதப்படுகின்ற இதற்கு இருப்பிடம் கிடை யாது.

(2) திரோதான அநுபபத்தி:—ஜோதித்தன்மை யொன்றையே பிரதான லக்ஷணமாக உடைய ப்ரஹ்ம வஸ்துவை அவித்தை மறைக்க முடியாது; ஏனெனில், அதனுல் ப்ரஹ்ம வஸ்துவினுடைய பிரதான லக்ஷணம் அழிந்துவிட்டது என்றே பொருள் பட்டுவிடும்.

(3) ஸ்வரூப அநுபபத்தி:—அது ஒரு விஷயமாயிருக்கிறவரையில் அது ஒன்றிலே உண்மைத் தன்மை வாய்ந்ததாயிருக்கவேண்டும், இல்லையேல் பொய்மைத் தன்மை வாய்ந்ததாயிருக்கவேண்டும்; ஆனுல், உண்மையானதென்று ஒப்புக்கொள்ளப்படவில்லை; அது பொய்மையாயு மிருக்க முடியாது; ஏனெனில், ப்ரஹ்மவஸ்துவினின்றும் வேருக உண்மையில் ஒரு அஞ்ஞானம் ஒப்புக்கொள்ளப்படாதவரையில் இந்த மாயைக் கொள்கைக்கு நியாயம் காண்பிக்கவும் முடியாது.

(4) அநிர்வசநீயத்வ அநுபபத்தி:— பிரமையை உண்டாக்குகின்ற அவித்தைக்கு உண்மை அல்லது இன்மையென்று லக்ஷணம் கூறுவது சாத்தியமேயாம். அறிவெல்லாம் உண்மைகள் அல்லது இன்மைகளைச் சம்பந்தித்திருக்கின்றன; அறியப்படும் வஸ்துவுக்கு உண்மையின் உடன்பாட்டு லக்ஷணங்களாவது, இன்மையின் எதிர்மறை லக்ஷணங்களாவது கிடையாவென்று கூறப்படுமானுல், அப்பொழுது எல்லா வஸ்துக்களும் எல்லா அறிவுகட்கும் விஷயங்களாகலாம்.

(5) ப்ரமாண அநுபபத்தி:— அத்தகைய அவித்தை பிரத்தியக்ஷத்திலாவது, அநும்ானத்திலாவது, அல்லது சாஸ்திர ஆதாரத்தைக் கொண்டாவது நமது அறிவுக்குள்ளே கொண்டுவரப்படக் கூடுமென்பதற்குப் பிரமாணம் இல்லை.

(6) நிவர்த்தக அநுபபத்தி:— நிர்க்குணப் பிரஹ்மத்தை விஷயமாக உடைய ஞானத்தினலே அஞ்ஞான நீக்கம் உண்டாதல் முடியாது. ஏனெனில், அத்தகைய ஞானம் அசாத்தியமாம்; சத்தியத்தைப் பற்றியுள்ள பரிபூர்ண ஞானமாதல் முடியாது.

(7) நிவிருத்தி அநுபபத்தி:— அத்வைதிகளுடைய அவித்தையானது நீக்க முடியாதது."

இந்த நியாயங்களையெல்லாம் கேட்டார் எக்ஞமூர்த்தி; மறுமொழியொன்றும் சொல்லமுடியாது விழித்தார்; தமது ஏகதண்டத்தை யுடைத்தெறிந்தார்; ஸ்ரீ ராமாநுஜருடைய பாதங்களிலே விழுந்து பணிந்தார்; காஷாயமும் திரிதண்டமும் தமக்கு அளிக்கும்படி பிரார்த்தித்துக் கேட்டுக்கொண்டார்.

ஸ்ரீ ராமாநுஜர் சந்தோஷத்துடனே சம்மதித்து, அவருக்குப் பிராயச்சித்த கிரியைகளெல்லாம் செய்து தம்முடனே சேர்த்துக்கொண்டு, ஸ்ரீ தேவராஜப் பெருமானுடைய கிருபையினலே அவர் தோற்றதினல் அவருக்குத் தேவராஜ முனி யென்று பெயரிட்டார்; பின்னர் ஸ்ரீ ராமாநுஜர் அவ

னை ஸ்ரீ ரங்கநாதப் பெருமானுடைய மூலஸ்தானத்துக்கு இட்டுக்கொண்டு போக, அங்கே தேவராஜமுனி எம்பெருமானை மனதாற் பூசித்தார்.

பின்னர் அவர் தமது மடத்துக்கு தேவராஜமுனியை இட்டுச்சென்று, வரதராஜப் பெருமானுடைய விக்கிரகத்தை அவருக்குக் காண்பித்து, புன்னகை புரிந்துகொண்டே "என் பக்கத்துக்குத் தங்களைக் கொண்டுவந்தவர் அதோவிருக்கிறார்" என்று கூறினர். தேவராஜமுனி தமக்குத் திருநாமமளித்த திவ்ய மூர்த்தியின் பாதங்களிலே விழுந்து, பன்முறையும் பணிந்து, தம்மீது காட்டிய கிருபைக்காக மேன்மேலும் நன்றி செலுத்தினர்.

ஸ்ரீ ராமாநுஜர் எஜ்ஞமூர்த்தியைத் தமது சிஷ்யராகக் கருதவேயில்லை; தமது நண்பராகவே கருதி அவ்வாறே நடத்தி வந்தார்; இன்னும் அவருக்கு சௌகர்யமாக வாசஸ்தலங்களும் ஏற்படுத்திக்கொடுத்துப் பலவிதத்திலும் உதவி புரிந்தார். எஜ்ஞமூர்த்தி விசிஷ்டாத்வைத மதக்கொள்கைகளெல்லாவற்றையும் நன்றாய்த் தெரிந்துகொண்டு, முதன்மை பெற்றது மன்றியில், ஸ்ரீ ராமாநுஜருக்குப் பிரதான மந்திரி போன்றும் ஆனர். ஸ்ரீ ராமாநுஜருடைய கீர்த்தி உலகெங்கும் பிரகாசிக்கத் தொடங்கியது; தேசத்தின் நாலா பக்கங்களிலிருந்தும் அநேக பெரியோர்கள் இவரிடம் கற்றுக்கொண்டுபோக வந்து சேர்ந்தார்கள். இப்படி வந்தவர்களிலே முக்கியமானவர்கள் சொட்டை நம்பியின் புத்திரராகிய எஜ்ஞேசர், தோண்டனூர் நம்பியார், மருதூர் நம்பி

யார் முதலியவர்களாம். ஆனால், ஸ்ரீ ராமாநுஜர் இவர்களைத் தமக்கு சிஷ்யர்களாக்கிக் கொள்ளாமல், தேவராஜமுனியினிடத்திலே ஒப்புவித்தார். தேவராஜர் அத்தகைய பொறுப்பு வகிக்கப் பயந்து, "நான் இப் பெரும் பொறுப் பேற்றுக்கொள்வதற்கு யோக்கியதை யுடையவனல்லன்; ஆனால், ஸ்ரீ ராமாநுஜர் ஆக்ஞை செய்வதினாலே ஏற்றுக் கொள்கின்றேன். நீங்கள் அவரிடத்திலே சரண் புகுந்து கொள்ளுங்கள்; 'அவரே மோக்ஷத்துக்கு வழி காட்டுபவர்' என்று பரிபூர்ணமாக நம்புங்கள்" என்றார்.

ஒருநாள் ஸ்ரீ ராமாநுஜர் திவ்யப் பிரபந்தத்திலே திருவாய்மொழியில் "ஒழிவில் காலமெல்லாம்" என்ற பாட்டையாரம்பித்து வியாக்கியானம் செய்துகொண்டே "சிந்து பூ மகிழுந் திருவேங்கடம்" என்ற வரியைப் பாடுகையில், "சிந்து பூ மகிழும் திருவேங்கடம்சென்று அழகிய தோட்டமொன்று உண்டாக்கி, தினந்தோறும் ஸ்ரீ வேங்கடேசப் பெருமானுக்கு ஒரு புஷ்பமாலை கொடுத்துவரச் செல்வதற்குத் தயாராக எவரேனும் உளரா?" என்று கேட்டார். அப்பொழுது அச் சபையிலே அநந்தார்யர் என்பவர் எழுந்திருந்து, ஸ்ரீ ராமாநுஜருடைய பாதங்களை ஸ்பர்சித்து "அவ் வூழியம் யான் செய்கிறேன்; கிருபை பாலிக்கவேண்டும்" என்று கூறினர்.

ஸ்ரீராமாநுஜருக்குச் சந்தோஷம் அளவு கடந்து உண்டாய்விட்டது; "நல்லது" என்று கூறி ஸ்ரீராமாநுஜர் அவருக்கு விடைகொடுத்தனுப்பினர். அநந்தார்யர் உடனே திருப்

பதி சென்று, ஒரு அழகிய புஷ்பத்தோட்டம் உண்டாக்கி அதற்கு ஸ்ரீ ராமாநுஜம் என்று பெயர் வைத்து, காஞ்சிபூர்ணர் காஞ்சிநாதரிடத்திலே எவ்வளவு அருமை வாய்க்கப் பெற்றாரோ, அவ்வளவு அருமை இவர் ஸ்ரீ வேங்கடேசப் பெருமானிடத்திலே வாய்ந்தவரானார்.

ஸ்ரீ ராமாநுஜரும் இதற்குள்ளாகத் திவ்யப் பிரபந்தம் முழுதும் படித்தாய்விட்டது; ஒருநாள் இவர் ஸ்ரீரங்கநாதப் பெருமான் சந்நிதியிலே சென்று "ஸ்வாமி! ஸ்ரீ வரதராஜப் பெருமானையும் ஸ்ரீ வேங்கடேசப் பெருமானையும் தர்சிக்க வேண்டுமென்று எனக்கு ஒரு ஆசை யுண்டாயிருக்கிறது; தயை செய்து உத்தரவு கொடுக்கவேண்டும்" என்று பிரார்த்தித்து நிற்க, எம்பெருமான் "நல்லது, போய் சீக்கிரம் வருவாய்" என்று அரை மனத்துடனே உத்தரவளித்தார்.

ஸ்ரீ ராமாநுஜர் யாத்திரை புறப்பட்டார்; புறப்படப் போகும் சமயத்திலே, ஒரு ஸ்ரீ வைஷ்ணவர் வந்து 'ஸ்வாமி! தாங்கள் போய்விட்டால், என்னுடைய கிரக பூஜைக்குத் தாங்கள் இன்றுவரையில் அளித்துவந்த படித்தரத்தை நிறுத்திவிடுவார்கள். ஆதலால், தயவுசெய்து எனக்கு என்றும்போலப் படித்தரம் அளித்துவிடும்படி உத்தரவு செய்து போங்கள்" என்றார்.

ஸ்ரீ ராமாநுஜர் அந்த ஸ்ரீ வைஷ்ணவரிடத்திலே தமது முத்திரை மோதிரத்தைக் கழற்றிக்கொடுத்து "இதை தநுர்தாசரிடத்திலே கொண்டுபோய்க் கொடுங்கள்! அவர் தங்களுக்கு ஒரு குறைவும் நேராமல் பார்த்துக்கொள்வார்"

என்ன, அப்படியே அந்த ஸ்ரீ வைஷ்ணவர் ஸ்ரீ ராமாநுஜருடைய முத்திரை மோதிரத்தைக் கொண்டுபோய்த் தநுர்தாசரிடம் கொடுக்க, அவர் "சங்கதி யென்ன?" என்று கேட்டார். ஸ்ரீ வைஷ்ணவர், சங்கதியைச் சவிஸ்தாரமாகத் தெரியப்படுத்தவே, தநுர்தாசர் "எனது குருமூர்த்தியினிடமிருந்து அத்தனை நாட்கள் என்னால் பிரிந்திருக்க முடியுமா?" என்று சொன்னதுதான், மூர்ச்சை போய்விட்டார். இச் சமாச்சாரத்தை அந்த ஸ்ரீ வைஷ்ணவர் ஓடோடி வந்து ஸ்ரீ ராமாநுஜருக்கு உரைக்க, அவர் "போம், ஐயா! போம்; தைர்யத்துடனே "திண்பூம் சுடர்நுதி" என்ற திருவிருத்தப் பாடலைச் சொல்லக்கூடாதா? போனது போகட்டும். இப்போதாவது போய்ச் சொல்லும், பார்ப்போம்" என்றார். அப்படியே ஸ்ரீவைஷ்ணவர் சென்று அப்பாடலை யுரைக்க, "ஆ! ஆ! என்ன ஆச்சர்யம்! தநுர்தாசர் தெளிவை யடைந்தார்; அப்பாடலிலே யுரைக்கப்பட்ட கருத்தை யுணர்ந்து தெளிந்தார்.

பின்னர் ஸ்ரீ ராமாநுஜர் காஞ்சிபுரத்துக்கு யாத்திரையானார்; வழியிலே திருவெள்ளறை, திருக்கோவிலூர் என்ற க்ஷேத்திரங்களைத் தர்சித்துவிட்டு, மறுபடியும் புறப்பட்டுப் போகும்பொழுது, வழியிலே தமது சிஷ்யர்களுள் ஒருவராகிய எக்ஞேசருக்கு, தமக்கும் தமது பரிவாரங்கட்கும் தகுந்த சௌகர்யங்கள் செய்துகொடுக்கும்படி சொல்லியனுப்பினார். எக்ஞேசன் ஒரு கோடீஸ்வரன்; அவனுக்கு இச் சமாச்சாரத்தைக் கேட்க அதிக சந்தோஷமாயிருந்தது; உடனே அவன் தனது குருமூர்த்தியை மிகுந்த மரி

யாதைகளுடனே வரவேற்கவேண்டுமென்று பிரமாதமான ஏற்பாடுகள் செய்யலானான்; ஆனால், 'குருமூர்த்தி சொல்லி யனுப்பிய ஆள் சாப்பிட்டானா?' என்று கூடக்கேட்க மறந்துவிட்டான். வந்த ஆளோ வெகு நேரம் காத்திருந்து பார்த்தான்; நடந்துவந்ததினால் கால்கள் ஒரு பக்கம் நோவெடுத்தன; பசியொரு பக்கம் வயிற்றைக் கிள்ளிற்று. அவன் மிகுந்த கஷ்டத்துடனே ஸ்ரீ ராமாநுஜரிடம் திரும்பிச் சென்று, தான் கஷ்டப்பட்டு வந்ததைச் சொன்னான்; ஸ்ரீ ராமாநுஜர் ஒன்றும் சொல்லவில்லை; அவன் சொன்னதை மனத்திலொரு பக்கத்தில் பதித்துக்கொண்டார்.

மறுநாள் அவர்கள் அந்த இடத்திலிருந்து புறப்பட்டு கொஞ்சதூரம் போகையில், அங்கே இரண்டு மூன்று பாதைகள் பிரிந்தன; அருகே சில இடைப்பையன்கள் மாடு மேய்த்துக்கொண்டிருந்தார்கள். ஸ்ரீ ராமாநுஜரும் மற்றவர்களும் அப் பையன்களைப் பார்த்து "இப் பாதைகள் எங்கெங்குச் செல்கின்றன?" என்று கேட்டார்கள்.

அதற்கு அப் பையன்கள் ஒரு பாதையைச் சுட்டிக் காட்டி "இது எக்ஞேசருடைய பிரமாண்டமான மாளிகைக்குச் செல்கின்றது; இங்குதான் உலகத்துப் பெரியோர்கள் வருவது வழக்கம்" என்று சொல்லிவிட்டு, இன்னொரு பாதையைச் சுட்டிக்காட்டி "இது வரதார்யர் என்னும் பக்தர் ஒருவருடைய குடிசைக்கு இட்டுச் செல்கிறது; இங்கு பக்தர்களும் பரிசுத்த புருஷர்களும் போவது வழக்கம்" என்றார்.

ஸ்ரீ ராமாநுஜர் "நல்லது, நாம் பெரியோர்களுமல்லர் தனவந்தர்களுமல்லர்; நாம் பிக்ஷுக்கள்; ஆகையால், வரதார்யரிடமே போவோம்" என்ருர்.

அப்பொழுது வரதார்யர் வீட்டிலேயில்லை; வெளியே பிக்ஷையெடுக்கச் சென்றிருந்தார்; அவருடைய மனைவி வீட்டைப் பார்த்துக்கொண்டிருந்தாள். ஸ்ரீ ராமாநுஜரும் அவருடைய சிஷ்யர்களும் வீட்டினருகில் வந்து கதவைத் தட்டினுர்கள். வாசலிலே இன்னுர்தான் வந்திருக்கிருர்களென்று வரதார்யருடைய மனைவியாகிய ஸ்ரீலக்ஷ்மியம்மாளுக்குத் தெரிந்துவிட்டது; ஆனுல், அவள் நாலுபேருக்கு நடுவே வரும்படியாக உடுத்துவதற்கு வஸ்திரமில்லை; இதனுல்தான் வாசல் கதவைச் சாத்திவிட்டு அவள் உள்ளேயுட்கார்ந்திருந்தாள். இப்பொழுது இன்னது செய்வதென்று அவ்வம்மையாருக்குத் தெரியவில்லை. அங்கங்களை மறையாது அலங்கோலமாகக் கந்தை யுடுத்து, 'ஆசார்யரின் முன்னே போகலாகாது; ஆனுல், போகாமற்போனுல், போய்க் கதவைத் திறவாமற் போனுல், ஆசார்யர் 'வீட்டினுள்ளே எவருமில்லையாக்கும்' என்று திரும்பிப் போனுலும் போய்விடுவார்; என்ன செய்வது?' கடைசியாக ஒரு யுக்தி செய்தாள்; உள்ளேயிருந்த பிரகாரம கையைத் தட்டினுள்; இந்தச் சைகையை ஆசார்யர் அறிந்துகொண்டார். ஸ்ரீ ராமாநுஜர் தமது மேல் அங்கவஸ்திரத்தை உள்ளே வீசி யெறிய, அவள் அதை யுடுத்துக்கொண்டு, வந்து வாசற் கதவைத் திறந்து, ஸ்ரீ ராமாநுஜரையும் மற்றவர்களையும் உபசரித்தாள்.

ஸ்ரீ வரதார்யர் இன்னும் திரும்பி வரவில்லை; அதிதிகள், அதிலும் மஹாத்மாக்கள் வீட்டுக்கு வந்திருக்கின்றார்கள்; அவர்களுக்கு உணவு முதலியன அளித்து உபசரிக்க வேண்டும். வரதார்யர் எப்பொழுது வருவாரோ? என்னவோ? தெரியவில்லை. தவிர, அவர் வந்தால்தான் என்ன? இவளுக்குத் தெரியாமல் அவரிடத்திலே ஒரு தம்பிடி ஏது? ஆகையால், அவர் வரும்வரையில் காத்திருந்தாலும் யாது பயன்? எப்படியாவது, வந்த மஹான்களுக்கு ஒரு வேளையுணவாவது அளித்து அனுப்பவேண்டும்.

லக்ஷ்மியம்மாள் பார்த்தாள்; இதற்குச் சீக்கிரத்திலே வழி யொன்றும் புலப்படவில்லை. ஒரு யோசனை தோன்றிற்று. அது இக்காலத்து நவீன ஜடநாகரிகத்திலே அழுந்திக்கிடப்பவர்க்கு விநோதமாகவும், ஒருவேளை பரிகாசமாகவுங்கூட இருக்கும். ஆனல், உண்மையில் ஆய்ந்து பார்க்குமிடத்து, அது இந்நாகரிகப் பித்தர்களுடைய பேய்ச் செய்கைகளைப் பார்க்கிலும் எத்தனையோ மடங்கு சிரேஷ்டமானதென்றே சொல்லலாம்.

லக்ஷ்மியம்மாள் பின் வருமாறு தானே யோசனை செய்யலானள்:— "வந்திருப்பவரோ எனது குருமூர்த்தி; எனது உடல், பொருள், ஆவி மூன்றுக்கும் உடையவர்; எனக்கு உயிரும் ஒளியும் அளித்த உத்தம புருஷர். எனது பெற்றோர் எனக்கு இந்த ஜடசரீரத்தையே அளித்தார்கள். இவரோ எனக்குள் ஆநந்தத்தையும் அமிருதத் தன்மையும் புகுத்தியிருக்கின்றார். ஆகலின், இவர்

எனது பெற்றோரினும் எத்தனையோ மடங்கு மேம்பட்டவராதல் வேண்டும்! இவரே எனது பிரபு, எனது ஈசன், எனது புண்ணிய பாப தர்மம். அவருக்கு நான் கடமைப் பட்டிருப்பதற்கு ஒரு அளவு முண்டோ! எதைத் தியாகம் செய்தாவது அவருக்கு நான் பணிவிடை செய்யக் கடமைப்பட்டவளல்லவோ? ஸ்ரீபரகாலர் என்னும் மஹாபக்தர் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு அன்ன மிடும்பொருட்டு வழிப் போக்கர்களைக் கொள்ளையடித்துப் பொருள் பறிக்கவில்லையா? ஆகையால், அக் குற்றம் செய்தா லென்ன? இவர்கள் திருப்தி யடைந்தால், அக் குற்றம் அக்கணமே யடிபட்டு விடாதோ? இவருக்காகச் சமர்ப்பிக்காம லிருக்கும்படி என்னிடத்தில் ஏதேனும் இருக்கலாமோ? உடல், பொருள், ஆவி மூன்றும் இவருடையதுதானே; ஆகையால், அவருக்காக அவை உபயோகிக்கப்பட வேண்டியவையே. நல்லது, இப்பொழுது ஞாபகம் வருகின்றது. இந்த ஊரிலே மகா ஐஸ்வர்யவந்தனுகிய ஒரு வைசியன் இருக்கின்றானே; அவன் என்னைப் பார்க்கும்பொழு தெல்லாம் என்மேல் இச்சை கொண்டவன்போலத் தனது காமக் கண்ணைச் செலுத்துகின்றான். பாபம்! எலும்பும் மலமும் கூடிய இந் நாற்றச் சரீரத்தினிடத்திலே அவன் மயங்கியிருக்கின்றான். சரி! சரி! இப்பொழுது நான் உடனே அவனிடம் சென்று, இச் சரீரத்தை அவனுக்கு ஒப்புவிப்பதாக ஒத்துக்கொண்டு, எனது குருமூர்த்தியையும் அவரது சிஷ்யவர்க்கங்களையும் தகுந்தபடி உபசரிப்பதற்கு வேண்டிய சாமக்கிரிகைகளனைத்தையும் வாங்கிக்கொண்டு வருவேன். ஈசா! நீயே

சரணம். உன்னிடத்தில் சரணாகதி யடைந்தவர்க்குப் பய மேது?''

லக்ஷ்மியம்மாள் இவ்வாறு யோசனை செய்து, ஆசார்ய ரையும் மற்றவர்களையும் பார்த்து, ''ஸ்வாமிகாள்! சீக்கி ரம் ஸ்நாந மாகட்டும்; இதோ வருகின்றேன்'' என்று சொல்லி, அங்கிருந்து புறப்பட்டுத் தனவந்தனாகிய அந்த வைசியனுடைய வீட்டுக்கு நேரே சென்றாள். அந்த வைசி யன் இவளைப் பார்த்தவுடனே திடுக்கிட்டுவிட்டான். அவ னுக்கு இவளிடத்தில் ஆசை யுண்டு என்பது என்னவோ உண்மைதான். ஆனால், அவன் இதுவரை வாய் திறந்து ஒரு வார்த்தை இதைப்பற்றி எவரிடமும் சொன்னதில்லை; இவளிடமும் சொன்னதில்லை; ஆனால், இவளை எப்பொழு தாவது பார்க்கும்படி நேரிட்டால், இவ்விச்சையைத் தனது கண்களின் மூலமாகக் காட்டி யிருக்கின்றான். இப்பொ ழுது அவன் இச்சைப்பட்ட இந்த ஸ்திரீ தானாகவே தன் னிடம் வந்ததைப் பார்த்தவுடனே அவன் திடுக்கிட்டு எழு ந்து ''நல்லது! நீ எங்கு வந்தாய்?'' என்று கேட்டான்.

லக்ஷ்மி ''நான் உன்னிடம்தான் வந்தேன். நீ என் மேல் இச்சை கொண்டு, என்னைக் கண்டபொழுதெல்லாம், நினது கண்களின்மூலமாக என்னையழைத்தாயே. ஆதலால், உனது விருப்பத்தைப் பூர்த்தி செய்ய வந்தேன். ஆனால், எனக்கு ஒரு விருப்பம் உளது; அதை நீ நிறைவேற்றிக் கொடுப்பாயாயின், இச் சரீரம் உன்னுடையதே'' என்றாள்.

அந்த வைசியன் இவ் வார்த்தைகளைக் கேட்டு அடங்காத ஆநந்தங் கொண்டு, "அப்படியா? அப்படியா? என்னால் நிறைவேற்றப்படும்படியாக உனக்கு ஒரு விருப்பமுமுளதா? அது எதுவா யிருப்பினும் நான் நிறைவேற்றிக் கொடுப்பேன்; எனது ஐஸ்வர்ய மெல்லாம் உன்னுடையதே," என்று கூறினன். அவன் இச் சம்பவத்தை எதிர்பார்க்கவே யில்லை; அவ்வளவு திடீரென்று நடந்தது; அவ்வளவுதான். தன்னுடைய குடிசைக்கு அநேக அடியார்கள் வந்திருக்கிறார்க ளென்றும், அவர்களுக்கு உணவு அளிப்பதற்குப் போதுமான பொருள்கள் யாவும் வேண்டு மென்றும், கொடுத்தால், போய் அவர்களுக்கு உணவளித்து விட்டுத் திரும்பி அவனிடம் வருவதாகவும் லக்ஷ்மி கூறினள். பணப் பேயாகிய அம் மூடன் சம்மதித்தான்.

அநேக வேலைக்காரர்கள் சமையலுக்கு வேண்டிய சாமான்களை ஏராளமாகவும், தாராளமாகவும், மூட்டை மூட்டையாக லக்ஷ்மியினுடைய குடிசைக்குக் கொண்டு சென்றார்கள்; இப்பொழுது வந்து நிரம்பிய பொருள்கள் ஸ்ரீ ராமாநுஜருக்கும் அவருடைய சிஷ்ய வர்க்கங்கட்கும் ஒரு வருஷத்துச் சாப்பாட்டுக்குப் போதும்.

சமைய லாரம்பமாயிற்று; வெகு சீக்கிரத்திலே முடிந்தது; குருமூர்த்திக்கும் மற்றும் வந்திருந்த பக்தகோடிகளுக்கும் லக்ஷ்மியம்மாள் பரிமாறினள். அவர்கள் 'அமிர்தம் அமிர்தம்' என்று ஆநந்தத்துடனே போஜனம் செய்து விட்டு, அங்கு ஒரு விருக்ஷத்தி னடியிலே யுட்கார்ந்து

கொண்டு தமது சிஷ்யர்களுடன் ஸ்ரீ ராமாநுஜர் வேதாந்த சம்பாஷணை செய்தார்.

இதற்குள்ளாக வரதார்யர் வந்து சேர்ந்தார்; பார்த்தார் ஸ்ரீ ராமாநுஜரையும் மற்ற சிஷ்யர்களையும்; ஆநந்தம் மிகுந்து ஆடினர் பாடினர்; அவர்களுடைய பாதார விந்தங்களி லெல்லாம் விழுந்து விழுந்து எழுந்தார்; சுற்றிப் பார்த்தார்; இவர்களுக்குச் சம்பிரமமான போஜனம் அளிக்கப்பட் டிருக்கின்றது. என்ன ஆச்சரியம்! லக்ஷ்மியினிடத்தில் ஒரு தம்பிடிகூட யில்லையே. உடுத்தத் துணிகூட யில்லையே. அப்படி யிருந்தும், இவ்வளவு சம்பிரமான போஜனம், பச்சிடி, கிச்சிடி பதார்த்த வகைகளுடனே, பாயச பரமாந்நங்களுடனே, எப்படிப் போஜன மளித்தாள்? ஓடினர் மனைவியிடம்; "அடியே! எனக்குகந்த உத்தமி! நமது குருமூர்த்திக்கு நீ இவ் விருந்து எப்படிச் செய்தாய்? நீ என்ன செய்தாய்? பதிசொற் கடவாத பத்தினியாயிற்றே; ஆதலினால் கற்பக விருக்ஷம், காமதேனு முதலியன நினது ஏவலுக் கடங்கி யிருக்கின்றனவோ?" என்று கேட்க, அவள் "நாதா! தங்களுடைய மனமும் என்னுடைய மனமும் என்றும் இரண்டுபட்டதன்றே; ஆதலால், குருமூர்த்தியினுடைய பாதாரவிந்தங்களைத் தியானித்துத் தங்களை மனத்திலே ஸ்மரித்துக்கொண்டு, நான் ஒரு கார்யம் செய்தேன். இவ் வூரிலே நெடுநாட்களாக என்மீது தனது காமக் கண்ணைச் செலுத்தி வந்த ஒரு வைசியன் உண்டு; அவன் கோடீப்வரன்; இன்று, இப்

பொழுது, இம் மஹாத்மா இவ்விடம் வந்து சேரவே, இன்னது செய்வ தென்று தெரியாது சிறிது நேரம் திகைத்தேன். பின்னர் இச் 'சரீரத்தை அந்த வைசிய னிடத்திலே அடமானம் வைத்து, வேண்டியதைப் பெற்று வருவது' என்று நிச்சயித்து அவனிடம் சென்று வேண்டியதைப் பெற்று வந்தேன்,'' என்று சொன்னாள். அவருக்கு ஆநந்தம் அளவு கடந்துவிட்டது. எதிர்பாராமல், குருமூர்த்தி தமது சிஷ்யர்களுடனே தன்னுடைய குடிசைக்கு வந்ததற்குச் சந்தோஷப்படுவதா? தான் வர வேண்டுமென்று காத்திராமல் அவர்களுக்குப் போஜனம் அளித்து, சிரம சாந்தி செய்துகொள்ளும்படி செய்த தற்கு ஆநந்திப்பதா? அல்லது, தமது மனைவி இப் பொருள்களைப் பெறுவதற்கு செய்த சரீரத் தியாகத்தைப்பற்றி சந்தோஷிப்பதா! "ஆ! ஆ! உன்னை மனைவியாக அடையப்பெற்ற என்னுடைய பாக்கியமே பாக்கியம்! எனது கௌரவத்தை, எனது பெயரை, எனது கண்ணியத்தை நீ காப்பாற்றினாய்; நான் எனது குருமூர்த்திக்குச் செலுத்த வேண்டிய கடமையை எல்லோரும் ஆச்சர்யப் படும்படி நீ செலுத்தினாய்; எனது மனம் இத்தகைய தென்று முன்னரே அறிந்து நீ, நான் கருதும் முன்னமே செய்துவிட்டாய். உன்னை மனைவியாகப் படைத்த எனக்கு என்ன குறையுள்ளது? ஹிருதய ரக்ஷகன் உன்னை ரக்ஷிப்பானாக! உனக்கு ஒருக்காலும் தீமை அணுகாது; இவ் வுலகெல்லாம் எனக்களித்தாலும், உனக்கு நிகராமோ? உலகப் பார்வையிலே நான் உனக்குப் புருஷனாயி

னும் நீ எனக்கு மனைவியாயினும், எனது ஹிருதயத்திலே நான் உன்னை குருவாகக் கொண்டிருக்கின்றேன்; நான் உன்னை வணங்குகின்றேன். நல்லது, எம்பெருமானிடத்திலே எனது ஈடேற்றத்தை வேண்டிப் பிரார்த்திப்பாய்'' என்று வரதார்யர் தமது மனைவி லக்ஷ்மியை நோக்கிச் சொல்லிவிட்டு, குருமூர்த்தியினுடைய ஆக்ஞைகளை யெதிர்பார்த்து அங்குச் சென்றார்.

ஸ்ரீ ராமாநுஜர் அவ்விருவரையும் தமது பாத தீர்த்தத்தை யெடுத்துக்கொள்ளும்படிக்கும், உச்சிஷ்டத்தைப் புசிக்கும்படிக்கும் ஆக்ஞாபித்தார்; குருவினுடைய கிருபை அவர்கள்மீது பரிபூர்ணமாக இருந்ததென்பதற்கு வேறு என்ன பிரமாணம் வேண்டும்? அவர்கள் அதிக சந்தோஷத்துடனே அவற்றை ஏற்றுக்கொண்டார்கள். ஸ்ரீ ராமாநுஜர் பின்னர் லக்ஷ்மியை நோக்கி, "நீ இன்று செய்துள்ள வேலை எனக்குத் தெரியும்? அக் குற்றம் எத்தகையதென்றும், அதற்குத் தண்டனை யின்னதென்றும் உனக்கு தெரியுமா?'' என்று கேட்டார். லக்ஷ்மி: தெரியும். "நரக தண்டனைதானே'' என்றாள்.

ஸ்ரீ ராமாநுஜர்:— "தெரியாது செய்த குற்றத்துக்குத் தான் மன்னிப்பு உண்டு; தெரிந்து செய்த குற்றத்துக்கு மன்னிப்புக் கிடையாதென்பது உனக்கு தெரியுமா?''

லக்ஷ்மி:— "தெரியும். தெரிந்து செய்த குற்றங்களிற் சிலவற்றிக்குப் பிராயச்சித்தமும் கிடையாது என்பது தெரியும்.''

ஸ்ரீ ராமாநுஜர்:— "இவ்வளவு நன்றாக அறிந்திருந்தும் நீ இப்படிச் செய்யலாமா?"

லக்ஷ்மி:— "நான் செய்த குற்றம் இத்தகையதென்றும், அதற்குத் தண்டனை யின்னதென்றும் எனக்கு மாத்திரமன்று, தங்களுக்கும் தெரியும். நான் குற்றம் செய்த பொழுதும் தங்களுக்கும் தெரியும். தங்களுடைய மனத்திலே அது குற்றமாகப் பட்டிருந்தால், தாங்கள் உடனே அதை தடுத்திருப்பீர்கள். ஆகையால், அது குற்றமன்று; இன்னும் தங்களுடைய பரிபூர்ண கிருபை எம்மீது உள்ளவரையில், எக் குற்றம் என்னைப் பற்றும்? தங்களைச் சரணகதி யடைந்துவிட்டுத்தானே நான் இப்படி யெல்லாம் செய்கிறேன். தங்களுடைய பாதாரவிந்தங்களின் நிழலில் ஒதுங்கியவர்களைப் பாபம் பீடிக்குமோ?"

இவ் வுத்தாரத்தைக் கேட்டு ஸ்ரீ ராமாநுஜர் திடுக்கிட்டு விட்டார்; வரதார்யரை நிமிர்ந்து பார்த்தார்.

வரதார்யர்:— "ஸ்வாமி! ஏன் என்னைப் பார்க்கவேண்டும்? நான் ஏதாவது மாறாகச் சொல்வேனென்றோ? எனது மனத்துக்கு மாறான செய்கைகளை லக்ஷ்மி ஒரு நாளும் செய்யமாட்டாளென்பது திண்ணம்."

ஸ்ரீ ராமாநுஜர்:— "ஆ! ஆ! இதுவன்றோ இல்லறம்! இப்படியன்றோ மனைவியும் புருஷனும் ஒருவருக்கொருவர் வாய்த்துக் கொள்ளவேண்டும். இவர்கள் நமக்குச் சிஷ்யர்களாகும்படி நாம் செய்த பாக்கியமே பாக்கியம்!"

என்று மகிழ்ந்து, லக்ஷ்மியை நோக்கி, "அம்மா! நீ அந்த வைசியனிடம் செய்து வந்த வாக்குத்தத்தத்தைத் நிறைவேற்றப் போகவேண்டாமா?" என்றார்.

லக்ஷ்மி:— "ஸ்வாமி! ஆம், போகவேண்டும்."

ஸ்ரீ ராமாநுஜர்:— "நல்லது, நீ போகும்பொழுது இந்தத் தீர்த்தத்தையும், இந்த சேஷப் பிரசாதத்தையும் அவனுக்கும் கொஞ்சம் கொண்டுபோய்க் கொடு. அவனுடைய சமயோசித உதவியின லல்லவா எங்களுடைய க்ஷுத்பாதை நிவிருத்தியாயிற்று."

லக்ஷ்மி:—"உத்தரவு" என்று சொல்லிவிட்டுத் தீர்த்தப் பிரசாதத்தையும் உச்சிஷ்டான்னத்தையும் கொஞ்சம் எடுத்துக்கொண்டு, அந்தத் தனவந்தனுடைய வீடு நோக்கிச் சென்றாள். அப்பொழுது அவன், "நேரமாய்விட்டது; இதோ ஒரு நொடியில் வருகிறேன் என்று சொல்லிப்போனாளே. இன்னும் வரவில்லையே; ஒரு வேளை என்னை ஏமாற்றிவிட்டாளோ? அப்படிச் செய்யமாட்டாளே. அவ்வளவு தைர்யம் அவளுக்கு எப்படி யுண்டாகும்? அவளுடைய புருஷன்தான் இரவும் பகலும் எங்கெங்கும் சென்று பிச்சை யெடுத்து வருகின்றானே. ஆ! ஆ! அவள் அன்று என்னை வந்து கேட்டது இன்று இப்பொழுது அவள் கேட்பது போ லிருக்கின்றதே; அவளுடைய முகம்தான் என்னே? சந்திர மண்டலமோ? ரதியே மன்மதனைக் காணாது தேடித் திரிகையில், தெரியாது இங்கு நுழைந்து என்னைக் கண்டு பேசினளோ? இன்னும் காணவில்லையே; எப்பொழுது வரு

வாளோ?" என்று ஏங்கியவனாய் மேல் மெத்தையிலிருந்த வாறே ஜன்னலின் வழியாக அடிக்கடி எட்டி யெட்டிப் பார்த்துக்கொண் டிருந்தான்.

லக்ஷ்மி தனது கையில் ஏதோ எடுத்துக்கொண்டு, தனது முந்தாணையினால் மறைத்துக்கொண்டு வருவதை இந்தக் காமி கண்டு, "இதோ வந்துவிட்டாள் என்னைக் காக்க வந்த தெய்வம்; என்னுடைய ஜன்மம் இன்றுதான் சபல மாயிற்று; என் பேரில் அவளுக்கு உண்மையில் காதல் தான்போலத் தோன்றுகிறது. இல்லாவிட்டால் முகம் வாடி யிராதோ? அவள் முகத்திலே சிரிப்புப் பிரகாசிக்கின்றது; ஆநந்தம் பொங்குகிறது. இன்னும் என்பேரி லுள்ள ஆசை யினாலே எனக்கு இன்பங் கொடுக்க ஏதோ திண்பண்டங்க ளும் கொண்டுவருகிறாள்போ லிருக்கின்றது" என்று சிந்தி த்தவனாய், மெத்தையிலிருந்து கீழே யிறங்கி, தெருவாசற் படியைத் திறந்து வைத்து, அங்குக் காத்துக்கொண்டிருந் தான். லக்ஷ்மி உள்ளே வந்தாள்; "ஏன் இவ்வளவு நேரம்? காமாக்கினி என்னைக் கொளுத்துகிறதே; ஆ! என் கண் ணே! மணியே! கண்மணியே! காமக்கிழத்தியே" என்று கண்டவாறெல்லாம் பிதற்றிக்கொண்டு, அவளை மேல் மெத்தைக்குப் போகும்படி மெத்தைக்குவழி காட்டிவிட்டு, வாசற் கதவைச் சாத்தித் தாளிட்டான்.

லக்ஷ்மி மெத்தை மேலே சென்றாள்; இவனும் பின் தொடர்ந்து சென்றான். அங்கு ஒரு அழகிய கட்டி லின்மீது பஞ்சணை மெத்தையின் மீது அவன் உட்கார்ந்து

கொண்டு, தூர ஒதுங்கி நின்ற லக்ஷ்மியை நோக்கி "வாடி! அருகில் வாடி! இங்கு வந்து உட்கார்! ஒரு முத்தம் கொடு!" என்று பலவாறு கூறி அவளை யழைக்க, அவள் "சரிதான், நான்தான் வந்திருக்கிறேனே; ஏன் அவ்வளவு அவசரம்? முதலில் நான் கொண்டுவந்துள்ள இவ்விரண்டையும் தாங்கள் அருந்தவேண்டும்' என்று சொல்லி, தீர்த்தத்தையும் அந்நத்தையும் எடுத்து அவன் முன்னே வைத்தாள். அவன் "என்ன இது? நீ மிட்டாய் பலகார வர்க்கங்கள் செய்துகொண்டு வருகின்றாய் என்றல்லவோ நினைத்தேன்; நீ, வெறும் அன்னமும் தண்ணீரும் கொண்டு வந்தாயே" என்றான். லக்ஷ்மி: "ஆம், நான் கொண்டுவந்ததை யுட்கொண்டால்தான் உனது இஷ்டப்படி நடப்பேன்" என, அவன் "எனக்கு மருந்து வைத்து உனக்கு நான் என்றும் அடிமையா யிருக்கும்படி மயக்கிவிடக் கருதிவிட்டாயோ? ஆயினும்தான் என்ன?" என்று அந்த அன்னத்தை யுண்டு, தீர்த்தத்தைக் குடித்தான். உடனே அவனுடைய சரீரம் புளகித்தது; ரோமம் சிலிர்த்தது; மூளை மிரண்டது; "என்ன செய்துவிட்டாயடி?" என்றான். இதுதான் அவனுடைய கடைசிக் காதல் வார்த்தை.

அவனிடத்தில் ஐந்து நிமிஷங்கட்குள் ஒரு பெரிய மாறுதல் உண்டாய்விட்டது; ஐந்து நிமிஷங்கட்குள்ளே அவன் தெளிவடைந்தான். அவனுடைய முகத்திலே சந்தோஷமும் திருப்தியும் சாந்தமும் குடிகொண்டன. அவனுடைய கண்களின் வழியாக இடைவிடாது எட்டிப்

பார்த்துக்கொண்டிருந்த காமப் பிசாசு இருந்த இடம் தெரியாமல் ஓடிப் பறந்துவிட்டது. அவன் தன் அருகே நின்று கொண்டிருந்த லக்ஷ்மியை நோக்கினன்; அவள் அப்பொழுது அவனுக்குக் காமத்தை யுண்டு பண்ணும் கட்டுக்கிழத்தியாகத் தோன்றவில்லை. சாக்ஷாத் மஹா லக்ஷ்மியே அவன் முன்னே வந்து நின்றதுபோ லிருந்தது. அவன் சாஷ்டாங்கமாக அவளுடைய அடிகளில் விழுந்தான்; "அம்மே! அம்மே! என்னை யாதரித்தருளல் வேண்டும்; எனக்கு நீயே கதி, நீயே தாய், நீயே ஈஸ்வரி; அறியாமற் செய்த குற்ற மனைத்தையும் பொறுத்து ஆதரித்தருளல் வேண்டும்," என்று இரு கால்களையும் பிடித்துக் கொண்டு அழுதான்; அலறி யலறி யழுதான்; தேம்பித் தேம்பி யழுதான்; தியங்கித் தியங்கிப் பெருமூச் செறிந்தான்.

லக்ஷ்மி அவனைப் பார்த்து "சகோதரா!, பயப்படாதே; உனது கண்ணை மூடியிருந்த இருள் பறந்துவிட்டது; நீ பிழைத்தாய்; என்னுடன் இப்பொழுது கூடவா! எங்கள் குருமூர்த்தி யிருக்கின்றார். அவருடைய பாதங்களிலே விழுந்து சரண் புகுந்துகொள்! நீ பிழைத்தாய், பிழைத்தாய்", என்று கூறி அவனை யிட்டுக்கொண்டு வந்து ஸ்ரீ ராமாநுஜருடைய சந்நிதானத்திலே விட்டாள். அந்த வைசியன் வெட்கம் ஒரு பக்கம் அவனைப் பிடுங்கித் தின்ன, மனஸ்தாபம் ஒரு பக்கம் அவனைச் சித்திரவதை செய்ய, மௌனமாய் ஸ்ரீ ராமாநுஜருடைய பாதங்களிலே விழுந்து "நான் மகா பாபி; என்னை ரக்ஷிக்கவேண்டும்; அபயம், அபயம்" என்று கதறினன்.

ஸ்ரீ ராமாநுஜர் அவனைத் தமது பக்தர்களுக்குள்ளே யொருவனாக எடுத்துக்கொண்டு, நன்மார்க்கங்களைப் போதித்து வந்தார். அவனும் தனக்கு துர்க்குணங்களெல்லாம் இதுவரையிருந்ததற்குக் காரணம் தன்னிடமிருந்த ஐச்வர்யமேயாம் என்று நினைத்து, தன்னுடைய சொத்துக்களையெல்லாம் ஸ்ரீ ராமாநுஜருடைய பாதங்களிலே சமர்ப்பித்துவிட்டான்; ஸ்ரீ ராமாநுஜர் 'வேண்டாம்' என்று கூறி எவ்வளவோ மறுத்தும், அவன் கேட்டபாடில்லை.

இங்கு இந்த விசேஷங்களெல்லாம் நடந்துகொண்டிருக்க, எக்ஞேசன் என்ற அந்தக் கோடீச்வர சிஷ்யன் 'ஸ்ரீ ராமாநுஜர் வருவார், வருவார்' என்று காத்துக்கொண்டிருந்தான்; நெடுநேரம் காத்துக்கொண்டிருந்தான்; வரவேயில்லை; வரவில்லையென்று ஸ்ரீ ராமாநுஜர் சொல்லியனுப்பவுமில்லை. மறுநாள் விடிந்தது; எக்ஞேசன் ஸ்ரீராமாநுஜரைத் தேடிப் புறப்பட்டு, கண்ணிற் கண்டவர்களையெல்லாம் விசாரணை செய்துகொண்டே வர, சிலர் "ஸ்ரீராமாநுஜர் வரதார்யருடைய குடிசையிலே தங்கியிருக்கின்றார்" என்று கூறினார்கள். அவன் வரதார்யருடைய வீட்டுக்கு வெகு வேகமாக வந்து பார்க்க, அங்கே ஸ்ரீ ராமாநுஜர் தமது சிஷ்யர்களுடனே வேதாந்த சம்பாஷணை செய்து கொண்டிருந்தார்; எக்ஞேசன் அவருடைய அடிகளிலே விழுந்து "பிரபு! 'எங்கே வழி தவறி விட்டீர்களோ?' என்று நினைத்தேன்; இதுகாறும் காத்துக்கொண்டிருந்தேன்; என்னாலான முயற்சிகளெல்லாம் எனது குருமூர்த்தி

யாகிய தங்களைச் சக்கரவர்த்திகளும் கண்டு பொறாமைப் படும்படியாக அவ்வளவு விமர்சையுடன் வரவேற்கவேண்டு மென்று நான் ஏற்பாடுகள் செய்திருந்தேன்; தாங்கள் வராததைப்பற்றி மனஸ்தாபப்பட்டுத் தேடியலைந்து திரிந்து கடைசியாக இங்கு வந்துசேர்ந்தேன். ஆயினும், பாதக மில்லை. எனது நண்பரும் மகா பக்தருமாகிய ஸ்ரீ வரதார்யர் வீட்டிலே தாங்கள் இறங்கியது மிகச் சந்தோஷந்தான். ஆனால், அவர் ஏழை யாயிற்றே; ஆகையால், அடியே னுடைய கிருகத்துக்கு எழுந்தருளுமாறு பிரார்த்திக் கின்றேன்” என்று விண்ணப்பித்துக்கொண்டான்.

ஸ்ரீ ராமாநுஜர் அவன் சொன்னதை யெல்லாம் வெகு அமைதியுடனே கேட்டுக்கொண்டிருந்துவிட்டு, அவன் மீது தமது பார்வையை ஏகாக்கிரமாகச் செலுத்தினர்; அப் பார்வையினின்றும் அம்பொன்று பாய்ந்து அவனைப் பிளந்ததுபோன் றிருந்தது; அவருள்ளே யக்ஞேசனைப் பற்றி யுண்டான விசனமும் அப் பார்வையின் மூலமாக வழிந்தோடிற்று; பின்னர் ஸ்ரீ ராமாநுஜர் அவனை நோக்கி “நீ யார்? அப்பா! உன்னை எனக்குத் தெரியாதே; தெரியாத வர்களுடைய வீட்டுக்கு நான் வர முடியுமா? நான் உன்னை முன்பின் அறியாமலிருந்தும், நீ என்னுடன் நிரம்பப் பழ கியவன்போல என்னிடம் வந்து என்னை உனது கிருகத் துக்கு அழைப்பது மெத்த ஆச்சர்யமாக இருக்கிறது; யக்ஞேசன் என்று ஒருவன் எனக்குச் சிஷ்யனாக இங்கு தான் எங்கோ யிருந்தான்; ஆனால், அவன் மிகவும் நல்ல

வன்; தாழ்மையுள்ளவன்; கர்வ மென்பதே அவனிடம் கிடையாது; 'எம்பெருமானுடைய பக்தகோடிகள் எப்பொழுது வருவார்களோ?' என்று காத்திருந்து அவர்களைத் தேடிக் கண்டுபிடித்து அவர்களுக்கு வேண்டிய பணிவிடைகள் செய்வதே அவனுடைய தொழில். அவனுக்கு எனது வரவைத் தெரிவிக்கும்பொருட்டு ஆள் அனுப்பினேன்; 'அவனைக் காணவில்லை' என்று அந்த ஆள் திரும்பி வந்துவிட்டான்; அதே பெயருடன் வேறொருவன் இருந்தானும்; மிகவும் பணக்காரனும்; கர்வம் மிகக் கொண்டவனும்; பெயருக்கு ஆசைப்பட்டுத் தர்மம் செய்பவனும்; எம்பெருமானுடைய அடியார்களை அவன் லக்ஷியமே செய்வதில்லையாம். அவன், பக்தர்களையே இவ்விதம் நடத்துவானானால், பக்தருடைய பாத தூளியாகிய நான் அவனுக்கு எம்மாத்திரம்? இந்த டாம்பிகன் நீயா யிருந்தால், 'உன்னை நான் அறியேன்' என்று சொல்கின்றேன். ஒரு மனிதன் உலகிலே சகல சற்குணங்களும் பொருந்தியவனா யிருக்கலாம்; ஆனாலும், எம்பெருமானுடைய பக்தர்களை அலக்ஷியம் செய்தானானால், ரௌரவாதி நரகம் செல்வதற்கு அவன் வேறொன்றும் செய்யவேண்டிய தில்லை; எனக்கு எம்பெருமானுடைய பக்தர்களே முதலில் பூஜைக் குரியவர்கள்; பின்னர்தான் எம்பெருமான்கூட. ஐயா! நான் அனுப்பிய ஆள் என்னுடைய சிஷ்யனும் தாழ்மைக் குணம் மிகவுள்ளவனும் ஆகிய எக்ஞேசனைக் காணாது, பெயரொற்றுமையினாலே, வேறொருவனிடத்திலே கூறி, அவனை அநாவச்யமான கவலைகட்கும் தொந்தரவுகட்கும் உட்படுத்திவிட்

டான் போனும்! அதற்காகத் தயை செய்து மன்னித்திடுக"
என்றார்.

எக்ஞேசனுடைய சரீரமெல்லாம் நடுங்கிற்று; ஒரு பெருமூச்சுவிட்டான்; "அந்தோ! நான் கெட்டேன்" என்று ஒரு கூச்சலிட்டான்; அப்படியே மூர்ச்சையாய், ஆசார்யருடைய பாதங்களிலே விழுந்துவிட்டான். ஸ்ரீ ராமாநுஜருக்கு அவன்மீது கிருபை யுண்டாய்விட்டது; அவர் அவனைத் தூக்கி யெடுத்து மார்போ டணைத்துக்கொண்டு முகத்திலே தண்ணீர் தெளித்தார்; பாத தீர்த்தத்தைப் புரோக்ஷித்தார்; அவன் மெல்ல மெல்ல விழித்துக்கொண்டான்; பிரக்ஞை வந்தது. பயத்தினாலும் வெட்கத்தினாலும் அவன் பீடிக்கப்பட்டவனாகி, மௌனமாய் குரு சந்நிதானத்திலே நின்றான். ஆசார்யர் ஸ்ரீ ராமாநுஜர் அவனை அன்பு கனிந்து பார்த்தார். நண்ப! இப்பொழுது நான் உன்னை நன்றாக உற்றுப் பார்க்குங்கால் எனது பழைய சிஷ்யன் எக்ஞேசனைப்போலவேதான் தோன்றுகின்றது; ஆனால், கொஞ்சம் மாறுதலேற்பட் டிருக்கின்றது. உன்னுடைய வெள்ளை வஸ்திரத்திலே ஆங்காங்குச் சில பொட்டுக்கள் விழுந்து, அசங்கியமா யிருக்கின்றது; அவற்றை நீ சீக்கிரம் சுத்தம் செய்துவிட்டால் நலம்" என்றார்.

எக்ஞேசன் அறிந்துகொண்டான்; அன்று முதல், குரு தனக்குச் செய்த இவ் வுபதேசம் மறந்துபோகாமலிருக்கும்பொருட்டு, அவ் வூரிலுள்ள ஸ்ரீ வைஷ்ணவர்களுடைய உடைகளை யெல்லாம் துவைத்துக் கொடுத்து

வந்தான். ஸ்ரீ ராமாநுஜர் அங்கிருந்து புறப்பட்டுத் திருப்பதி சென்று திரும்பி வரும் வழியிலே இவனுடைய கிருகத்தில் தங்கி, இவனால் இராஜோபசாரம் செய்யப்பெற்றார்.

ஸ்ரீ ராமாநுஜர் இங்கிருந்து புறப்பட்டுக் காஞ்சிமாநகரம் போய்ச் சேர்ந்து, திருக்கச்சி நம்பியாராகிய காஞ்சிபூர்ணரை யடைந்து, அவரை நமஸ்கரித்து, "ஸ்வாமி! மறுபடியும் தங்களைத் தர்சிக்கும்படியான பாக்கியம் பெற்றேன். நான் சகல விதத்திலும் தங்களுக்குக் கடமைப்பட் டிருக்கிறேன். எனது மார்க்கத்தை இறைவனடிக்குத் திருப்பியது தாங்களே யல்லவா? கடைசிவரையில் தங்களுடைய கிருபை என்னிடமிருந்து நீங்காதிருக்குமாறு வேண்டுகின்றேன்," என்று கூறினார்.

"நண்ப! நீ என்ன? என்னை முகஸ்துதி செய்கிறாயா? ஈஸ்வரனுடைய சித்தப்படியே நான் நடக்கிறேனேயொழிய எனக்கென்று ஒன்று உண்டோ? நல்லதிருக்கட்டும்; எம்பெருமான் சந்நிதானத்துக்கு வரவில்லையா?" என்று திருக்கச்சி நம்பியார் கேட்க, ஸ்ரீ ராமாநுர் "நான் வரமாட்டேன் என்று சொல்லவும் எனக்கு மனம் வருமோ? தங்களுடைய அநுமதிக்கே காத்திருக்கிறேன்" என்று கூறினார். பின்னர் இருவருமாக க்ஷேத்திரத்தி னுள்ளே நுழைந்து, மூலஸ்தானம் சென்றார்கள். ஸ்ரீ ராமாநுஜரும் அவருடைய சிஷ்யர்களும் எம்பெருமானுடைய பாதாரவிந்தங்களிலே விழுந்து எழுந்து தலை வணங்கி, இரு கைகளையும் கூப்பிக்கொண்டு, எம்பெருமானுடைய ஆக்ஞைக்கு

எதிர்பார்த்திருந்தார்கள். ஸ்ரீ வரதராஜப் பெருமான் ஸ்ரீ ராமாநுஜரை நோக்கி, "நீ நம்மை விட்டு நீங்கி அநேக நாட்களாய்விட்டன; நாம் உனது பிரிவாற்றாமையால் மிகவும் வருந்தினோம்" என்றார்.

ஸ்ரீ ராமாநுஜர்:— "அஃதெல்லாம் வெறும் பேச்சு; தேவரீர் எனது ஹிருதயத்திலே எப்பொழுதும் எழுந்தருளி யிருக்கின்றீர்கள்; தங்களை மறந்து நான் ஒரு பொழுதும் நின்றதில்லை," என்று சொல்லிவிட்டு, தம்மருகே நின்றுக்கொண்டிருந்த தேவராஜ முனியைத் திரும்பிப் பார்த்து, "நம்மிருவரையும் ஒன்று சேர்த்த மூர்த்தி யிவர் தான்; நன்றாகப் பாருங்கள்! தங்களை அந்தகாரப் பிரதேசத்திலிருந்து வெளியே கொண்டுவந்து ஞான ஒளி யளித்த மூர்த்தி யிவர்தாம். என் இறைவன் என்னை மறக்கவில்லை என்பதற்குப் பிரமாணம் நீங்களே யாகும். எம்பெருமானே! ஏழைக்குப் பிதாவே! நான் திருப்பதி செல்ல உத்தேசித்திருக்கிறேன். அநுமதி கொடுத்தருளல்வேண்டும்", என்று பிரார்த்தித்தார்.

"அப்படியே யாகட்டும். திரிகரண சுத்தியாய் என்னிடத்திலே தங்களைச் சமர்ப்பித்துவிட்ட பக்தர்களுடனேயே நான் எப்பொழுதும் இருக்கிறேன் என்பதை நன்றாக ஞாபகத்தில் வைத்துக்கொள்! என் பெயர் தாங்கி யிருக்கும் இப் புதிய சிஷ்யன் எப்படி யிருக்கிறான்?"

"ஸ்வாமி! ஸ்வாமி! அவர் என்னுடைய சிஷ்யர் அல்லர்; அவர் எனக்கு நண்பர்; எனது வலது கை; எனது தோழர்.";

"நான் அனுப்பியவரிடத்திலே நீ திருப்தி யடைந்தது பற்றி எனக்கு மிகச் சந்தோஷம்."

எம்பெருமானுடைய இவ் வார்த்தைகளைக் கேட்ட தேவராஜ முனிக்கு அழுகை பொங்கிவிட்டது; "எம்பெருமானுக்கு என்னிடத்திலே இவ்வளவு கிருபை யிருக்கின்றதா?" என்றும் கண்ணீர் ததும்பிவிட்டது. "ஆ! எனது நாதா! நீயே எனக்கு இங்கும் அங்கும் எங்கும் கதி; எனது குருவான ஸ்ரீ ராமாநுஜருக்குச் சமமாக என்னை வைத்துப் பேசலாமோ? நான் குருமூர்த்தியின் கையிலே யுள்ள ஒரு சிறு கருவி போன்றவனே இறைவனே! நான் உன்னிடத்தும் உனது பக்தர்களிடத்தும் சரண் புகுகின்றேன்" என்று கதறினர்.

பின்னர் இவர்கள் சந்நிதானம் விட்டு அகன்று வெளியே வந்து, திருக்கச்சி நம்பியா ரிடத்திலே விடை பெற்றுக்கொண்டு, திருப்பதிக்குப் புறப்பட்டார்கள்.

இவர்கள் வழியிலே அநேகம் காடு மலைகளை யெல்லாம் தாண்டவேண்டியிருந்தது; ஒரு காட்டு மார்க்கமாகச் சென்றுகொண்டிருக்கையில், வழி தவறவிட்டு இவர்கள் திகைக்க ஆரம்பித்தார்கள். அப்பொழுது அக் காட்டிலே ஒரு சிறு நந்தவனம் இவர்களுடைய கண்களுக்குத் தென்பட்டது. அங்கே ஒருவன் அந்த நந்தவனத்துச் செடிகளுக்குத் தண்ணீர் இறைத்துக்கொண்டிருந்தான்; இவர்கள் அவனிடத்திலே சென்று, "நாங்கள் வழி தவறிவிட்

டோம்; இக் காட்டினின்றும் வெளியே செல்வதற்கு வழி எது?" என்று கேட்க, அவன் கொஞ்சதூரம் கூடவே வந்து, வழி காண்பித்துவிட்டு, செலவு பெற்றுக்கொள்ளப் போகையில், ஸ்ரீ ராமாநுஜர் திடீரென்று அவனுடைய கால்களிலே விழுந்து, அவனுக்குப் பன்முறையும் வந்தனம் செலுத்தினர்; அவருடைய சிஷ்யர்கள் அனைவரும் திடுக்கிட்டார்கள்; ஆச்சர்யப்பட்டார்கள். "என்ன இது? எவனோ ஒரு சூத்திரன்; நமது குருமூர்த்தி அவனுக்குச் சாஷ்டாங்கமாக நமஸ்கரிக்கின்றாரே." ஆயினும், குரு அவனை நமஸ்கரித்தபடியால், இவர்களும் அவனுடைய பாதங்களிலே விழுந்து நமஸ்கரித்தார்கள். அவன் விடைபெற்றுச் சென்றவுடனே, ஸ்ரீ ராமாநுஜர் அவர்களை நோக்கி "நான் சூத்திரனொருவனை நமஸ்கரித்தேனென்று நீங்களெல்லோரும் ஆச்சர்யப்பட்டீர்கள்; ஆனால், 'அவ்வடிவமெடுத்து வந்தவர் அநாதைகளை ரக்ஷிப்பதாகக் கங்கணம் கட்டிக்கொண்டிருக்கும் ஆபத்பாந்தவரே' என்று நீங்கள் அறிந்திருப்பீர்களானால், நீங்கள் ஆச்சர்யப்பட்டிருக்க மாட்டீர்கள்" என்றார். அந்த சிஷ்யர்கள் அனைவரும் உண்மையை யறிந்துகொண்டு, "ஸ்வாமி! எங்களை மன்னியுங்கள்! தாங்கள் எக்கார்யம் செய்யினும் அதில் ஒரு பேருண்மை யடங்கியிருக்கும் என்பதை மறந்துவிட்டோம்" என்று கேட்டுக்கொண்டார்கள்.

அங்கிருந்து நடந்து அவர்கள் திருப்பதி போய்ச் சேர்ந்தார்கள். அங்கே ஸ்ரீ ராமாநுஜர் அடிவாரத்திலே

யுள்ள ஆழ்வார்கள் பதின்மருடையவும் க்ஷேத்திரங்களி லே சென்று, செய்யவேண்டிய முறைப்படி பூஜைகள் செய்தார்; பின்னர் அடிவாரத்திலேயே சின்னாட்கள் தங்கி யிருந்து, தமது சிஷ்யர்களுக்கு வேதாந்த பாடம் சொல் லிக்கொடுத்துக்கொண்டிருந்தார். அவ்வூரரசனாகிய விட் டலராயன் என்பவன் ஸ்ரீ ராமாநுஜருடைய மஹிமைகளை யுணர்ந்தவனாகி, விசிஷ்டாத்வைத மதத்தைக் கைக் கொண்டு, அவருடைய சிஷ்யர்களுள் ஒருவன் ஆனான். ஸ்ரீ ராமாநுஜர் அங்கே தமது சிஷ்யர்களுள் முப்பது பெயர் களை ஸ்திரமாக வசிக்கும்படி செய்தார்.

திருப்பதி மலையின் மேலேயுள்ள அநந்தார்யருக்கும் மற்றவர்களுக்கும் ஸ்ரீ ராமாநுஜர் கீழே வந்திருக்கும் சங் கதி தெரிய வந்தது; உடனே அவர்கள் ஓடோடி, மலையி லிருந்திறங்கி வந்து, ஸ்ரீ ராமாநுஜருடைய பாதங்களிலே விழுந்து நமஸ்கரித்து; "ஸ்வாமி! ஸ்ரீவேங்கடேசப்பெருமா னுடைய தர்சனம் செய்வதற்குத் தேவரீர் மேலே எழுந் தருளல் வேண்டும்" என்று பிரார்த்திக்க, ஸ்ரீ ராமாநுஜர் "இத் திருப்பதியின் மேலே செல்வது தங்கட்குத் தகாது தென, ஆழ்வார்களே கீழே யிருக்க, நான் மேலே வரு வது நியாயமோ? நான் கீழே யிருந்துகொண்டே எம் பெருமானை ஸேவித்து, ஆழ்வாதியர்களுடைய சந்நிதானத் திலே ஆநந்தமடைந்து கொள்கிறேன்," என்று சொன்னார். எம்பெருமானுடைய சயனமாகிய சேஷனே திருப்பதி யாக வந்துள்ளதினாலே அதன்மீது ஏறுதல் தாங்கள்

செய்யத்தகாத ஒரு கார்யமென்று ஆழ்வார்கள் எவரும் உயரச் செல்லவில்லை.

அநந்தார்யரும் மற்றவர்களும் எவ்வளவோ சொல்லிப்பார்த்தும் ஸ்ரீ ராமாநுஜர் கேட்காததினுல், கடைசியாக அவர்கள் "ஸ்வாமி! அப்படியானுல், நாங்களும் இனிமேல் மலைமீது ஏறுவதில்லை; இனிமேல் எவரையும் ஏற விடுவதுமில்லை" என்றுர்கள். இப்பொழுது, ஸ்ரீ ராமாநுஜர் என்செய்வார்? தமது செய்கையினுலே பிறருக்கு நன்மையுண்டாகுமானுல், லக்ஷியம் செய்யாத அச் செய்கையைச் செய்யும் குணமுடையவராயிற்றே ஸ்ரீ ராமாநுஜர்.

"சரி, அப்படியே யாகட்டும்; நான் உயர வருகிறேன்" என்று ஸ்ரீராமாநுஜர் சொல்லிவிட்டு, ஸ்நாநம் செய்து திரிகரண சுத்தியுடனே மலைமேலேற ஆரம்பித்தார். வழியிலே ஒரு ஸ்ரீ வைஷ்ணவர் ஸ்ரீ ராமாநுஜரைக் கண்டு, "ஸ்வாமி! ஸ்ரீ வேங்கடேசப் பெருமான் தங்களை வரவேற்பதற்காக என்னை யனுப்பி வைத்தார். இவ்வாகாரத்தையும் மாம்பழத்தையும் தயைசெய்து ஏற்றுக்கொள்ளுமாறு வேண்டுகின்றேன்" என்று கூறி, சிறிது ஆகாரத்தையும் ஒரு மாம்பழத்தையும் ஸ்ரீ ராமாநுஜர் முன்னே வைக்க, ஸ்ரீ ராமாநுஜர் அந்த ஸ்ரீ வைஷ்ணவரைப் பார்த்து "ஐயா! தாங்கள் யாருடைய சிஷ்யர்?" என்று கேட்டார். அவர் "அநந்தார்யருடைய சிஷ்யர்" என்றுர். ஸ்ரீ ராமாநுஜர் "அப்படியானுல் அவருக்குரிய பாடலைப் பாடும், பார்ப்போம்" என்று சொல்ல, அந்த ஸ்ரீ வைஷ்ண

வர் "நிரம்பச் சந்தோஷம்; மகாத்மா அநந்தார்யரிடத்தி லே நான் சரணாகதி யடைகின்றேன்; அவர் மகா ஞானி; அவருடைய திருஷ்டி பட்டால் போதும்; அஞ்ஞான அந்த காரம் அழிந்துவிடுகிறது; அவரே துன்புறுபவர்களுக்கு அபய ஸ்தானம்," என்று பொருள்பட்ட ஒரு பாடலைப் பாடினார். பளிச்சென்று ஒரு மின்னல் தோன்றிற்று; ஸ்ரீ ராமாநுஜர் கண்கள் கூச்சமெடுத்து மூடிக்கொண்டன. ஒரு விநாடிநேரம் தான்; ஸ்ரீ ராமாநுஜர் கண்களை விழி த்துப் பார்த்தார். ஸ்ரீ வைஷ்ணவர் மறைந்துவிட்டார். "தாசாதி தாசனாகிய எனக்கு இப்பொழுது தர்சனம் கொடுத்தவர் எம்பெருமானே" என்றார் ஸ்ரீ ராமாநுஜர்.

இவ்விதமாக ஸ்ரீ ராமாநுஜர் மலைமே லேறிக்கொண்டு போகையில், பாதி வழியில் ஸ்ரீ சைலபூர்ணர் ஸ்ரீ ராமா நுஜரை வரவேற்பதற்காகப் பூர்ணகும்பம் முதலிய க்ஷேத் திர மரியாதைகளுடனே எதிரே வந்து சேர்ந்தார். இவர் ஸ்ரீ ராமாநுஜருக்கு மாமன் முறையாக வேண்டுமே. ஸ்ரீ ராமாநுஜர் இவரைக் கண்டவுடனே பாதங்களில் விழு ந்து "ஸ்வாமி! நாயினும் எளியேனாகிய எனக்காகத் தாங்கள் இவ்வளவு கஷ்டம் எடுத்துக்கொள்ளலாமா? எவர் மூல மாகவாவது இவற்றை யனுப்பி யிருந்தால் போதுமே" என்றார்.

"ஆம்! உண்மைதான்; அப்படி பொரு வேலைக்கார னைத் தேடி மலையெல்லாம் திரிந்தேன்; ஒருவரும் கிடைக்க வில்லை; எனக்குச் சிஷ்ய னாவதற்கு இம் மலையில் எவரும்

இல்லை; நானே எல்லோருக்கும் சிஷ்யன்" என்றார் ஸ்ரீ சைலபூர்ணர்.

ஸ்ரீ சைலபூர்ணருடைய விநயத்தையும் தாழ்மையையும் ஸ்ரீ ராமாநுஜர் பார்த்து, இன்னது சொல்வதென்று தோன்றாதவராய் 'எம்பெருமானுடைய லீலையே' என்று எண்ணிக்கொண்டார். "ஸ்வாமி! தங்களுக்கு நான் ஒருவன் என்றென்றும் சிஷ்யனாகவும் பணியாளனாகவும் இருக்கிறேன்," என்று கூற, பின்னர் இருவருமாக மேலே நடந்தார்கள்; க்ஷேத்திரத்துக்குச் சமீபத்திலே செல்கையிலே கோவில் உத்தியோகஸ்தர்களும், ஜீயர்களும், ஏகாங்கிகளும், ஸ்ரீ வைஷ்ணவர்களும், மற்றவர்களும் கோவில் மரியாதைகள் சகலவற்றுடனும் ஸ்ரீ ராமாநுஜரை எதிர்கொண்டு, உபசரித்து வரவேற்று இட்டுக்கொண்டு போனார்கள். ஸ்ரீ ராமாநுஜர் க்ஷேத்திர தீர்த்தத்திலே ஸ்நாநம் செய்தார்; புண்ட்ரம் தரித்துக்கொண்டார்; திருப்பதியின் பிரதான தெருக்களினூடே சென்று வலம் வந்தார்; ஆங்காங்குள்ள க்ஷேத்திரங்களிலெல்லாம் சென்று பூசனைகள் புரிந்தார்; வழியிலே தமது சிஷ்யர் அநந்தார்யரால் தமது பெயரால் இயற்றப்பட்டுள்ள புஷ்பத் தோட்டத்தைப் பார்வையிடுதற்கு அத்தோட்டத்தினுள்ளே நுழைந்து, அநந்தார்யரை நோக்கி "நீயே உண்மையான சிஷ்யன்; நீ எனக்குத் தகுந்த கைம்மாறு செய்துவிட்டாய்" என்று சொல்லி, பின்னர் அவரையும் இட்டுக்கொண்டு, க்ஷேத்திரத்துக்குச் சென்றார்; அங்கு அர்ச்சர்கள் அவரை எம்பெருமானுடைய சந்நிதானத்துக்கு இட்டுச் சென்றார்கள்.

ஸ்ரீராமாநுஜர்ஸ்ரீவேங்கடேசப்பெருமானுடைய சந்நிதானத்திலே நின்று, ஆநந்தக் கண்ணீர் சொரிந்து, அவருடைய பாதாரவிந்தங்களைத் தொட்டுத்தொட்டுக்கண்களில் ஒத்திக்கொண்டு "ஸ்வாமி! நான் உபசாந்தியை நாடி எண்ணற்ற ஜன்மங்களிலே எவ்வளவோ பாடுபட்டேன்; இக சுகங்களையும் பரசுகங்களையும் அநுபவித்துப் பார்த்தேன்; எதிலும் எவ்விதத்திலும் எனக்கு உபசாந்தி கிடைக்கவில்லை; கடைசியாக நினது பரிசுத்த பாதாரவிந்தங்களின் நீழலிலே உபசாந்தி பெற்றேன்" என்று கூறினர். க்ஷேத்திரத்து சிரேஷ்டமான மர்யாதைகளையெல்லாம் அவருக்குச் செய்யும்படி ஸ்ரீ வேங்கடேசப்பெருமான் ஆக்ஞாபித்தார். அவர் அவற்றை விநயத்தோடு ஏற்றுக்கொண்டு, "ஸ்வாமி! நான் செல்வதற்கு விடை கொடுத்தருள்க" என்று பிரார்த்தித்தலும், எம்பெருமான் "அப்படியே ஆகுக" என்றார்.

ஸ்ரீ ராமாநுஜர் "நாம் இங்கே நெடுநேரம் இருக்கக் கூடாது; இது தேவர்கள் வசிக்கும் மலை; மஹாத்மாக்களும், பெரியோர்களும், எம்பெருமானை விட்டு என்றும் நீங்காத பக்த சிரேஷ்டர்களும் வாசம் செய்வதற்கு யோக்கியமான இம் மலையிலே நாம் அதிக நேரம் இருத்தல் கூடாது" என்று சொல்லிவிட்டு கீழே யிறங்க எத்தனம் செய்தார்.

ஸ்ரீசைலபூர்ணர் "ஸ்வாமி! அப்படியன்று; குறைந்தது மூன்று நாட்களாவது க்ஷேத்திரங்களிலே நாம் வசிக்க வேண்டுமென்று சாஸ்திரங்கள் கூறுகின்றன," என்று கூற ஸ்ரீ ராமாநுஜர் "உண்மைதான்" என்று சொல்லி அம்

மலைமேலே மூன்று நாட்கள் தங்கினர்; இம் மூன்று நாட்களும் ஸ்ரீ ராமாநுஜர் கடுமையான உபவாச மிருந்து, சதா நிஷ்டையில் எழுந்தருளி யிருந்தார். மூன்று நாட்களும் கழிந்தவுடனே, அவர் எம்பெருமான் சந்நிதானத்திலே சென்று, கை குவித்துச் சிரம் வணங்கி நிற்க, ஸ்ரீ வேங்கடேசப் பெருமான் அவரை நோக்கி, "நமது தெற்குப் பிரதேசத்து மாளிகையில் இகத்தினுடையவும் பரத்தினுடையவும் அரசை உனக்கும் உனது சிஷ்யகோடிகளுக்குமாக நாம் கொடுத்துவிடவில்லையா?" என்றார்.

ஸ்ரீ ராமாநுஜர் "ஆம், ஸ்வாமி! அவ் வுத்தரவை இங்கு இப்பொழுது இன்னொருமுறை கேட்கும்படியான பாக்கியவந்தனானேன்" என்று வெகு விநயத்துடனே மறுமொழி கூறினர்.

பின்னர் ஸ்ரீ ராமாநுஜரும் அவருடைய சிஷ்யர்களும் மலையினின்றும் கீழே யிறங்கி, ஸ்ரீ சைலபூர்ணருடைய கிருகத்திலே உபவாசபங்கம் செய்துகொண்டார்கள். ஸ்ரீ ராமாநுஜர் அங்கே ஒருவருஷ காலம் ஸ்ரீ ராமாயணத்தின் சூக்ஷ்மார்த்தங்களை யறிந்து கொள்வதிலே கழித்தார். இச் சமயத்திலேதான் ஸ்ரீ சைலபூர்ணருடைய இரண்டு புத்திரர்களும் இவரிடத்திலே சிஷ்யர்க ளானார்கள். ஸ்ரீ சைலபூர்ணர் தமது இரண்டாவது புத்திரனாகிய பிள்ளான் என்பான் ஒரு மாதிரி விசேஷ லக்ஷணம் உடையவனென்றும், ஆதலால் ஸ்ரீ ராமாநுஜர் அவன் விஷயத்தில் பிரத்தியேக கவனம் செலுத்தவேண்டுமென்றும் ஸ்ரீ ராமாநுஜரைக் கேட்டுக்கொண்டார்.

கோவிந்தருக்கு ஸ்ரீ சைலபூர்ணரிடத்திலே யுள்ள பக்தி ஸ்ரீராமாநுஜரைப் பரவசமாக்கிவிட்டது! ஸ்ரீ ராமாநுஜர் இதைப்பற்றி வியந்து கூறவே, கோவிந்தருக்கு ஸ்ரீ சைலபூர்ணரிடத்து பக்தி யின்னும் அதிகரித்தது. ஸ்ரீராமாநுஜர் இதைப் பார்த்து, எப்படியாவது கோவிந்தரைத் தமக்கென்று ஸ்ரீ ராமாநுஜரிடமிருந்து கேட்டுக் கூட்டிக்கொண்டு வந்து விடுவதென்று ஸ்ரீ ராமாநுஜர் தீர்மானித்துக் கொண்டார்.

ஸ்ரீ ராமாநுஜர் கோவிந்தருடைய ஒவ்வொரு நடத்தையையும் கவனித்துக்கொண்டே வந்தார். ஒருநாள் கோவிந்தர் ஸ்ரீ சைலபூர்ணருக்குப் படுக்கையை உதறித் தட்டிப் போட்டு, விரித்து, அதின்மேல படுத்து ஒருதரம் புரண்டு எழுந்திருந்து போய்விட்டார். ஸ்ரீ ராமாநுஜர் இதைப் பார்த்து நடுங்கிவிட்டார். 'என்ன இது! குருவினுடைய படுக்கையிலே சிஷ்யன் படுப்பதாவது?'' உடனே ஸ்ரீ சைலபூர்ணரிடம் ஸ்ரீ ராமாநுஜர் தெரிவித்தார். ஸ்ரீ சைலபூர்ணர் கோவிந்தரைக் கூட்டிக்கொண்டு வரச்சொல்லி, ''புத்திரா! நீ எனக்கென்று விரித்த படுக்கையிலே நீ படுத்துப் புரண்டு எழுந்திருந்தாயாமே; உண்மைதானா?'' என்று கேட்டார்.

''ஸ்வாமி! உண்மைதான். நான் இன்று மாத்திரம் அப்படிச் செய்யவில்லை; தினந்தோறும்தான் அப்படிச் செய்து வருகிறேன்.''

''என்ன? தினமுமா இப்படிச் செய்கின்றாய்? குருவினிடத்துக் காண்பிக்கின்ற இந்த அவமர்யாதைக்குத் தண்டனை யென்னவென்று தெரியுமா?''

"நன்றாகத் தெரியும்; அதி கடூர ரௌரவ நரகம் தானே."

"தெரிந்திருந்துமா இப்படிச் செய்து வருகின்றாய்?"

"ஸ்வாமி! ஆம்; நான் செய்தது சரியே யென்றுதான் நினைக்கின்றேன்; 'படுக்கை மெத்தென இருக்கிறதா?' என்று பார்க்கும்பொருட்டு, நான் இப்படிச் செய்கிறேன். படுக்கை மெத்தென்று இருந்து தாங்கள் சுகமாக நித்திரை செய்யும்படி என்னால் செய்யக் கூடுமானால், தங்களுடைய சுகத்தின் நிமித்தம் நான் ரௌரவ நரகம் செல்லக் கூடாதோ?"

ஆ! ஆ! கோவிந்தருடைய குருபக்தியே பக்தி! ஸ்ரீ ராமாநுஜரும் ஸ்ரீ சைல பூர்ணரும் திடுக்கிட்டுப் பிரமித்து விட்டார்கள்.

இன்னொரு நாள் ஸ்ரீ ராமாநுஜர் ஸ்ரீ சைல பூர்ணருடைய வீட்டுக் கருகாமையிலுள்ள தோட்டங்களிலே உலாவிக்கொண் டிருந்தார்; அப்பொழுது அவர் ஒரு ஆச்சர்யமான, பயங்கரமான காக்ஷியைப் பார்த்துப் பிரமிக்கும்படி நேரிட்டது; கொஞ்ச தூரத்திலே கோவிந்தர் ஒரு கிருஷ்ண சர்ப்பத்தினுடைய வாயினுள்ளே தமது கையை நுழைத்து, பின்னர் எடுத்துவிட்டு, அருகே யிருந்த நதியிலே ஸ்நாநம் செய்து, தமது வேலையைப் பார்க்கச் சென்றார். ஸ்ரீ ராமாநுஜருக்கு இது பொறுக்க முடியவில்லை. அவர் கோவிந்தரைக் கூப்பிட்டு, "சகோதர! என்ன சங்

கதி? நீ சர்ப்பத்தின் வாயினுள் கை நுழைத்த காரணம் என்ன?'' என்று கேட்டார்.

கோவிந்தர், ''ஸ்வாமி! அந்தச் சர்ப்பத்தின் வாயிலே ஒரு பெரிய முள் தைத்து, அதனால் அது மிகவும் அவஸ்தைப் பட்டுக்கொண் டிருந்தது; அது நாக்கை வெளியே நீட்டி வேதனைப்பட்டுக்கொண் டிருந்தது; பார்க்கப் பரிதாபமா யிருந்தது; நான் அந்த முள்ளைப் பிடுங்கி யெடுத்தேன்; பின்னர் அது நாக்கை யுள்ளுக் கிழுத்துக்கொண்டு, துன்ப நிவிருத்தி யடைந்து, தன் வழியே போயிற்று.'' ஸ்ரீ ராமாநுஜருக்கு உண்டான சந்தோஷத்துக்கு ஒரு அளவே யில்லை; 'அதி பயங்கரமான கிருஷ்ண சர்ப்பத்தினிடத்தில் கூட அவருக்கு அவ்வளவு தயவிருக்கிறது' என்று ஸ்ரீராமாநுஜர் அறிந்து ஆநந்தத்தின்மேல் ஆநந்தம் கொண்டு ஆடினார்.

வருஷம் முடிந்துவிட்டது; நமது ஸ்ரீ ராமாநுஜர் ஸ்ரீ சைல பூர்ணரை நோக்கி, ''ஸ்வாமி! நான் ஸ்ரீரங்கம் விட்டு வந்து நிரம்பநாட்க ளாய்விட்டன; திரும்பச் செல்வதற்கு விடை யளிக்கவேண்டும்'' என்று பிரார்த்தித்துக் கூறினார்.

ஸ்ரீ சைல பூர்ணர் மிகுந்த விசனத்துடனே ''ஸ்வாமி! தங்களுக்கு அப்படிப் பிரியமானால், நான் அதற்கு யாதொரு தடையும் கூறேன். எம்பெருமானுக்குத் தாங்கள் செய்யும் திருத்தொண்டிலிருந்து நான் தங்களை நீக்கி வைக்கமாட்டேன். தாங்கள் நெடுந் தூரம் யாத்திரை

செய்து வந்து, என்னுடனே நெடுநாட்கள் தாமதித்து, என்னை மகிழ்வித்தீர்கள். நான் என்ன கைம்மாறு செய்யப் போகிறேன்?" என்றார்.

ஸ்ரீ ராமாநுஜர்:— "ஸ்வாமி! எனக்கு ஒரு இச்சை யிருக்கிறது; அதைத் தங்களால் பூர்த்தி செய்விக்க முடியும்; ஆனால், தெரிவித்துக்கொள்ளச் சிறிது யோசனை பண்ணு கின்றேன்; தாங்கள் அந்தகாரத்திலிருந்து விடுவித்து ஆத்ம ஞானம் உணர்த்தி யுய்வித்த இந்தக் கோவிந்தரை எனக்குக் கொடுத்துவிடும்படியாகக் கேட்டுக்கொள்கின்றேன்; அவர் எனக்கு மிகுந்த உதவியாயிருப்பா ரென்று நான் நம்பு கின்றேன்" என்றார்.

ஸ்ரீ சைலபூர்ணர்:— "தாங்கள் கேட்கும்படியான ஏதோ ஒன்று என்னிட மிருப்பதுபற்றி நான் பாக்கியவந்த னே; நான் நெடுநாட்களுக்கு முன்னரேயே நானாகவே கோவிந்தரைக் கூட்டிக்கொண்டு வந்து தங்களிடம் ஒப்பு வித்திருக்கவேண்டும்; அப்படி நானே செய்யாததற்காக என்னை மன்னித்திடுக! நான் மறந்துவிட்டேன்."

இப்படி ஸ்ரீ சைலபூர்ணர் சொல்லிவிட்டு, கோவிந்த ரைக் கூட்டிவரும்படி செய்து, ஸ்ரீ ராமாநுஜரிடம் ஒப்பு வித்து, கோவிந்தரை நோக்கி, "கோவிந்தா! இன்று நான் உன்னை ஸ்ரீ ராமாநுஜருக்கு அளித்துவிட்டேன்; என்னிடத் தில் எவ்வளவு விசுவாசமா யிருந்தாயோ, அவ்வளவு விசு வாசத்துடனே நீ ஸ்ரீ ராமாநுஜரிடத்திலும் இருந்திடுக! அவருக்குஎவ்விதத்திலும் மனங் கோணுதபடி நடந்திடுக!"

என்று புத்திகூறி அனுப்பிவைத்தார். ஸ்ரீ ராமாநுஜர் ஸ்ரீ சைலபூர்ணரிடம் விடைபெற்றுக் கோவிந்தரைக் கூட்டிக்கொண்டு, காஞ்சீபுரத்திற்குப் புறப்பட்டார். வழியிலே யுள்ள க்ஷேத்திரங்களை யெல்லாம் தர்சனம் செய்துகொண்டு, காஞ்சிபுரம் வந்து சேர்ந்து, சில காலம் ஸ்ரீ காஞ்சிபூர்ணருடனே வசித்தார்.

இப்படி யிருந்துவரும் நாளிலே கோவிந்தரால் ஸ்ரீ சைலபூர்ணரை மறக்க முடியவில்லை; இரவும் பகலும் அவர் ஸ்ரீசைலபூர்ணரை நினைந்து நினைந்து வருந்தி யுருகி, நாளுக்கு நாள் சரீரம் இளைத்துவந்தார். இது ஸ்ரீ ராமாநுஜருக்குத் தெரியவந்தது. அவர் கோவிந்தரை யன்புடனே நோக்கி, "சகோதர! நீ ஸ்ரீ சைலபூர்ணரை ஒரு தரம் போய்ப் பார்த்துவிட்டுவந்தால் நலமாயிருக்கும் என்று தோன்றுகிறது" என்று கூற, 'ஸ்ரீ ராமாநுஜர் தெரிந்து கொண்டுவிட்டாரே' என்று கோவிந்தர் வெட்கமுற்று, மிகுந்த கூச்சத்துடனே "ஆம், ஸ்வாமி! ஆனால், எப்படித் தங்களை யுத்தரவு கேட்பதென்று இருந்தேன்" என்றார். ஸ்ரீ ராமாநுஜர் உடனே விடைகொடுத் தனுப்ப, கோவிந்தர் வாயுவேகம் மனோவேகமாக 'ஸ்ரீ சைலபூர்ணரைத் தர்சிக்கவேண்டும்' என்ற ஒரு எண்ணத்தைத் தவிர, வேறு எவ்வெண்ணமு மில்லாதவராய், வெகு வேகமாக நடந்து சென்று, ஸ்ரீ சைலபூர்ணருடைய கிருகம் வந்து சேர்ந்தார்.

ஸ்ரீ சைலபூர்ணர் வீட்டினுள்ளே யிருந்தார். கோவிந்தர் வெளியே யிருந்துகொண்டு தாம் வந்திருக்கும் சமா

சாரத்தைச் சொல்லி யனுப்பினர். ஸ்ரீ சைலபூர்ணர் "யார் அவன் பைத்தியக்காரன்? எனக்கு அவனைத் தெரியாது என்று சொல்லிவிடு!" என்று சொல்லி யனுப்பினர். இதற்குள்ளாக ஸ்ரீ சைலபூர்ணருடைய மனைவி ஸ்ரீ சைலபூர்ணரை நோக்கி, "ஐயோ, பாவம்! அவன் எவ்வளவு தூரம் நடந்து கஷ்டப்பட்டுக் கால் வலிக்க இங்கு வந்து சேர்ந்திருக்கின்றான்! அவனைக் கண்டு க்ஷேமம் விசாரித்து ஒரு வேளை யன்னமாவது இட்டுப் போகச் சொல்லாமல் இப்படி மனம் வெறுத்துப் போகச் சொல்லலாமா?" என்றாள்,

ஸ்ரீசைலபூர்ணருக்குக் கோபம் வந்துவிட்டது; "பெண்ணே! உன்னை யார் கேட்டார்கள்? உனக்குத் தெரியாது; நான் ஒன்றை யொருவருக்குக் கொடுத்துவிட்டுத் திரும்பவும் அதை யபகரித்துக்கொள்வேனோ! பிறருக்கு விற்றுவிட்ட மாட்டுக்குத் தீனி போடுவாரு முண்டோ? அந்த மடையனை அவனுடைய வேலையைப் பார்த்துக்கொண்டு போகச்சொல்லு" என்றாள்.

கோவிந்தருக்கு இச் சமாச்சாரம் தெரிவிக்கப்பட்டது; அவருக்குத் துக்கம் அதிகரித்ததாயினும், என்ன செய்யலாம்? பேசாமல் ஸ்ரீ ராமாநுஜரிடம் திரும்பி வந்தார்; அவருடைய பாதங்களில் விழுந்தார்; "ஸ்வாமி! நான் ஸ்ரீ சைலபூர்ணரிடம் சென்றேன். அவருக்கு என்னைத் தெரியாதென்று சொல்லியனுப்பிப் போகச் சொல்லிவிட்டார்; அவர் எனக்குத் தர்சனம்கூட கொடுக்கவில்லை," என்று சொல்லி யழுதார். ஸ்ரீ ராமாநுஜர் கோவிந்தருக்கு வேண்

டிய ஆறுதல்களைச் சொல்லித் தேற்றியதுமன்றியில், ஸ்ரீ சைலபூர்ணருடைய பரிசுத்தமான எண்ணத்தையும் நேர்மையையும் புகழ்ந்தார்; கோவிந்தரை அங்கு இங்கு விடாமல் எப்பொழுதும் தம் அருகிலே வைத்துக்கொண்டு, அவர் ஸ்ரீ சைலபூர்ண ரிடத்திலே எவ்வளவு விசுவாசம் வைத்திருந்தாரோ அவ்வளவு விசுவாசம் தம்மிடத்தில் வைக்குமாறு செய்துகொண்டார். கோவிந்தருக்கு மெல்ல மெல்லத் திருப்தி யுண்டாயிற்று; ஸ்ரீசைலபூர்ணரிடத்துத் தாம் வைத்திருந்த பக்தியளவு ஸ்ரீ ராமாநுஜரிடத்தும் செலுத்த ஆரம்பித்தார்.

ஸ்ரீ ராமாநுஜர் பின்னர் திருக்கச்சி நம்பியா ரிடத்திலே விடைபெற்றுக்கொண்டு, ஸ்ரீரங்கத்துக்குத் திரும்பிச் சென்றார்; அங்கு அவ்வூர் முழுதும் ஒன்றுகூடி, ஸ்ரீ ராமாநுஜர் நெடு நாட்கள் யாத்திரைபோ யிருந்தமையால், அவரை வரவேற்பதற்காக ஒருங்கு திரண்டு வந்தன. ஸ்ரீ ராமாநுஜர் அதிகசந்தோஷ சித்தராய்த் தமது பழைய நண்பர்கட்கெல்லாம் முகமன் கூறிவிட்டு, நகரத்துக்குள்ளே சென்று, பின்னர் க்ஷேத்திரத்தினுள் நுழைந்து எம்பெருமானுடைய சந்நிதானத்திலேபோய், "என்னப்பனே! என்னையாள வந்தானே! எம்பெருமானே! க்ஷேமமாக என்னை மறுபடியும் உன்னிடத்தில் சேர்த்துக்கொண்டாய்," என்று விண்ணப்பித்து நிற்க, எம்பெருமான் "கடைசியாக நீ வந்து சேர்ந்துவிட்டாய்; நெடு நாட்களாக நீ நின்றுவிட்டாய்" என்று சொன்னார்.

ஸ்ரீ ராமாநுஜர் "ஸ்வாமி! நான் எப்பொழுதேனும் தங்களிடமிருந்து நீங்கி யிருந்ததுண்டா? நான் தங்களைத் தவிர வேறொன்றையும் நினைத்ததில்லையே. இதே மாதிரி யாக எனக்கு எப்பொழுதும் தங்களிடத்தில் பக்தியும் ஞாபகமு மிருக்கும்படி கிருபை செய்யவேண்டும்," என்று பிரார்த்தித்துவிட்டு, மடத்துக்குத் திரும்பி வந்து, தம் முடைய பழைய தர்மங்களைக் கையாளலானார்.

---

6-வது அதிகாரம்:

## ஸ்ரீ ராமாநுஜர்

# ஸ்ரீ பாஷ்யம் எழுதுதல்

கோவிந்தர் எப்பொழுதும் தமது குருவினிடத்து மிகவும் பக்தி யதிகரித்தவராய், ஸ்ரீ ராமாநுஜருடைய பிரசங்கங்கள், போதனைகள், வியாக்கியானங்கள் எதையும் விடாதவராய், மிகுந்த சிரத்தையுடனே கேட்டுக்கொண்டு வந்தார்; பகலெல்லாம் குருவின் அருகி லிருந்துகொண்டு, குருவுக்கு வேண்டிய சிசுருஷைகள் செய்துகொண் டிருப்பார்; இரவெல்லாம் குருனுடைய குணதிசயங்களைப்பற்றித் தமது சகோதர சிஷ்யர்களுக்கு வர்ணனை செய்துகொண் டிருப்பார்; கேட்பதற்கு எவரும் இல்லாவிட்டால், குருவினுடைய குணதிசயங்களைத் தாமே சிந்தித்துத் தியானித்துக்கொண் டிருப்பார். களைப்பென்றால் இன்னதென்று அவருக்குத் தெரியாது; அநேகமாக அவர் உறங்குவது கிடையாது.

ஒரு நாள் சிஷ்யர்க ளெல்லோரும் கூடியிருந்தார்கள்; எல்லோரும் கோவிந்தரைப்பற்றிப் பேசத் தொடங்கினார்கள். "கோவிந்தருக்கு என்ன ஆழ்ந்த அறிவு? அவருடைய புத்தி சக்திதான் என்னே? எம்பெருமானிடத்தும் குருவினிடத்தும் அவருக்குள்ள பக்திதான் என்னே? உலக விஷ

யத்திலே இவ்வளவு பராமுகமா யிருப்பவர் ஒருவ ருண்டோ?'' என்று பலவாறு அவர்கள் கோவிந்தரைப் புகழ்ந்தார்கள். அங்கு அப்பொழுது கோவிந்தரும் இருந்தார்; இவரும் கூடச் சேர்ந்துகொண்டு, தம்மையே புகழ்ந்து சந்தோஷித்தார். என்ன ஆச்சர்யம்! எல்லோரும் ஆச்சர்யப்பட்டார்கள். இந்தச் சங்கதி ஸ்ரீ ராமாநுஜருக்குத் தெரியவந்தது. அவர் எல்லோரினும் அதிக ஆச்சர்யமடைந்தவராகி, கோவிந்தரை நோக்கி, "கோவிந்தா! என்ன இது? உன்னைப்பற்றிச் சொல்லப்பட்ட தெல்லாம் உண்மைதான்; பிறர் உன்னைப் புகழவேண்டியது; நீ "நான் அவற்றுக்கு உரித்தானவனல்லன்'' என்று வெகு விநயத்தோடு உன்னைத் தாழ்த்திக்கொள்ளவேண்டியது; இது தான் நியாயம்; நீ தற்புகழ்ச்சியில் பிரியமுள்ளவ னென்று நான் இதுவரை நினைத்ததே யில்லை,'' என்றார்.

ஆனால் கோவிந்தர், சிறிதும் வெட்கப்படாமல், புந்நகை புரிந்துகொண்டே மறுமொழி கூறியதாவது:—"பிரபு! எனது சகோதரர்களாகிய இவர்கள் என்னைப் புகழ்ந்தபொழுது, காளத்தியிலே அந்தகாரத்தி லாநந்தித்துக் கொண்டிருந்த மனிதனைப் புகழ்ந்தார்கள்; இவர்கள் புகழ்ந்த குணங்க ளெல்லாம் எனக்கும் அப்பொழுது இருந்தன; ஆனால், ஸ்வாமி! தாங்கள் என்னை ரக்ஷித்துவிட்டீர்கள்; நான் அப்பொழுது கீடத்திலும் தாழ்ந்த கிருமியாயிருந்தேன்; இப்பொழுது நீங்கள் என்னை உத்கிருஷ்டோத்கிருஷ்ட பதவியில் கொண்டுவந்து வைத்துவிட்டீர்

கள்; தாங்கள் எனக்கு அளித்திருக்கும் ஆநந்தத்துக்கு நிகராக எவரும் அநுபவிக்க முடியாது என்று ஏன் நான் தைர்யமாகச் சொல்லக்கூடாது? தாங்கள் என்மீது அருளி யிருக்கும் கிருபையில் ஒரு அம்சம்கூட இவர்கள் இன்னும் தெரிந்துகொள்ளவில்லை; அதைப்பற்றிப் புகழ்ந்து சந்தோஷிப்பதற்கு என்னைத் தவிர வேறு எவருக்குப் பாத்தியதை யுண்டு? நான் என்னைத் தானே புகழ்ந்துகொண்டேனேயானால், நான் எவருடைய சந்நிதானத்திலே நிற்கிறேனே, எவருடைய அளவற்ற கிருபையினாலே நானும் இந்த ஜீவாத்மாக்களும் உலக வாழ்க்கையை உதறிவிட்டு, எம்பெருமானுக்கும் எம்பெருமானுடைய பக்தர்களுக்கும் என்றும் இடைவிடாத் தொண்டு புரிந்துகொண்டு, பரமாத்ம ஞானத்திலே களித்து ஆநந்திக்கின்றோமோ அந்தத் திவ்ய கல்யாண குணங்கள் வாய்ந்த குருமூர்த்தியையே புகழ்ந்தேன்; தப்பிதம் செய்திருந்தால் மன்னிக்குமாறு வேண்டுகிறேன்.''

இத்தகைய பரிபூர்ண பக்தி யிருந்தால், அவர் குற்றம் செய்ய முடியுமா? கோவிந்தருடைய இவ் வார்த்தைகளுக்குப் பதில் சொல்ல ஸ்ரீராமாநுஜருக்குத் தெரியவில்லை. ஸ்ரீ ராமாநுஜருடைய கண்களிலே ஆநந்தக் கண்ணீர் ததும்பி வழிந்தோடிற்று; ஸ்ரீ ராமாநுஜர் கோவிந்தரைத் தமது கைகளினால் சேர்த்துக் கட்டியணைத்துக்கொண்டு, ''நன்று செய்தாய்! நீ செய்தது நியாயமே! உன்போல நானும் கபடற்றுக் களங்கமற்ற ஹிருதயமுடையவனாகவேண்டு

மென்று, நீ எனக்காக எம்பெருமானைப் பிரார்த்தனை செய்வாய்! அந்தோ! அம்மாதிரி கபடற்ற தன்மை எனக்கு இன்னும் வரவில்லையே'' என்றார்.

இன்னொருநாள், ஸ்ரீரங்கம் க்ஷேத்திரத்துத் தாசி யொருத்தியினுடைய வீட்டுக்கெதிரே கோவிந்தர், பேச்சற்றுப் பிரபஞ்சப் பிரக்ஞையற்று நின்றுகொண்டிருந்ததை ஒரு ஸ்ரீ வைஷ்ணவர் கண்டார். இவர் ஓடிவந்து ஸ்ரீ ராமாநுஜரை நோக்கி, "ஸ்வாமி! கோவிந்தர் ஒரு தேவடியாள் வீட்டுக்கெதிரே, வெட்கமில்லாமல் எவரையும் லக்ஷியம் செய்யாமல், அந்தத் தேவடியாளுடைய பாட்டிலே ஈடுபட்டு நின்றுகொண்டிருந்தார்'' என்றார். கோவிந்தர் வந்தவுடனே, ஸ்ரீ ராமாநுஜர் அவரைக் கேட்க, அவர் "ஸ்வாமி! உண்மைதான்; எனது குருமூர்த்தியைப் பற்றி அவர்கள் பாடிய ஸ்தோத்திரப் பாடல்கள் எனது ஹிருதயத்தை யுருக்கிவிட்டன; அவருடைய திவ்ய கிருபையிலே லயித்து நான் மெய்மறந்திருந்தது உண்மைதான்'' என்றார். அந்த ஸ்ரீ வைஷ்ணவரும் "ஆமாம், ஸ்வாமி! அவர்கள் பாடிக்கொண்டிருந்தது ஏதோ ஸ்தோத்திரப் பாடல்கள்தான்'' என்றார். ஸ்ரீ ராமாநுஜர் கோவிந்தருடைய சீரிய லக்ஷணத்தைப் பற்றிச் சிந்தித்து ஆச்சர்யமடைந்தார்.

கோவிந்தர் சாதாரணமாக இரவு காலங்களில் உறங்குவதில்லை; ஒருபொழுதும் தனிமையிலும் இருந்ததில்லை; எப்பொழுதும் இரவும் பகலும் இருபத்து நான்குமணி

நேரமும் மனமானது எம்பெருமானிடத்திலே சென்றிருக்கும்; சரீரத்தின் அங்கங்கள் எப்பொழுதும் குரு சிசுருஷையிலேயே காலத்தைக் கழித்துக்கொண்டிருக்கும்.

ஒருநாள் அவருடைய மாதா அவரிடம் வந்து "புத்திரா! நீ உனது மனைவியினிடத்துக் காண்பிக்கவேண்டிய தர்மத்தைச் செய்யாதிருக்கின்றாய். வம்ச விருத்திசெய்து, தன் வேலையைப் பின்பற்றிச் செய்வதற்கு ஒரு புத்திரனை யுண்டு பண்ணிக்கொள்வது ஒவ்வொரு பிராஹ்மணனுடையவும் கடமை யென்பது உனக்குத் தெரியாதா?" என்றாள்.

"அம்மா! நல்லது! அப்படியே யாகட்டும்; இருட்டாயிருக்கும்பொழுது, நான் தனித் திருக்கும்பொழுது, அவள் என்னிடம் வரட்டும்" என்றார் கோவிந்தர்.

ஆனால், கோவிந்தர் தனித்திருக்கும் சமயமேது? கோவிந்தருடைய மனைவி எத்தனையோ நாட்கள் காத்துக் கொண்டிருந்தாள்; ஆயினும், அவர் தனித்திருக்கும் சமயம் கிடைக்கவில்லை; அவள் போய் ஸ்ரீராமாநுஜரிடம் தனது குறைகளைச் சொல்லிக்கொண்டாள். ஸ்ரீ ராமாநுஜர் கோவிந்தருக்குச் சொல்லியனுப்பி, வரவழைத்து, "கோவிந்தா! நீ கிருகஸ்தன்; ஆயினும், நீ உன் மனைவியினிடத்துச் செலுத்த வேண்டிய கடமையைச் செலுத்தாதிருக்கின்றாய்; உன் மனைவியை மறந்திருக்கின்றாய்; உன்னுடைய ஆச்சிரம தர்மத்தை நீ அலக்ஷியம் செய்ய லாகாது" என்றார்.

"குருமூர்த்தியின் ஆஃஞைப் பிரகாரம் நடக்கிறேன்" என்று கோவிந்தர் சொல்லிவிட்டுப் போனார்.

ஒருநாள், நல்லநாள்; கோவிந்தர் தமது மனைவியைத் தம்மிடம் வரும்படி சொல்லியனுப்பினார்; அவ் வுத்தமி வெகு சந்தோஷப்பட்டு, 'ஒரு நாளும் ஏறிட்டுப் பாராத கணவன் இன்று தாமாகவே சொல்லியனுப்பியிருக்கிறாரே' என்று ஆநந்தித்தவளாய், தனது புருஷனிடம் வந்தாள். ஆனால், என்ன ஆச்சர்யம்! கோவிந்தர் தமது மனைவியினிடத்துக் காமப் பேச்சுப் பேசுவதற்குப் பதிலாக எம்பெருமானுடைய மகிமைகளையும், அகண்ட கல்யாண குணங்களையும் எடுத்தெடுத்துப் பேசி இரவு முழுதும் காலம் கழித்தார்.

மறுநாள் விடிந்தது; கோவிந்தருடைய தாயாருக்கு இரவில் நடந்த சங்கதியெல்லாம் தெரியவந்தது; அவள் புத்திரனிடத்திலே வந்து "அப்பா! இப்படித்தான் கிருகஸ்தாச்சிரமம் நடத்துவதோ? மனைவியினிடத்து ஞானப் பேச்சுக்கள் பேசி யனுப்பிவிட்டாயாமே; உன்னுடைய குரு உனக்குக் கிருகஸ்தாச்சிரமம் உபதேசித்தது இப்படித் தானோ?" என்று ஒருவாறு கடிந்துகொண்டாள்.

அம்மா! என்ன சொன்னாய்? ஸ்ரீநிவாசனுக்கு இருப்பிடமாகிய ஹிருதயத்தை அசுத்தமான மிருக எண்ணங்களினால் தீண்டலாமோ? பரமாத்ம ஞான ஒளியிலே அந்தகார விஷயங்களைக் கொண்டுவரலாமோ? அந்தோ! நான்

இருட்டையும் நாடினேன்; ஏகாந்தத்தையும் நாடினேன். ஆனால், எம்பெருமான் எப்பொழுதும் என்னுடனேயே யிருக்கின்றார்; அவர் இருக்குமிடத்திலே அந்தகாரம் இருத்தல் முடியாது; ஏகாந்தமும் எப்படி வாய்க்கும்?"

இவர் இப்படிக் கூறிய மறுமொழியை அருகே நின்று கேட்டுக்கொண்டிருந்தவர்கள் ஸ்ரீ ராமாநுஜரிடத்திலே இச் சமாச்சாரத்தைப் போய்ச் சொன்னார்கள். கோவிந்தர் தம்மிடம் வந்தவுடனே "கோவிந்தா! இரவை எப்படிப் போக்கினாய்?" என்று கேட்டார்.

"சர்வாந்தர்யாமியினுடைய ஒளியிலே எனக்கு வேண்டிய இருட்டும் ஏகாந்தமும் வாய்க்கவில்லை."

"உலகத்தினிடத்தும் உலக விஷயங்களினிடத்தும் நீ அவ்வளவு ஆசையற்றவனானால், நீ ஏன் சந்நியாசாச்சிரமம் வகித்துக்கொள்ளவில்லை?"

"ஸ்வாமி! நெடுநாட்களாக நான் ஹிருதயத்திலே கொண்டுள்ள ஆசைதான்; எங்கே தாங்கள் கோபித்துக் கொள்வீர்களோ? என்று பயந்து நான் இதுகாறும் தங்களைக் கேட்காமலிருந்தேன்."

"நல்லது," என்று ஸ்ரீ ராமாநுஜர் கூறிவிட்டு, அவருக்கு சந்நியாசாச்சிரமம் அளித்து, காஷாயமும் திரிதண்டமும் கொடுத்தார்; இன்னும் "நான் எனது நாமத்தையே உனக்கும் இடுகின்றேன்; நீ ஏற்றுக்கொண்டால் எனக்கு மிகவும் சந்தோஷமாயிருக்கும்" என்றார்.

கோவிந்தர் "ஸ்வாமி! தங்களுடைய பாததூளிக்கும் கீழ்ப்பட்டவன் நான்; தங்களுடைய பெயரை நான் வைத்துக்கொள்வதா? என்னுல் இதுதான் முடியாது. சாதாரணப் பெயர் ஏதாவதொன்றை எனக்கு இடுங்கள்" என்ருர்.

ஸ்ரீ ராமாநுஜர்:— "சரி! உனது இஷ்டப்படியேயாகட்டும்; உன்பொருட்டு நான் அதைச் சுருக்கிவிடுகின்றேன்; உனது பெயர் எம்பார் என்றிருப்பதாக" என்று சொன்ஞர்.

சின்ஞட்கள் கழிந்தன; இரண்டு ஸ்ரீ வைஷ்ணவர்கள், மேல்தேசத்தி லிருப்பவர்கள், ஸ்ரீ ராமாநுஜருடைய மகிமையைப்பற்றிக் கேள்விப்பட்டு, அவரைத் தர்சிக்கும் பொருட்டு ஸ்ரீரங்கம் வந்து சேர்ந்து, வழியில் போய்க்கொண்டிருந்த ஒருவனைப் பார்த்து, "ஆசார்யருடைய மடம் எது?" என்று கேட்டார்கள். அவன் "எந்த ஆசார்யருடைய மடம்?" என்று கேட்டான். அவர்கள் ஆச்சர்யமடைந்தவர்களாய், "என்ன! அப்படியானுல், இவ் வூரில் இரண்டு பெயர்கள் இருக்கின்ருர்களா? விசிஷ்டாத்வைத மதத்துக்கு இரண்டு ஆசார்யர்களா? இதற்குள்ளே பிரிவு ஏற்பட்டுவிட்டதா?" என்ருர்கள்.

அதற்கு அவன் "இல்லை, இல்லை; பிரிவொன்றும் ஏற்படவில்லை, தேவராஜமுனி யென்று ஒருவர் இங்கு இருக்கிருரென்பது உங்களுக்குத் தெரியுமா?" என்று மறுமொழி சொன்ஞன்.

“நாங்கள் அப்படி யொருவரைப்பற்றிக் கேட்டது மில்லை, அவரிடத்தில் வரவுமில்லை; நமது ஆசார்யர் ஸ்ரீ ராமாநுஜ முனியினுடைய மடத்துக்கே நாங்கள் செல்ல விரும்புகின்றோம்.”

அவன் அப்படியே அவர்களுக்கு ஸ்ரீ ராமாநுஜருடைய மடத்துக்குச் செல்லும் வழியைக் காண்பித்து அனுப்பினான். இச் சங்கதி தேவராஜருடைய காதுகட்கு எட்டிற்று; அவர் மனக்கலக்கம் மிக வுற்றவராகி, “அந்தோ! என்னாலேயே நான் கெட்டேன்; நான் எனது குருமூர்த்தியினிட மிருந்து பிரிந்து வசிக்கும் பாபம் செய்ததனாலன்றோ ஜனங்கள் என்னை யவருக்குச் சமமாகச் சொல்வதற்கு இட முண்டாயிற்று,” என்று மனம் வருந்தி, இவ் வருத்தம் மாற்றுதவராய், தமது மடத்தை யிடித்துத் தரையோடு தரையாக்கிவிடும்படி செய்து, ஸ்ரீ ராமாநுஜருடைய பாதங்களிலே விழுந்து “ஸ்வாமி! ஸ்வாமி! நான் இத்தனை நாட்களாகத் தங்கள் கிருபா வெளிச்சத்திலிருந்து தனித்திருந்தது போதாதா? இன்னும், ஸ்வாமி! எத்தனை நாட்களுக்கு நான் தனித்திருக்கவேண்டுமென்று தாங்கள் கருதியிருக்கிறீர்கள்?” என்று கேட்டார்.

ஸ்ரீ ராமாநுஜருக்குச் சங்கதி யொன்றும் தெரியாது; அவர் திடுக்கிட்டுவிட்டார்; “என்ன சமாச்சாரம்?” என்று கேட்டார்; அப்பொழுது தேவராஜர் நடந்தவாறெல்லாம் விவரமாகச் சொன்னார். ஸ்ரீ ராமாநுஜர் மௌனமாக

அவர் கூறியதை யெல்லாம் கேட்டுவிட்டு "நீ என்ன செய்யவேண்டுமென்று விரும்புகிறாய்?" என்று கேட்டார்,

இந்த நிமிஷத்திலிருந்து நான் என்றும் தங்களுடனே யிருந்துகொண்டு, தங்களுடைய பணிவிடையிலேயே காலம் கழிக்குமாறு அநுக்கிரஹிக்க வேண்டுகிறேன்"

"நல்லது! உன் இஷ்டப்படியே நடக்கட்டும்" என்றார் ஸ்ரீ ராமாநுஜர்; அந்த நிமிஷம் முதல் தேவராஜர் ஒரு பொழுதும் ஸ்ரீ ராமாநுஜரிடமிருந்து பிரிந்தவரல்லர். ஸ்ரீ ராமாநுஜரிட மிருந்து கற்றுக்கொள்ள வேண்டியதை யெல்லாம் தேவராஜர் வெகு சீக்கிரத்திலே கற்றுக்கொண் டார்; இனிமேல் அவர் கற்றுக்கொள்ளவேண்டியது உல கில் ஒன்றுமே யில்லை யென்று சொல்லும்படி அவ்வளவு பரிபூர்ணமாக அவர் சகல சாஸ்திரங்களிலும் விற்பத்தி யடைந்திருந்தார். அவர் உலகுபகாரமாக ஞானசாரம், பிர மேயசாரம் என்று இரண்டு பெரிய கிரந்தங்கள் எழுதி னார்.

ஸ்ரீ ஆளவந்தார் தமது அந்திய காலத்திலே பிரஹ்ம சூத்திரங்கட்கு விசிஷ்டாத்வைத பாஷ்யம் ஒன்று தம்மால் இயற்ற முடியவில்லையே யென்று வருந்தினாரென்றும், ஸ்ரீ ராமாநுஜர் எழுதுவாரென்று கூறியுள்ளாரென்றும் நமது வாசகர்கள் அறிவார்கள். ஸ்ரீ ராமாநுஜருக்கு இது ஞாபகம் வந்தது; ப்ரஹ்ம சூத்திரங்கட்குப் பாஷ்யம் எழு தத் தீர்மானித்தார். அவர் தமது நண்பர்களையும் சிஷ்யர்

களையும் ஒன்றாகக் கூட்டி அவர்களை நோக்கி "நான் எனது குருவுக்குச் செய்துள்ள முதலாவது வாக்குத் தத்தத்தை நிறைவேற்றுதற்கு முயற்சிக்கப் போகின்றேன்; நெடு நாட்களாக உலகம் பொய்யிலே உழலுகின்றது; ஒன்றுக் கொன்று நேர் விரோதமான கக்ஷிகள் கிளம்பி உலகைப் பிரமிக்கச் செய்துவிட்டன; ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் கொள்கைகளே சிரேஷ்டம் என்று கூறுகின்றனர்; "மகா மாக்கிய தியானத்தினாலே யுண்டாகும் ஞானமே மோக்ஷ மடைதற்கு மிகமிக நிச்சயமான மார்க்கம்" என்று மாயாவாதிகள் கூறுகின்றார்கள்; "ஞானமும் வேண்டும்; கர்மமும் வேண்டும்" என்று வேறு சிலர் கூறுகின்றார்கள்; ஆனால், "கர்மம் ஞானத்துக்கு இன்றியமையாதது" என்றும், "அறிவு, தியானம், அநுபவம் முதலிய எல்லாவற்றையும் கர்மமே குறிப்பிடுகிறது" என்றும், "நித்திய வஸ்துவை யடைதற்குப் பக்தியினால் பரிசுத்தம் பண்ணப்பட்டு உபாசனையினால் விருத்தி செய்யப்பட்ட ஞானமே மார்க்கம்" என்றும் ஆன்றோர் பலரும் அறைந்திருக்கின்றனர். எனது சக்திக் கியன்றவரையில் நான் எம்பெருமானே யவதாரமாய் வந்த ஸ்ரீ வேதவியாசருடைய ப்ரஹ்ம சூத்திரங்களுக்கு ஒரு பாஷ்யம் எழுதி இப் பேருண்மைகளை யெல்லாம் அதிலே விளக்கிக் காட்டுவேன்" என்றார்.

ஸ்ரீ ராமாநுஜர் அவதரித்ததற்கு முன்னே விசிஷ்டாத்வைதமத சித்தாந்தத்தை யநுசரித்து, பிரஹ்ம சூத்திரங்கட்குப் பல பெரியோர்கள் பாஷ்யம் எழுதியுள்ளார்கள். அவர்கள் பின் வருமாறு:—

(1) போதாயனர்:— ஸ்ரீ வேதவியாசருடைய சிஷ்யர். இவர், ப்ரஹ்ம சூத்திரங்கட்கு 100000 கிரந்தங்களிலே பெரியதோர் பாஷ்யம் இயற்றினர். ஸ்ரீசங்கரர், ஸ்ரீ ராமாநுஜர் இருவரும் இவரைக் குறிப்பிடுகிறார்கள்.

(2) த்ரமிடாசார்யர்:— ப்ரஹ்ம சூத்திரங்கட்கு "த்ரமிட பாஷ்யம்" என்று ஒரு பாஷ்யமும், அதன்மேல் ஒரு டீகையும் எழுதியுள்ளார்.

(3) டங்கர் அல்லது ப்ரஹ்மாநந்தி:— இவருக்கு வாக்கியக்காரர் என்றும் பெயர்; ப்ரஹ்ம சூத்திரங்கட்கு ஒரு வார்த்திகம் எழுதியுள்ளார்.

(4) குஹதேவாசார்யர்.

(5) ஆசார்ய பாருசி:— இவரைப்பற்றி விக்ஞேஸ்வரர் தமது மிதாக்ஷரத்திலே கூறுகிறார்.

(6) பகவத் ஸ்ரீ வத்சாங்கமிச்ரர்:—இவர்மிகப் பூர்வீக பாஷ்யக்காரர்.

(7) ஸ்ரீ நாதமுநிவர்:— இவர் விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தைப்பற்றியும், யோக ரகஸ்யத்தைப்பற்றியும் நியாய தத்துவம் என்னும் நூல் இயற்றியிருக்கிறார். இவர் கி. பி. 8-வது நூற்றாண்டிலே யிருந்தவர்.

(8) ஸ்ரீ யாமுநாசார்யர்:— சம்வித்சித்தி, ஈஸ்வர சித்தி, ஆத்மசித்தி, ஆகமப் பிராமாண்யம் முதலிய அநேக அரிய

நூல்களை இயற்றியிருக்கிறார். இவர் கி. பி. 11-வது நூற்றாண்டின் ஆரம்பத்திலே வசித்தவர்.

ஸ்ரீ ராமாநுஜர் தாம் பாஷ்யம் எழுதப்போவதாகக் கூறவே, அவருடைய சிஷ்யர்கள் ஆநந்தக் கூச்சலிட்டு, "ஸ்வாமி! இவ் வேலை செய்தற்குத் தாங்களே தகுந்தவர்கள்" என்று ஏகோபித்துக் கூறினார்கள். ஸ்ரீராமாநுஜர் தம் மருகே நின்றுகொண்டிருந்த ஆழ்வானை நோக்கி, "புத்திரா! நான் கூறுவதை நீ எழுதுவாயாக! ஆனால், உனக்குப் பிரிய மில்லாத வார்த்தை யொன்றையும் நீ எழுதவேண்டாம்" என்று கூறிவிட்டு, பிரஹ்ம சூத்திரங்களை யெடுத்து ஒன்றன்பின் ஒன்றாக உரைவிரித்துக் கூறத் தொடங்கினர்,

ஸ்ரீ ராமாநுஜர் பாஷ்யம் எழுதுவதற்கு முன்னே சில முக்கியமான பாஷ்யங்களைப் பார்வையிட்டுக் கிரகித்துக் கொண்டா ரென்றும், அவற்றிலே பிரதானமானது காச்மீரத்திலே யிருந்ததென்றும் சொல்லப்படுகிறது. இச் சங்கதியைப் பற்றி ஒருவர் பின் வருமாறு எழுதுகிறார்:—

காச்மீர தேசத்தில் ஸ்ரீ நகரில் பெயர் பெற்ற சரஸ்வதி பாந்தாரத்தில் 25,000 கிரந்தங்களிலே போதாயன விருத்தியின் ஒரு சுருக்கப் பிரதியொன்று உள்ளது என்று அவர் அறிந்தவராய் ஆழ்வான், ஆண்டான், வாத விஷ்ணு ஆசார்யர், எம்பார் முதலியவர்களையும் மற்றவர்களையும் இட்டுக்கொண்டு அங்குச் சென்றார்; அதைப் பார்க்க விரும்பி

னார். கொஞ்சக்காலம் அது தம்மிடத்தில் இருப்பதற்கு அநுமதி கொடுக்கும்படி அவர் அந்தத் தேசத்து அரசனைக் கேட்டுக்கொண்டார். ஆனால், அவருடன் வாதாடித் தோல்வியடைந்த அவ்வளவு பெரிய ஒரு கிரந்தத்தை ஒருதரம் பார்த்ததனாலே அவர் எவ்விதப் பயனையும் அடைய முடியாதென்று அவருடைய விரோதிகள் நிச்சயமாக நம்பினதினாலே, அதை யொருதரம் படித்துப் பார்ப்பதற்கு அநுமதிகேட்டுப் பெற்றுக்கொண்டார்; ஆனால், அவர்கள் முட்டாள்தனம் செய்தார்கள்; ஸ்ரீ ராமாநுஜர் இராக்காலங்களிலே ஆழ்வானைக்கொண்டு அந்த விருத்தியுரையைப் படிக்கும்படி செய்து, நன்றாகக் கேட்டுக்கொண்டார்; ஒரு மாதத்துக்குள்ளே அவர்கள் ஸ்ரீரங்கத்துக்குப் புறப்படத் தயாராய்விட்டார்கள்; அந்தத் தேசத்து அரசன் ஸ்ரீராமாநுஜருடைய ஆழ்ந்த வித்துவத்தன்மை, பரிசுத்த வாழ்க்கை, உண்மையான அவா ஆகிய இவற்றைக் கண்டு அதிகமாகச் சந்தோஷித்து, அந்தக் கிரந்தத்தையவர் தம்முடனே யெடுத்துக்கொண்டு போகும்படி அநுமதி கொடுத்தான். ஆனால், இது பண்டிதர்களுடைய செவிகட் கெட்டிவிட்டது. அவர்கள் ஸ்ரீ ராமாநுஜருடைய கூட்டத்தைப் பின்தொடர்ந்து சென்று, சிரேஷ்டமான அந்தக் கிரந்தத்தை திருடிக்கொண்டு போய்விட்டார்கள். இது குருவினுடைய கவனத்துக்குக் கொண்டுவரப்பட்டது; அவர் தமது பாஷ்யத்துக்கு அத்தகைய உபயோககரமான உதவியில்லாமற் போய்விட்டதே யென்று வருத்தப்பட்டார்.

இவ்விதம் ஸ்ரீ ராமாநுஜர் வருத்தப்படுகையில் ஆழ்வான், "அந்தத் துர்ப்பாக்கியத்தை ஒரு சிறிய வழியில் என்னால் நிவிருத்திக்க முடியும்; அந்த விருத்தியுரையை ஆதியிலிருந்து அந்தம்வரையில் என்னால் ஒப்புவிக்க முடியும்; அதை இங்கு ஒப்புவிக்கவா? அல்லது இரு நதிகளுக்கிடையிலே (ஸ்ரீரங்கம் போய்) ஒப்புவிக்கவா? எனது குருமூர்த்தி என்ன ஆக்ஞை பண்ணுகிறார்?" என்றான்.

"ஸ்ரீ ராமாநுஜர் புன்னகை புரிவது வெகு அபூர்வம்; இப்பொழுது அவர் புன்னகை புரிந்து, "எனக்கும் அவ்வளவு தெரியும்; உன்னைப்பற்றி அவ்வளவு நன்றாயறியாத நமது நண்பர்களுடைய நன்மைக்காக, உனது வாயிலிருந்தே அதை நான் உறுதிப்படுத்திக்கொள்ள விரும்பினேன்" என்றார்.

இதே விஷயத்தை இன்னொருவர் வேறொரு விதமாகக் கூறுகின்றார்:—

ஸ்ரீ ராமாநுஜர் இந்தியா முழுதும் யாத்திரை செய்து திரும்பிவந்த பின்னரே தமது பாஷ்யத்தை இயற்றினர்; அதற்கு முன் இயற்றவில்லை. அவருடைய யாத்திரை சமயத்திலேதான் அவர் ஸ்ரீநகர் சென்று, அங்கு அவ்விடத்து அரசனை மத்தியஸ்தனாக வைத்துக்கொண்டு, பண்டிதர்களுடனே வாதாடித் தோற்கடித்தார். அவர் தமது ஆதாரங்களை ருசுப்படுத்தும்படி கேட்கப்பட, போதாயனருடைய விருத்தியை ஆதாரமாகக் கொண்டு எழுதிய பிற்காலத்து

ஆசார்யர்களுடைய நூல்களைக் குறிப்பட்டார். அவ்வரசன் அந்நூல்களை வரவழைத்துப் பார்க்க, ஒவ்வொரு விஷயத்திலும் அவை சரியாயிருக்கக் கண்டு ஆச்சர்யப்பட்டான். பின்னர் அவன், ஆசார்யர் அந்நூலை யொருமுறை படித்துக்கொள்ளும்படி அநுமதி கொடுத்து, அவருடைய கருத்துக்களை ஒரு நூலுருவத்திலே எழுதும்படிக்கும், 'அதைப் புத்தகசாலையிலே யுள்ள சரஸ்வதியின் விக்கிரகம் ஏற்றுக்கொள்ளுகிறதா?' என்று பார்க்கவேண்டுமென்றும் சொன்னான். ஸ்ரீ ராமாநுஜர் ஒரு இரவில் வேதாந்த சாரத்தை இயற்றி, சரஸ்வதியின் கைகளிலே அதை வைக்கும்படி செய்தார். அரசனும் பண்டிதர்களும் மறுபடியும் கதவைத் திறந்து பார்த்தபொழுது, அது அவளுடைய தலையின்மீது இருக்கக்கண்டு பயந்து ஆச்சர்யப்பட்டார்கள். ஸ்ரீ ராமாநுஜர் கப்பியாச சுருதியை விரித்துரைக்கும்படி சரஸ்வதி கேட்டு 'அவருடைய உரையை ஸ்ரீ சங்கருடைய உரைக்கு மேலானதாக ஏற்றுக்கொண்டாள்.

இவ்விதமாகப் பலவிதத்திலும் இவ் விஷயமானது கூறப்பட் டிருந்தபொழுதிலும், காச்மீர தேசத்திலே போதாயன விருத்தியுரை யொன்று இருந்த தென்பதும் ஸ்ரீ ராமாநுஜர் ஒரு முறையேனும் தமது பாஷ்யம் எழுதுதற்கு முன் அதைப் பார்த்துக்ெகாண்டா ரென்பதும் உண்மை யென்று விளங்குகிறது.

ஸ்ரீ ராமாநுஜர் கொஞ்சம் கொஞ்சமாகத் தினந்தோறும் பாஷ்ய உரை சொல்லிக்கொண்டு வர, ஆழ்வான் எழு

திக்கொண்டு வருவது வழக்கம்; இப்படியே எழுதும் வேலை அநேக நாட்கள் நடைபெற்று வந்தன. ஒரு நாள் ஸ்ரீ ராமாநுஜர் "ஜீவாத்மா ஞாதாவா?" என்ற கேள்வியைப்பற்றி வியாபரிக்கின்ற சூத்திரத்துக்கு வியாக்கியானம் செய்ய வேண்டி வந்தது; அதைப்பற்றி அவர் உரை கூறுகையில் 'ஜீவன் ஞாதாவே' என்னும் தப்புப் பொருள் உண்டாகுமாறு கூறினர்.

ஆழ்வானுக்கு இதை எழுத மனம் வரவில்லை; பேசாமலிருந்துவிட்டான்; மேலே எழுதவில்லை. ஸ்ரீ ராமாநுஜர் தமது மனத்தை வேறு எங்கோ செலுத்தியிருந்தார்; தாம் கூறினதை ஆழ்வான் எழுதிக்கொண்டிருக்கின்றானென்று ஸ்ரீராமாநுஜர் நினைத்துக்கொண்டிருந்தார்; அவன் பேசாமலிருப்பதைக் கண்டு எழுதியாயிற்றோ? என்று கேட்டார். ஆழ்வான் கேட்காததுபோலச் சும்மா விருந்தான். ஸ்ரீராமாநுஜர் மறுபடியும் கேட்டார்; அப்பொழுதும் ஆள்வான் அவ் வார்த்தைகள் தன்னுடைய செவியில் விழாதது போலச் சும்மாவிருந்தான். ஸ்ரீ ராமாநுஜருக்குக் கோபம் வந்து விட்டது; "ஆழ்வானுக்கு ஏன் இப் பிடிவாதம்? அவர் ஆழ்வானை ஒரு உதைகொடுத்துக் கீழே தள்ளி, "வெளியே போய்விடு" என்று கூச்சலிட்டார்; ஆள்வான் தான் விழுந்த இடத்திலேயே படுத்துக் கிடந்தார்.

ஸ்ரீ ராமாநுஜர்: "நீயே பாஷ்யம் எழுது!" என்று முணுமுணுத்துக்கொண்டே வெளியே போய்விட்டார்.

ஸ்ரீ ராமாநுஜருடைய கோபத்தைக் கண்டு, மற்றச் சிஷ்யர்களெல்லோரும் பயந்து நடுநடுங்கி, கொஞ்சநேரம்

எவரும் பேசாமலிருந்துவிட்டு, பின்னர் ஆழ்வானிடம் சென்று "குருமூர்த்தி யுன்னிடத்திலே வெறுப்புற்று உன்னை யுதைத்துத் தள்ளிவிட்டுப் போய்விட்டாரே; நீ இனிமேல் என்ன செய்யப்போகிறாய்?" என்று கேட்டார்கள்.

ஆழ்வான் சிரித்துக்கொண்டே "செய்வதென்ன? நான் குருமூர்த்தியினுடைய சொத்து; எறியப்பட்ட இடத்திலே விழுந்து கிடப்பேன். அதைப்பற்றி எனக்கென்ன கவலை?" என்று மறுமொழி யுரைத்தான்.

இதற்குள்ளாகக் கோபத்துடனே சென்ற ஸ்ரீ ராமாநுஜர் அந்தச் சூத்திரத்தைப்பற்றி ஆலோசனை செய்ய ஆரம்பித்து, ஆழ்வான் எழுத மறுத்ததற்குக் காரணம் இன்னதென்று தெரிந்துகொண்டார். இவர் முன்னர் இரு பொருள்படக் கூறியது இப்பொழுது தெளிவாயிற்று. ஸ்ரீ ராமாநுஜருக்கு மிகுந்த மனஸ்தாப முண்டாயிற்று; "ஐயோ! அநாவசியமாக நான் ஆழ்வானை யடித்தேனே! தப்பிதம் என்மீது இருக்க, நான் அவனைக் கடிந்து அடித்தது என் மனத்தை வருத்துகின்றதே," என்று மனம் வருந்தினார். பின்னர் ஆழ்வானுக்கு ஸ்ரீ ராமாநுஜர் சொல்லியனுப்பி வரவழைத்து, "எனது அரிய நண்பா! நான் யோசனைசெய்து பார்த்ததில், தப்பிதம் என்மீது தான் என்பதைக் கண்டுகொண்டேன்; நீ செய்தது நியாயமே; நான் உன்னைக் கடிந்து அவமரியாதை செய்தது அநியாயம்தான்; நீ என்னைத் தயைசெய்து மன்னித்திடுவாய்; உன்னிடத்தில் மன்னிப்புக் கேட்பதற்குக்கூட என

க்கு வெட்கமா யிருக்கிறது; உன் மனம் நோக நான் இவ்வளவும் செய்துவிட்டு, உன்னை மன்னிப்புக் கேட்பதும் நியாயமன்று'' என்று கூறினர்.

ஆழ்வான் "ஸ்வாமி! எனக்குப் பைத்தியம் பிடிக்க வேண்டுமென்று தாங்கள் விரும்புகின்றீர்களா! தாங்கள் என்னை இப்படி நடத்தும்படியாக நான் என்ன செய்திருக்கிறேன்? அந்தோ! குருமூர்த்திக்கு என்மீது ஏன் இவ்வளவு அதிருப்தி யுண்டாகவேண்டுமோ? நான் அவருக்கு என்றும் சொந்தமானவன் என்று அவர் நினைக்காமல், மன்னிப்புக் கேட்கும்படி என்னை வேருக நினைப்பதேனே? ஐயோ நான் கெட்டேன்'' என்றுன்.

ஸ்ரீ ராமாநுஜர் "நண்ப! அப்படியன்று, ஈஸ்வர சந்நிதானத்திலே வித்தியாசம் கிடையாது; குரு என்றும் இல்லை, சிஷ்யனென்றும் இல்லை; அந்தஸ்து வித்தியாசம் இவை கிடையா; ஈஸ்வர திருஷ்டியில் எல்லோரும் ஒன்றே'' என்று சொல்லிவிட்டு, அந்தச் சூத்திரத்துக்குப்பொருளைச் சரியாகவும் தெளிவாகவும் கூறி, "ஜீவன் எம்பெருமானுடைய கிருபையிலே முழுதும் சார்ந்திருக்க வேண்டியவனே'' என்பதை வற்புறுத்திச் சொன்னர்; ஆழ்வான் மேலே எழுதிக்கொண்டு போனன்.

இவ்விதமாக, விசிஷ்டாத்வைத மதத்துக்குப் பிரதான நூல்களாகிய ஸ்ரீ பாஷ்யம், வேதாந்த சாரம், வேதாந்த தீபம், கீதா பாஷ்யம், வேதாந்த சங்கிரகம் முதலிய நூல்களெல்லாம் எழுதப்பட்டன.

நாம் இப்பொழுது ஆழ்வானைப்பற்றிச் சில வார்த்தைகள் சொன்னோம்; இனிமேல் ஆண்டானைப் பற்றியும் சில சொல்வோம்.

ஸ்ரீ ராமாநுஜர் சந்யாசாச்ரமம் வகித்துக்கொண்டபொழுது, அவருடைய குரு "நீ யெல்லாவற்றையும் துறக்கிறாயா?" என்று ஒரு கேள்வி கேட்டார்.

"என்ன? எல்லாவற்றையும் துறப்பதென்றால் என்னுடைய சரீரத்தினின்றும் என்றும் நீக்கப்பட முடியாத பொருள்களைக் கூடவா?" என்று கேட்டார் இராமாநுஜர்.

"இல்லை, இல்லை; அநாவஸ்யமானவற்றை நீக்குவது", என்றார் குரு.

"எனது திரிதண்டத்தை நீக்கவேண்டுமோ?"

"இல்லை, வேண்டியதில்லை."

"நல்லது. அப்படியாயின், மிக மிகச் சந்தோஷம். எனது தாசரதியை நான் நீக்கவேண்டியதில்லை. அதுபற்றி எனக்குச் சந்தோஷம் பொங்குகிறது."

"அது எப்படி? அதுவும் உலக பந்தம்தானே. அது கூடாதே."

"அது உலகபந்த மாகாது. தாசரதி எனது தண்டமென்பதையும், நான் அதை விட்டுவிட முடியாதென்பதையும் தாங்கள் அறியீர்களா?" என்றார்.

ஸ்ரீராமாநுஜருக்குத் தாசரதியினிடத்திலே அவ்வளவு பிரியம். ஒரு நாள் இரவு ஸ்ரீ ராமாநுஜர் தாம் படுக்கச் செல்லுமுன் திவ்யப் பிரபந்தத்திலேயொரு பாடலை யெடுத்துப் பாடினார். அவர் பக்கத்திலே பணிவிடை செய்து கொண்டிருந்த தாசரதி அப் பாட்டிலே லயமாகி அசைவற்று ஸ்தம்பித்து நின்றார்; அவருடைய மனமானது வெகு தூரத்திலே சென்றிருந்தது.

ஸ்ரீ ராமாநுஜர் அதைக் கவனித்து "வேதங்களே திவ்யப்பிரபந்தமாக உருவெடுத்து நமக்கு வந்திருக்கின்றன; சடகோபர் மனித வர்க்கத்துக்குப் பேருபகாரம் செய்துவிட்டுப் போயிருக்கின்றார்," என்று தாமே சொல்லிக் கொண்டார்.

இன்னொரு சமயத்திலே ப்ரஹ்ம உற்சவம் நடந்து கொண்டிருந்தது; எம்பெருமானை ஊர்வலமாகக் காவிரிக்குக் கொண்டு சென்றார்கள்; ஸ்ரீ ராமாநுஜர், கூடப்போனவர், தாசரதியின் கையைப் பிடித்துக்கொண்டு சென்றார். காவிரியிலே ஸ்நாநம் முதலியன செய்து, திரும்பிவரும் பொழுது, ஸ்ரீ ராமாநுஜர் தநுர்தாசருடைய கையைப் பிடித்துக்கொண்டு வந்தார். "ஜாதிவித்தியாசம் கவனியாது ஸ்ரீ ராமாநுஜர் எல்லோருடைய கைகளையும் பிடித்துக்கொண்டு, எல்லோரையும் தொட்டுக்கொண்டு இப்படியெல்லாம் திரிகிறாரே" என்று சிஷ்யர்கள் ஆச்சர்யமும் வருத்தமும் அடைந்தவர்களானார்கள்; "ஸ்வாமி! தாங்கள் இப்படிச் செய்யலாமோ?" என்று கேட்டார்கள்.

ஸ்ரீ ராமாநுஜர் "ஆண்டான் பிராஹ்மணன் என்பது உங்களுக்குத் தெரியாதா? பிறப்பிலும் குடும்ப சம்பந்தங்களிலும் அவன் எனக்கு அந்தஸ்திலே சமமானவன் என்பதும் உங்களுக்குத் தெரியாதா? நான் அவனுடைய கையைப் பிடித்துக்கொண்டதனால், அவனை நான் அகௌரவமாக நடத்தினேன் என்று அவன் நினைத்துக்கொள்ளலாம். ஆனால் தநுர்தாசன் அப்படி நினைக்க முடியாது. அவனுக்குத் தான் பிராஹ்மணன் என்ற ஜாதி கர்வம் இல்லை; நான் அவனுடைய கையைப் பிடித்துக்கொண்டதனாலே, அவன் சந்தோஷப்படுவானே யொழிய வருத்தப்படமாட்டான்" என்றார்.

இன்னொரு விதமாகவும் இந்த விஷயம் வர்ணிக்கப் படுகிறது. "தநுர்தாசன் மகா பரிசுத்த புருஷன்' என்று ஸ்ரீ ராமாநுஜர் கருதி, அவனுடைய கையைப் பிடித்துக் கொண்டார்" என்றும் சொல்லப்படுகிறது. ஸ்ரீ ராமாநுஜர் கூறியதைச் சிஷ்யர்கள் ஒப்புக்கொண்டாராயினும், அநுபவத்திலே ஜாதிவித்தியாசத்தையொழித்துவிடுதற்கு அவர்களால் ஒப்ப முடியவில்லை. அன்றுமுதல் அவர்கள் தநுர்தாசனை அலக்ஷியமாக நடத்தியதோடு அவனை இழிந்தவனென்றும் கருதினார்கள். இது சங்கதி ஸ்ரீ ராமாநுஜருக்குத் தெரியவந்தது. "இந்தச் சிஷ்யர்கள் கர்வம் மிகுந்தவர்களாயிருக்கின்றார்கள்; இவர்களுக்குப் புத்தி வரும்படிச் செய்ய வேண்டும்" என்று ஸ்ரீ ராமாநுஜர் நினைத்து ஒரு யோசனை பண்ணினார். அவர் தமது அந்தரங்க சிஷ்யர்களுள் ஒருவனை

அழைத்து, "உன்னிடத்திலே நான் வைத்திருக்கும் நம்பிக்கை இவ்வளவென்று உனக்குத் தெரியும்; ஆதலால், இன்று எவரும் அறியாமல் ஒரு காரியம் செய்வதற்காக உன்னைக் கூப்பிட்டேன்; சிஷ்யர்கள் தங்களுடைய வஸ்திரங்களை உலர்த்தியிருக்கும் அறைக்குச் சென்று ஒவ்வொரு வஸ்திரத்திலும் ஓரத்திலே ஒரு சிறிது கிழித்துக்கொண்டு வந்துவிடவேண்டும். ஜாக்கிரதை! இது எவருக்கும் தெரியக்கூடாது," என்று சொல்லியனுப்பினார்.

மறுநாள் விடிந்தது; சிஷ்யர்கள் ஸ்நாநம் செய்து, மடியுடுத்துக்கொள்வதற்காகத் தாங்கள் முந்தியநாள் உலர்த்தி யிருந்த வஸ்திரங்களை யெடுத்துக்கொண்டார்கள். ஒவ்வொருவனும் மற்றவனைப் பரிகாசத்துக்குக் கிழித்திருக்கிறதாகக் கூறி, முறுமுறுத்துக்கொண்டான். எல்லோருடைய வஸ்திரங்களும் கிழிபட்டிருப்பது கண்டு, எல்லோருக்கும் கோபம் வந்துவிட்டது; எல்லோருமாகச் சேர்ந்து வாயில் வரக்கூடாத துர்ப்பாஷைகளை யெல்லாம் கூறி, நிந்தித்தார்கள்; ஸ்ரீ வைஷ்ணவனுடைய நாக்கினின்றும் இதுகாறும் ஒருபொழுதும் கிளம்பியிராத வசை மொழிகளெல்லாம் தாராளமாகப் பிரயோகிக்கப்பட்டன.

ஸ்ரீ ராமாநுஜர் இந்தச் சத்தத்தைக் கேட்டுத் தமக்கு ஒன்றும் தெரியாததுபோல நடித்துக்கொண்டு, அவர்களைக் கூட்டிக்கொண்டு வரும்படி சொல்லி, "சங்கதி என்ன? ஏன் இவ்வளவு கூச்சல் போடுகிறீர்கள்?" என்று கேட்டார். அவர்கள், நடந்த சங்கதியைச் சொல்ல,

ஸ்ரீ ராமாநுஜர் "சீச்சீ! இவ்வளவுதானு? இதற்காகவா இப்பெருங் கூச்சலும் போராட்டமும்? நீங்கள் பேசிய துர்ப்பாஷைகளைப் பறையனும் வழங்கமாட்டானே" என்று வெகுவாகக் கடிந்துகொண்டார்.

சின்னுட்கள் கழிந்தன; தநுர்தாசனுடைய பெருமையைச் சிஷ்யர்கள் இதுவரை அறியச் சந்தர்ப்பம் வாய்க்கவில்லையாதலால், தநுர்தாசனுடைய பெருமையை அவர்களுக்கு விளக்கிக் காட்ட எண்ணினுர். ஒருநாள் ஸ்ரீ ராமாநுஜர் தநுர்தாசரை அஸ்தமித்தவுடனே வரவழைத்து, சூர்யோதயமாகும்வரையில் அவருடன் பலஅரிய விஷயங்களைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தார்; இதற்கு முன்னரேயே இவர், கர்வம் மிகுந்த தமது சிஷ்யர்களைக் கூப்பிட்டு, "இன்றிரவு தநுர்தாசன் வீட்டி விராதபடி செய்துவிடுகிறேன்; அவன் வீட்டினுள்ளே நுழைந்து அவனுடைய மனேவியினுடைய சரீரத்தி லணிந்திருக்கும் நகைகளை யெல்லாம் கழற்றித் திருடிக்கொண்டு வந்துவிடவேண்டும்" என்று ஆக்ஞாபித்திருந்தார். அவ் வுத்தரவின்படியே ஸ்ரீ வைஷ்ணவர்கள் தநுர்தாசனுடைய வீட்டினுள்ளே நுழைந்தார்கள்; அங்கே ஹேமாம்பாள் படுத்து உறங்கிக்கொண்டிருந்தாள்; விளக்குச் சிறிதாக எரிந்துகொண்டிருந்தது; இந்த ஸ்ரீ வைஷ்ணவர்கள் அவளுடைய சரீரத்தின் ஒவ்வொரு அங்கங்களிலுமுள்ள நகைகளை யெல்லாம் ஒவ்வொன்ருகக் கழற்றினுர்கள். ஹேமாம்பாள் விழித்துக்கொண்டாள்; 'ஆயினும், 'திருடர்கள் ஸ்ரீ வைஷ்ணவர்களாதலாலே

அவர்களுடைய கார்யத்துக்கு இடையூறு செய்யக்கூடாது' என்று கருதி, அசைவற்று, உறங்குபவள்போலவே படுத்துக்கொண்டிருந்தாள். இவள் ஒரு பக்கம் சாய்ந்து படுத்திருந்ததனாலே ஒரு பக்கத்தி லணிந்திருந்த நகைகளை அவர்கள் சுலபமாகக் கழற்றிக்கொண்டார்கள்; மறுபக்கத்திலும் கழற்ற யத்தனித்தார்கள்; இது தெரிந்து அவள் அம் மறுபக்கமும் புரண்டுகொடுத்தாள். ஆனால், அவர்கள், 'அவள் விழித்துவிட்டாள்' என்று நினைத்துப் பயந்து, அதுவரை தாங்கள் திருடியவற்றை யெடுத்துக்கொண்டு ஓடி விட்டார்கள்.

ஸ்ரீ ராமாநுஜர் இந்தச் சங்கதியைத் தந்திரமாகத் தெரிந்துகொண்டு, தநுர்தாசனை வீட்டுக்கு அனுப்பி விட்டு, ஸ்ரீ வைஷ்ணவர்களை நோக்கி, "நீங்கள் தநுர்தாசனைப் பின்தொடர்ந்து, அவனுடைய செயல்களைக் கவனித்துவாருங்கள்!" என்று ஆக்ஞாபித் தனுப்பினார்.

தநுர்தாசன் வீடுசென்றான்; மனைவி விழித்திருந்தாள்; 'இச் சமயத்திலே அவள் விழித்திருப்பதற்குக் காரணம் என்ன?' என்று அவன் ஆச்சர்யப்பட்டான்; இன்னும் அவளுடைய ஒருபக்கத்திலே மாத்திரம் ஆபரணங்கள் இருப்பதைப் பார்த்து இன்னும் அதிக ஆச்சர்ய மடைந்தான்.

"அடியே! ஹேமாம்பாள்! என்ன இது? என்ன வேடிக்கை இது?" என்று கேட்டான் தநுர்தாசன்.

அவள் புன்னகை புரிந்துகொண்டே "இது வேடிக்கையன்று" என்று சொல்லிவிட்டுச் சங்கதிகளை யெல்லாம்

நடந்தவாறு ஆதியோடந்தமாகக் கூறினாள். தநுர்தாசன் சந்தோஷத்துடனே கேட்டுக்கொண்டே வந்தான்; அவள் "எனது ஒரு பக்கம் முழுதும் உள்ள ஆபரணங்களை அவர்கள் கழற்றிக்கொண்டவுடனே, மறுபக்கமும் அவர்கள் சுலபமாகக் கழற்றிக்கொள்ளுமாறு மறுபக்கம் புரண்டு கொடுத்தேன்; உடனே அவர்கள் பயந்து ஓடிவிட்டார்கள் போலிருக்கிறது" என்று கூறிக்கொண்டே வருகையில், இதைக் கேட்டவுடனே கோபம் வந்துவிட்டது தநுர்தாசனுக்கு. "ஆ! ஆ! அவர்கள் குருமூர்த்தியினுடைய சிஷ்யர்களாயிற்றே; அவர்களுக்குக் குறைவுபட நடந்துவிட்டாயே; அவர்கள் என்ன செய்தாலென்ன? நீ ஏன் அதைக் கவனிக்கவேண்டும்? அவர்களுடைய பாத தூளியினும் கீழ்ப்பட்டவர்களே நாம்; அவர்களுக்கு நாம் எல்லோரும் அடிமைகளே; அவர்களுடைய கிருபையினாலேயே அல்லவா நாம் உயிர் வாழ்வது? நீ இப்படிப் பொறுக்க முடியாதபடி குற்றம் செய்துவிட்டாயே; இப்பொழுது நீ செய்ய வேண்டியது யாதெனில், மற்ற நகைகளையும் எடுத்துக் கொண்டு நமது ஆசார்யர்களுடைய சிஷ்யர்களிடம் சென்று, அவர்களுடைய பாதங்களினடியிலே வைத்துவிட வேண்டியதே; அவர்களிடம் உடனே மன்னிப்புக் கேட்டுக் கொள்ளவேண்டும்" என்றான். அவளுக்கு நாணம் அதிகரித்து, நகைகளையெல்லாம் கழற்றிக்கொண்டு, ஆசார்யருடைய சிஷ்யர்களின் முன்னிலையில் வைத்து அடிபணிவதற்காக, மடத்தை நோக்கிச் சென்றாள். தநுர்தாசனுடைய வீட்டிலே நடந்த சங்கதிகளையெல்லாம் இதற்கு

முன்னமேயே ஸ்ரீ வைஷ்ணவர்கள் ஸ்ரீ ராமாநுஜரிடம் போய்ச் சொல்லிவிட்டார்கள்.

ஸ்ரீ ராமாநுஜர் பிராஹ்மணர்களை நோக்கி, "பார்த்தீர் களா! உங்களுடைய பிராஹ்மண யோக்கியதை எவ்வள வென்று? நீங்கள் மஹரிஷிகளின் சந்ததியார்! எனக்குச் சிஷ்யர்கள்! மோக்ஷ லோகமானது உங்களால் நிரம்பப் பெற்றிருக்கின்றது! தநுர்தாசன் உங்களுடைய பார்வையி லே இழிந்தவன்! ஆ! ஆ! நன்று, நன்று! துணியின் ஓரத் தில் கொஞ்சம் கிழிந்துவிட்டதுபற்றி நீங்கள் புகன்று கொண்ட வசைமொழி பறைச்சியும் புகலக் கூசுவாள்; தன் னுடைய நகைகளெல்லாவற்றையும் அளிக்காது பயமுறு த்திவிட்டாளென்று தநுர்தாசன் தனது மனைவிமேல் கோ பித்துக்கொள்ளுகிறான்; அன்றொருநாள் நான் அவனுடைய கையைப் பிடித்துக்கொண்டு நடந்து தீட்டுப்பட்டுவிட்டே னென்று நீங்கள் நினைத்தீர்கள். ஆனால், நீங்களே தீண்ட லுள்ளவர்கள்; உங்களிடமிருந்து வேண்டிய அசுத்த நினை ப்புக்கள் வெளிப் புறப்படுகின்றன; ஆதலால், அவனுடைய கையைப் பிடித்துக்கொண்டிருந்து அவ் வசுத்தங்களை நீக்கிக் கொள்ளலாமென்று அன்று நான் நினைத்தேன்" என்று கூறினார்.

இந்தத் தநுர்தாசனைப்பற்றிப் பெரியவாச்சான் பிள்ளை யென்பவர் பின் வருமாறு ஒரு விஷயம் எழுதுகிறார். ஒரு நாள் கூரேசர் திவ்யப் பிரபந்தம் பாராயணம் பண்ணிக் கொண்டிருந்தார்; அப்போது அவ் வழியே வந்த தநுர்

தாசர் அந்த திவ்யப் பிரபந்தத்தைக் கேட்டு, ஆநந்தம் மிகுந்து அடக்க முடியாது கண்ணீர் சொரிந்தார். "ஆ! ஆ! என்ன இளக்கமுள்ள ஹிருதயம்! எனது வித்தையையும், புத்தி சமர்த்துக்களையும், எல்லாவற்றையும் இந்த ஹிருதயம் எனக்குக் கிடைக்குமானால் அதற்கு ஈடாகக் கொடுத்துவிடத் தயாராயிருக்கிறேன்" என்றார் கூரேசர்.

தநுர்தாசரைப்பற்றி இன்னும் ஒன்று கூறப்படுகிறது. ஸ்ரீ ரங்கநாதப்பெருமானைப் பவனி கொண்டுவரும் சமயங்களில், தநுர்தாசர், அவரை நிந்திக்கத் துணிகின்ற எவனையும் வெட்டிவிடத் தயாராக உருவின கத்தியுடனே ஸ்வாமிக்கு முன்னே நடந்து செல்வது வழக்கம். இவருக்கு மகாமதி யென்றும் ஒரு பெயர் உண்டு.

ஆண்டானைப்பற்றிப் பேசிவருகையில், இடையில் தநுர்தாசனைப்பற்றி இரண்டொரு வார்த்தை கூறவேண்டியிருந்தது. மறுபடியும் நாம் ஆண்டானிடம் செல்வோம்.

ஸ்ரீமகாபூர்ணருக்கு அத்துழா யென்றொரு பெண் இருந்தாள், அவளுக்கு விவாகமானதும் அவள் தன் புருஷன் வீட்டுக்குச் சென்று மாமியாருடனே வசித்துவந்தாள். ஒருநாள் அவள் தனது மாமியாரை நோக்கி, "அம்மே! நான் ஆற்றுக்குக் குளித்து வருதற்குத் தனியாகச் செல்லவேண்டியிருக்கின்றதே; நீங்கள் இன்றுவது என்னுடனே வரக் கூடாதா?" என்று கேட்டுக்கொண்டாள். அதற்கு மாமியார் "அப்படியா? என்னையா உன்னுடன்கூப்பிடுகின்றாய்? உனது

பிறந்தகத்திலிருந்து நீ கொண்டுவந்த பணிப் பெண்கள் எங்கே? அவர்களுக்குப் பதிலாக என்னையா கூப்பிடுகின்றாய்?" என்று கோபத்துடனே, அத்துழாயின் குடும்பத்தின் வறுமையைச் சூசிப்பித்து இம்மாதிரி மறுமொழி கூறினாள். இது அப் பெண்ணுக்கு மிக மனவருத்தத்தை யுண்டாக்கிற்று; அவள் தனது பிதாவினிடம் சென்று "அப்பா! நமது வறுமைதான் என்னே! மாமியார் இம்மாதிரி கேலி பண்ணி நிந்திந்துக் கோபித்தாள்" என்று கூறினாள். மகாபூர்ணர் எல்லாவற்றையும் சாந்தமாகக் கேட்டுவிட்டு, தமது அருமைப் பெண்ணைப் பார்த்து, "அம்மே! என்னிடம் அதைப்பற்றிச் சொல்லவேண்டாம்; எனக்கு என் அக்கவலை! அது உங்களுடைய ஆசார்யருடைய வேலை" என்று கூறி யனுப்பிவிட்டார்.

அத்துழாய் ஸ்ரீ ராமாநுஜரிடம் சென்று, அவரது இரு பாதங்களிலும் விழுந்து, நமஸ்கரித்து "ஸ்வாமி! எனது மாமியார் என்னை எங்கள் வறுமையைச் சூசிப்பித்து நிந்தித்தாள்; எனது பிதாவினிடம் வந்து சொன்னேன்; அவர் அது தங்களுடைய வேலையென்று சொல்லிவிட்டார்; நான் என் செய்வது?" என்று பிரார்த்தித்துக் கேட்க, ஸ்ரீ ராமாநுஜர் மிகுந்த பொறுமையுடனே அவள் கூறியதை யெல்லாம் கடைசிவரையில் கேட்டுவிட்டு, அருகே நின்றுகொண்டிருந்த ஆண்டானைச் சுட்டிக்காட்டி, "இவன்தான் உனது பிறந்தகத்து வேலைக்காரன்; அவனை யிட்டுக் கொண்டுபோ! அவன் சகல வேலைகளையும் செய்வான்" என்று கூறினார்.

தாசரதி அவளுடனே சென்று அவளுடைய புருஷன் வீட்டிலே வேலைக்காரனாகி, உற்சாகத்துடனும் சந்தோஷத்துடனும் அங்குள்ள சகல வேலைகளையும் பார்த்துவந்தான். அந்த வீட்டிலே யிருந்த மூத்தவர்கள் பார்த்து பயந்து நடுங்கினார்கள்; "என்ன இது? மகா பக்தன்; ஆசார்யருடைய வலக்கைபோன்ற சிஷ்யன். இங்கு வந்து இழிந்த வேலைக ளனைத்தும் எள்ளளவும் சங்கோச மில்லாமல் செய்கின்றானே," என்று கருதியவர்களாய் அவனிடம் சென்று, "ஸ்வாமி! தாங்கள் இவ்வீட்டிலே வந்து இழிந்த வேலைகள் புரியும் பொருட்டு நாங்கள் என்ன குற்றம் செய்தோம்?" என்று கேட்டார்கள்.

"எனக்கொன்றும் தெரியாது; எனது குரு என்னை யிங்கே யனுப்பினார்; நான் இங்கே யிருக்கிறேன்; என்னைத் தொந்தரவு செய்யாதீர்கள்!" என்று ஆண்டான் பதில் கூறினான். அவர்கள் மகாபூர்ணரிடம் சென்று, "ஸ்வாமி! என்ன இது? அநியாயமா யிருக்கிறதே! எங்களை யடியோடு நசிப்பித்துவிடக் கருதிவிட்டீர்களா? மகா பக்தராகிய ஆண்டான் எங்களுக்குக் குற்றேவல் புரியலாமா? அவரைக் கூப்பிட்டுக் கொள்ளுங்கள்!" என்று கெஞ்சிக் கேட்டுக் கொண்டார்கள்.

மகாபூர்ணர் "எனக்கென்ன தெரியும்? போய் ஸ்ரீ ராமாநுஜரைக் கேளுங்கள்!" என்றார். அவர்கள் அப்படியே ஸ்ரீ ராமாநுஜரிடம் சென்று கேட்க, அவர் "ஆம்; உங்கள் வீட்டு மருமகளுக்குப் பிறந்தகத்திலிருந்து வேலைக்

காரர் வரவில்லையென்று அவளுடைய மாமியார் பரிகாசம் பண்ணினாளாம்; அவளுடைய பிதாவுக்கு நான் வேலைக் காரன்; ஆண்டானும், என்னுடைய மற்ற சிஷ்யர்களும் அதேமாதிரி வேலைக்காரர்களேயாவர்; அவன் உங்கள் மன மொத்து வேலை செய்யாவிட்டால், நான் வரத் தயாரா யிருக்கின்றேன்; அவன் உங்கள் வீட்டிலேவந்து அவளுக்கு வேலை செய்வது உங்களுக்குப் பிடிக்கவில்லையானால், அவன் இங்கிருந்தே அவ் வேலைகளைச் செய்வான்'' என் றார். அவர்களுக்கு வெட்கம் அதிகரித்துத் தலை குனிந்தார் கள். 'இன்னும் அதிகமாக மானத்தைக் கெடுக்காமல் ஸ்ரீராமாநுஜர் இவ்வளவோடு விட்டாரே' என்று நினைத்து, அவர்கள் அவரிடம் விடைபெற்றுச் சென்றார்கள்.

ஸ்ரீ மாரநேரி நம்பியார் பரமபத மடைய, அவருடைய சரீரத்தை யெடுத்து, மகாபூர்ணர், ஒரு பிராஹ்மணன் மரித்துவிட்டால் தகனக் கிரியைகள் செய்வதுபோல, தகித்துச் செய்யவேண்டிய கிரியைகளை யெல்லாம் செய்து முடித்தார். இந்தச் சங்கதி ஸ்ரீ ராமாநுஜருக்குத் தெரியவந் தது. அவர் உடனே மகாபூர்ணரை வரவழைத்து "ஸ்வா மி! ஜனங்கள் வர்ணாஸ்ரம தர்மவிதிகளை மீறுவது சகஜ மாய்விட்டது; அவர்கள் அந்தத் தர்மத்தை அணுவள வேனும் பிசகாமல் அநுசரிக்கும்படி செய்ய நான் இரவு பகலாக எவ்வளவோ பாடுபட்டுக்கொண்டிருக்கின்றேன்; நீங்கள் வர்ணாச்ரம தர்ம விதிகளை மீறினால் என்ன செய் வது?'' என்று கேட்டார்.

ஸ்ரீ ராமாநுஜருடைய குருவாகிய மகாபூர்ணர் "அப்படியே; ஸ்வாமி! தாங்கள் சொல்வது தப்பு; எம்பெருமான் இக்ஷ்வாகு வம்சத்திலே கிருகஸ்த தர்மம் அநுஷ்டித்துக் காட்டும்பொருட்டுப் பிறந்தாரல்லவா? நான் அந்த ஸ்ரீ ராமச்சந்திரரைப் பார்க்கிலும் பெரியவனு? அவர் தமது சொந்தக் கைகளினாலேயே ஒரு பக்ஷியாகிய ஜடாயுவைத் தகிப்பித்து அதற்குக் கிரியைகள் செய்தாரே. ஒரு பக்ஷிக்குச் சமமாகவாவது மாரனேரி நம்பியைக் கருதக்கூடாதா? இன்னொரு திருஷ்டாந்தம் கேளுங்கள்! யுதிஷ்டிரர் என்ன ஜாதி? க்ஷத்திரியர். விதுரர் என்ன ஜாதி? சூத்திரர். விதுரரைத் தகிப்பித்துக் கிரியைகள் செய்தவர் யார்? யுதிஷ்டிரர். ஸ்ரீ சடகோபருடைய வார்த்தைகளை ஒரு பைத்தியக்காரனுடையவையைப்போலக் கருதுவதா?" என்றார்.

ஸ்ரீ ராமாநுஜர் ஆழ்ந்து யோசிக்கலானார். "ஆம்; உண்மையே" என்று கூற, மகா பூர்ணர் "ஸ்வாமி! இந்த மாரனேரி நம்பி விஷயத்திலே எனக்கொரு சந்தேகம்; இவர் தம் சரீரத்தைப் போட்டுவிட்டுப் போகும் காலத்திலே ஒருதரம்கூட 'நான் எம்பெருமானுடைய பாதாரவிந்தங்களிலே சரணாகதி யடைகிறேன்; மகாத்மா ஸ்ரீ ஆளவந்தாரிடத்திலே புகுகிறேன்' என்று சொல்லவில்லையே; இதற்குக் காரணம் என்ன?" என்று கேட்டார்.

ஸ்ரீ ராமாநுஜர் "அதற்கென்ன இப்பொழுது? அவ்விரண்டு சுலோகங்களையும் தியானஞ் செய்துகொண்டிருந்திருக்கலாம்" என, மகாபூர்ணர் "எந்த இரண்டு சுலோகங்

கள்?" என்றார். ஸ்ரீ ராமாநுஜர் "சரணாகதியைப்பற்றி ராமாயணத்திலும், ஸ்ரீ பகவத்கீதையிலும் கூறப்படும் சுலோகங்கள்" என்று மறுமொழியுரைத்தார்.

"நல்லது! காமப் பைத்தியம் பிடித்திருந்தவர்களுடைய வார்த்தைகளையா தியானம் செய்வது?"

"அவர்களுடைய காதற்பொருளாகிய மகா மாதாவின் கிருபையே எம்பெருமானிடத்திலே நமக்காகப் பரிந்து பேசுவது."

ஸ்ரீ ராமாநுஜரும் மகா பூர்ணரும் மாரனேரி நம்பி விஷயத்தைப்பற்றி இவ்விதமாக ஒருவாறு பேசி முடித்தார்கள்.

மகாபூர்ணர் மாரனேரி நம்பிக்கு ஈமக் கிரியைகள் செய்து, பிராஹ்மணன் செய்யத் தகாத ஒரு கார்யம் செய்ததனாலே மகாபூர்ணருடைய பந்துக்களும் ஸ்ரீரங்கத்து ஸ்ரீ வைஷ்ணவர்களும் அடிக்கடி யவரை நிந்தித்து இகழ்ந்தார்கள். அத்துழாயின் மாமனார் வீட்டில் இதையொரு காரணமாகக் கொண்டு மகாபூர்ணரை யெப்பொழுதும் நிந்திப்பது வழக்கமாய்விட்டது; மகாபூர்ணருடைய மகிமையும் பெருமையும் அவர்களுக்கென்ன தெரியும்? கழுதை யறியுமோ கற்பூர வாசனை? அத்துழாய் பொறுத்துப் பொறுத்துப் பார்த்தாள்; பொறுக்க முடியும் பொறுமைக்கும் ஓர் அளவு இல்லையா? ஒருநாள் அவர்கள் மகா பூர்ணரை அளவு கடந்து இகழ்ந்தார்கள்; அச் செய்கை

அத்துளையினுல் பொறுக்க முடியவில்லை; முடிவில் அவள் ஓர் விதமாகத் தீர்மானித்துக்கொண்டாள்; அதாவது, மரணம் நேர்ந்தாலும் சரி! அவர்களுக்குப் பதில் மொழி புகல்வதென்று. இத்தனை நாட்களாக அவள் மிகப் பொறுமையுடனே அடக்கிவைத்திருந்த கோபமானது இன்று வெடித்துவிட்டது. "அப்படியானல் ஸ்ரீ சடகோபருடைய பாதாரவிந்தங்களின்மீது ஆணைப்படிக்கு, ஸ்ரீரங்கநாதப் பெருமானை நீங்கள் எவரும் இனிமேல் பூஜிக்கலாகாது; அவருடைய பிரசாதங்கள் எதையும் அங்கீகரித்துக் கொள்ளவும் கூடாது; அவர் திருப்பாணாழ்வார் என்னும் பறையரைத் தம்மிடத்திலே சேர்த்துக்கொண்டு தீட்டுப் பட்டுவிட்டார்; இனி நீங்கள் யாரும் அந்த க்ஷேத்திரத்தினுள்ளே கூடப் போகலாகாது," என்று அத்துளை கர்ஜித்தார். அன்றுமுதல் அவள் தனது புருஷன் வீட்டிலிருந்து பிரிந்து, தனது பிறந்தகம் வந்து சேர்ந்து, தனது பிதவுடனே வாழ்ந்துவந்தாள்.

ஒருநாள் ஸ்ரீ ராமாநுஜர் தெருவிலே போய்க்கொண்டிருக்க ஒரு ஊமையைக் கூப்பிட்டுத் தனியே ஒரு அறைக்குள்ளே அழைத்துக்கொண்டுபோய், கதவைச் சாத்தித் தாளிட்டுவிட்டு, தமது பாதத்தை ஸ்பர்சிக்கும்படி அவனுக்கு ஆக்ஞை செய்தார். அவன் அப்படியே செய்ய, அவனுக்கு மகா மந்திரோபதேசம் செய்து, அவனை ரக்ஷித்தார். ஒச்சமயத்திலே அவ்வழியே போய்க்கொண்டிருந்த ஆழ்வானுக்கு இச் சங்கதி தெரியவந்தது. அவன் கதவிலே

யிருந்த ஒரு ஓட்டை வழியாக உள்ளே நடந்த யாவற்றையும் பார்த்தான். "ஆ! நான் வேத சாஸ்திரங்களை வீணே படித்து அநியாயமாக எனது வாணுளை வீணுளாக்கினேனே. நான் ஊமையாய் எழுத்து வாசனேயே யில்லாமலிருந்திருந்தால், குருமூர்த்தி என்மீதும் இரங்கி, இப்பொழுது அந்த ஊமைக்குத் தெளிவாகக் காண்பித்துக் கொடுத்ததுபோல, எனக்கும் தெளிவாக மோக்ஷ மார்க்கத்தைக் காண்பித்திருப்பாரே" என்று ஆழ்வான் மனஸ்தாபப்பட்டான்.

ஒரு சமயத்திலே ஸ்ரீ கோஷ்டிபூர்ணர் தியானத்திலிருக்கையில், ஸ்ரீ ராமாநுஜர் அவரிடம் சென்று, "ஸ்வாமி! தாங்கள் தியானம் செய்வது எதை?" என்று கேட்டார். "மெத்த சந்தோஷம்; நான் எனது குருமூர்த்தியையே தியானிக்கின்றேன். அவர் காவிரியிலே ஸ்நாநம் செய்யும்பொழுது, பாதி சரீரம் தண்ணீரில் அமிழ்ந்திருக்க, பாவன மந்திரத்தை யுச்சரித்துக்கொண்டிருப்பாரே; அதே மாதிரியாக நான் அவரை என் மனத்தின் முன்னே நிறுத்தித் தியானம்செய்கிறேன். அவருடைய நாமத்தைத் தவிர வேறு மந்திரம் இல்லை. ஆத்திரம் மிகுந்த சிஷ்யனுக்கு அவனுடைய குருவே தியானத்துக் குரிய மிகமிகச் சிரேஷ்டமான வஸ்து; அவருடைய நாமமே மந்திரங்களுக்குள்ளே மிகமிகப் பரிசுத்தமானது" என்று ஸ்ரீ கோஷ்டிபூர்ணர் மறுமொழி கூறினர்.

அநந்தார்யர் என்று ஒரு சிஷ்யர் திருப்பதியிலே ஸ்ரீ ராமாநுஜர் பெயரால் ஒரு புஷ்பத்தோட்டம் உண்டா

க்கித் தினந்தோறும் ஸ்ரீ வேங்கடேசப்பெருமானுக்குப் புஷ்பமாலை கொடுத்துக்கொண்டு வந்தாரென்று முன்னமேயே கூறியிருக்கின்றோம். இவர், திருப்பதியிலே ஒரு தடாகமும் வெட்டி, அதற்கு "ஸ்ரீ ராமாநுஜம்" என்று பெயருமிட்டார். இந்தக் குளம் வெட்டும் வேலை நடந்து கொண்டிருந்தபொழுது ஒருநாள் அநந்தார்யர் மிகவும் களைத்துப் பலவீனமா யிருந்தபொழுதிலும் வேலைக்காரர்களுடனே தாமும் சேர்ந்துகொண்டு வெட்டுவதும் மண்ணெடுத்துக் கொண்டுபோய்ப் போடுவதுமாக வேலை செய்தார்; ஒரு பெரிய கூடையிலே மண்ணெடுத்துத் தத்தித் தள்ளாடிக்கொண்டு குளத்திலிருந்து வெளியே போய்க் கொண்டிருந்தார்; இவர் கஷ்டப்பட்டு மண்கூடையைச் சுமந்துகொண்டு போவதை அவருடைய சிஷ்யர்களுள் ஒருவன் பார்த்து, அக் கூடையை அவரிடமிருந்து தான் வாங்கிக்கொள்ள முயற்சித்தான். ஆழ்வானுக்கு வந்த கோபத்துக்கு ஓரளவே யில்லை. "சீ! தொடாதே! நான் இக் கூடையைக் கீழே வைத்துவிடுவேனானால் பலஹீனனாய்விடுவேன்; ஆனால், நீ அதைத் தொட்டுவிட்டால் உனது கை யொடிந்து விழுந்துவிடும்; ஜாக்கிரதை" என்றான் ஆழ்வான். ஆனால், அந்தச் சிஷ்யன் வயது மிகுந்தவனா யிருந்ததனாலே அநந்தார்யருடைய மிரட்டுக்களுக்குப் பயப்படுகிறவனா யில்லை; ஆகையால், அவன் அநந்தார்யருடைய வார்த்தைகளை லக்ஷியம் செய்யாமல் அவரிடமிருந்து அக் கூடையைப் பிடுங்கப்போனான். அநந்தார்யர் ஒருவித இகழ்ச்சிச் சிரிப்புச் சிரித்து "என்ன! எனது ஜீவ

னத்தைக் கெடுக்க எண்ணிவிட்டாயா? நல்ல சிஷ்யன் எனக்கு வந்து வாய்த்தாய்; வேண்டுமானால், நீயும் இன்னொரு கூடையெடுத்து ஈஸ்வரனுக்குத் தொண்டுபுரிவதுதானே'' என்றார்.

இன்னொரு நாள், அவர் தடாகத்தில் மண் வெட்டிக் கொண்டிருந்தார்; அப்பொழுது அவருடைய மனைவி பூர்ண கர்ப்பம். ஆயினும், அவர் அவளுடைய தலைமேலே ஒரு கூடை மண்ணை ஏற்றிவிட்டு, கொண்டுபோய்க் கொட்டி வரும்படி சொல்லிக்கொண் டிருந்தார். அவ் வுத்தமியும் அப்படியே செய்துவர, ஸ்ரீ வேங்கடேசப் பெருமான் பார்த்தார்; அவருக்குப் பொறுக்க முடியவில்லை. என்ன அநியாயம் இது? பூரண கர்ப்பிணி மண்கூடையை யெடுப்பதாவது? இதனால் அவள் புருஷனுடைய சிஷ்யர்களுள் ஒருவன் போல ரூபங்கொண்டு பாதிவழியிலே தோன்றி, அக்கூடையைத் தமது கையிலே வாங்கி, அதைக் கொண்டுபோய்க்கொட்டினார். "புருஷனுடைய உத்தரவுதானுக்கும்'' என்று நினைத்துக்கொண்டு அவ் வுத்தமி தான் கொண்டுசெல்லும் கூடையைப் பாதி வழியிலே அந்தப் போலிச் சிஷ்யன் கையிலே கொடுத்துவிட்டு வந்துகொண் டிருந்தாள். அவள் வெகு சீக்கிரம் போய்விட்டு வருவதை அவளுடைய புருஷன் கவனித்து, 'இப்படி யிவள் சீக்கிரம் சீக்கிரம் திரும்பி வருவதற்குக் காரணம் என்ன?' என்று ஆராய்ந்தறிய விரும்பி, நெடுந் தூரத்திலிருந்து கவனித்துப் பார்த்தார்; எவனோ ஒரு வாலிபன் அக் கூடையைப்

பாதிவழியிலே அவளிடமிருந்து வாங்கிக்கொண்டுபோய்க் கொட்டிவிட்டு வருகின்றான்; ஓடினார்; அவனைப் பிடித்தார்; "ஏ! துஷ்டா! போக்கிரிப் பையலே! எனக்கும், நான் ஈஸ்வரத் தொண்டு செய்வதற்கும் இடையிலே நீ யாரடா? ஜாக்கிரதை! ஓடிப்போ! இனிமேல் நீ இங்கிருந்தால் மிகவும் கஷ்டப்படுவாய்'' என்று சொல்லி, அவன்மேல் வெகு கோபமாகப் பாய்ந்தார்; கையிலிருந்த மண்வெட்டியை ஓங்கிக்கொண்டே அவனைத் துரத்தி யோடினார். அவன் கூடையைக் கீழே போட்டுவிட்டு மேலே ஓட முயற்சிக்க, அநந்தார்யர் அவனைப் பிடித்து அவனுடைய முகவாய்க் கட்டையை நோக்கி அடித்தார்; அவன் அவ் வடியையும் பெற்றுக்கொண்டு ஒரே யோட்டமாகக் கோவிலுக்குள்ளே ஓடி மறைந்தான். அநந்தார்யரும் க்ஷேத்திரத்தி னுள்ளே நுழைந்து எங்கெங்கும் தேடி அவனைக் காணமல், மூலஸ்தான விக்கிரகத்துக்குப் பின்னே ஒளிந்திருப்பானோ என்று சந்தேகப்பட்டு, அங்குச் சென்று பார்க்க, ஸ்ரீ வேங்கடேசப் பெருமானுடைய முகவாய்க்கட்டையிலே ஒரு காயம் தென்பட்டது; அங்கிருந்து ரத்தம் பீறிட்டு வழிந்தோடிற்று; அநந்தார்யரும், கோவில் அர்ச்சகர்களும், மற்றவர்களும் கண்டு ஆச்சர்யமும் பயமு மடைந்தவர்களாய், கற்பூரத்தைப் பொடிபண்ணி வைத்துப் போக்கை நிறுத்தினார்கள். இன்றும் அதன் ஞாபகார்த்தமாகத் தினந்தோறும் அவ்விடத்திலே கற்பூரம் அழுத்தப்படுகிறது; அக் கற்பூரம் பிரசாதமாகவும் வழங்கப்படுகிறது.

இன்னொரு சமயத்திலே அநந்தார்யர் தினந்தோறும் எம்பெருமானுக்கு சமர்ப்பிக்கவேண்டிய புஷ்பமாலைக்காகத் தோட்டத்திலே புஷ்பங்கள் கொய்துகொண் டிருக்கையில், ஒரு சர்ப்பமானது அவரைக் கையிலே கடித்துவிட்டது. அவர் அதைப்பற்றிச் சிறிதும் கவலைப்படாது சென்று, தடாகத்திலே ஸ்நாநம் செய்துவிட்டுத் தமது வேலையைப் பார்க்கப் போனார். அவருடைய நண்பர் ஒருவர் இதைக் கவனித்து "என்ன ஐயா இது? தயவு செய்து சிகிச்சை செய்துகொள்ளுங்கள்!" என்று சொல்ல, அநந்தார்யர் பெருநகை புரிந்து "நன்று! நன்று!! இவ்வற்ப சங்கதிக்கு ஏன் இவ்வளவு பெருங் கூச்சல்? கடித்தவன் பலவானானால், நான் விரஜா நதியிலே ஸ்நாநம் செய்து ஸ்ரீ வைகுந்த நாதனுடைய சந்நிதிக்குச் சென்றுவிடுவேன்; கடிபட்டவன் பலவானானால், நான் இத் திருப்பதியிலே ஸ்நாநம் பண்ணி, ஸ்ரீ வேங்கடேசப் பெருமான் சந்நிதியிலே நிற்பேன்" என்றார்.

இன்னொரு சமயத்திலே, அநந்தார்யர் இப்பொழுது மைசூர் என வழங்கப்படும் கோசல தேசத்திலே சிரங்கப்பட்டணத்துக் கருகாமையில் உள்ள தமது ஜனன ஸ்தலமாகிய சிறுப்புத்தூர் என்னும் இடத்துக்குச் சென்றுகொண் டிருக்கையில் தாம் திருப்பதியிலிருந்து புறப்படும்பொழுது கொண்டுவந்திருந்த கட்டுச் சோற்றை பவிழ்த்துச் சாப்பிடுவதற்காக ஒரு நதி தீரத்திலே தங்கின பொழுது, அச் சோற்றிலே எறும்புகள் நிரம்பி யிருந்து

த்தைக் கண்டு ஆச்சர்யமடைந்து, பயந்து, தமது சிஷ்யர்களை நோக்கி, "இவை திருப்பதியிலே பிறந்துள்ளவை; மஹா புண்ணியம் செய்தவை; அங்கிருந்து நாம் இவற்றைக் கொண்டு வந்ததே தப்பு; ஆகையால், ஜாக்கிரதையாக, பய பக்தியுடனே இவற்றைக் கொண்டுபோய்த் திருப்பதியி லேயே விட்டுவிடுங்கள்! அவ் வேழுமலையின் பரிசுத்த பிரதேசத்தினுள்ளே பிறப்பதற்கு நான் கொடுத்துவைக்க வில்லை. அந்தப் பாக்கியம் பெற்ற இந்த எறும்புகளை நான் ஏன் அவ்விடத்தினின்றும் பிரிக்கவேண்டும்?" என்று சொல்லி, அச் சோற்றை யப்படியே கட்டித் திருப்பதிக் குக் கொடுத் தனுப்பிவிட்டார்.

ஒருநாள் அவர் எம்பெருமானுக்கு மாலை யளிப்பதற் காகப் புஷ்பம் தொடுத்துக்கொண் டிருந்தார்; அப்பொழுது ஸ்ரீ வேங்கடேசப் பெருமான் அவரைத் தமது சந்நிதிக்கு வரும்படி ஆக்ஞாபித்தார்; அநந்தார்யர் தமக்குக் காது கேட்காததுபோலப் பேசாம லிருந்துவிட்டார்; மாலை முடி ந்தவுடனே, அவர் க்ஷேத்திரத்துக்குச் செல்ல, எம்பெரு மான் மிகுந்த அதிருப்தியடைந்தவர்போல, "அநந்தா! உனக்கு ஏன் இவ்வளவு கர்வம்? நான் கூப்பிட்டும் நீ கவ னிக்கவில்லையே. உனக்கு நான் அவ்வளவு அலக்ஷியமாய் விட்டேனா?" என்றார்.

அநந்தார்யர் சிறிதும் பயப்படாமல் "எனக்கு அதெல் லாம் தெரியாது; நான் எம்பெருமானுடைய பணிவிடை யிலே அல்லது அவருடைய பக்தர்களுடைய பணிவிடையி

லே மனத்தைச் செலுத்தி யிருக்கும்பொழுது, எனக்கு வேறெதற்கும் கண்களும் கிடையா, காதுகளும் கிடையா,'' என்றார். ஆனால், எம்பெருமான் அதனுடனே நிற்காமல் இன்னும் அநந்தார்யருடைய வாயைக் கிண்ட விரும்பி, ''என்ன? என்னைப் பார்க்கக்கூட உனக்குக் கண்கள் கிடையாதா? நான் சொல்வதைக் கேட்பதற்குக்கூட உனக்குக் காதுகள் கிடையாதா?'' என்று கேட்டார்.

''நல்லது! நான் பேதம் பிரித்து ஏதாவது கூறினேனா? நான் அப்படிக் கூறவில்லையே.''

இது இன்னும் மோசமாய்விட்டது; இதன் ரகஸ்யம் எம்பெருமானுக்கே தெரியவில்லை; ஆதலால், எம்பெருமான் 'கடைசிவரையில் அநந்தார்யரைச் சோதித்துப் பார்த்து விடுவது' என்று தீர்மானித்துக்கொண்டார்.

''நல்லது! அநந்தா! நான் உன்னை யிங்கிருந்து போகும்படி ஆக்ஞாபித்துவிட்டால், அப்பொழுது நீ செய்து வருவதாக நீயே புகழ்ந்துகொள்ளும் பணிவிடை என்ன ஆகும்?''

அநந்தார்யர் சிறிது யோசனை பண்ணினார்; பிறகு மெல்லிய குரலில் அவர் கூறியதாவது—''ஸ்வாமி! அங்கு தான் இருக்கிறது சூக்ஷ்மம்; ஆனால், நான் தோற்றுவிடுவேனென்று நினைக்கவேண்டாம்; நீங்கள் என்னைச் சொல்லும்படி ஆக்ஞாபிக்கிறதினாலே, வாய்விட்டுக் கூறுகிறேன். நம்மாழ்வாருடைய மொழிகளிடத்திலே எனக்கு நம்பிக்

கை யதிகம்; அம் மொழிகளை யெடுத்து ஆராய்ந்து பார்த் தால், இப் பர்வதத்துக்கு உங்களுக்கு முன் பாத்தியஸ்தர் கள் அநேகர் இருக்கிறார்கள். இம் மலையும் க்ஷேத்திரமும் பரமனுடைய பக்தர்களுக்கே சொந்தம்; தாங்கள் நான் வருவதற்கு ஒரு நாளுக்கு முன்னர் வந்தவர்தாம்; நாம் இரு வரும் இங்கு இப் பர்வத சக்தியாகிய ஆதிசேஷனுடைய அநுமதியின்மேலேயே இங்கு இருக்கிறோம். அந்த ஆதி சேஷன் என்னை யிங்கிருந்துபோகச் சொல்வாரானால், அப் பொழுது அதைப்பற்றி யோசனை செய்வேன்; இப்பொ ழுது நாம் வேறு பேச்சுப் பேசுதல் நலம்" என்றார்.

ஸ்ரீ ராமாநுஜருடைய சிஷ்யர்களுக்கே மொத்தத்தில் பயமென்றால் இன்னதென்று தெரியாது; ஒரு சொல் சொல்லிவிட்டால், உயிர் போயினும் அச் சொல்லினின்றும் மாறார்கள்; ஆசார்யருடைய ஆக்ஞையை அணுவளவும் மீறி எதுவும் செய்யாதவர்கள்; குருபக்தியிலே குரங்குப் பிடி யுள்ளவர்கள்; பரமன், பக்தன் இவ்விருவரையும் தவிர வேறு எவரையும் லக்ஷியம் செய்யாதவர்கள்; எம்பெருமா னிலும் எம்பெருமானுடைய தொண்டர்களே பெரியோர் என்று கொண்டு இறுமாப்பு மிகுந்தவர்கள்.

---

7-வது அதிகாரம்:

# ஸ்ரீ ராமாநுஜர் பூப்பிரதக்ஷிணம்

ஸ்ரீ ராமாநுஜர் இவ்விதமாகப் பெருமை பெற்ற பல சிஷ்யர்களுடனே காலங் கழித்துக்கொண்டிருக்கையில் ஒருநாள் அவருடைய சிஷ்யர்களும் மற்றவர்களும் அவரிடம் வந்து "ஸ்வாமி! உலகிலே அதர்மம் அதிகரித்துவிட்டது; தர்மம் க்ஷீணித்துவிட்டது; சாதுக்களுக்குக் கஷ்டம் உண்டாய்விட்டது; துஷ்டர்கள் மிகுந்துவிட்டார்கள்; எம்பெருமானுடைய க்ஷேத்திரங்களிலே பூஜை முறை பிறழ்ந்துவிட்டது; பாபம் பெருகிவிட்டது; புண்ணியம் மயங்கிவிட்டது; ஆகலால், ஸ்வாமி! தாங்கள் ஒருமுறை இப்பரதகண்டம் முழுதும் சுற்றி யாத்திரை செய்து, ஆங்காங்குத் தர்மத்தை நிலைநாட்டி வந்தால் ஜீவகோடிகளுக்குப் பேருபகாரமாயிருக்கும்; எங்களுக்கும் அநுபவமடைதற்கு ஏதுவாகும்," என்று விண்ணப்பித்து நிற்க, ஸ்ரீ ராமாநுஜரும் சம்மதித்து, ஸ்ரீ ரங்கநாதப்பெருமானுடைய க்ஷேத்திரத்தினுள்ளே சென்று, சந்நிதியிலே நின்று கைகூப்பி வணங்கி, "ஆபத்பாந்தவா! அநாதரக்ஷகா! நான் பரதகண்டத்தைப் பூப்பிரதக்ஷிணம் செய்துவரவேண்டுமென்று எனது சிஷ்யர்கள் கோருகின்றார்கள்; இது உனக்குத் திருவுளச் சம்மதமோ?" என்று வினவினர்.

எம்பெருமான் "அப்படியே யாகுக! போய்ச் சீக்கிரம் திரும்பி வருக!" என்று ஆக்ஞாபிக்க, ஸ்ரீ ராமாநுஜர் யாத்திரை புறப்பட்டார். அவர் தமது சிஷ்யர் குழாத்துடனே சோழ தேசத்தினுள்ளே பிரவேசித்துக் கும்பகோணம் முதலிய க்ஷேத்திரங்களைத் தரிசித்துக்கொண்டு, திருவாழி-திருநகரி வந்து சேர்ந்தார். இதுதான் ஸ்ரீபரகாலர் பிறந்த இடம்; ஸ்ரீ ராமாநுஜர் க்ஷேத்திர தர்சனம் செய்து கொண்டு, தாம் இறங்கியிருந்த இடத்துக்குச் செல்லும் மார்க்கத்தில் ஒரு பறைய ஸ்திரீ தம்மை நோக்கி வரக் கண்டார். அவள் பறைச்சி; ஸ்ரீ ராமாநுஜர் ஆசார்யர், பிராஹ்மணர்; பறைச்சி சமீபத்தில் வரலாமா? "அம்மா! நான் அப்பால் போகும்வரையில், ஒதுங்கி நில்!" என்றார் ஸ்ரீ ராமாநுஜர். அவள் ஒரு சிறிதும் விலகாமல் "ஐயா! எப்பக்கம் ஒதுங்கச் சொல்லுகின்றீர்கள்? பிராஹ்மண ஸ்ரேஷ்டராகிய தங்கள் பக்கமா? என் பின்புறத்தேயுள்ள திருக்கண்ணபுரம் என்னும் க்ஷேத்திரத்தின் பக்கமா? பரகாலன் எம்பெருமானைக் கொள்ளையடித்த திருமணன் கொல்லை வலப்பக்கத்திலிருக்கிறதே, அதன் பக்கமா? அல்லது, அங்குக் காவல்நிற்கும் அஶ்வத்த விருக்ஷத்தை நோக்கியா? எனது இடது பக்கம் திருவாழிநாதர் இருக்கிறார், அப்பக்கமா? மகாத்மாவே! என்னை எப்பக்கம் ஒதுங்கச் சொல்லுகின்றீர்கள்?" என்று கேட்டாள்.

ஸ்ரீ ராமாநுஜர் அகப்பட்டுக்கொண்டார்; தலை குனிந்தார். "அம்மா! என்னை மன்னிக்கவேண்டும். மூப்பின் கர்வ

மும் வித்தியா கர்வமும் என்னை அடிமைப்படுத்திக்கொண்டிருக்கின்றன; 'எம்பெருமானுக்குச் சொந்தமானவர்கள் இவர்கள்' என்று நான் அறிந்துகொள்ள முடியாது எனது கண்களை மறைத்துவிடுகின்றன. சந்நியாசியாகியும் கர்வம் தலைக்கேறி முழுமூடனுயிருக்கும் என்னிலும் நீங்கள் எத்தனையோ மடங்கு பெரியோய்'' என்று சொல்லி, அவளை ஸ்ரீ வைஷ்ணவ மதத்தை யநுசரிக்கும்படி செய்து, க்ஷேத்திரத்திலே எம்பெருமானுக்கருகே அவளுக்கொரு இடம் கொடுத்தார்; இன்னும் அவளுடைய பிரதிமை யொன்று ஸ்ரீ ரங்கநாதப்பெருமானுக்கருகே காணப்படுகிறது.

பின்னர் ஸ்ரீ ராமாநுஜர் அங்கிருந்து புறப்பட்டு பாண்டியதேசத்தினுள்ளே நுழைந்து, மதுரைமா நகருக்கு வடக்கே பத்து மைல் தூரத்திலேயுள்ள வ்ருஷபாத்ரி என்னும் ஊரிலே ஸ்ரீசுந்தரபாகுநாதருடைய க்ஷேத்திரத்தைத் தரிசித்துக்கொண்டு, பின்னர் மதுரைமாநகர் சென்று, தமிழ்ச் சங்கத்துப் புலவர்களுடனே பல வாதுக்கள் செய்து ஜயம் பெற்று, விஷ்ணுசித்தர் என்னும் பெரியாழ்வாருடைய இருப்பிடமாகிய ஸ்ரீவில்லிபுத்தூர் சென்று அங்கே ஸ்ரீரங்கமன்னார்மூர்த்தியையும், ஆண்டாள் அம்மையாரையும் தர்சித்து ஆநந்தித்தார். இவ்விடத்திலே ஆண்டாள் அம்மையார் ஸ்ரீ ராமாநுஜரைத் தமக்கு அண்ணனென்று கருதி அவ்வாறே அழைத்தார்.

ஸ்ரீ ராமாநுஜர் பின்னர் குருகூர் சென்றார்; வழியிலே அவர் ஒரு சிறு பெண்ணைச் சந்தித்து ''இன்னும் குரு

ஊருக்கு எவ்வளவு தூரம் இருக்கும்?" என்று கேட்க, அப் பெண் 'அது கூப்பிடு தூரத்தி லுள்ளது' என்று குறிப்பிடும் பொருட்டுத் திவ்யப் பிரபந்தத்திலிருந்து ஒரு பாடலைப் பாடினாள். ஸ்ரீ ராமாநுஜர் அவளுடைய புத்தி சாதுர்யத்தையும் பரிசுத்தத் தன்மையையும் கண்டு வியந்து, அவளுடைய வீட்டுக்குச் சென்று அங்குச் சிறிது சிரமபரிகாரம் செய்துகொண்டார்; பிறகு அங்கிருந்து புறப்பட்டு ராமேஸ்வரம் சென்று, திரும்பி வரும் மார்க்கத்திலே ஸ்ரீ சடகோபரைத் தரிசிப்பதற்காக ஸ்ரீ நகரிக்கு வந்து சேர்ந்தார்; அங்கே ஸ்ரீ ராமாநுஜர் ஸ்ரீ சடகோபர் சந்நிதானத்திலே போய் நின்று "ஸ்வாமி! இன்று வரையில் தங்களுடைய பாதரக்ஷைகளுக்கு "மதுரகவி" என்று வழங்கி வருகின்றது; இனிமேல் அவற்றுக்கு "ஸ்ரீ ராமாநுஜர்" என்று பெயர் அளிக்கக் கிருபை செய்யவேண்டும்" என்று பிரார்த்தித்து நிற்க, "அப்படியே யாகுக!" என்று சந்நிதானத்திலே உத்தரவாயிற்று. இவ்வூரி லிருக்கும்பொழுது தகுந்த ஒரு சிஷ்யனுக்குச் சடகோபர் என்ற நாமம் இட வேண்டுமென்று ஸ்ரீ ராமாநுஜருக்கு ஒரு எண்ணம் உண்டாயிற்று; 'இந்தக் கௌரவத்தை ஏற்றுக்கொள்வதற்கு எவர் தகுந்தவர்?' என்று ஸ்ரீராமாநுஜர் ஆலோசனை செய்யத் தொடங்கினர். அப்பொழுது ஸ்ரீ சைலபூர்ணருடைய புத்திரனாகிய பிள்ளான் என்பவர் அந்த நாமத்தைத் தாம் விரும்புவதாகக் கூறி, தமக்கு அக் கௌரவம் அளிக்கும்படி கேட்டுக்கொண்டார். ஸ்ரீ ராமாநுஜரும் திருப்தியடைந்தார்; 'அப்பெயரை வகித்தற்கேற்ற சிஷ்யனேயவன்'

என்று ஸ்ரீ ராமாநுஜர் சந்தோஷித்து, அவனைத் தமது ஞானப்புத்திரனாக ஏற்றுக்கொண்டார்; இதன்மேல் அவனுக்குத் திருக்குருகைப் பிரான் பிள்ளான் என்ற திருநாமம் உண்டாயிற்று.

ஸ்ரீ ராமாநுஜர் பின்னர் அங்கிருந்து புறப்பட்டுத் திருநெல்வேலிக்குத் தெற்கே இருபது மைல் தூரத்திலுள்ள திருக்குறுங்குடிக்குச் சென்றார்.

இவர் திருக்குறுங்குடி சென்ற விஷயம் இன்னொரு விதமாகவும் கூறப்படுகிறது:— ஸ்ரீ ராமாநுஜர் திருநகரியிலிருந்து திருவனந்தபுரம்(அநந்தசயனம்)சென்று, அங்குப் பாஞ்சராத்ர பூஜை முறையைப் புகுத்த விரும்பினார்; ஆனால், அங்கு அர்ச்சகர்களாயுள்ள நம்பூரி பிராஹ்மணர்கள் ஒரே பிடிவாதமாக எதிர்த்தார்கள்; எம்பெருமானும் நம்பூரிகளுடனே சேர்ந்துகொண்டார். ஆனால், ஸ்ரீ ராமாநுஜரோ அதற்கு மேல் பிடிவாதமாகயிருந்தார். ஆகையால், ஸ்ரீராமாநுஜர் படுத்துறங்கும்சமயத்திலே எம்பெருமான் அவரைத் தூக்கிக்கொண்டுபோய்க்குறுங்குடிக்கு ஒரு மைல் தூரத்தில் சிந்துநதியிலுள்ள ஒரு சிறு திட்டில் உள்ள ஒரு பாறையின்மீது கிடத்திவிட்டு வந்துவிடும்படி ஏற்பாடு செய்தார்; ஸ்ரீ ராமாநுஜர் விழித்துப் பார்க்க, தாம் ஒரு புதிய இடத்தி லிருக்கக் கண்டு ஆச்சர்யமடைந்து, தமது சிஷ்யர்களில் ஒருவனாகிய நம்பி யென்னும் ஒருவர் பெயரைச் சொல்லி அழைத்தார். நம்பி எதிரே வந்து நின்று, அவர் கூறிய வேலைகளை யெல்லாம் செய்தபின்,

இருவருமாக க்ஷேத்திரத்தினுள்ளே செல்ல, பின்னே வந்து கொண்டிருந்த நம்பியைத் திரும்பிப்பார்த்தார்; காணவில்லை; முன்னே பார்த்தார்; நம்பி மூலஸ்தானத்துக்குச் செல்வது போலத் தோன்றிற்று; சற்று நேரத்திலே நம்பி மறைந்து விட்டார். ஆ! ஆ! எம்பெருமானே நம்பியாய்ச் சிஷ்யராய் வந்தாரோ?

இதே மாதிரி ஜகந்நாதத்திலே சொற்ப வித்தியாசத்துடன் நடந்ததென்று இன்னொருவர் கூறுகிறார்.

ஸ்ரீராமாநுஜர் திருக்குறுங்குடியில் எம்பெருமான் சந்நிதானம் சென்று, திரிகரணமும் ஒத்துத் தீர்க்கமாகப் பிரார்த்தித்து நிற்க, எம்பெருமான் ஸ்ரீ ராமாநுஜரை நோக்கி, "தர்மத்தை ரக்ஷிப்பதற்காக நாம் எத்தனையோதரம் உலகிலவதரித்தோம்; அஞ்ஞான மார்க்கங்களிலிருந்து ஜனங்களைத் திருப்பி நல்ல வழியில் கொண்டுவருவதற்காக நாம் என்ன எல்லாமோ செய்தோம்; ஆனால், ஜனங்கள் ஆசுர புத்தி மிகுந்தவர்களாய், நாங்கள் சொன்னதைக் கேட்கவேயில்லை. எங்களால் முடியாத இக் கார்யத்தை நீ எப்படிச் செய்து வருகிறாய்? லக்ஷக் கணக்கானவர்கள் உன்னுடைய போதனையைப் பின்பற்றி நடக்கும்படி செய்கிறாயே; ஆச்சர்யமாயிருக்கிறது; நீ என்னதான் செய்கிறாய்? இவர்கள் இப்படி நீ சொன்னதை யுடனே கேட்கும்படி நீயவர்க்கு அளிக்கின்ற சஞ்சீவி யாது? அதனைத் தெரியப்படுத்துவாய்!" என்று கேட்க, ஸ்ரீராமாநுஜர் குறுநகை புரிந்து, ஒரு பரிகாச தொனியுடனே "ஸ்வாமி!

கேட்டால்தான் கொடுக்கப்படும்; கேட்கவேண்டிய மாதிரி கேட்பவர்களுக்கு நான் கொடுக்காம விருப்பதில்லை," என்று மறுமொழி யுரைத்தார்.

உடனே எம்பெருமான் "ஆம், உண்மைதான்; பழமை யதிகரிக்க அதிகரிக்க ஞாபக சக்தியும் குறைந்துவிடுகிறது; நாம் மறந்துவிட்டோம்" என்று சொல்லி தம் மருகே ஸ்ரீ ராமாநுஜருக்கு ஒரு ஆசனம் இருக்கும்படி செய்தார்.

ஸ்ரீ ராமாநுஜர் இவ் வேடிக்கையிலே ஆநந்தமுற்று, "நல்லது" என்று கூறி, தமது குருவாகிய மகாபூர்ணரை அவ் வாசனத்தில் மனத்தினால் இருத்தி, அவருடைய அடிகளைத் தியானித்து, அவ் வாசனத்தி னருகே நின்றுகொண்டு, எம்பெருமானுடைய வலச் செவியிலே, எல்லா மந்திரங்களிலும் மிகமிக ரகஸ்யமானதாகிய இருபெருண்மைகளையும் உபதேசம் செய்தார். எம்பெருமான் தாம் ஒரு சிஷ்யனைப்போல, மிகுந்த விநயத்துடனே அவ்வுபதேசத்தைப் பெற்றுக்கொண்டு, ஆசார்யரை வணங்கி, "குருமூர்த்தி! நான் ஸ்ரீ ராமாநுஜரிடத்திலே சரணாகதி படைகின்றேன்" என்று கூறினார்; ஸ்ரீ ராமாநுஜரும் அவருக்கு ஸ்ரீ வைஷ்ணவ நம்பி என்று பெயரிட்டார்.

பின்னர் எம்பெருமான் தமது கோவில் பணியாளர்களை நோக்கி "ஸ்ரீராமாநுஜரை நகர்வலம் செய்து வையுங்கள்!" என்று ஆக்ஞாபிக்க, அப்படியே சகல விமர்சைக

ளுடனும் ஸ்ரீ ராமாநுஜர் திரும்பி க்ஷேத்திரத்துக்கு வந்த வுடனே எம்பெருமானுடைய பாதங்களில் விழுந்து, "கிருபாநிதியே! என்னை மன்னித்தருளல்வேண்டும்; நான் தங்களுக்கு உபதேசிக்க அவ்வளவு கர்வமுடையவ னய்விட்டேன். பாரம்பர்ய வழக்கமும் விதியும் அப்படி யிருக்கிறதனாலேதான் நான் வேடிக்கைக்காகவாவது அப் படிச் செய்யவேண்டிவந்தது," என்றார்.

எம்பெருமான் "அன்று, அன்று; நீ செய்தது சரியே; நாம் அதை வேடிக்கையாகக் கருதவில்லை. நீ ஆசார்ய ஸ்தானம் வகிக்க எமக்கு மிகச் சந்தோஷமே. நல்லது, நீ யாத்திரை போய் வா! உன்னுடனேயே ஜய லக்ஷ்மி வருகிறாள்" என்று கூறியனுப்பினார்.

இவ் விஷயத்தை இன்னொருவிதமாகவும் சிலர் கூறு கிறார்கள்:— ஸ்ரீ ராமாநுஜர் திருக்குறுங்குடியிலே க்ஷேத் திரத்துக்குச் செல்வதற்காகப் புறப்படுகையில் ஸ்ரீ குரங் கேசர் ஒரு ஸ்ரீ வைஷ்ணவப் பிராஹ்மண உருவெடுத்துத் தோன்றி, அவரை நோக்கி, "ஸ்வாமி! எம்பெருமான் அவ தாரம் செய்தும் ஈடேற்ற முடியாத மனிதர்களைத் தாங்கள் ரக்ஷித்து வருகின்றீர்களே! அந்த மந்திரத்தைத் தயவு செய்து எனக்கு உபதேசித்திடுக!" என்று கேட்டுக் கொண்டார்; ஸ்ரீ ராமாநுஜர் அவருக்கு அப்படியே உப தேசம் செய்து அவருக்கு இருபேருண்மைகளையும் ஈன்று அருளினார்; இன்னும் செய்யவேண்டிய சம்ஸ்காரங்க ளெல்லாம் செய்வித்து, அவருக்கு ஸ்ரீ வைஷ்ணவ நம்பி

என்ற பெயரும் கொடுத்தார்; அந்த வைஷ்ணவப் பிராஹ்மணர் ஸ்ரீ ராமாநுஜரிடமிருந்து விடை பெற்றுக்கொண்டு செல்ல, ஸ்ரீ ராமாநுஜர் க்ஷேத்திரத்துக்குப் போனார்; அங்கே ஸ்வாமி சந்நிதானம் சென்று பார்க்க, தாம் தமது புதிய சிஷ்யனுடைய நெற்றியிலே அணிவித்த புண்டரக் குறிகள் அப்படியே இங்கு விக்கிரகத்திலே பதிந்திருந்ததைக் கண்டு ஆச்சர்யமும் பயமும் அடைந்தவராய், அருள் நாதனைத் தியானம் செய்தார்.

ஸ்ரீ ராமாநுஜர் பின்னர் அங்கிருந்து புறப்பட்டு, மலையாள தேசத்துக்குள்ளே நுழைந்து, திருவெண் பரிசாரம், திருவெட்டாறு முதலிய ஸ்தலங்களைத் தரிசித்துக் கொண்டு, அந்தத் தேசத்து அரசனையும் தமது மதத்தை யநுசரிக்கும்படி செய்து, அங்கு ஒரு மடமும் ஸ்தாபித்து விட்டு, கடற்கரை மார்க்கமாகவே வடதேசம் நோக்கிப் போகையில், அக் காலத்திலே மகா வித்துவான்களுள் ஒருவராயிருந்த தக்ஷிணாமூர்த்தி யென்பவரைக் கண்டு, அவருடன் சிலகாலம் தங்கி அதிக சந்தோஷமாகக் காலம் கழித்தார்; அந்த வித்துவான் இயற்றிய எண்ணற்ற பெருங் கிரந்தங்கள் பலவற்றையும் பார்வையிட்டார்; பதிலாகத் தாம் இயற்றியுள்ள நூல்களை அந்தத் தக்ஷிணாமூர்த்திக்குக் காண்பித்து அவருடைய உண்மையான அபிப்பிராயத்தைக் கேட்க, அந்த வித்துவான் "ஸ்ரீ சங்கருடைய நூல்கள் குப்பையிலும் சேற்றிலும் ஆழ்ந்து கிடக்கும் ஒரு ரத்தினம்போன் றிருக்கின்றன; ஆனால், தங்களுடைய நூல்

கள் சுத்த ஜலத்தினூடே பிரகாசமாகப் பின்னிடுகின்ற ரத்தினம்போன் றிருக்கின்றன,'' என்று கூறினர்.

ஸ்ரீராமாநுஜர் சின்னாட்கள் கழித்து ஸ்ரீதக்ஷிணாமூர்த்தியினிடமிருந்து விடை பெற்றுக்கொண்டு புறப்பட்டு வடதேசம் சென்று, மதுராபுரி, சாலிக் கிராமம், வைகுந்தம், துவாரகை, அயோத்தி, பதரி, நைமிசாரண்யம், புஷ்கரம், கோகுலம், பிருந்தாவனம் முதலிய ஸ்தலங்களையெல்லாம் தர்சித்தார்.

ஒருவர் ஸ்ரீ ராமாநுஜர் இப்பொழுது தரிசித்த ஸ்தலங்களைப் பின் வருமாறு கூறுகிறார்:—''அவர் திருப்பதி, அகோபிலம், மகாராஷ்டிர தேசம் இவற்றின் மூலமாகச் சென்ற இடமெல்லாம் உபதேசம் செய்துகொண்டு வட இந்தியாவுக்குச் சென்றார்; கூர்ச்சர தேசத்திலே யுள்ள (கிர்னார்) தத்தாத்திரேய க்ஷேத்திரத்தையும், துவாரகையையும் தர்சித்தார்; அங்கிருந்து அவர் பிரயாகை, வாரணாசி, மதுரா, ஹரித்துவாரம் முதலிய இடங்களுக்குச் சென்றார்; அங்கிருந்து அவர் ஹிமோத்கிரியிலே யுள்ள பதரிகாச்ரமம் போனார்; அங்கிருந்து காச்மீரத்திலேயுள்ள ஸ்ரீ நகரம் சென்றார்; பின்னர் குருக்ஷேத்திரத்தின் மூலமாக அயோத்திக்கும் கயாவுக்கும் சென்றார். அங்கிருந்து அவர் கபிலாச்ரமத்தைத் தர்சிக்கும்பொருட்டு, வங்காளத்தினுள்ளே நுழைந்தார். அதற்குப் பின் ஜகந்நாதத்துக்குப், மற்ற புண்ணிய க்ஷேத்திரங்களுக்கும் சென்றுவிட்டு, ஸ்ரீ ரங்கத்திலேயே வந்து தமது பிரயாணத்தை முடித்தார்.''

ஆனால், வேறொருவர் வேறொரு விதமாகக் கூறுகின்றார்:— "ஸ்ரீ ராமாநுஜர் ஸ்ரீ ரங்கத்திலேயே நிலைத்துக் கொண்ட பின்னர், இந்தியா முழுதிலும் நீண்ட யாத்திரை செய்ய ஆரம்பித்தார். அவர் முதலில் காச்மீரத்திலேயுள்ள சாரதா பீடத்துக்குச் சென்றார்; அங்கு சரஸ்வதி அவருக்குப் போதாயனவிருத்தியை அளித்தாள். அவர் திருப்பதி வழியாகத் திரும்பி வந்தார்; அங்கிருந்து குருகூர், குறுங்குடி, ராமேஸ்வரம் முதலிய இடங்களுக்குச் சென்றார். அதன் பின்னர்த்தான் அவர் தமது பெருநூல்களையியற்றினர். பட்டிமண்டபம் என்னும் ஊரினிடத்தே ஸ்ரீ ராமாநுஜர் வந்தபொழுது, ஒரு விசேஷ சம்பவம் நடந்தது. அங்கே சரஸ்வதி க்ஷேத்திரம் ஒன்று உண்டு; இவர் அங்குச் சரஸ்வதியைத் தரிசிக்கச் சென்றபொழுது, சரஸ்வதி இவரை சப்யாசச் சுருதியைத் தனக்கு விரித்துரைக்கும்படி கேட்டார்.

ஸ்ரீ ராமாநுஜர்: "அம்மே! சூர்ய மண்டலத்திலேயுள்ள ஸ்வர்ண புருஷனுடைய கண்கள், தினகரனுடைய தாப முத்தங்களை வாய் திறந்து வரவேற்கின்ற தாமரையின் இதழ்கள்போன்று, அவ்வளவு அழகியனவாம்" என்பதே பொருள்" என்றார்.

சரஸ்வதி ஆநந்தத்தினுல் கைதட்டி, கோஷம் செய்து, "பேஷ்! பேஷ்! நீயே எனக்கு உகந்தவன்; ஸ்ரீ பாஷ்யக்காரன் என்ற பெயர் உனக்கே தகும். நான் உனக்குப் பூஜிப்பதற்கு ஸ்ரீ ஹயக்கிரீவ மூர்த்தியையும் கொடுக்கிறேன்" என்று கூறினர்.

ஸ்ரீ ராமாநுஜர் "அம்மா! நான் சொன்னதிலே நூதனமாகவாவது விசேஷமாகவாவது ஒன்றுமில்லையே; தாங்கள் எனக்கு இவ்வளவு கௌரவம் அளித்தற்குத் தகுந்ததாக என்னிடத்தில் எதுவும் இருப்பதாக எனக்குத் தோன்றவில்லையே" என்று சொன்னர்.

சரஸ்வதி "அங்குத்தான் ரகஸ்யம் இருக்கின்றது; நீ சொன்ன பொருள் சாதாரணமானதேயாயினும் இதே இடத்தில் சங்கரர் அளித்த அவலக்ஷணமான பொருளுக்கு மாருக நீ உரைத்த பொருள் எனது காதுகட்கு இன்பம் பயந்தன," என்று மறுமொழி கூறினள்.

ஸ்ரீ ராமாநுஜர் எங்குச் சென்றபொழுதிலும் அங்குள்ள மற்ற மதஸ்தர்களுடனே வாதாடி ஜயம் பெறுவது வழக்கமாயிருந்தது; தோற்ற பண்டிதர்கள் பலரும் ஸ்ரீ ராமாநுஜருக்குச் சிஷ்யர்களாகிவிட்டார்கள். ஸ்ரீராமாநுஜர் காஸ்மீரதேசம் சென்றிருந்தபொழுது, அந்தத் தேசத்து அரசன் அவருடைய வித்துவத்தையும் புத்தி சமர்த்தையும் பரிசுத்த வாழ்க்கையும்பற்றிக் கேள்விப்பட்டு, அவருடைய சிஷ்யர்களுள் தானும் ஒருவனுனன். அவ்வூரிலேயுள்ள பண்டிதர்களுக்கு ஸ்ரீ ராமாநுஜர்மீது பொருமை மிக உண்டாயிற்று. அரசன் ஸ்ரீ ராமாநுஜருக்குச் சிஷ்யனுய்விட்டபடியினுலே, தங்களுடைய பிழைப்பில் மண் விழுந்துவிட்டதே யென்று வருத்தமுற்று ஏதேனும் மந்திரோச்சாடனம் செய்து, துர்த்தேவதை யொன்றை யனுப்பி ஸ்ரீ ராமாநுஜருக்குத் தீங்கு செய்யுமாறு ஏற்பாடு பண்ணினுர்கள்.

ஸ்ரீ ராமாநுஜருக்கு இது தெரியவந்தது; அவர் புந்நகை புரிந்தவராய், "நல்லது; இந்த வேடிக்கையைக் கடைசிவரையில் பார்ப்போம்" என்று சொல்லிவிட்டு, இன்னும் சிலநாட்கள் அதிகமாக அங்குத் தங்கினர். ஒரு நாள் அவ்வூரிலே ஒரு ஆச்சர்ய சம்பவம் நடந்தது. மெத்த மெத்தப் படித்த வித்துவான்கள், சாஸ்திரங்களை யெல்லாம் தலைகீழாகக் கற்ற சாஸ்திரக்ஞர்கள், இவர்கள் என்ன செய்தார்கள் தெரியுமா? தாங்கள் உடுத்தியிருந்த வஸ்திரங்களை யெல்லாம் அவிழ்த்தெறிந்துவிட்டு, நிர்வாணமாகப் பைத்தியம் பிடித்தவர்கள் போலத் தலைவிரிகோலமாகத் தெருவிலே ஓடத் தொடங்கினர்கள்; ஒருவர்மேல் ஒருவர் விழுந்து அடித்துக் கடிக்கத் தொடங்கினர்கள்; ஊளையிட்டார்கள்; கூச்சலிட்டார்கள்; பித்தர்களைப்போல ஆடினர்கள்; தாங்களே கடித்துக்கொண்டார்கள், அடித்துக்கொண்டார்கள், ஓடினர்கள், ஆடினர்கள், பாடினர்கள்; ஏதேதோ செய்தார்கள்.

அரசனுக்கு விசனம் மிகவும் அதிகமாக உண்டாய்விட்டது; அரசனுக்குக் காரணம் புலப்படவில்லை; அவன் ஓடினன் குருமூர்த்தியினிடம்; அவருடைய பாதங்களின்மேல விழுந்தான்; "பிரபு! இம் மூடர்களைத் தாங்கள் ஒரு பொருட்டாக நினைப்பீர்க ளென்று நான் நினைக்கவில்லை; ஆனல், தாங்கள் எப்படியோ இவர்களை ஒரு பொருட்டாக நினைத்துவிட்டீர்கள்போலிருக்கிறது" என்றான்.

ஸ்ரீ ராமாநுஜர் சிரித்துக்கொண்டே, அன்று! அன்று! நாம் ஒன்றும் செய்யவில்லை. அவர்கள் செய்ததே அவர்

களைப் பாதிக்கிறது. துர்த்தேவதைகளை எவர்மீதேனும் ஏவினால், அவர் மகா பரிசுத்தராய் இருப்பாரானால், இந்தத் துர்த்தேவதைகள் அவரை யொன்றும் செய்ய முடியா; ஆகையால், அவை அனுப்பியவன்மேலேயே திருப்பி அவனை நாசம் பண்ணிவிடும்'' என்றார்.

அரசன் "ஸ்வாமி! மூடர்கள், வேண்டியமட்டும் துன்பம் அடைந்துவிட்டார்கள்; இந்தப் பாடத்தை அவர்கள் சீக்கிரத்தில் மறந்துவிடமாட்டார்கள்; நன்றாயில்லை; ஸ்வாமி! தயவுசெய்து என்பொருட்டு அவர்களை ரக்ஷிக்குமாறு வேண்டுகின்றேன்'' என்றான்.

குருமூர்த்தி "அப்படியே யாகட்டும்'' என்று கூறி, அந்த மூடப் பண்டிதர்களைக் கொண்டுவரும்படி செய்து, தமது பாத தீர்த்தத்தை யவர்கள்மீது புரோக்ஷித்து, அவர்களைச் சரிப்படுத்தினார்.

இப்பொழுது அரசன் அடைந்த சந்தோஷத்துக்கு ஒரு அளவே யில்லை; ஆசார்யர் அவனிடமிருந்து விடை பெற்றுக்கொண்டபொழுது, அவ்வரசன் ஸ்ரீ ராமாநுஜருடனே நெடுந்தூரம் சென்று வழிவிட்டு வந்தான்.

ஸ்ரீ ராமாநுஜர் அங்கிருந்து புறப்பட்டு நரநாராயண அவதார ஸ்தலமாகிய பதரிகாச்ரமம் சென்றார். அஷ்டாக்ஷரீ மனுஷ்ய வர்க்கத்துக்கு அளிக்கப்பட்ட இடம் அதுவேயாம்; ஆகையால், அவர் அஷ்டாக்ஷரியைப் பற்றிப் பெருங் கூட்டங்களுக்குப் பெரும் பிரசங்கங்கள் செய்தார்.

அங்குத்தான் அவர் நரசிம்ஹன் என்ற பெயரையுடைய ஒருவரைச் சிஷ்யராக ஏற்றுக்கொண்டு அவருக்குச் சேனுதிபதி யென்ற பட்டப்பெயரும் அளித்தார். இந்தச் சேனுதிபதி பின்னர் ஆண்டானுக்குச் சிஷ்யரானுர்.

ஸ்ரீ ராமாநுஜர் பின்னர் ஸ்ரீ ராமர் பிறந்த இடமாகிய அயோத்தியையும், சீதாதேவி பிறந்த இடமாகிய மிதிலையையும் கண்டு தர்சித்தார். இந்த யாத்திரையிலே ஆண்டான் அவருடன் கூடச் செல்லவில்லையாம். ஸ்ரீ ராமாநுஜர் இச் சமயத்திலே ஹரித்துவாரத்துக்கும் பதரிநாதத்துக்கும் இடையிலேயுள்ள தேவப்ரயாகையைத் தர்சித்தார்.

ஸ்ரீ ராமாநுஜர் பின்னர் வாரணுசி சென்று, அங்கிருந்து புருஷோத்தமக்ஷேத்திரமாகிய ஸ்ரீ ஜகந்நாதம் சென்ருர்; இப் புருஷோத்தமன் ஸ்ரீ வைகுந்தத்திலே ஸ்ரீநீலாத்ரிநாதன் என்ற பெயருடனே தேவர்களால் பூஜிக்கப்பெற்றிருந்தார்; பின்னர் இந்திரத்யும்னனுல் பூஜிக்கப்பட்டார்; பின்னர் காலவமாதவரால் பூஜிக்கப்பட்டார்; கடைசியாக கட்டாக் தேசத்து அரசர்களால் பூஜிக்கப்பட்டார்.

ஸ்ரீ ராமாநுஜர் இந்த ஜகந்நாதம் வந்து சேர்ந்தபொழுது, அங்கு அர்ச்சகர்கள் செய்துவந்த அக்கிரமங்களேக் கண்ணுற்று, அதிருப்தி மிகுந்து, அவர்களுடைய வாழ்க்கையையும் கோவிலிலே செய்யும் பூஜை முறையையும் வெறுத்தார். ஆனுல், எம்பெருமான் அவர்களுடைய செய்கைகளையெல்லாம் சந்தோஷத்தோடு ஏற்றுக்கொண்ட

வர்போல, எல்லாவற்றையும் பொறுத்து இன்புற்றுக் கொண்டிருந்தார். ஸ்ரீ ராமாநுஜர் அவ்வூர் அர்ச்சகர்க ளெல்லோரையும் கூட்டம்போட்டு, அவர்கள் நடத்திக்கொண்டிருந்த துர்வாழ்க்கையைப்பற்றியும், க்ஷேத்திரத்திலே அவர்கள் செய்துவரும் வைதீக விரோதமான பூஜை முறைகளைப்பற்றியும் நெடுநேரம் கண்டித்துப் பேசி இகழ்ந்தார்; மற்ற இடங்களில் பூஜை முறை எவ்வாறு தம்மால் சீர்திருத்தப்பெற் றிருக்கிறதென்றும், ஈஸ்வரனுக்கு ஸ்ரீ பாஞ்சராத்ர முறையே உகந்ததாகையினாலே அதையே அவர்கள் கைக்கொண்டால் நல்லதென்றும் கூறினார். அவர்கள் மறுமொழி யொன்றும் உரைக்காமல் எழுந்திருந்து போய் விட்டார்கள்; அவர்களுக்கு ஸ்ரீ ராமாநுஜர் கூறியதொன்றும் பிடிக்கவில்லை.

ஸ்ரீ ராமாநுஜருக்கு ஒருமாதிரி கோபம் வந்துவிட்டது. இந்த அர்ச்சகர்களுக்கு ஏன் இவ்வளவு பிடிவாதம்? தவிர, கூட்டத்திலே பேசிக்கொண்டிருந்தபொழுது, சற்றும் மதியாமல் எழுந்திருந்து போய்விட்டார்களே. ஸ்ரீ ராமாநுஜர் அவ் வர்ச்சகர்களை யெல்லாம் நீக்கிவிட்டுத் தமது மனிதர்களைப் பாஞ்சராத்ர ஆகம முறையின் படிப் பூஜை செய்வதற்கு ஏற்படுத்தினார். அன்று இரவு பழைய அர்ச்சகர்க ளெல்லோரும் ஒன்று சேர்ந்துகொண்டு ஒரு பெருங் கூட்டமாகக் கோவிலினுள்ளே சென்று, எம்பெருமானுடைய பாதங்களிலே விழுந்து, "ஸ்வாமி! தொன்றுதொட்டு நாங்கள் தங்களுக்குத் தொண்டு

செய்து வருகிறோம்; எங்களுடைய சக்திக்கும் புத்திக்கும் ஏற்றவாறு நாங்கள் பரம்பரையாகத் திருப்பணி செய்து வருகிறோம்; தேவரீருக்கு எங்கள் விஷயத்திலே இது காறும் அதிருப்தி யுண்டானதாகத் தோன்றவில்லை; இது காறும் தேவரீர் எங்கள்மீது கிருபை பாலித்து வந்தீர்; இதோ இப்பொழுது எங்களுடைய வாழ்க்கைகளையும், வழக்கங்களையும், பாரம்பர்யமாக நாங்கள் செய்துவரும் பூஜை முறைகளையும் மாற்றிவிடவேண்டு மென்று தங்களுடைய பக்தர்களில் ஒருவர் வந்து கூறுகின்றார். நாங்கள் இத்தனை நாட்களாகத் தப்பு மார்க்கத்திலே நடந்திருந்தால், தேவரீர் இதற்கு முன்னமேயே எங்களைத் திருத்தி யிருப்பீர்கள்; இவர் வரவேண்டுமென்று தாங்கள் காத்துக் கொண் டிருந்தீர்களோ? தங்களுடைய பரம பக்தர்களாகிய எங்களை, அநுபவ பாத்தியதையினாலே இந்த ஸ்தலத்தைச் சொந்தமாக உடைய எங்களை இவன், நேற்றுத் தேவரீரிடத்துப் பக்தி செலுத்தத் தொடங்கிய இவன், அவமானம் செய்து, க்ஷேத்திரத்திலிருந்து துரத்திவிட்டான். இவன் அத்தியாற்புதமான சக்திகளையும், ஆழ்ந்த கல்வியையும் உடையவனாயிருக்கின்றான்; ஆகலால், தன் அரசனையும் கைக்குள்ளே போட்டுக்கொண்டுவிட்டான். தேவரீரே எங்கள் அரசர்; எங்களை யாதரித்து ரக்ஷிக்குமாறு தேவரீரையே வேண்டுகின்றோம். தேவரீர் இத்தனை நாட்களும் திருப்தி யுற்றிருந்ததனாலே, நாங்கள் செய்து வந்தது தப்பாகாது; ஆதலால், எங்களைக் காக்கவேண்டியது தங்களுடைய கடமை; அப்படியே தேவரீர் எங்களை ரக்ஷிக்க முன் வரா

விட்டால், நாங்கள் இதுகாறும் செய்துவந்தது தப்பாகவே தான் இருக்கவேண்டும்; ஆதலால், அதற்குப் பிராயச்சித்த மாக எங்கள் பிராணன்களைத் தியாகம் செய்துவிடுகிறோம்; இரக்ஷிப்பதாக வாக்களித்தால் நாங்கள் உயிருடன் செல் வோம்; இல்லையேல், எங்கள் சரீரங்களை யிங்கிருந்து பிணங்களாகத்தான் வெளியே கொண்டுபோகவேண்டும்'' என்று பிரார்த்தித்தார்கள்.

எம்பெருமானுக்கு இப்பொழுது இன்னது செய்வ தென்று தெரியவில்லை; அவ் வர்ச்சகர்க ளிடத்திலே அவ ருக்குப் பிரியம் அதிகம்; அவர்களுடைய பூஜை முறையை யும் விரும்பி ஏற்றுக்கொள்ளத்தான் செய்தாரே யொழிய, வெறுத்து மறுத்துவிடவில்லை. ஆதலால், அவர்களுடைய பிரார்த்தனைகட்கும் இணங்கவேண்டி யிருந்தது. ஆனால், ஸ்ரீ ராமாநுஜரும் அவருக்கு மிகவும் பிரியம் வாய்ந்தவரா யிருந்தார்; ஸ்ரீ ராமாநுஜர் கூறுவதும் ஒருவாறு நியாயமே. இவ்வாறு, இரண்டு பெண்டாட்டிக்காரன் கதைபோல ஆயிற்று நமது ஜகந்நாதப் பெருமானுடைய பாடு. 'இரண்டு கக்ஷியாரையும் சந்தோஷிப்பிக்கவேண்டும்' என்பது ஸ்ரீ ரங்கநாதப் பெருமானுடைய இச்சை. இப்பொழுது அர்ச்சகர்கள் 'வாக்குறுதி கொடுத்தா லொழியப் போவ தில்லை' என்று ஒரே பிடிவாதமாக உட்கார்ந்திருக்கின்றார் கள். கடைசியாக அவர், அர்ச்சகர்களுக்குப் ''பயப்பட வேண்டாம்'' என்று தைர்யம் கூறி, தாம் அவர்களை நிச்சய மாக ரக்ஷிப்பதாக வாக்குறுதி கொடுத்து அனுப்பினார். அவர்கள் சந்தோஷத்துடனே சென்றார்கள்.

மறுநாள் விடிந்தது; ஸ்ரீ ராமாநுஜர் ஸ்நாநாதிகளை முடித்துக்கொண்டு, க்ஷேத்திரத்தினுள்ளே சென்று, எம்பெருமான் முன்னே நின்றுகொண்டு இருகைகளையும் கூப்பி, "ஸ்வாமி! தேவரீர் இவ் வுலகோபகார வேலையை என்னிடம் ஒப்புவித்தபொழுது, தங்களுடைய ஸ்வ தந்திரத்தை என்னிடம் கொடுத்துவிட்டதாக வாக்களித்தீர்கள் அல்லவா?" என்று கேட்டார்.

"ஆம், நாம் ஸ்ரீரங்கத்திலே நமது சந்நிதானத்துக்கு உன்னைச் சொல்லியனுப்பி வரவழைத்தபொழுது, நாம் சொன்னது நன்றாக ஞாபகம் இருக்கின்றது. இக உலகத்தினுடையவும் பர வுலகத்தினுடையவும் பரிபூர்ண ராஜ்ய பாரத்தை நாம் உனக்கு அளித்தோம்."

"எம்பெருமானுக்கு இது ஞாபக மிருக்கின்றதுபற்றி மிகச் சந்தோஷம்; எம்பெருமான் வாக்குத் தவறாது எல்லாவற்றையும் என்னுடைய வழியிலேயே விட்டுவிட்டது பற்றியும் மிகச் சந்தோஷம்; நான் ஸ்ரீரங்கத்திலும் மற்ற க்ஷேத்திரங்களிலும் செய்துள்ளதுபோல இங்கும் பூஜை முறைகளை நான் சீர்திருத்திவைத்தால் அது எம்பெருமானுக்குச் சந்தோஷமா யிருக்கு மென்றே நம்புகின்றேன்."

"நான் உனக்கு வாக்களித்துள்ளேன் என்பது உண்மையே; ஸ்ரீ ராமாநுஜ! உலகு முழுதும் உனக்குக் கொடுத்தேன்; அதற்குப் பதிலாக இங்கு மாத்திரம் என்னை எப்பொழுதும்போ லிருக்கும்படி விட்டுவிடக் கூடாதா? இப்

பழைய அர்ச்சகர்களிடத்தும் அவர்கள் செய்துவந்த பூஜை முறையினிடத்தும் எனக்குப் பிரியமாகத்தா னிருக்கின்றது. உன்னாலும் முடியாத சில கார்யங்களுக்கு அவர்களும் வேண்டித்தான் இருக்கின்றார்கள்; இச் சிறிய விஷயத்திலே நீ பிடிவாதமா யிருக்கமாட்டா யென்று நம்புகிறேன்.''

எம்பெருமானே இப்படிச் சொல்லும்பொழுது ஸ்ரீ ராமாநுஜர் என்ன செய்வார்! ஆயினும், 'ஸ்ரீ ராமாநுஜர் தோல்வி யடைந்தார்' என்றால், இனிமேல் அவருடைய போதனைகளையும் ஆக்ஞைகளையும் உலக ஜனங்கள் அவ்வளவு சுலபத்திலே கைக்கொள்ளமாட்டார்கள். ஆதலால், ஸ்ரீ ராமாநுஜர் மேன்மேலும் விடாமல் பிடிவாதம் செய்தார்; ஸ்ரீ ஜகந்நாதப்பெருமானும் பிடிவாதமா யிருந்தார்; கடைசியில் ஸ்ரீ ராமாநுஜர் எம்பெருமானுடைய பிடிவாதத்தைப்பற்றி மிகுந்த வெறுப்பும் வருத்தமுமுற்றவராய் க்ஷேத்திரத்தை விட்டுச் சென்றாராயினும், 'எப்படியாவது, இதனால் என்ன நேர்ந்தாலும் எனது எண்ணத்தை நிறைவேற்றாமல் விடுவதில்லை' என்று தீர்மானித்துச் சங்கற்பமும் செய்துகொண்டார். ''எல்லாம் வல்ல இறைவனுடைய அதிருப்தி ஏற்பட்டாலும் சரி, உலக நன்மையை உத்தேசித்து, ஸ்ரீ ஜகந்நாத க்ஷேத்திரத்துப் பூஜை முறைகளை மாற்றாது விடுவதில்லை'' என்று வைராக்கியம் பூண்டுகொண்டார். இறைவனுக்கு இதனால் கோபம் உண்டானால், அது அவர் ஒருவரையே பாதிக்கும்; அதை அவர் தயாராக எதிர்த்து நிற்க, இல்லாவிட்டால், அதனு

லுண்டாகும் பலனுக்கு உட்படத் தயாரானார். எவரையும் உத்தேசித்துத் தாம் செய்துவரும் வேலையினின்றும் பின் வாங்குவதற்கு அவருக்கு மனமில்லை. ஆனால், எம்பெருமான் ஹிருதய நிவாசகனானதால், ஸ்ரீ ராமாநுஜருடைய சங்கற்பத்தை யுடனே தெரிந்துகொண்டார்; இன்னது செய்வதென்று தெரியவில்லை. கடைசியாக எம்பெருமான் ஒருவாறு செய்வதாக நிச்சயம் செய்துகொண்டார்; ஸ்ரீ கருடனை யழைத்தார்; ஸ்ரீ ராமாநுஜரை அவர் உறங்கும் பொழுது பார்த்துத் தூக்கிக்கொண்டு போய் ஸ்ரீ கூர்ம க்ஷேத்திரத்திலே வைத்துவிட்டு வரும்படி ஆக்ஞை பண்ணினார்.

ஸ்ரீ ராமாநுஜர் விழித்துப் பார்த்தபொழுது, புதியதொரு இடத்திலே இருந்தார்; அவருடைய கண்களுக்கு முன்னே மஹாதேவருடைய விக்கிரகமொன்று இருந்தது; சுற்றிலும் நாலாபக்கத்திலும் பார்த்தார்; சிவ பக்தர்களே சூழ்ந்திருந்தார்கள்; அவருக்கு ஒன்றும் புலப்படவில்லை; அவருடைய சிஷ்யர்கள் எவரும் காணப்படவில்லை; அவரிடம் அவருடைய தினசரி பூஜைக்கேற்ற சாமக்கிரியைகளுமில்லை; அவர் அன்று முழுதும் உபவாச மிருந்தார். இன்னதென்று புலப்படாமல் ஆலோசித்துக்கொண்டே யிருந்தார். அன்றிரவு அசரீரி வாக்குக் கூறியதாவது: "ராமாநுஜா! இன்று முழுதும் நீ பட்டினி கிடந்தாயென்பது பற்றி நான் மிகமிக விசனிக்கிறேன்: பூஜை செய்வதற்குத் திருமண்ணும் மற்றுமுள்ள சாமக்கிரியைகளும் உனக்குக்

கிடைக்காததனாலே, நீ நாள் முழுதும் பட்டினி கிடக்க வேண்டிவந்தது. ஆனால், நீ உன்னைப் பற்றிய நினைப்பைக் கொஞ்சம் விட்டுவிட்டு, ஞானக்கண்களால் பார்த்திருந்தால், நீ உன் முன்னே மஹாதேவமூர்த்தியைப் பார்த்திருக்கமாட்டாய்; மஹா கூர்மத்தையே பார்த்திருப்பாய். இங்கிருந்து கொஞ்சதூரம் சென்றால், ஒரு ஆறு போகின்றது; அதன் தீர்த்தம் திருப்பாற்கடலினதற்குச் சமானமாம்; அவ்வாற்றைச் சுற்றிலும் திருமண் கட்டிகளே நிறைந்துள்ளன."

ஸ்ரீ ராமாநுஜர் அப்படியே சென்று பார்க்க, மஹாதேவ விக்கிரகத்துக்குப் பதிலாக, மஹா கூர்மம்தான் தோன்றிற்று; மஹாதேவ விக்கிரகத்தையும் அவருடைய அடியார்களையும் காணவில்லை; கொஞ்சத்தூரம் சென்று பார்க்க ஒரு சிற்றாறு ஓடிற்று; அதன் தீர்த்தம் ஸ்படிகம்போலச் சுத்தமாயிருந்தது. மறுபடியும் அசரீரி கூறியதாவது:— "ஏ, சர்வ சந்தேகி! இப்போதாவது உனக்குத் தெரிந்ததா? நீ ஜகந்நாதத்திலே முரண்டு செய்தாய்; உனது பிடிவாதத்தை மாற்றுவதற்கு என்னால் முடியாமற் போய்விட்டதனாலே, நான் உன்னை இப்படி யிங்குக் கொண்டுவந்து விட்டுவிட வேண்டி வந்தது; இங்கேயே யிருந்து, ஜனங்கள் என்னை யுபாசிக்கும்படி செய்வாய்! உனது சிஷ்யர்கள் சீக்கிரம் இங்கு உன்னிடம் வந்துவிடுவார்கள்."

ஸ்ரீ ராமாநுஜர் பார்த்தார்; "ஆ! ஆ! இதெல்லாம் எம்பெருமான் திருவிளையாடல்தானா? நல்லது! இப்படியா

என்னை ஏமாற்றிவிட்டார்?" என்று சிந்தித்துக்கொண்டு ஸ்ரீ கூர்மத்திலுள்ள எம்பெருமானை உலகிலே பிரசித்த மாகும்படிப் பிரதிஷ்டை செய்து பூஜிக்க ஆரம்பித்தார்.

அவருடைய சிஷ்யர்கள் அவரைக் காணாதவராகி, ஜகந்நாதம் முழுதும் தேடினார்கள்; புருஷோத்தமநாதன் அவர்களுக்கு ஒரு விருத்தப் பிராஹ்மண வடிவெடுத்துத் தோன்றி "உங்களுடைய ஆசார்யர் ஸ்ரீ கூர்மத்தி லிருப்ப தாகக் கேள்வி; அங்கு அவர் அரசனிடத்தில் அதிக மரி யாதை பெற்றுச் சுகமே வாழ்ந்துவருகின்றார்; நீங்கள் ஏன் அங்குப் போய் அவருடன் சேர்ந்துகொள்ளாமலிருக்கின்றீர் கள்?" என்று கூறிவிட்டுப் போனார். அப்படியே அவர்கள் ஸ்ரீ கூர்மம் சென்று ஸ்ரீ ராமாநுஜரைச் சேர்ந்துகொண் டார்கள். ஸ்ரீ ராமாநுஜர் அங்குள்ள பூஜை முறையைச் சீர் திருத்தினார்; பிற்காலத்திலே ஸ்ரீ கிருஷ்ணமாசார்யர் என்ற பெயருடன் வரப்போகின்றவர் அவ்விடத்திலே பிறக்க வேண்டுமென்றும், வைகானச முறையை ஏற்படுத்த வேண்டுமென்றும் அமைத்தார். ஸ்ரீ ராமாநுஜர் அங்கிரு ந்து மஹா வித்துவானாகிய பிரதாபருத்திரனால் பெயர் பெற்ற வாரங்கல்லுக்குச் சென்று, சம்சயவாதிகளுடனே தர்க்கம் செய்து வென்று, அங்கே பாஞ்சாலராயன் என்ற பெயருடனே எம்பெருமானைப் பிரதிஷ்டை செய்வித்தார். அங்கிருந்து அவர் ஸ்ரீகாக்குளம் சென்று அங்கேயிருந்த ஸ்ரீ வல்லப க்ஷேத்திரத்தைத் தர்சனம் செய்து, ஸ்ரீ வல்லப ருக்கு ஸ்ரீ தேவுங்குராயன் என்ற பெயரும் அளித்தார்;

அங்கிருந்து ஸிம்ஹகிரியின் மேலுள்ள அகோபிலம் சென்று திருப்பதிக்குத் திரும்பிவந்தார்.

திருப்பதியிலே ஒரு விசேஷம்; அங்குள்ள மூர்த்தியினிடத்து ஸ்ரீ விஷ்ணு லக்ஷணங்களும் இருக்கின்றன, சிவ லக்ஷணங்களும் இருக்கின்றன. இதனுல் அவ்விடத்துச் சைவர்கள் "அப்பொழுது அந்த க்ஷேத்திரத்திலேயுள்ள மூர்த்தி சிவனே"என்றும், "ஆதலால், தங்கள் வசம் அந்த க்ஷேத்திரத்தை ஒப்புவித்துவிடவேண்டும்" என்றும் கூறி ஸ்ரீ வைஷ்ணவருடனே வாது செய்தார்கள். பன்னுட்களாக இரு கட்சியாரும் இந்த க்ஷேத்திரத்திலேயுள்ள மூர்த்தி தங்கள் தங்கள் மூர்த்தியேயென்று வாதுபுரிந்து சச்சரவுகள் செய்துகொண்டிருந்தார்கள். ஸ்ரீ ராமாநுஜர் அங்குப் போனபொழுது, இரு கக்ஷியாரும் இவரை மத்தியஸ்தராயிருந்து இவ்வழக்கை ஒருவாறு தீர்த்துவிடும்படி வேண்ட, இவரும் சம்மதித்தார். யோசனை செய்தார் ஸ்ரீ ராமாநுஜர். ஒருநாள் மாலையிலே இருகட்சி ஜனங்களையும் க்ஷேத்திரத்திலே கூடும்படிச் செய்து, அப் பெருமானின் முன்னிலையில் சிவ சின்னங்களாகிய மான்-மழு-சூலாயுதம் முதலியவற்றையும், விஷ்ணு சின்னங்களாகிய சங்கு-சக்கரம் முதலியவற்றையும் வைக்கும்படி செய்து, எல்லோரும் பார்த்திருக்கக் கதவை மூடிப் பலமான பூட்டுக்கள் போட்டுப் பூட்டிக்கொண்டு ஸ்ரீ ராமாநுஜர் வந்துவிட்டார். அந்த மூல ஸ்தானத்தின் நாலா பக்கங்களிலும் பலமான காவல் வைக்கப்பட்டிருந்தது. "எம்பெருமான் எந்தச் சின்னங்

களை யெடுத்துக் கையில் தாங்கிக்கொள்ளுகிறரோ, அந்தச் சின்னங்களை லக்ஷணமாக உடைய மூர்த்தியே அவ்விடத் துப் பெருமாள்" என்று தீர்மானிக்கப்பட்டிருந்தது. ஊரெல் லாம் திரண்டு இரு கட்சிகளாகப் பிரிந்து, க்ஷேத்திரத்தின் வாசலிலே கூடியிருந்தது; இராவெல்லாம் ஜனங்கள் வெகு ஆத்திரத்துடனும் ஆவலுடனும் காத்துக்கொண் டிருந் தார்கள். சிவ கட்சியார் "ஹர ஹர மஹாதேவ!" என்று பெரு முழக்கம் செய்துகொண் டிருந்தார்கள்; விஷ்ணு கட்சியார் கோவிந்த நாம சங்கீர்த்தனம் கோஷித்துக் கொண்டிருந்தார்கள். "எப்பொழுது விடியுமோ?" என்று எல்லோரும் காத்துக்கொண் டிருந்தார்கள்.

பொழுது விடிந்தது; கோவில் கதவுகள் திறக்கப்பட் டன. வெளியிலிருந்த ஜனங்கள் ஆரவாரித்தார்கள். ஸ்ரீ ராமாநுஜரும் வேறு சில பெரியோர்களுமாக மூலஸ்தானத் துக்குச் சென்றார்கள்; அக் கதவு திறக்கப்பட்டது. இவ் வளவு நேரமும் வெளியிலே ஏக கோஷம் செய்துகொண் டிருந்த ஜனங்களுடைய சப்த மெல்லாம் இப்பொழுது எங்குப் போய்விட்டதோ? ஒரே மௌனம்! எங்குப் பார்த் தாலும் ஒரே மௌனம்! மூச்சுப் பேச்சில்லை. எல்லோ ருடைய ஹிருதயங்களும் படக் படக்கென்று துடித்துக் கொண்டிருந்தன. "என்னவாகுமோ? எம்பெருமான் யார் பக்கல் நிற்பாரோ?"

மூலஸ்தான விக்கிரகத்தை மறைத்திருந்த பொன்னினு லாய பெரிய படுதாக்கள் ஒரு பக்கம் இழுக்கப்பட்டன.

ஆ! ஆ! ஆச்சர்யம்! ஆச்சர்யம்! விஷ்ணு சின்னங்களாகிய சங்கு சக்கரங்கள் எம்பெருமானுடைய இரு கைகளிலும் ஏறியிருந்தன; மான், மழு முதலிய சிவ சின்னங்கள் தூர எறியப்பட்டிருந்தன. சமாச்சாரம் வெளியே தெரிவிக்கப்பட்டது; சிவ மதஸ்தர்கள் வாடின முகங்களுடன் வீடுகட்குத் திரும்பினார்கள்; ஸ்ரீ வைஷ்ணவர்கள் திக்குகள் திடுக்கிட்டுச் செவிடுபடும்படி கோவிந்தநாம சங்கீர்த்தன கோஷங்கள் செய்து ஆரவாரித்து ஆர்ப்பரித்தார்கள்.

முன்னொரு காலத்திலே விஷ்ணு பக்தர்களில் சிறந்தவனான தொண்டமான் அரசன் ஒருவன் தனது எதிரிகளுடனே யுத்தம் செய்யப் போனபொழுது, ஸ்ரீ வேங்கடேசப் பெருமான் தமது சங்கையும் சக்கரத்தையும் அவனுக்குக் கொடுத்தருளினார். ஸ்ரீ வேங்கடேசர் சங்கு சக்கர மின்றியவரா யிருந்ததனால், சைவர்கள் அவரைப் பரமசிவனென்றே கருதி யிருந்தார்கள். இப்பொழுது ஆசார்யர் ஸ்ரீ வேங்கடேசப் பெருமானுக்கு அவருடைய சொந்த ஆயுதங்களைத் திரும்பக் கொடுத்ததனாலே, ஸ்ரீராமாநுஜருக்கு "சங்க சக்ர தாதா" என்றும் ஒரு பெயர் உண்டு.

இந்தத் திருப்பதி விசேஷத்தைப்பற்றிப் புகலுங்கால், அங்கே யிருந்த ஒரு பக்த சிரேஷ்டனுடைய கதை ஞாபகத்துக்கு வருகின்றது. தாளப்பாக்கம் சின்னையன் என்று ஒரு மஹா பக்தன் இருந்தான். இவனுக்கு எம்பெருமானுடைய லீலைகளைப்பற்றிப் புகழ்ந்து பாடுவதிலேயே

ஆநந்தம் அதிகம். இவன் பாடும்பொழுதெல்லாம் ஸ்ரீநிவாச மூர்த்தி எதிரே வந்து நின்று இவனுடைய பாடல்களுக் கொப்ப ஆடுவது வழக்கம். ஸ்ரீ ராமாநுஜர் திருப்பதி சென்றபொழுது, கோவிலிலே பூஜை புரிந்துகொண் டிருந்த பட்டரை நோக்கி, "ஐயா! இச் சரீரம் விழுந்துவிடுகிறபொழுது, சாக்ஷாத் எம்பெருமானுக்குப் பக்கத்திலே எனக்கு இடம் கிடைக்குமா? எம்பெருமானைக் கேட்டுத் தெரிவியுங்கள்!" என்றார். அப்படியே பட்டர் எம்பெருமானைக் கேட்க, எம்பெருமான் "அதற்கென்ன சந்தேகம்? அவர் எனக்குப் பக்கத்திலே எனது உயர்ந்த ஸ்தானத்திலே கட்டாயம் உட்கார்வார்" என்றார்.

அப்பொழுது சின்னையன் அருகிலே நின்றுகொண்டிருந்தான்; அவன் காதிலே எம்பெருமானுடைய் இவ்வார்த்தைகள் விழவே, அவன் "ஸ்வாமி! என்னைப் பார்க்கிலும் சமீபத்திலா அவருக்கு இடம் கிடைக்கும்? நான் இவ்வளவு நாட்களாக இப்படி பக்தி செய்து வருவதற்குப் பலன் நானே தங்கட்கு அடுத்தாப்போல் உட்காரவேண்டுமல்லவா?" என்றான்.

எம்பெருமான் "நீயா? எவரோ உனக்கு இப்படிச் சொல்லிக்கொடுத்திருக்கின்றார்கள. ஏ! அறிவிலி! நான் உனக்கு ஒன்றும் பாக்கி வைக்கவில்லையே; அப்பொழுதப்பொழுது உன் கணக்கைப் பாக்கி யில்லாமல் தீர்த்திருக்கின்றேன். உனக்கு நான் கொடுக்கவேண்டியது பாக்கியொன்றுமில்லையே," என்று மறுமொழி கூறினர்.

பாபம்! சின்னையனுக்குத் துக்கம் அதிகரித்துவிட்டது; அவன் தேம்பித் தேம்பி யழுதுகொண்டே, "கிருபாநிதி! நான் இத்தனை வருஷங்களாக: இராப்பகலாகத் தேவரீரை ஸ்தோத்திரம் புரிந்து பாடினதின் பலன் இதுதானோ?" என்று கதறினான்.

"வாஸ்தவம்தான்; எனது புத்திரா! உள்ளதைச் சொல்! நீயே சொல்! நான் உடனுக்குடனே வந்து ஆடி விடவில்லையா? பாக்கி வைத்திருக்கிறேனா?"

சின்னையன் "நான் கெட்டேன்; நான் அழிந்தேன்" என்றான்.

எம்பெருமான் அவனைத் தேற்றிப் பலவித ஆறுதல்கள் அளித்து, "குழந்தாய்! நீ பயப்படாதே! உனது மூடத்தனத்தை நீ அறிந்துகொள்ளும்படி செய்த ஆசார்ய புருஷரிடத்திலே சரணாகதி யடைந்துகொள்! அவரால் முடியாதது ஒன்றுமே யில்லை," என்றருளினர். அப்படியே யவன் ஸ்ரீ ராமாநுஜரிடத்திலே சிஷ்யனானான்.

ஸ்ரீ ராமாநுஜர் திருப்பதியினின்றும் நீங்கித் தென்புறமாகப் புறப்பட்டு, வழியிலே காஞ்சீபுரம், திருவல்லிக்கேணி, மதுராந்தகம், திருஅஹீந்திரபுரம் முதலிய கீழ்நாட்டு க்ஷேத்திரங்களையும் தொண்டை மண்டலத்திலுள்ள க்ஷேத்திரங்களையும் தர்சனம் செய்தார்; பின்னர் அவர் ஸ்ரீ நாதமுனி யோகீஸ்வாருடைய ஜனன ஸ்தலமாகிய வீர நாராயணபுரம் சென்று, அம்மஹானுடைய சமாதியைத் தர்

சனம் செய்தார். இவ்வாறு பூப்பிரதக்ஷிணத்தை முடித்துக் கொண்டு, ஸ்ரீ ராமாநுஜர் ராமேஸ்வரத்துக்கு இன்னொரு முறை சென்றுவிட்டு, ஸ்ரீரங்கத்துக்குத் திரும்பி வந்தார்.

ஸ்ரீ ராமாநுஜர் வருகிறாரென்கிற சங்கதி கேள்விப் பட்டு, ஸ்ரீரங்க நகர்வாசிகள் அனைவரும் ஆயிரக்கணக் காகக் கூடி அவருக்கு நல்வரவு அளித்தார்கள். ஸ்ரீ ராமா நுஜருக்கும் தாம் தமது சொந்த ஊருக்குத் திரும்பி வந் ததுபற்றி அளவற்ற மகிழ்ச்சி யுண்டாயிற்று. எம்பெரு மான் ஸ்ரீ ராமாநுஜரை நோக்கி, "நீ சௌக்கியமாக யாத் திரை செய்து வந்தாயென்று நினைக்கிறேன்" என்று விசாரி க்க, ஸ்ரீ ராமாநுஜர், "எம்பெருமானாகிய தாங்கள் என் னுடனேயே எப்பொழுது மிருக்க, அந்யோந்யமாய், அந்த ரங்கமாய் அடுத்து இருக்க, எனக்குச் சௌக்கியக் குறைவு உண்டாகுமோ? எம்பெருமா னடியார்களுக்கு எப்பொழு தாவது குறைவு நேர்ந்ததுண்டா?" என்று மறுமொழி யளி த்துவிட்டு, அங்கு விடை பெற்றுக்கொண்டு ஜயகோஷத் துடனே எல்லோரும் வாயார வாழ்த்தத் தமது மடத்துக் குத் திரும்பிவந்து சேர்ந்தார்.

---

## பராசரபட்டர் ஜனனம்

ஸ்ரீ ராமாநுஜருடைய சிஷ்யர்களுக்குள்ளே ஆழ்வா னிடத்திலே ஆசார்யருக்கு அதிக வாத்சல்ய முண்டென்று நாம் முன்னமேயே கூறியிருக்கின்றோம். ஆழ்வான் தனது

தினசரி வாழ்க்கையை வெகு கண்டிதமாக, ஒழுங்குக் கிரமம் ஓரணுவும் தவறாமல் நடத்திவந்தார். அவர் ஒரு நாளை அபிகமனம், உபாதானம், இஜ்யம், சுவாத்தியாயம், யோகம் என ஐந்து பாகங்களாகப் பிரித்து முதற் பாகத்தைத் தனது காலைக்கடன், சந்தியா ஜப தப முதலியவற்றிலே செலவழிப்பார்; இரண்டாவது பாகத்திலே சில கிருகஸ்தர்களுடைய வீடுகட்கு— பரிசுத்தமானவர்கள் என்று கருதுகின்ற சிலருடைய வீடுகட்கு— பிக்ஷைக்குச் செல்வார்; மூன்றாவது பாகத்திலே அவர் தமது வீட்டுக்குத் திரும்பி வந்து, பஞ்ச எக்ஞங்கள் செய்து அதிதிகளுக்காகக் காத்திருப்பார்; பகலெல்லாம் வேத பாராயணத்திலே கழியும்; மாலை பிரஹ்ம நிஷ்டையிலே கழிந்துவிடும். ஆழ்வான் நிரம்ப ஏழை; பிக்ஷையெடுத்துக்கொண்டு வந்தால் தான் சாப்பாடு கிடைக்கும்.

ஒருநாள் பெருமழை வெகுநேரம் பெய்தது; பிக்ஷையெடுக்கச் செல்வதற்கு வெகு நேரமாய்விட்டது; முந்திய நாள் ஆகாரத்தில் மிச்சம் வைத்திருக்கும் வழக்கம் ஆழ்வான் வீட்டிலே கிடையாது. என்ன செய்யலாம்? ஆனால், குலதேவதைக்குச் செய்யவேண்டிய பூஜையை நடத்தினார்; பின்னர், அந்த விக்கிரகத்தின் முன்னே ஏதோ ஒரு சிறிய பழத்தை நைவேத்தியம் செய்துவிட்டு அன்று முழுதும் உபவாசமிருந்தார். சூர்யன் அஸ்தமித்தான். ஆழ்வான் க்ஷேத்திரத்துச் சென்று செய்யவேண்டிய பணிவிடைகளைச் செய்துவிட்டு, தமது குடிசைக்குத் திரும்பி

வந்து ஒருமுறை திவ்யப் பிரபந்தத்தைப் பாராயணம் செய்துவிட்டுப் படுத்துறங்கினர்.

சிறிது நேரம் கழிந்தவுடனே ஸ்ரீரங்கநாதப்பெருமானுடைய க்ஷேத்திரத்திலே அர்த்தஜாம பூஜை யாயிற்று; சங்கங்கள் ஒலித்தன; வாத்தியங்கள் கோஷித்தன. ஆழ்வானுடைய மனைவியாகிய ஆண்டாள் என்னும் அம்மையார், ஆழ்வானருகே படுத்துறங்கிக்கொண்டிருந்தவள் இந்தச் சப்தத்தைக் கேட்டு விழித்துக்கொண்டாள்; அருகே படுத்திருந்த ஆழ்வானுடைய முகத்தைப் பார்த்தாள்; அது வாடிச் சோர்ந்திருக்கக் கண்டாள். "ஐயோ! எனது பிராணநாதனுடைய முகம் இப்படியும் பட்டினியினால் வாடிச் சோர்ந்திருக்க, ஏ! ரங்கநாதா! உனது அடிமையும் பக்தனுமாகிய எனது நாதன் பட்டினி கிடந்து படுத்து உறங்க, நீ சுகமாகக் காலம் கழித்துக்கொண்டிருக்கிறாய்; நீ பிச்சைக்குப் போகவேண்டிய வேலையில்லை; உனக்குச் சாப்பாட்டுக்கு எப்பொழுதும் குறைவுமில்லை," என்று தானே வருந்திக்கொண்டாள்.

இப்படியவள் வருந்தும்போது, அவளுடைய மனம் பட்ட பாட்டை இத்தகையதென்று எவரால் இயம்ப முடியும்? அவளுடைய கணவனும் நாதனுமாகிய ஆழ்வானுக்கு முன்னே — அவளுடைய பார்வையில் — ரங்கநாதர்தாம் எம்மாத்திரம்? வேறு யார்தான் எம்மாத்திரம்? அவளுக்கு ஆழ்வானே பரம புருஷன், புருஷோத்தமன், இகத்துக்கும் பரத்துக்கும் ஏற்ற குரு; அத்தகையோருடைய எஜமானன்,

சாப்பாட்டுக்குக் கூட அளிக்காமல் விட்டுவிட்டால், அவ ளுக்குக் கோபம் வாராதோ? இவள் தனது மனத்துக்குள் ளேயே சொல்லிக்கொண்ட சொற்கள் ஸ்ரீரங்கநாதப் பெருமானுக்குத் தெரிந்துவிட்டன. அவள் கூறுவது நியா யமே; இவற்றை ரங்கநாதப்பெருமான் உணர்ந்துகொண் டார்.

ஆகையால், அவர் க்ஷேத்திரத்தின் மடப்பள்ளிக்குத் தலைவனாகிய உத்தம நம்பியின் முன்னே கனவில் தோன்றி, "எனது நண்பனாகிய ஆழ்வான் பட்டினியாய்ப் படுத் துறங்குகின்றான்; எனக்கு இப்பொழுது நைவேத்தியம் செய்ததை எனக்குள்ள சகல மர்யாதைகளுடனும் உன் தலையிலே சுமந்து சென்று, அவனுக்குக் கொண்டுபோய்ப் பாய்!" என்று கூறி மறைந்தருளினார்.

உத்தம நம்பி உடனே எழுந்திருந்து, மேள தாள சங் கீத சகல வாத்தியங்களுடனும் அந்த நைவேத்தியத்தை யெடுத்துக்கொண்டு ஆழ்வான் வீட்டை நோக்கி நடந்து வந்து சேர்ந்தார். இது சங்கதி யொன்றும் ஆழ்வானுக்குத் தெரியாது. ஆழ்வான், உறங்கிக்கொண்டிருந்தவர், தமது வீட்டு வாசலிலே மேள தாள சப்தம் கேட்டுத் திடுக்கிட்டு விழித்து, 'எம்பெருமான் தான் பவனி வருகின்றாரோ' என்று நினைத்து, எம்பெருமானைத் தர்சிப்பதற்காக வெளியே ஓடிவந்தார். மேள தாள சங்கீதத்துடனே ஒரு பெருங் கூட்டம் இவருடைய வீட்டண்டை வந்தது வாஸ் தவம்தான்; ஆனால், அதிலே எம்பெருமானைக் காணவில்லை;

அக் கூட்டம் ஆழ்வானுடைய வீட்டு வாசலிலே வந்து நின்றது; ஆழ்வான் ஆச்சர்ய மடைந்தார். உத்தம நம்பி தமது தலையில் எதையோ சுமந்துகொண்டு, ஆழ்வானை நோக்கி, சமீபத்திலே வந்து, "ஸ்வாமி! எம்பெருமான் இதை யுங்களுக்கு அனுப்பிவைத்தார். தயவு செய்து ஏற்றுக்கொள்ளுங்கள்!" என்று கூறினர்.

ஆழ்வானுக்கு விஷயம் ஒன்றும் புலப்படவில்லை. "இதைக் கொடுத்தனுப்பும்படி நான் அவரைக் கேட்கவில்லையே; நான் அவரிடத்தில் சரணுகதி யடைந்தபொழுதே, அவர் எனக்கு வேண்டியதை யெல்லாம் கொடுத்துவிட்டார்; நான் இச்சிப்பதற்கு ஒன்றுமே யில்லையே; இது ஏதோ புதிதா யிருக்கிறது; நான் அதற்கு விலை கொடுக்க வேண்டுமே" என்று ஆழ்வான் தனக்குள் தாமே சொல்லிக் கொண்டார்.

பின்னர் தமக்கும் தமது மனைவிக்கும் அந்த நைவேத்தியத்திலே எவ்வளவு வேண்டுமோ அவ்வளவும் எடுத்துக் கொண்டு, மிச்சத்தைத் திருப்பிக் கொடுத்தனுப்பிவிட்டார். உத்தம நம்பியும் மற்றவர்களும் சென்ற பிற்பாடு, ஆழ்வான் தமது மனைவியை நோக்கி, "அடியே! நீ எம்பெருமானை என்ன கேட்டாய்?" என்று கேட்டார். அவள் "நான் ஒன்றும் கேட்கவில்லை; 'அர்த்த ஜாம நைவேத்தியம் ஆகின்றது; பணியாளன் பட்டினியாற் களைத்துப் படுத்துறங்குகின்றான்; எஜமானர் சம்பிரமமாக விருந்து உண்கின்றார்' என்று நானுகச் சொல்லிக்கொண்டேன்; இவ்வளவு தான்" என்றாள்.

ஆழ்வான்: "ஏ! பேதாய்! 'பெண்புத்தி பேதைமைத்து' என்னும் சொல்லை நிலைநிறுத்திவிட்டாய்; எனது எஜமான ரிடம் நீ இப்படிச் சொல்லத் துணிந்தாயா? நீ என்ன அறிவிலி—" என்று கோபித்துக்கொண்டே போகையில்,

ஆண்டாள்: "அவர் உங்களுக்கு எஜமானரா யிருக்க லாம்; ஆனால், எனக்கு எஜமான ரல்லவே. எனது எஜ மானர், எனது நாதர், எனது உயிர், எனது சமஸ்தமும் இதோ இருக்கிறது; அவர் பட்டினியாற் களைத்துப் படுத் துறங்க, வேறெவரிடத்து—அவர் தேவராயினும் சரியே! மனிதராயினும் சரியே—எனக்கென்ன லக்ஷியம்?" என்று படபடத்துக் கூறினாள்.

அன்றிரவு அவர்கள் அர்த்த ஜாம பூஜை நைவேத்தி யத்தின் சாரம் அவர்களுக்குப் புத்திரோற்பத்தி யளித் தது; பராசரர் என்னும் பெயருடைய அற்புதக் குழந்தை பிறந்தது. ஆழ்வான் எப்பொழுதுமே எதையும்பற்றிக் கவனிப்பதில்லை; இன்னும், இக் குழந்தை விஷயத்திலே அணுவளவும் கவனம் செலுத்தவில்லை. நீண்டல் நாட்கள் கழிந்தவுடனே ஸ்ரீ ராமாநுஜர் கோவிந்தரை இட்டுக் கொண்டு, ஆழ்வானுடைய வீட்டுக்குச் சென்று, குழந்தை யைத் தம்மிடம் கொண்டு வந்து காண்பிக்கும்படி ஆக்ஞா பித்தார். எம்பார், குழந்தையை எடுத்துக்கொண்டு வரும் மார்க்கத்திலே 'திருஷ்டி விழுந்துவிடப் போகிறது' என்று பயந்து, இரு பேருண்மைகளை ஜபித்துக்கொண்டே வந் தார். ஸ்ரீ ராமாநுஜர் அந்தக் குழந்தையைத் தமது கைகளி

லே வாங்கி யேந்திக்கொண்டு, ஆநந்தக் கண்ணீர் ஆறு யோட, "கோவிந்தா! மிகவும் அற்புதமான குழந்தை யல்லவா இது? முகத்திலே என்ன தேஜஸு? எத்தகைய அரிய சக்தி இக் குழந்தையி னுள்ளே அடங்கியுள்ளது, தெரியுமா? ஆனால், என்ன? இரு பேருண்மைகளின் ஒளி இக் குழந்தையைச் சுற்றி வீசுகின்றதே; கோவிந்தா! இது உன் வேலைபோ லிருக்கின்றது, அல்லவா?" என்றார்.

"ஸ்வாமி! ஆமாம். உண்மைதான். நான் இக் குழந்தை யை எடுத்துக்கொண்டு தங்களிடம் வரும் மார்க்கத்திலே இக் குழந்தை திருஷ்டிபடா திருக்கும்பொருட்டு, நான் ஜபம் செய்துகொண்டு வந்தது உண்மைதான்" என்று கோ விந்தர் சொல்ல, ஸ்ரீ ராமாநுஜர் அக் குழந்தையினிடத்துக் கோவிந்தருக்குள்ள ஆசையைக் குறிப்பிட்டுப் புந்நகை புரிந்து, "கோவிந்தா! எனது கருத்தை நீ முன்னமேயே தெரிந்துகொண்டாய்; நல்லது, இக் குழந்தைக்கு வித்தை யை யப்பியசித்துக் கொடுக்கவேண்டியது உனது கடமை யே." என்று கூறிவிட்டு, அக் குழந்தையின் சரீரத்திலே சங்கு சக்கர முதலியவற்றின் முத்திரை தரிப்பித்தார். விஷ்ணு புராணத்தின் கர்த்தாவாகிய பராசரரின் பெயரை அக் குழந்தைக் கிட்டு, பின்னர் அதற்குப் பஞ்ச சம்ஸ்காரங் கள் செய்விக்கும்படி கோவிந்தருக்கு ஆக்ஞாபித்தார். இது ஸ்ரீ ஆளவந்தார் அந்திய காலத்திலே விரும்பிய இரண்டா வது விருப்பம்; ஸ்ரீ ராமாநுஜர் இதையும் பூர்த்தி செய்து விட்டார்; கொஞ்ச காலத்துக்குப் பின்னே கோவிந்த

ருடைய சகோதராருக்கு ஒரு குழந்தை பிறந்தது; ஸ்ரீ ராமாநுஜர் அங்குச் சென்று, குழந்தைக்கு ஸ்ரீசடகோபருடைய பெயராகிய பாராங்குசர் என்று பெயர் வைத்தார்; இவ்விதமாக ஸ்ரீராமாநுஜர் ஸ்ரீ யாமுநாசார்யருடைய மூன்றுவதும் கடைசியுமான விருப்பம் நிறைவேற்றப்பட்டுவிட்டது.

ஆழ்வான் க்ஷேத்திரத்துக்குச் சென்றிருந்தபொழுது, எம்பெருமான் ஆழ்வானை நோக்கி, "புத்திரா! உனது புத்திரனை நாம் தத்தெடுத்துக்கொண்டோம். அவனை நம்மிடம் கொண்டுவந்து கொடுப்பாய்! அக் குழந்தைக்குத் தொட்டில் இங்குப் போடவேண்டும்; நாமும் நமது மனைவியுமாக அதை வளர்த்துவருவோம்" என்றார். அப்படியே ஆழ்வான் உடனே யோடிச் சென்று, குழந்தையை யெடுத்துக் கொண்டுவந்து சந்நிதானத்திலே விட, அது உடனே நேரே எம்பெருமானுடைய திருவடியண்டையில் தவழ்ந்து சென்று, அங்கே நைவேத்தியத்துக்காக வைக்கப்பட்டிருந்த அன்னத்தை நைவேத்தியம் செய்யாததற்கு முன்னமேயே, தீண்டித் தின்றுவிட்டது; இன்னும் ஒரு விநோதம். அக் குழந்தை ஸ்ரீரங்கநாதருடைய முழந்தாழ்களின் மீதேறி அவருடைய சரீரத்திலே அணியப்பெற்றிருந்த ஆபரணங்களை யெல்லாம் தொட்டுத் தொட்டு விளையாடி, சிரித்துக்கொண்டே, எம்பெருமானையும் ஸ்ரீ லக்ஷ்மி தேவியையும் "அப்பா" என்றும், "அம்மா" என்றும் அழைத்தது.

இதே விஷயம் இன்னொரு விதமாகவும் கூறப்படு கின்றது:— ஒருநாள் அவ்விடத்து அரசன் எம்பெருமா னுக்குப் பிரமாதமாக ஒரு உற்சவம் செய்துவைத்தான்; குழந்தைகள் எப்பொழுதுமே நைவேத்தியத்தினிடத்தி லே பிரியமாகையினாலே, நைவேத்தியத்தை நோக்கி அங் கிருந்த குழந்தைகள் அனைத்தும் சென்றன; அப்பொழுது அர்ச்சகர்கள் முன்னே யோடிவந்து, அக் குழந்தைகளைக் கோவிலுக்கு வெளியே துரத்திவிட்டார்கள். அன்றிரவு அவ் வரசன் ஒரு பயங்கரமான கனவு கண்டான். எம்பெரு மான் மிகுந்த கோபதீபிதராய்த் தோன்றி, நெற்றியை நெரி த்து, "இன்று நீயும் உனது இழிந்த அர்ச்சகர்களும் என்னை அதிகமாக அவமானப்படுத்திவிட்டீர்கள். நீங்கள் எனது குழந்தைகளைப் பக்ஷணங்களைத் தின்னவொட் டாது துரத்திவிட்டீர்கள்; அப்படியிருக்க, நீங்கள் நைவேத் தியம் வைத்ததை நான் தொடுவேனா? உங்களுடைய நல்ல வேளை, அவர்கள் குழந்தைகளாய்ப் போய்விட்டார்கள்; இல்லாவிட்டால் அவர்கள் தங்கள் பார்வையினாலே உங்களை எரித்திருப்பார்கள். எனது குழந்தைகள் உண்பதற்கு முன்னே நான் உண்கிறதில்லை; எனக்கு உங்களுடைய நை வேத்தியம் வேண்டியதில்லை; நான் உபவாசமிருக்கத் துணிந்திருக்கிறேன்," என்றார்

அரசன் நடுநடுங்கி, அரண்மனையினின்றும் க்ஷேத்திர த்துக்கு ஓடி, சங்கதியை விசாரிக்க, 'ஸ்ரீ ரங்கநாதர் கூறி யது உண்மையே' என்று அறிந்து, அவ் வர்ச்சகர்களைக்

கரமாகக் கோபித்து, அன்றுமுதல் தினந்தோறும் குழந்தைகளுக்கு முன்னர் ஆகாரம் கொடுத்துவிட்டு, பின்னர் எம்பெருமானுக்கு நைவேத்தியம் படைக்கும்படி ஆக்ஞை செய்தான்.

பராசருக்கு ஐந்து வயதாயிற்று; அவர் நல்ல புத்தி தீக்ஷண்யமும் பொற்பிரகாசமும் உள்ளவொருகுழந்தையாக வளர்ந்து வந்தார்; அவருடைய கண்களிலிருந்து வெளிப்பட்ட ஒளி எவ் வஸ்துவையும் எவ்வளவு தூரத்திலும் ஊடுருவிப் பார்ப்பதாயிருந்தது. ஆழ்வான், திவ்ய பிரபந்தம் பாராயணம் பண்ணிய பொழுதெல்லாம் பராசரர் கூடவே உட்கார்ந்து கேட்டுக்கொண்டிருப்பார். ஒருநாள் ஆழ்வான் ''நெடுமாற்கடிமை'' என்று ஆரம்பிக்கின்ற பாடலைப் பாராயணம் செய்ய ஆரம்பித்து, ''சிறுமாமனிசர்'' என்ற வார்த்தைகளினிடம் வந்தபொழுது, குழந்தை பராசரர் ஒரு கேள்வி கேட்க ஆரம்பித்தார்:—

''அப்பா! ஆழ்வார் ''சிறிய பெரிய மனிதர்'' என்று கூறியிருக்கின்றாரே; அதன் பொருள் என்ன? சிறுமையும் பெருமையும் ஒரே மனிதரிடத்தில் ஒரே சமயத்தில் எப்படி யிருத்தல் முடியும்?''

ஆழ்வான் கிடுகிடுத்துவிட்டார்; என்ன இது? ஐந்து வயதுப் பையன் கேட்கும் கேள்வியா இது? ஆ! ஆ! எம்பெருமான் இக்குழந்தையைத் தன் குழந்தை யென்று சொல்லவில்லையா? எம்பெருமானுடைய குழந்தைக்கு இப்

பேரறிவு இருத்தல் ஆச்சர்யமன்றே," என்று ஆழ்வான் சிந்தித்தவராய், அக் குழந்தையை நன்ருக உற்றுப் பார்த்தார்.

குழந்தையை நோக்கி, ஆழ்வான் "பேஷான கேள்வி; இன்னும் உனக்கு உபதேச மாகவில்லை; உபதேச மாயிருந்தால், 'ஸ்ரீ சடகோபர் சொன்னது சரியே' என்றும், அது சாஸ்திரத்தை யநுசரித்ததே' என்றும் நான் ருசுப்படுத்தி விடுவேன்'' என்ருர்.

"ஆயினும், நான் உனக்கு ஒருவாறு பொருள் கூறுகிறேன். இங்குத் தேவராஜமுனி யென்றும், பாலார்ய ரென்றும் இருவர் இருக்கின்ருர்களே; அவர்களைப் பார்த்த ஞாபகம் இருக்கின்றதா? அவர்களுடைய சரீரங்களைப் பார்த்தால் அவர்கள் எவ்வளவு சிறியவர்களாயிருக்கின்ருர்கள்; ஆனல், அவர்களுடைய ஆத்மப் பெருமையும் ஞானத்தினளவும் அபாரமாய், நினைப்புக்கு மேற்பட்டதாயிருக்கின்றது; இது 'சிறுமாமனிசர்' என்பதற்கு உதாரணம்'' என்ருர் இன்னும் ஆழ்வான்.

பராசரர் ஒருநாள் தெருவிலே தம் வயதுப் பிள்ளைகளோடு சேர்ந்து விளையாடிக்கொண்டிருக்கையில், அவ்வழியே ஒரு பெருங் கூட்டம் வந்தது; அக் கூட்டத்தின் மத்தியில் சர்வக்ஞபட்டர் என்ற பெயர் தரித்தவராய் ஒருவர் பல்லக்கிலே வீற்றிருந்தார்; இந்த சர்வக்ஞருடைய இரண்டு சிஷ்யர்கள்: "சர்வக்ஞ பட்டர் வருகிருர்; சர்வக்ஞ பட்டர் வருகிருர்'' என்று கூட்டத்தின் முன்னதாகக்

கூவிக்கொண்டு செல்கின்றார்கள். இவ்வார்த்தைகள் தெருவிலே விளையாடிக்கொண்டிருந்த பராசருடைய காதுகளில் விழவே, அவருக்கு அது பொறுக்கமுடியவில்லை; 'இவனுக்கு இவ்வளவு கர்வமா? இவன் சர்வக்ஞனா? எல்லாம் அறிந்தவனா?' என்று நினைத்தார் பராசரர். 'இவ்வூரிலே ஆசார்யர்களான ஸ்ரீ ராமாநுஜரும் அவருடைய சிஷ்யர்களும் எங்கே போய் ஒளிந்துகொண்டுவிட்டார்கள்? இந்த சர்வக்ஞன் வெளியே வந்திருக்கின்றான்' என்று கருதியவராய், தெருவிலிருந்து ஒரு கையளவு மண் எடுத்து, அப் பல்லக்கை யணுகி, சர்வக்ஞ பண்டிதனை நோக்கி, "ஐயா! இது எவ்வளவு என்று தயவு செய்து சொல்லுங்கள் பார்க்கலாம்!" என்று, புன்நகை புரிந்துகொண்டே கேட்டார்.

பண்டிதன் திடுக்கிட்டுவிட்டான். எல்லாம் தெரிந்தவரென்றால், பராசருடைய கைக்குள்ளிருப்பதையும் அறிந்தவர் என்று பொருள்? சர்வக்ஞத்துவத்திலே இதுவும் அடங்கியதென்று அவன் இதுகாறும் நினைக்கவேயில்லை; பரிதாபம்! பண்டிதர் பதில் சொல்ல வகை யறியாது, தலையைக் கீழே தொங்கப்போட்டுக்கொண்டார்.

பராசரர் கைகளைத் தட்டிச் சிரித்துக்கொண்டு "இது நல்ல சர்வக்ஞத்துவம்; அது கையளவு மண் என்று கழுதை கூடச் சொல்லிவிடுமே! உங்களுக்குச் சர்வக்ஞத்துவம் இருந்தும் தெரியவில்லையே," என்று கூறிவிட்டு, தமது விளையாட்டுத் தோழர்களை நோக்கி, "பையன்காள்! இவனுடைய விருதுகளை யெல்லாம் பிடுங்குங்கள்! ஏ, மூட!

எனது குருமூர்த்திக்கு உனது அகங்காரம் எட்டினல் உனக்குக் கெடுதி சம்பவிக்கும்; ஆகையால், உடனே ஓடிவிடு இங்கேயிருந்து!'' என்று சொன்னர்.

சர்வக்ஞ பண்டிதன் கர்வமிழந்தவனய் அங்கு அருகே நின்றுகொண்டிருந்தவர்களை ''இப் பையன் யார்? பார்த்தால் பையனயிருக்கின்றான்; மெத்த புத்திசாலியாயிருக்கின்றனே'' என்று கேட்டான்.

ஒருவன் ''இவர்தான், இக் குழந்தைதான் ஸ்ரீ ராமாநுஜருடைய சிஷ்யராகிய ஸ்ரீ வத்சாங்கருடைய புத்திரர்'' என்று கூற, அப்பண்டிதன் ''அப் படியா? சரிதான்; புலிக்குப் பிறந்தது பூனையாகுமோ? தாய் எட்டடி பாய்ந்தால், குட்டி பதினறடி பாயாமல் இருக்குமோ?'' என்று சொல்லிவிட்டு, அப் பையனைத் தூக்கிப் பல்லக்கின்மீது தமது மடியில் வைத்துக்கொண்டு பலவாறு வாழ்த்தி, ஆழ்வானுடைய வீட்டுக்குப் போனர்.

அச் சமயத்தில் அவ் வீட்டுக்குத் தநுர்தாசனுடைய மனைவி ஹேமாம்பாள் போயிருந்தாள்; சர்வக்ஞ பண்டிதர் பாராசரரை யிட்டுக்கொண்டு அவ் வீட்டண்டை வந்தபொழுது, அவள் வீட்டைவிட்டு வெளியே வந்தவள், நடந்த சங்கதியைக் கேள்வியுற்று, பையனைத் தமது மார்போடு சேர்த் தணைத்துக்கொண்டு, 'திருஷ்டி பட்டுவிட்டதோ' என்று பயந்து, இருபேருண்மைகளை யுச்சரித்து, தமது முந்தாணையினல் அக் குழந்தையை மூடிக்கொண்டு, உள்ளே சென்று, ''குழந்தையை இப்படியும் தெருவிலே

அஜாக்கிரதையாய் விடலாமோ? திருஷ்டி பட்டுவிட்டால் என்ன செய்கிறது?" என்று கூறி, பெற்றோரைக் கடிந்து கொண்டாள். பின்னர் ஹேமாம்பாள் அக் குழந்தையைப் பரிசுத்த தீர்த்தத்தினல் புரோக்ஷித்து, சிறிது விசனம் மிகுந்தவளாய், "என் அப்பனே! நீ கிரம்பப் பெரியோனு யிருக்கின்றாய்; நீ நெடுநாள் இருக்கவேண்டுமே" என்று கைகளை நெறித்து, அக் குழந்தைக்கு ஒரு முத்தம் கொடுத்தாள்.

பராசருக்குக் காலத்திலே உபநயனம் செய்விக்கப் பட்டது; வேத பாடம் ஆரம்பிக்கப்பட்டது. பராசர் முதல் நாள் உபாத்தியாயர் வீட்டுக்குச் சென்றார்; உபாத்தியாயர் சில சுலோகங்களைச் சொல்லிக்கொடுக்க, பையன் அவற்றை ஞாபகமாகத் திரும்பச் சொன்னன். மறுநாள் பராசரர் பள்ளிக்குச் சென்றார்; உபாத்தியாயர் முந்திய நாள் சொல்லிக்கொடுத்த சுலோகங்களையே மறுநாளும் சொல்லிக்கொடுத்தார்; ஆனல், பராசரப் பையன் "என்ன இது? தினந்தோறும் இதுதானு பாடம்?" என்று சொல்லிவிட்டு, தெருவிலே விளையாட ஓடிவிட்டார்.

பராசரர் வீட்டுக்கு வந்தபொழுது, அவருடைய பெற்றோர்கள் அவரை நோக்கி "என்னடா அப்பா? இன்று பள்ளிக்கூடத்திலே 'பாடம் படிக்கமாட்டேன்' என்று சொல்லி, தெருவிலே விளையாடுவதற்கு ஓடிவிட்டாயாமே. இது நல்லதா? இவ் விளம் வயதிலே படிக்கவேண்டாமா?" என்றார்கள்.

பராசரர் "ஆம், உண்மைதான். நேற்றுப் படித்த பாடத்தையே இன்றும் படிப்பதென்றால் அது எனக்கு உற்சாகமா யிருக்கவில்லை; நான் போய்விட்டேன்," என்று மறுமொழி கூறினர். அவருடைய பிதா "அப்படியானல், எங்கே, அந்த பாடத்தை ஒப்புவி! பார்க்கலாம்" என்றார். பராசரர் சுலோகங்களை யெல்லாம் ஒரு அசை பிசகாமல், ஒரு வார்த்தை பிசகாமல், அப்படி யப்படியே ஒப்புவிப்பதைக் கண்ட ஆழ்வானும் அவனுடைய மனைவியும் ஆச்சரியமும் பயமும் அடைந்தவர்களாகி, "இனிமேல் கொஞ்ச காலத்துக்குப் பையனைப் பள்ளிக்கூடம் அனுப்புவது நல்லது அன்று" என்று கூறிக்கொண்டார்கள்.

ஆகையால், ஆழ்வானும் கோவிந்தனும் பராசருக்குச் சகல கலைகளையும் பயின்று கொடுத்து, அவரைப் பரிபூர்ண வித்துவா னாக்கினார்கள்.

ஒருநாள் பராசரர் க்ஷேத்திரத்தினுள்ளே சென்று, மறைத்திருந்த திரைகளை நீக்கி ஸ்ரீரங்கநாதப் பெருமான் முன் நுழைந்தார். பராசரர் தமது அந்தப் புரத்திலே உத்தரவில்லாது வரத் துணிந்ததுபற்றிக் கோபம் கொண்டவர்போல, ஸ்ரீரங்கநாதப் பெருமான் "பராசரா! போ வெளியே!" என்றார். அப்படியே பராசரர் வெளியே வந்து கொஞ்சதூரம் செல்வதற்குள்ளாக, எம்பெருமான் "ஏ! பராசரா! இங்கு வா!" என்று அழைத்தார்.

பராசரர் அவ் வாக்கைக்குக் கீழ்ப்படிந்து, உள்ளே சென்று கை கட்டிக்கொண்டு எம்பெருமான் முன்னே,

நிற்க, எம்பெருமான் அவரை நோக்கி, "நாம் இங்கிருந்து உன்னை வெளியே போகச் சொன்ன பொழுது நீ எங்களை எப்படிக் கருதிக்கொண்டு சென்றாய்?" என்று கேட்டார். பராசரர் "ஸ்ரீரங்கநாதப் பெருமானும் ரங்கநாயகியும் என்று நினைத்துச் சென்றேன்" என்றார்.

"அதுவரையில் எப்படிக் கருதி யிருந்தாய்?" என்று கேட்டார் எம்பெருமான்.

பராசரர் "எனது பிதா ஆழ்வானையும், மாதா ஆண்டாளையும்போலக் கருதியிருந்தேன்" என்றார்.

எம்பெருமான் "என்ன! அவ்வளவு சீக்கிரம் உனக்குக் கோபம் வந்துவிட்டதா? இந்த நிமிஷம் முதல் எங்களை முன்போலவே கருதுவதாக என்மேல் ஆணையிட்டுவிட்டுப் போ! நான் உன்னைப் பரிசோதித்துப் பார்த்தேனே யொழிய வேறொன்று மில்லை," என்று கூற, பராசரர் "பிழைத்தேன்; எம்பெருமானுக்கு மறுபடியும் என்மீது கிருபை யுண்டாய்விட்டது," என்று சொல்லி ஆநந்தக் கூத்தாடினார்.

பராசரர் கல்வியிலே மஹா நிபுணராய்விட்டார். ஒரு சமயத்திலே ஸ்ரீ ராமாநுஜரே பராசரரை ஒரு பாட்டுக்குப் பொருள் கூறும்படி சொல்லி, அவர் கூறிய பொருளைக் கேட்டு வியந்து அங்குச் சுற்றிலு மிருந்தவர்களை நோக்கி, "இவரை என்னைப்போலவே கருதுங்கள்!" என்றார்.

இன்னொரு சமயத்திலே ஸ்ரீ ராமாநுஜர், பையன் பராசரராலே செய்யப்பட்ட ஒரு உபந்யாசத்தைக் கேட்டு மகிழ்

ந்து, அவருக்கு "வேதாந்தாசார்யர்" என்னும் பட்டமளித்தார். இவ்விதமாக மஹா வித்வானாய், எல்லோராலும் மெச்சப்பெற்று வளர்ந்த பராசரருக்கு 'விவாகம் செய்விக்க வேண்டிய காலம் வந்துவிட்டது' என்று ஆழ்வான் நினைத்து, ஸ்ரீ ராமாநுஜரிடம் தெரியப்படுத்தி, "ஸ்வாமி! எனது சுஜனங்கள், எனது சொந்த பந்துக்கள் சற்றும் ஞானமில்லாதவர்கள்; இவர்களிடமிருந்து ஒரு பெண் பார்த்தால், நமது பையனுக்கு ஏற்ற இல்லறத் தோழியாக ஒரு பெண் கிடைப்பது அருமை; என்ன செய்யலாம்?" என்று கூறினார்.

ஸ்ரீ ராமாநுஜர் "இவ்வளவு தானா? அப்படியானால், மஹா பூர்ணருடைய குடும்பத்திலே ஒரு பெண் பார்க்கலாமே; நமது விருப்பத்துக் கேற்றபடியுள்ள ஒரு பெண் அங்குக் கிடைக்கலாம்" என்றார். ஆழ்வான், வீட்டுக்குச் சென்று, மனைவியுடன் கலந்துகொண்டு, ஸ்ரீ ராமாநுஜர் மூலமாகவே பெண் கேட்பதென்று தீர்மானித்துக்கொண்டவர்களாய், ஸ்ரீ ராமாநுஜரிடம் வந்து தெரிவிக்க, அவர் உடனே இசைந்து, மஹா பூர்ணருடைய குடும்பத்திலே போய்க் கேட்டார். பையன் புத்திசாலியென்று அவர்களுக்குத் தெரியும்; இப் பையனுக்குப் பெண் கொடுப்பதிலே அவர்களுக்கு எவ்வித ஆக்ஷேபனையும் கிடையாது; ஆனால், 'புதிதாக ஒரு இடத்திலே சம்பந்தம் செய்வதென்றால், குலம் கோத்திரம் முதலியவற்றைப்பற்றி நன்றாக விசாரியாமல், எப்படித் திடீரென்று வாக்குக் கொடு

த்துவிடுவது' என்று யோசனைபண்ணினார்கள். தவிர, 'ஆழ்வான்: ஸ்மார்த்த பிராஹ்மணர், வடம ஜாதி; மஹா பூர்ணர்: மூன் குடுமிச் சோழியப் பிராஹ்மணர். இப்படி யெல்லாம் இருக்க, எப்படி ஆரத் தீர ஆலோசியாமல் சம்பந்தம் செய்துவிடுவது?' என்று மஹா பூர்ணருடைய குடும்பத்தார் யோசனை செய்தார்கள்.

ஆதலால், சின்னாட்கள் விவாகப் பேச்சு நின்றிருந்தது. ஒருநாள் ஆண்டாள் தனது புருஷனை நோக்கி, "பையனுக்கு வயதாகவில்லையா? விவாகப் பேச்சையே விட்டுவிட்டீர்களே!" என்றாள்.

ஆழ்வான் "அது என்னுடைய வேலை யன்று; என்னாலானமட்டும் பிரயாசைப்பட்டு பார்த்துவிட்டேன்; இது எம்பெருமானுடைய குடும்பம்; அவருக் கில்லாத அக்கறை எனக்கென்ன?" என்றார்.

அன்றிரவு ஆழ்வான், க்ஷேத்திரத்துக்குச் சென்று, செய்யவேண்டிய பணிவிடைகளை யெல்லாம் செய்துவிட்டு வீட்டுக்குத் திரும்பும் சமயத்திலே எம்பெருமானை நோக்கி, "ஸ்வாமி! பையனுக்கு வயதாகிவிட்டதென்றும், விவாகம் செய்வித்துவிடவேண்டு மென்றும் ஆண்டாள் கூறுகிறாளே" என்று விண்ணப்பித்துக்கொள்ள, எம்பெருமான் "அதைப்பற்றி உனக்கென்ன கவலை? உன் வேலையை நீ பார்!" என்று சொன்னார்.

அன்றிரவே எம்பெருமான் மஹா பூர்ணரின் குடும்பத்தினரில் பெரியோர்களுடைய கனவில் தோன்றி, "உங்கள் பெண்களைப் பராசருக்கு உடனே கொண்டுபோய் விவாகம் செய்வித்துவிடவேண்டும்" என்று ஆக்ஞாபித்துவிட்டு மறைந்தருளினர். பொழுதுவிடிந்தது. மஹா பூர்ணருடைய குடும்பத்தில் மூத்தவர்களா யுள்ளவர்கள் ஆழ்வானுடைய வீட்டுக்கு வந்து, பராசருக்குத் தங்கள் பெண்களை ஏற்றுக்கொள்ளவேண்டு மென்று கெஞ்சிக் கேட்டுக்கொண்டார்கள்; அப்படியே அதற்கு ஆழ்வானும் சம்மதிக்க, மஹா பூர்ணரின் குடும்பத்துப் பெண்களாகிய மன்னி, அக்கச்சி என்பவர்கள் இருவரும் பராசருக்கு விவாகம் செய்விக்கப்பட்டார்கள். இங்கு வேறு விஷயத்தில் பிரவேசிப்பதற்கு முன்னதாகப் பராசரைப்பற்றி ஒரு சங்கதியைக் குறிப்பிட்டுவிடுவோம்.

ஒரு ஸ்மார்த்த பண்டிதர் பராசரரை நோக்கி, "ஐயா! ஸ்மார்த்தரைவிட வைஷ்ணவர் எப்படி உயர்வு? நீர் வைஷ்ணவரா யிருப்பதுபற்றி அவ்வளவு பெருமை யடைந்து கொள்வானேன்?" என்று கேட்டார். அதற்குப் பராசரர் "இவ் விஷயத்தைப்பற்றிப் பிரயோசன மில்லாமல் வீண் பேச்சுப் பேசுவதற்கு எனக்கு நேர மில்லை; எனது பிதா வைஷ்ணவர்; அதுவே எனக்குப் போதும். எனது பிதா

வைப் பார்க்கிலும் அறிவு மிகுந்தவனாகிறபோது, வைஷ்ணவ மதத்தை விட்டுவிடுவதைப்பற்றி யோசனை செய்யலாம். உலக வொழுக்கங்களிலே முதன்மை பெற்ற விதியை நீங்கள் மறந்துவிட்டீர்களே. ஆபஸ்தம்பர் என்ன கூறுகின்றார்? 'அறிவாளிகளும் தர்ம சொரூபிகளுமான முன்னோர்கள் வாழ்ந்த வாழ்க்கையே நமது ஒழுக்கத்துக்கு முதலாவது விதி; பின்னர்தான் வேதங்கள்' என்று கூறுகிறாரே'' என்று சொல்ல, அந்த ஸ்மார்த்த பண்டிதர் வெட்கிச் சென்றார்.



8-வது அதிகாரம்:

# ஸ்ரீ ராமாநுஜருக்குக் கஷ்டகாலம்

அக்காலத்திலே வீரசைவனாகிய ஒரு சோழராஜன் அப்பிரதேசத்தை யரசாட்சி புரிந்துகொண்டிருந்தான். ஸ்ரீ ராமாநுஜருடைய விசிஷ்டாத்வைத மதமானது ஸ்ரீ வைஷ்ணவ மதத்தை எங்கும் பரப்பி சைவமதத்தை எங்கும் சீர் அழித்து வருகின்றதென்று கண்டு, 'இதற்கென்ன செய்யலாம்?' என்று யோசிக்கலானான். ஸ்ரீ ராமாநுஜரோ அற்புத சக்திகள் பல வாய்ந்தவராயிருந்தார்; அவரைக் கண்டால் அவனுக்குப் பயமும் பீதியும் உண்டாயின. சைவ மதஸ்தர்கள் பலரும் அவனிடம் சென்று "அவன் சைவ மதத்தை யாதரிக்கிறதில்லை" என்றும், மற்றும் கூறி முறையிட்டுக்கொண்டார்கள்; அவ்வரசன் சைவ மதத்தைச் சமஸ்தான மதமாக்கிவிட்டான்; சைவ மதத்தைச் சாராதவர்களுக்குப் பல புதிய துன்பங்களை யுண்டுபண்ண ஆரம்பித்தான்.

இதற்குள்ளாக ஸ்ரீ ராமாநுஜர் தமது மத சித்தாந்தத்தைப் பரவச் செய்ய ஆரம்பித்து அறுபது வருஷங்களாய் விட்டன. இதற்குள்ளாக அது வேண்டியமட்டும் பரவி விட்டது. இப்பொழுது சைவர்களெல்லோரும் ஒன்று சேர்ந்து ஒரு யோசனை பண்ணினார்கள்; "சிவனிலும் சிரேஷ்ட

மான மூர்த்தி யில்லை" என்று ஒரு காகிதத்தில் எழுதி, "அந்தத் தேசத்திலே யுள்ள எல்லா வித்துவான்களும் அறிவாளிகளும் அதிலே கையெழுத்துப் போடவேண்டும்" என்று ஏற்பாடு செய்தார்கள். அரசனும் இதற்கு ஒத்துக்கொண்டான். சிலர் தங்களுக்கு 'அரசனால் கஷ்டங்கள் நேரிடுமோ? என்று பயந்து அதிலே கையெழுத்துப் போட்டார்கள்.

கொடுங்கோல் மன்னனாகிய அச்சோழனுக்கு நல்லூரான் என்றொருவன் மந்திரியா யிருந்தான். இவன் ஆழ்வானுடைய சிஷ்யன்; இவன் அயோக்கியன்; குலத்தைக் கெடுக்க வந்த கோடரிக் காம்பு. இவன் அரசனிடத்திலே "இக் கையெழுத்துக்களெல்லாம் வாங்கிப் பயன் யாது? இவை பிரயோசன மில்லை; ஸ்ரீ ராமாநுஜரும் அவருடைய சிஷ்யர்களும் இதில் கையெழுத் திட்டால்தான் நான் ஒப்புவேன்" என்றான்.

அரசன் "அப்படியா?" என்று சொல்லிவிட்டு, ஸ்ரீ ராமாநுஜரைக் கூட்டிக்கொண்டு வரும்படி உடனே ஒரு ஆள் அனுப்பினான்.

அரசனுடைய வேலையாட்கள், மடத்துக்குச் சென்று, "ஸ்ரீ ராமாநுஜர் எங்கே?" என்று விசாரிக்க, இது தெரிந்த ஒரு ஸ்ரீ வைஷ்ணவன் உள்ளே ஓடிச் சென்று ஆழ்வானிடம் கூறினான்; அப்பொழுது ஆழ்வான் ஸ்ரீ ராமாநுஜர் ஸ்நாநம் செய்வதற்காகத் தண்ணீர் தயார்செய்துகொண்

டிருந்தான். அந்த வைஷ்ணவன் காதோடு காது வைத்து ஆழ்வானிடம் சொன்னதை, ஸ்ரீ ராமாநுஜர் தூரத்தி லிருந்து கவனித்து, ஆழ்வானருகே வந்து, "ஆழ்வான்! என்ன சங்கதி?" என்று கேட்டார்; ஆழ்வான் சமாச்சாரம் முழுதையும் தெரியப்படுத்தினார். ஸ்ரீ ராமாநுஜர் "நல்லது! சைவமதப் பைசாசங்களையும், சம்சய வாதிகளையும் வேரோடு களைவதற்கு நல்ல சந்தர்ப்பம் வந்து வாய்த்தது; சீக்கிரம் செல்வோம்!" என்றார்.

ஆழ்வான் "ஸ்வாமி! அப்படி யன்று; தாங்கள் அக் கஷ்டம் எடுத்துக்கொள்ளவேண்டாம். அவர்கள் என்னை ஜயித்த பின்னர் தங்களிடம் வரட்டும். தங்களுடைய உடைகளை நான் உடுத்துக்கொள்ளும்படி உத்தரவு கொடுங் கள்! நான் சென்று அவர்களுக்குத் தகுந்த தண்டனை யளித்து வருகின்றேன்" என்று கேட்டுக்கொண்டார். ஸ்ரீ ராமாநுருக்கு மனமில்லை யாயினும், ஆழ்வானுடைய வேண்டுகோளை மறுக்க முடியாதவராய், "சரி! அப்படியே யாகட்டும்" என்று சொல்லி, தமது உடைகளைக் கழற்றி அவருக்குக் கொடுத்துவிட்டு, அவருடைய உடைகளைத் தாம் வாங்கி யணிந்துகொண்டார்.

இன்னொருவர் வேறொரு விதமாகக் கூறுகின்றார்:— ஆண்டானும், நடாதூர் வரத விஷ்ணுவாச்சார்யரும் காவிரி யில் மத்தியான ஸ்நாநம் செய்யும்பொருட்டுச் சென்று கொண்டிருக்கையில் இந்தச் சங்கதியைக் கேள்விப்பட்டார் கள். ஆண்டான்: 'சீக்கிரம் ஸ்நாநம் செய்துபோய், குருவி

னிடம் சென்று எச்சரிக்கை செய்யவேண்டும்' என்று தீர்மானித்துக்கொண்டான்; ஆனால், வரத விஷ்ணுவாச்சார்யாரே சீக்கிரமாகத் திரும்பிச் சென்று இந்தச் சமாச்சாரத்தைக் குருவினிடம் சொன்னவர். "சோழராஜன் மகா கொடியோனாகையினாலே ஸ்ரீ ராமாநுஜர் அந்தத் தேசத்தை விட்டு வெளியே போய்விடவேண்டும்" என்றும், "சோழராஜன் ஸ்ரீ ராமாநுஜரைத் தேடாதிருக்கும்பொருட்டு, ஸ்ரீ ராமாநுஜர்போலத் தாம் சோழனுடைய சபைக்குச் செல்வதாகவும் தெரிவித்தார் ஆழ்வான்.

ஆழ்வானும் வரத விஷ்ணு ஆசார்யரும் சோழராஜனிடம் சென்றபொழுது, அவ் வரசன் "இவர்தானா ஸ்ரீ ராமாநுஜர்?" என்று கேட்டான். "இவர் ஸ்ரீ ராமாநுஜரல்லர்; அவருடைய சிஷ்யர்; ஆயினும், அநேகமாக வித்தையில் அவருக்குச் சமமென்று சொல்லலாம்," என்று மந்திரிகள் கூறினார்கள். அரசனுக்குக் கோபம் அதிகமாக உண்டாகி, தன்னுடைய வேலைக்காரர்கள் செய்த பெருந் தப்பிதத்தைப்பற்றிப் பிரமாதமாகக் கடிந்துகொண்டு, ஸ்ரீ ராமாநுஜரை அழைத்து வரும்படி வேறு வேலைக்காரர்களை யனுப்பினான்; சிஷ்யர்களுக்கு இது தெரியவந்தபொழுது அரசனுடைய கோபம் தணியும் வரையில் ஆசார்யர் அந்தத் தேசத்துக்கு வெளியே சென்றிருக்குமாறு யோசனை சொல்லி, அப்படியே அவரை யனுப்பிவைத்தார்கள்.

ஆழ்வான் சோழராஜனுடைய சபையை நோக்கிக் கொஞ்சதூரம் போவதற்குள்ளே, இதே சங்கதியை அறி

ந்து அரசனுடைய சபையை நாடிச் சென்றுகொண்டிருந்த மஹாபூர்ணரும் வந்து ஆழ்வானுடனே சேர்ந்துகொண்டா ரென்று சொல்லப்படுகின்றது.

"ஸ்ரீ ராமாநுஜர் ஸ்ரீரங்கத்திலிருப்பது சரியன்று" என்றும், "நன்றன்று" என்றும் சிஷ்யர்கள் கூற, ஸ்ரீ ராமா நுஜர் தமது தினசரி உபாசனமூர்த்தியாகிய ஸ்ரீ வரத ராஜப் பெருமானிடம் சென்று, "ஸ்வாமி! சோழன் என் மீது இவ்வளவு கோபமும் வெறுப்பும் கொண்டிருக்கின் றான்; தேவரீருடைய ஆக்ஞையென்ன?" என்று கேட் டார். எம்பெருமான் "ஸ்ரீ ராமாநுஜா! நீ யொன்றும் கவ லைப்படாதே! மேல் நாட்டிலே நீ செய்ய வேண்டிய வேலை கொஞ்சம் இருக்கின்றது; நீ யங்குப்போ! சோழனை நான் பார்த்துக்கொள்கின்றேன்" என்று சொன்னார். சிஷ்யர்கள் யோசனை சொன்னதும், எம்பெருமான் ஆக்ஞையிட்டதும் ஒரே மாதிரி யிருந்ததனாலே, ஸ்ரீ ராமாநுஜர் ஸ்ரீரங்கம் விட்டு நீங்கி மேல் தேசம் நோக்கிப் புறப்பட்டார்; அவரை என்றும் விட்டுப் பிரியாத சில சிஷ்யர்களும் அவரை விட் டுப் பிரிந்திருக்க மன மில்லாதவர்களாய் அவருடன் கூட வே சென்றார்கள்.

'ஸ்ரீ ராமாநுஜர் தேசத்தை விட்டு வெளியே போய் விட்டார்' எனறு அரசனுடைய வேலைக்காரர்கள் அறிந்து, அவரைத் துரத்தினார்கள்; இவர்கள் பினதொடர்ந்து துர த்தி, நெருங்கி வந்துவிட்டதை யறிந்த ஸ்ரீ ராமாநுஜர், தமது கையிலே ஒரு பிடிமண் எடுத்து, தமது நண்பர்க

ளிடம் "நீங்கள் 'சங்க சக்கர கதாதர! உன்னுடைய கையி லேயிருக்கும் கதையைக் கண்டு, எமதர்ம ராஜனும் நடு ங்குகிருன்' என்று சொல்லிக்கொண்டு இந்த மண்ணை அவர் கள் வரும் வழியிலே குறுக்கே விரித்து விடுங்கள்!" என்று கூறினர். அவர்கள் அப்படியே செய்ய, அங்கு ஒரு மலை தோன்றிவிட்டது; அரசனுடைய வேலைக்காரர்கள் "அந்த பிராஹ்மணர்கள் ஏதோ மந்திரவாதம் செய்துவிட்டார்கள் போலும்!' என்று பிரயோசன மில்லாமல் கோபித்துக் கொண்டு, திரும்பிச் சென்றூர்கள்.

ஸ்ரீ ராமாநுஜருக்குத் திருப்பதியிலே நல்லான் என்று ஒரு சிஷ்யன் இருந்தான். இவனைப்பற்றி யொரு விசேஷம் உண்டு. ஒரு சமயத்திலே மதுரைமாநகருக்கருகே வைகை நதியினூடே சண்டாள னொருவனுடைய பிணமொன்று மிதந்து வந்தது. நல்லான் அதை யுற்றுப் பார்க்க, அதன் நெற்றியிலே புண்ட்ரக்குறி யிருந்தது கண்டு, அப் பிணத் தைக் கரைக்கு இழுத்து, அதற்குச் செய்யவேண்டிய கிரி யைகளைச் செய்துவைத்தானென்று அறிந்த அவ்வூர் ஜனங்கள் இவனை "ஜாதியாசாரம் அற்றவன்" என்று நிந்தித்தார்கள்; ஆனல், ஸ்ரீ வரதராஜப் பெருமான் அவர் களைப் பார்த்து, "நாட்டிற்குப் பொல்லான், நமக்கு நல் லான்" என்றூர். இதனல் அவனுக்கு நல்லான் என்று ஒரு பெயர் உண்டாயிற்று. இந்த நல்லான் நீலகிரிமலைக்குச் சென்று சில வேடர்களை வைஷ்ணவர்களாக்கி யிருந்தான். ஒருநாள் அவர்களுட் சிலர் வயல்களை யுழுதுகொண்டிருக்

கையில் நல்லான் ஸ்ரீராமாநுஜரைத் தேடிக்கொண்டு அங்கு வந்து சேர்ந்தான். இந்த வேடர்கள் அவனைக் கண்டு "நீஎங்கிருந்து வருகின்றாய்?" என்று கேட்டார்கள். "நான் ஸ்ரீரங்கத்திலிருந்து வருகின்றேன்" என்று அவன் கூற, அவர்கள் "நல்லது! ஆசார்யர் அங்குச் சௌக்கியமா யிருக்கின்றாரா? விசேஷ மேதேனும் உண்டா?" என்று கேட்டார்கள்.

வைஷ்ணவன் "ஸ்ரீரங்கம் திவ்யமான க்ஷேத்திரந்தான்; ஸ்ரீ ரங்கநாதப் பெருமானும் சிரேஷ்டமான மூர்த்திதான். ஆனால், நமது ஆசார்யருக்கு இப்பொழுது கொஞ்சம் கஷ்டகாலம்; அவர் அங்கிருந்து எங்கோ போய்விட்டார்; எங்குப் போனாரென்பது தெரியவில்லை; நான் அநேக இடங்களில் தேடிக்கொண்டு வருகின்றேன்; அவரை யெங்கும் காணவில்லை" என்று சொல்லிவிட்டு, அங்கு நடந்த சங்கதிகளை யெல்லாம் சொன்னான்.

வேடர்களுக்கு வேலை யோடவில்லை; கண்களிலே நீர் பொங்கிற்று; விசனம் மிகுந்தது, ஹிருதயம் துடித்தது; ஆகாரத்தையும் நித்திரையையும் வெறுத்தார்கள்; இரவும் பகலும் எப்பொழுதும் "ஸ்ரீ ராமாநுஜர் சௌக்கியமா யிருக்கவேண்டுமே" என்ற ஒரே சிந்தையை யுடையவர்களாய், இவ்வாறு ஆறு நாட்கள் அன்ன ஆகார மின்றி யிருந்தார்கள். ஆறும்நா ளிரவு பெரு மழை இரவெல்லாம் பெய்தது; குளிரோ பொறுக்க முடியவில்லை. ஸ்ரீ ராமாநுஜரும் அவருடைய சிஷ்யர்களும் வழி தவறி, இருட்டிலே இங்குச்

செல்வதென்று தெரியாமல் எங்கெங்கும் திரிந்து, இங்கு வந்து சேர்ந்தார்கள்; அவர்களுடைய ஆடைகளெல்லாம் நனைந்திருந்தன; அவர்கள் குளிரினால் விறைத்து நடுநடுங்கிக்கொண்டிருந்தார்கள். இவர்கள் இப்படி வருந்திக்கொண்டிருக்கையில், தூரத்திலே ஒரு வெளிச்சம் தென்பட்டது; அவ் வெளிச்சத்தைப் பிடித்துக்கொண்டே செல்ல, இவர்கள்வேடர்களின் குடிசைகட்கு வந்து சேர்ந்தார்கள். 'தேசத்திலிருந்து வெளியே போகவேண்டியிருக்கிறதே' என்று ஸ்ரீ ராமாநுஜர் கவலை மிகுந்திருந்ததனாலும், வெகுதூரம் காடு மலைகளெல்லாம் யாத்திரை செய்யவேண்டி வந்ததனாலும், ஸ்ரீ ராமாநுஜர் களைப்புற்றுச் சோர்வடைந்து கீழே சாய்ந்துவிட்டார்; அவருடைய சிஷ்யர்களுள் சிலர் அவரைத் தூக்கிச் சுமந்து சென்றார்கள். அங்குச் சென்று அவர்கள் அங்கிருந்த வேடர்களைப் பார்த்து, "நண்பர்காள்! நாங்கள் வழி தவறிவிட்டோம்; வெகு கஷ்டப்பட்டுவிட்டோம்; தயவு செய்து நகரங்கட்குச் செல்லும் வழியைக் காண்பியுங்கள்!" என்று கேட்க, அவர்கள் தங்கள் தங்கள் குடிசைகளிலிருந்து வெளியே வந்து, நனைந்து குளிரினால் நடுங்கிக் கொண்டிருக்கின்ற பிரயாணிகளுக்கு வேறு உலர்ந்த உடைகள் கொடுத்து, கனல் மூட்டிக் குளிர் காயவைத்து, "ஸ்வாமிகாள்! நீங்கள் பிராஹ்மணர்களாயிற்றே; உங்களுள் அவர் இவ்வளவு மிகக் களைத்து விழுந்துவிட்டாரே; இவ் வழியே நீங்கள் வரும்படி நேர்ந்தும் எங்களைக் கண்டது நல்லதாய்விட்டது. இல்லையேல், இன்னும் மிகக் கஷ்டப்பட்டிருப்பீர்கள். நல்லதிருக்கட்டும். நீங்கள் எங்கிருந்து

வருகின்றீர்கள்?'' என்று கேட்க, அவர்கள் "நாங்கள் ஸ்ரீரங்கத்திலிருந்து வருகின்றோம்" என்றார்கள்.

ஸ்ரீரங்கம் என்ற வார்த்தையைக் கேட்டவுடனே எல்லோருக்கும் அதிக சந்தோஷ முண்டாய்விட்டது; அவ் வேடர்கள் "அப்படியாயின், எங்களுடைய ஆசார்யர், எங்களுக்குத் துக்கநிவிருத்தி யளிக்கத் தோன்றியிருக்கும் குருமூர்த்தி ஸ்ரீராமாநுஜரைப்பற்றித் தாங்கள் சமாச்சாரங்கள் கூறலாமே," என்று கேட்க, ஸ்ரீ ராமாநுஜருடைய சிஷ்யர்கள் ஆச்சரியப்பட்டார்கள். இது என்ன? எங்கோ ஒரு மூலையிலுள்ள மலைக்காட்டிலே ஸ்ரீ ராமாநுஜரைப் பற்றி எப்படித் தெரியவந்தது? இவர்களிடம் சொன்னவர்கள் எவர்?"

"நல்லது, ஆசார்யரைப்பற்றி உங்களுக்கு எப்படித் தெரியும்?"

"எங்களுக்கு அதிகமாக ஒன்றும் தெரியாது. ஆனால், எங்களுடைய குருவாகிய திருப்பதி நல்லான் என்பவர் எங்களுக்கு நன்மொழிகள் போதித்தபொழுது, "ஸ்ரீ ராமாநுஜரே மகதாசார்யர்" என்றும், "நாங்கள் அவரிடத்திலே சரணாகதி யடைந்துவிடவேண்டும்" என்றும் எங்களுக்கு ஆக்ஞை செய்தார். அன்றுமுதல் நாங்கள் அனைவரும் ஸ்ரீ ராமாநுஜரையே நம்பி யிருக்கின்றோம், அவரிடத்திலேயே அபய மடைந்திருக்கின்றோம்; இகத்துக்கும் பரத்துக்கும் அவரே எங்கட்குப் பரம நாயகர். சின்னாட்களுக்கு முன்னே வைஷ்ணவர் ஒருவர் இங்கு வந்திருந்தார்; ஸ்ரீரங்

கத்திலே சமீபத்தில் நடந்த செய்கைகளைப் பற்றி, அவர் கூறக் கேட்டு நாங்கள் விசனக்கடலி லாழ்ந்தோம்; இன்று ஆறுநாட்க ளாய்விட்டன நாங்கம் ஆகாரம் உண்டு. இந்த ஆறுநாட்களாக ஸ்ரீ ராமாநுஜரைக் குறித்து நாங்கள் இரவும் பகலும் எம்பெருமானை நோக்கி இறைஞ்சிக்கொண்டிருக்கின்றோம்.''

ஸ்ரீ ராமாநுஜருடைய சிஷ்யர்கள் பார்த்தார்கள்; அவர்களுக்கு ஆச்சரியம் ஒருபக்கம் உண்டாயிற்று; குருவினுடைய மஹிமை யொருபக்கம் பிரமாதமாக விளங்கிற்று. எம்பெருமானுடைய பெருமை யொருபக்கம் அவர்களுடைய மனத்தினிலே துலங்கிற்று.

''நல்லது! உங்களுடைய பிரார்த்தனைகள் எம்பெருமானுடைய செவிகட் கெட்டிவிட்டன. எம்பெருமான் உங்களுடைய ஆசார்யரை இப்பொழுது உங்களிடம் கொண்டு வந்து விட்டிருக்கின்றார்; இதோ உங்களுடைய ஆசார்யர்'' என்று அந்தச் சிஷ்யர்கள் ஸ்ரீ ராமாநுஜரை அவர்களுக்குக் காண்பிக்க, வேடர்களுக்கு அடக்கவொண்ணாத ஆநந்தம் உண்டாகி ஆடிப் பாட ஆரம்பித்தார்கள். ''இதோ உங்களுடைய ஆசார்யர்'' என்ற வார்த்தைகள் காதிலே விழுந்தவுடனே, அவர்கள் அச்சமும் ஆச்சரியமும் அடைந்தவர்களாகி, ஸ்ரீ ராமாநுஜருடைய பாதங்களிலே விழுந்து தேம்பித் தேம்பி யழுது, கண்களினின்றும் பெருக்கிய கண்ணீரினால் அவருடைய கால்களைக் கழுவி, ''ஆ! ஆ! குருமூர்த்தி; சர்வஜீவ தயாபரா! தங்களுடைய நற்காலத்தில் நாங்கள்

தேவரீரைப் பார்க்கக் கொடுத்துவையாது போனோமே. ஆயினும், இந்த ஆபத்துக்காலத்தில் தேவரீருக்குச் சிசுருஷை செய்யும்படியான பாக்கியம் எங்களுக்குக் கிடைத்தது. திருவவதார புருஷராகிய தேவரீருக்கு இத்தகைய ஆபத்துக்கள் வரலாமோ?'' என்று பலவாறு இயம்பிப் பிரார்த்திக்க, ஸ்ரீ ராமாநுஜர் அவர்களைப் பார்த்து ''நீங்கள் கவலைப்பட வேண்டியதில்லை; இவ் வாபத்துக்களும் கஷ்டங்களும் கொஞ்சக் காலத்துக்குத்தான்; சீக்கிரம் நற்காலம் வரப்போகின்றன; சற்றும் பயம் வேண்டியதில்லை'' என்று தேற்றியதும் தவிர, ''இதுவும் நன்மைக்கேயாய்த்தான் இருக்கும்; எம்பெருமானுடைய திருவுள்ளத்தி லுள்ளதை எவர் அறிவார்? இவ்விதமான ஆபத்து ஒன்று நேரிடாமற் போனால், நான் இங்கு வர முடியுமா? நீங்கள் என்னைப் பார்க்க முடியுமா? இந்தப் பிரதேசங்களிலே நான் செய்யவேண்டிய வேலை ஏதோ இருக்கின்றதுபோ லிருக்கின்றது. இல்லையேல் எம்பெருமான் இப்படியொரு சந்தர்ப்பம் கொண்டு வந்திருக்கமாட்டார்'' என்று கூறினார்.

பின்னர் வேடர்கள் சென்று ஸ்ரீராமாநுஜருக்கும் அவருடைய சிஷ்யர்கட்கும் உண்பதற்குத் தேனும் தினைமாவும் கொண்டுவந்து கொடுத்தார்கள்; அவர்கள் இதை வெகு ஆவலுடனே வாங்கி அதிக ஆத்திரத்துடனே புசித்துத் தங்கள் பசியை ஆற்றிக்கொண்டார்கள். அன்று முழுதும் அங்குத் தங்கி ஸ்ரீ ராமாநுஜர் சிரமசாந்தி செய்துகொண்டு, மறுநாட் காலைப் பொழுது விடிந்ததும், வேடர்களுள்

ஒருவனையும் தமது ஆட்களுள் ஒருவரையும் க்ஷேத்திரத்துக்குத் திரும்பிச் செல்லும்படி யனுப்பிவிட்டு, தம்முடன் கூட எஞ்சி யிருந்த 45 சிஷ்யர்களையும் இட்டுக்கொண்டு இன்னும் மேற்கே போனார்கள். வேடர்கள் இவர்களுடனே ஐம்பது மைல் தூரம் வழியனுப்பச் சென்று, பின்னர் தங்கட்குத் தெரிந்த ஒரு வீட்டிலே சென்று, அவ் வீட்டுக்காரர் வீட்டி லில்லாமையால், அவ் வீட்டு எஜமானியி னிடத்திலே, "அம்மே! இம் மஹாத்மாக்கள் எங்களுடைய ஆசார்யர்கள். இவர்களுக்கு வேண்டியன வெல்லாம் அளித்து, ஜாக்கிரதையாக ஆதரியுங்கள்! ஏற்படும் செலவை எங்கள் கணக்கி லெழுதிவிடுங்கள்! தங்கள் எஜமானரிட மிருந்து வாங்கும் கூலியில் கழித்துக்கொள்ளுகின்றோம்" என்று சொல்லி, ஸ்ரீ ராமாநுஜரையும் அவருடைய சிஷ்யர்களையும் அங்குச் சௌகர்யமாக விருக்கும்படி ஏற்பாடு செய்துவிட்டுப் போய்விட்டார்கள். அவ்வீட்டு எஜமானி, புருஷனுடைய உத்தரவின்றி எதுவும் செய்யாதவள்; புருஷன் வேட்டைக்குப் போயிருந்தான். அவன் திரும்பி வர, மாலை நேரமாய்விட்டது; அதுவரையில் ஸ்ரீ ராமாநுஜரும் அவருடைய சிஷ்யர்களும் காத்துக்கொண் டிருந்தார்கள்; மாலையிலே அவ் வீட்டுக்காரன் திரும்பி வந்தான்; மனைவியினிடமிருந்து சங்கதிகளைத் தெரிந்துகொண்டு, உடனே ஒரு வேலைக்காரனை யழைத்து, "சீக்கிரம் இந் நண்பர்களைப் பிராஹ்மண அக்ரஹாரத்துக்கு அழைத்துச் சென்று, அங்குள்ள சத்திரத்திலே இவர்களுக்குத் தகுந்தவாறு போஜன மளிக்கும்படி ஏற்பாடு செய்துவா! வேண்

டிய சாமான்களை நான் இதோ அனுப்புகின்றேன்," என்று உத்தரவிட் டனுப்பினான்.

பின்னர் ஸ்ரீ ராமாநுஜரும் அவர்களுடைய சிஷ்யர்களும் சத்திரத்துக்குச் சென்றார்கள்; அந்தச் சத்திரத்திலே ஒரு அம்மாள் சீக்கிரத்தில் ஆகாரம் முதலியன தயார் செய்துவிட்டு, இவர்களிடம் வந்து "ஸ்வாமிகாள்! போஜனம் தயாராய்விட்டது; உண்பதற்கு எழுந்தருளுக!" என்று கூறலும், சிஷ்யர்கள் யோசனை செய்யலானார்கள். மறுமொழி பகராமலும், போஜனத்துக் கெழுந்திராமலும் மௌனமாக உட்கார்ந்திருந்தார்கள். 'அவள் யாரோ அந்நிய ஸ்திரீ யாயிற்றே; அவளுடைய கையிலே ஆகாரம் வாங்கி யுண்ணலாமோ?' என்று சந்தேகித்துக்கொண்டு மௌனமா யிருந்தார்கள். இவர்களுடைய யோசனை அவ்வம்மாளுக்குத் தெரிந்துவிட்டது; ஊகித் தறிந்துகொண்டாள். அவள் "ஸ்வாமிகாள்! சந்தேகிக்கவேண்டாம்; நானும் ஸ்ரீ ராமாநுஜருடைய பாதங்களில் உட்கார்ந்திருக்கின்றேன்" என்றாள். சிஷ்யர்கள் அதை நம்பவில்லை; இந்த ஸ்திரீ தங்களை ஏமாற்றுகிறாளென்று நினைத்தார்கள்; தாங்கள் உண்பதற்கு யோசனை செய்ததனாலே தங்களை உண்ணச் செய்வதற்கு ஒரு தந்திரம் செய்கிறாளென்று நினைத்தார்கள். "ஆமாம், அம்மே! தாங்கள் ஆசார்யருடைய சிஷ்யர் ஆனது எப்படி?" என்று கேட்டார்கள்.

அவள் மறுமொழி கூறுகின்றாள்:—"'நல்லது, சகோதரர்காள்! இது நடந்தது அநேக நாட்களுக்கு முன்னே;

இது உங்களுக்கு ஆச்சர்யமாயிருக்கும். அப்பொழுது இப் பிரதேசங்களிலே பயங்கரமான பஞ்சம்; நானும் எனது புருஷரும் காலக்ஷேபத்துக்கு வழி யில்லாது ஊருக்கு ஊர் அலேந்து திரிந்து திண்டாடிக் கடைசியாக ஸ்ரீரங்கம் வந்து சேர்ந்தோம். நான் ஸ்ரீரங்கத்திலே, ஸ்ரீராமாநுஜர் கிருகத் துக்குக் கிருகம் சென்று பிக்ஷை யெடுக்கும்பொழுது பார்த்திருக்கின்றேன்; ஸ்ரீரங்கத்துக்கும் சுற்றுப் பிரதேசங் கட்கும் அதிபதியாகிய அகளங்களும் இன்னும் அநேக ஐஸ் வர்யவான்களும் அவருடைய பாதங்களில் விழுந்து பணிவ தைப் பார்த்திருக்கின்றேன். ஒரு நாள் அவர் நாங்கள் குடி யிருந்த கிருகத்துக்குப் பிக்ஷையை நாடி வந்தார்; நான் ஓடி வந்து வாசலிலே அவருடைய சந்நிதானத்தில் நின்றேன். ‘குழந்தாய்! உனக்கு வேண்டுவது யாது?’ என்று கேட் டார்; நான் ‘ஸ்வாமி! தாங்கள் வீட்டுக்கு வீடு சென்று கிரு கஸ்தர்களிடத்தில் பிக்ஷை யேற்பதை நான் பார்த்திருக் கிறேன்; அரசர்முதல் ஆண்டிவரையிலுள்ள சகல ஜனங்க ளும் தங்கள் பாதங்களில் மிகுந்த பயபக்தியுடன் விழுந்து பணிவதைப் பார்த்திருக்கிறேன்; அவர்கள் தங்களே இவ் வளவு மகிமைப்படுத்துகின்ற காரணமென்ன?’ என்று கேட் டேன். அதற்கு அவர் “புத்திரி! பிரதானமான காரணம் ஒன்று மில்லே. நான் அடிக்கடி அவர்களிடம் எம்பெருமா னுடைய குணாதிசயங்களேப்பற்றிச் சொல்லி வருகின்றேன். அவர்கள் இதனுல் என்னிடம் அன்பு செலுத்துகின்றூர்கள்” என்றூர். நான் ஸ்வாமி! அம் மொழிகளே நானும் கேட்க லாமோ? என்று கேட்க, அவர் அம்மா! இம் மொழிகளேக்

கேட்கும் விஷயத்திலே எவ்வித வித்தியாசமும் கிடையாது. என்று சொல்லிவிட்டு, அதியற்புதமான அநேக அரிய பெரிய விஷயங்களைக் குறித்துப் போதனை செய்தார்; ஆ! ஆ! அவை என்ன இன்பகரமா யிருந்தன! கொஞ்ச நாட்கள் கழிந்தன; பஞ்சம் நீங்கிவிட்டது; தேசம் செழிப்படைந்தது; எங்கும் பச்சென்று உலகம் பசுமை தோன்றிற்று; நாங்கள் எங்கள் தேசத்துக்குத் திரும்பிவரப் புறப்பட்டோம். ஆனால், நான், ஆசார்யருடைய அமிர்தமொழியாம் உபதேசத்தைச் சீக்கிரத்தில் மறந்துவிட்டேன்; ஆயினும், நான் ஒருவருக்குக் கீழ்ப்பட்ட மனைவி யாயிற்றே; என்ன செய்யலாம்? எப்படித் தனியே ஆசார்யரிடம் சென்று உபதேசத்தை நாடுவது? இனிமேல் ஆசார்யரைப் பார்க்கும் சந்தர்ப்பம் வாய்க்காதென்று நினைத்து, ஊருக்குப் புறப்படவிருந்தேன். ஆயினும், எனது மனம் தவித்தது; ஆசார்யரைப் பார்க்காமல் எப்படிச் செல்வது; எனக்குப் பித்துப் பிடித்ததுபோ லாய்விட்டது; இப்படி நான் வருந்திக்கொண்டிருக்கையிலேயே, ஆ! ஆ! என்ன ஆச்சர்யம்! என்ன ஆநந்தம்! ஆசார்யர் நான் இருந்த வீடு நோக்கி வருவதைக் கண்டேன்; ஓடினேன்; விழுந்தேன் அவர் பாதங்களில்; "ஸ்வாமி! நாங்கள் எங்கள் தேசத்துக்குச் செல்கின்றோம்; இனிமேல் நான் இங்குத் திரும்பி வருவேனோ என்பது சந்தேகம்; தாங்கள் அன்று அளித்த உபதேசத்தை நான் மறந்துவிட்டேன்" என்றேன். ஸ்ரீராமாநுஜர் புந்நகை புரிந்துகொண்டே "பாதகமில்லை; மறுபடியும் கூறி யுன்னைத் திடப்படுத்துவதில் எனக்கு அதிக சந்தோஷமே," என்று

சொல்லி, மறுபடியும் இருபேருண்மைகளை எனக்கு உபதேசித்தார்; பின்னர் என்னை ஏற இறங்க ஒருமுறை பார்த்து விட்டு, அப்புறம் நடக்கத் தொடங்கினுர்; அப்பொழுது நான் அவருடைய அடிக் கமலங்களில் விழுந்து "ஐய! ஆர்ய! தங்களுடைய ஞாபகம் என்னை விட்டு என்றும் நீங்காதிருக்குமாறு ஏதேனும் அடியேனுக்கு அருளல்வேண்டும்" என்று பிரார்த்தித்தேன். அவர் ஆம்! ஆனுல், உனக்குக் கொடுக்கும்படியாக இப்பொழுது ஒன்றும் இல்லையே. ஆயினும், 'இதோ பாதரக்ஷைகள்; இவற்றைக் கொண்டுபோ!" என்று ஆக்ஞாபித்து, தமது பாதாம்புஜங்கள் ஏறியிருந்த பாதரக்ஷைகளைக் கழற்றிக் கொடுத்தார். நாங்கள் அன்றைய தினமே அவ் வூரைவிட்டுப் புறப்பட்டுவிட்டோம்; பின்னர் ஆசார்யரை நான் இதுவரை பார்க்கக் கொடுத்துவைக்கவில்லை.'"

ஸ்ரீ ராமாநுஜருடைய சிஷ்யர்கள் அனைவரும் ஒன்றும் பேசாமல் திக்பிரமைகொண்டவர்கள் போல, அவள் கூறியதையெல்லாம் கேட்டார்கள்; அவர்களுடைய அவநம்பிக்கை பறந்துவிட்டது; சந்தேகம் நிவிருத்தியாய்விட்டது. தங்களைப் பார்க்கிலும் உண்மையான சிஷ்யரே அவ் வம்மையார் என்று கண்டுகொண்டார்கள். ஆசார்யர் இதுவரையொன்றும் பேசாமலிருந்துவிட்டு, அவ் வம்மையை விளித்து "நல்லது! எங்களெல்லோருக்கும் இலை போடலாம்" என்றுர்; அப்பொழுதே அந்தரங்கமான சிஷ்யன் ஒருவனையழைத்து, அவ் வம்மையாருடைய செயல்களை நன்றுகக்

கவனித்து வந்து கூறும்படி ஆக்ஞாபித்தார். அந்த ஸ்திரீ சென்றாள்; ஸ்நாநம் செய்தாள்; தோய்த்து உலர்த்தப்பட்டிருந்த மடி வஸ்திரம் உடுத்திக்கொண்டாள்; பூஜையறையினுள்ளே நுழைந்தாள்; ஆசார்யரின் பாதாரவிந்தங்களிலே நான் சரணாகதியடைகின்றேன்" என்று கூறினாள். பின்னர் அவள், ஆசார்யருடைய பாதரக்ஷைகளை யெடுத்து அவற்றை நன்றாக ஸ்நாநம் பண்ணி வைத்து, அதிதிகளுக்குத் தான் தயார் செய்திருந்த ஆகாரத்தை அதன் முன்னே நைவேத்தியமாகப் படைத்து, ஆழ்ந்த நிஷ்டையிலே கொஞ்சநேரம் அமர்ந்திருந்தாள். பின்னர் அவர் அதிதிகளிடம் வந்து, "உள்ளே வரலாம்" என்று சொல்லி யிட்டுக் கொண்டு போனாள்.

இதற்குள்ளாக, இவளுடைய செயல்களைக் கவனிக்கும்படி ஸ்ரீ ராமாநுஜரால் ஆக்ஞாபிக்கப்பட்டிருந்த வைஷ்ணவன் ஸ்ரீ ராமாநுஜரிடத்திலே வந்து, நடந்த சங்கதியைக் கூறினான்; ஆனால், அவள் அறையினுள்ளே சென்று செய்த தினனதென்று இவனுக்குச் சரியாகத் தெரியாதாகையினாலே, ஸ்ரீராமாநுஜரை நோக்கி, "ஸ்வாமி! ஏதோ நீண்டு கறுப்பா யிருந்தது; அவள் நமக்கென்று ஆக்கியிருக்கும் அன்னத்தை அதற்கு நைவேத்தியமாகப் படைத்தாள்; அது எம்பெருமானுடைய விக்கிரகமன்று என்பது மாத்திரம் நிச்சயம்," என்று கூறினான்.

ஸ்ரீ ராமாநுஜரும் உள்ளே சென்று உட்கார்ந்தவுடனே, ஸ்ரீ ராமாநுஜர் அவளைப் பார்த்து, "நீ அந்த

அறையினுள்ளே சென்று என்ன செய்தாய்?'' என்று கேட்டார். அவள் "நான் என்றும்போல இன்றும் பரிசுத்த பாதரக்ஷைகளைப் பூஜித்து நைவேத்தியம் செய்தேன்'' என்று மறுமொழி கூறினாள்.

"நான் அப் பாதரக்ஷைகளைப் பார்க்கலாமா?''

"எனக்கு நிரம்பச் சந்தோஷம்.''

ஸ்ரீ ராமாநுஜர் அவ் வறையினுள்ளே சென்று, அப் பாதரக்ஷைகளைப் பார்த்தார். அவை தம்முடையவையேயாயிருக்கக் கண்டு ஆச்சர்யப்பட்டார்; ஆயினும், தம்முடைய சிஷ்யர்களுடையவும் சந்தேகங்களை நிவிர்த்தி செய்யக் கருதி, அவளை நோக்கி "அம்மா! ஆசார்யர் உனக்கு உபதேசம் செய்தாரென்று சொன்னாயே; அவ் வுபதேச மொழிகளை என் காதிலே உரை; அது உண்மையானதேயாமாகில், நாங்கள் இங்கு உண்போம்; இல்லையேல் உண்ண மாட்டோம்.'' "அது அதிரகஸ்ய மந்திரமாயிற்றே! எப்படிக் கூறுவது?'' என்று அவள் சற்றுத் தியங்கினாள். ஆயினும், ஆசார்யரைப் பார்க்கும்பொழுது அவளுக்கு உள்ளமெல்லாம் உருகிற்று. 'அவரிடத்தில் உரைத்துவிடத்தான் வேண்டும்' என்று அவளுடைய அந்தரங்க ஹிருதயத்திலே ஒரு எண்ணம் உண்டாயிற்று. அவள் ஸ்ரீ ராமாநுஜருடைய திருவடிகளிலே, சாஷ்டாங்கமாக விழுந்து, எழுந்து அவருடைய காதிலே, மிகுந்த பயபக்தியுடனே உடலெல்லாம் நடுங்க, ரோமம் சிலிர்க்க, மகா மந்திரத்தை உரைத்தாள். அவளுக்கு இன்னும் ஸ்ரீ ராமாநுஜரைத் தெரியவில்லை.

ஸ்ரீ ராமாநுஜர் "நல்லது! நீ உண்மையை உரைத்து விட்டாய்," என்று கூறினவுடனே அவள் அடைந்த சந்தோஷம் அமிர்தம் உண்ட அமரர்களும் அடைந்திரார்கள். ஆனால், ஆசார்யர் அவளை அதனுடன் விடவில்லை; இன்னும் சோதிக்க எண்ணினார்.

"அம்மே! நல்லது! இங்கு வந்திருக்கும் ஸ்ரீ வைஷ்ணவர்களிலே ஸ்ரீ ராமாநுஜர் இருக்கின்றாரா? இருந்தால், அவர் இன்னார்தான் என்று சொல்லிவிடு! பார்ப்போம்" என்றார் ஸ்ரீ ராமாநுஜர்.

அவள் உடனே ஒரு விளக்கேற்றிக்கொண்டு வந்து, எல்லோரையும் ஒவ்வொருவராக உற்றுற்றுப் பார்த்து, கடைசியாக ஸ்ரீ ராமாநுஜரிடம் வந்து நின்று, "ஸ்வாமி! இப் பாதங்களைப் பார்க்கும்பொழுது, எனது குரு மூர்த்தியின் பாதங்களாகவே தோன்றுகின்றன; அவர் முக லக்ஷணங்கள் எனக்கு ஞாபக மில்லை; நான் பார்த்து நெடுநாட்க ளாய்விட்டனவே; ஆனால், அவருடைய பாத ரக்ஷகளை நான் வைத்துத் தினந்தோறும் பூஜை செய்து வருவதனாலே அவற்றை மாத்திரம் நான் மறக்கவில்லை" என்றாள்.

ஸ்ரீ ராமாநுஜரால் இன்னும் தமது உண்மையை மறைத்து வைத்திருக்க முடியவில்லை. "நீதான் எனக்குகந்த சிஷ்யை. (சிஷ்யர்களைப் பார்த்து) புத்திரர்காள்! இன்று உங்களுக்குச் சுதினம்; இப் புண்யவதியைப் பார்க்

கும்படியான பாக்கியம் கிடைத்ததே; நீங்கள் தேச தேசங்கள் சுற்றித் திரிந்தாலும் இத்தகைய பக்தியைக் காண்டல் அரிது. நல்லது! இவ்வம்மையாரா லாக்கப்பெற்ற அன்னத்தை யருந்துவோம்; இது அமிருத சமானமாகும்" என்று கூற, எல்லோரும் சாப்பிட உட்கார்ந்தார்கள்.

போஜனமாயிற்று; எல்லோரும் படுத்து நித்திரை போய்விட்டார்கள்; எங்கும் ஏக மௌனமா யிருந்தது. அந்த ஸ்திரீ அவர்கள் உண்டு எஞ்சிய உச்சிஷ்டத்தை யெடுத்துத் தன்னுடைய புருஷனுக்குப் படைத்துவிட்டுத் தான் உண்ணாம லிருந்தாள். புருஷன் இதைக் கவனித்து அவளை நோக்கி, "நீ உண்ணாத காரண மென்ன?" என்று கேட்டான்.

"ஆசார்யர் ஸ்ரீ ராமாநுஜரும் அவருடைய சிஷ்யர்களும் ஸ்ரீரங்கமிருந்து இங்கு வந்திருக்கின்றார்கள்; நாம் அன்னமிட்டால் அவர்கள் உண்ணார்கள்."

"ஏன்? நாம், என்ன, பிராஹ்மணர்களல்லரா?"

"பிராஹ்மணர்களே யாயினும், நாம் ஸ்ரீவைஷ்ணவர்களல்லரே. அந்தோ! இம் மஹாத்மாக்கள் நமது கிருகத்துக்கு வந்து பட்டினி கிடக்கும்படி. நாம் என்ன பாபம் செய்தோமோ? 'பிராஹ்மண அதிதி வைச்வாநர அக்கினியைப்போல ஒரு கிருகத்தினுள்ளே நுழைகிறான். நல்லோர் அவனுக்குப் பாதசுத்தி செய்து, ஆசனமளித்து அன்னமிடுவார்கள். கிருகஸ்தன் தன்னுடைய கிருகத்திலே பிராஹ

மணன் பட்டினி கிடக்க மூடத்தனமாகப் பார்த்திருப்பா ஞயின், அவன் ரௌரவாதி நரக மடைகின்றான்; அக்கினி போன்ற அவ் வதிதி நெடுநாட்களாகத் தான தர்மங்கள் செய்து சாது சங்கத்திஞலும், யாக எக்ஞாதிகளாலும் கிரமப்பட்டுச்சேர்த்து வைத்திருக்கும் புண்ணியத்தை யழித்துவிடுவது மன்றியில், அவனுடைய குடும்பத்தையே தகிப்பித்துவிடுகின்றான்' என்று சாஸ்திரங்கள் கூறுகின்றதை நீங்கள் அறியீர்களா?" என்றாள் அவனுடைய மனைவி.

சாஸ்திரத்தி லிருந்து மேற்கோள் கேட்டவுடனே புருஷனுக்குப் பீதி யுண்டாய்விட்டது; "ஒரு பிராஹ்மண அதிதி வந்து கிருகஸ்தன் கவனியாமற்போனல், இவ்வளவு தீய பலன் உண்டாகுமென்றால், இத்தனைப் பிராஹ்மண அதிதிகளும் இன்று பட்டினி கிடக்கின்றார்களே! நமது கதி என்னவாகுமோ?" என்று அவன் நடுநடுங்கினன்.

"நல்லது! அதற்கு நாம் என்ன செய்யலாம்? இவர்கள் உண்ணுவதற்கு வழி யென்ன?"

'ஆசார்யருடைய அபாரமான கிருபையிலே சரணாகதி யடைந்து, இதற்குமுன் செய்த குற்றங்களுக்கு மன்னிப்புக் கேட்டுக்கொள்வதைத் தவிர வேறு வழி யில்லை."

"நல்லது, அப்படியானல், பொழுது விடியட்டும்; நான் வைஷ்ணவனுய்விட்டு மறுவேலை பார்க்கின்றேன்; இது சத்தியம்."

அருணோதய மாவதற்குள்ளாகவே, அந்த ஸ்திரீ— இவளுடைய பெயர் சோலாஞ்சலாம்பாள்–தமிழில் கோங்குப் பிராட்டியார் என்றும் கூப்பிடுவதுண்டு— ஸ்ரீ ராமாநுஜ ரிடம் வந்து, அவருடைய திருவடிகளில் விழுந்து நமஸ்கரி த்து, "ஸ்வாமி! இன்னொருநாள் எளியேனுடைய கிருகத் துக்கு எழுந்தருளி, எனது புருஷனையும் தங்கட்குச் சிஷ்ய னாகக் கொள்ளுமாறு வேண்டுகின்றேன்" என்று வேண்டி னாள். ஸ்ரீ ராமாநுஜரும் அதற் கிணங்கி "நல்லது! அப்படி யே யாகட்டும்" என்று கூறிவிட்டு, அவளுடைய வீட் டுக்குச் சென்று, அவளுடைய பக்தியி லீடுபட்டு, அங்கு மூன்று நாட்கள் தங்கி, அவளுடைய புருஷனையும் சிஷ்ய னாக்கி, அவனுக்கு ரங்கதாசன் என்று பெயரும் அளித்தார். பின்னர் அவர் காஷாய வஸ்திரங்கள் தயார் செய்து, தாம் முதன்முதலில் சந்நியாசம் எடுத்துக்கொண்டபொழுது எப்படிச் செய்தாரோ, அதே மாதிரியாக ஸ்ரீ வரதராஜப் பெருமான் முன்னிலையில் வைத்து, வெகு நேரம் பிரார்த் தனை செய்துவிட்டு, பின்னர் எடுத்துத் தரித்துக்கொண் டார். மறுநாள் ஸ்ரீ ராமாநுஜர் "ஸ்ரீரங்கத்திலே ஆழ்வா னுடைய சங்கதி என்னவாயிற்று?" என்று தெரிந்து வரும் படிதமது சிஷ்யர்களாகிய மாருதியையும் அம்மங்கியம்மாளை யும் ஸ்ரீரங்கத்துக்கு அனுப்பிவைத்தாரென்று சொல்லப் படுகிறது.

பின்னர் ஸ்ரீ ராமாநுஜரும் சிஷ்யர்களும் ஸ்ரீ கோங்குப் பிராட்டியினிடமும் ஸ்ரீ ரங்கதாசரிடமும் இவர்கள் அனு

மனத்துடன் அழுதுகொண்டு விடை கொடுக்க, விடை பெற்றுக்கொண்டு இன்னும் மேற்கே நடந்து ஜாலக்கிராமம் என்னும் ஊருக்கு வந்து சேர்ந்தார்கள். இந்த ஊரிலே ஸ்ரீ வைஷ்ணவர்களே கிடையாது; ஆனால், ஸ்ரீ வைஷ்ணவ மதத்துக்கு ரகஸ்ய விரோதிகள் பலர் இருந்தனர். இவர்கள் ஸ்ரீ ராமாநுஜரையும் அவருடைய சிஷயர்களையும் அலக்ஷியம் செய்துவிட்டு, வரவேற்காமலிருந்தார்கள். ஸ்ரீ ராமாநுஜர் இதைக் கவனித்து, ஆண்டானை நோக்கி, "ஜனங்கள் ஜலம் எடுக்க வருகிற இடத்திலே நீ கொஞ்ச நேரம் உனது பாதங்களைத் தண்ணீரினுள் விட்டுக்கொண்டிரு" என்று ஆக்ஞாபித்தார். ஆண்டான் அப்படியே செய்ய, அவ்வூர்க் குடி ஜனங்கள் இந்த ஜலத்தை உபயோகித்து, அந்தப் பாததீர்த்த மகிமையினாலே அஞ்ஞானம் நீங்கி, உண்மையை உணர்ந்து, ஸ்ரீ ராமாநுஜரிடம் ஆகருஷிக்கப்பட்டவர்களாகி, ஆசார்யரிடம் ஓடிவந்து அவருடையபாதங்களில்விழுந்து மன்னிப்புக் கேட்டுக்கொள்ள, அவரும் அவர்களனைவரையும் தமக்குச் சிஷ்யர்களாக்கிக் கொண்டு, அங்குச் சில நாள் தங்கியிருந்தார். இவ்விடத்திலே ஸ்ரீவடுக நம்பியென்னும் மஹா பக்தர் ஒருவர் ஆசார்யரைச் சந்தித்தார். இதன் ஞாபகார்த்தமாக இங்கு ஒரு சிறு க்ஷேத்திரம் கட்டப்பட்டிருக்கிறது. அதிலே ஸ்ரீராமாநுஜருடைய பாதங்களே பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கின்றன; அந்த ஊர் ஜனங்கள் அருந்தி பரிசுத்தமடைந்த ஊற்று சமீபத்திலுள்ளது. இது வடுக நம்பியாருடைய குடும்பத்துக்கே பாரம்பரிய பாத்தியதையாய் வந்துகொண்டிருக்கின்றது.

'ஸ்ரீ ராமாநுஜர் சேஷனுடைய அம்சமாகையினாலே, இவ்வூரிலே சர்ப்ப விஷத்தினால் பய மில்லை' என்று பிரசித்தமாயிருக்கின்றது. பின்னர் அங்கிருந்து ஸ்ரீ ராமாநுஜர் புறப்பட்டு, நரசிம்ஹபுரம் சென்று அங்கே வடுகநம்பியாருக்கு வைஷ்ணவமத சித்தாந்தங்களைப் போதித்துக்கொண்டு, சின்னாட்கள் தங்கியிருந்தார்.

இதற்குள்ளே, ஸ்ரீராமாநுஜருக்கு இவ்வளவு தீங்கையும் உண்டாக்கியவனும் கொடிய வைஷ்ணவ விரோதியுமான சோழராஜன்—இவன் வைஷ்ணவமதத்தை வெறுத்து வைஷ்ணவர்களுக்குப் பல விதத்திலும் தீங்கு செய்து வந்தானாதலினாலே இவனைச் சைவர்கள் திருநீற்றுச் சோழன் என்பர்— கண்டமாலை வியாதியினால் பீடிக்கப்பட்டு மிக வருந்தி, கழுத்தைச் சுற்றி யுண்டான புண்களிலே புழுக்கள் வைத்து மிகமிகக் கஷ்டப்பட்டு இறந்தான். இதனால் இவனுக்குக் கிருமிகண்ட சோழன் என்று ஒரு பெயர் உண்டு.

"இந்தச்சோழராஜன்ஸ்ரீ ராமாநுஜருக்கும் அவருடைய சிஷ்யர்களுக்கும் இவ்வளவு அக்கிரமங்கள் செய்தானென்று நரசிம்ஹபுரத்திலுள்ள க்ஷேத்திரத்து அர்ச்சகர்களுக்குத் தெரியவந்தவுடனே, அவர்களுக்குக் கோபம் மூண்டு, அவர்கள் சோழராஜனைக் கொன்றுவிடக் கருதி மாந்திரீகம் செய்தார்களென்றும், அதனால்தான் இவ் வியாதி அவனுக்கு உண்டாயிற்று" என்றும் சிலர் கூறுவர்.

வேறு சிலர் பின் வருமாறு கூறுகின்றனர்:—"ஸ்ரீராமா நுஜர் மாருதியையும் அம்மங்கியம்மாளையும் ஸ்ரீரங்கத் துக்கு அனுப்பிய மறுநாளே, தமது கையிலே கொஞ்சம் தீர்த்தம் எடுத்து, மந்திரங்கள் கூறி ஸ்ரீவேங்கடேசப் பெரு மானுக்கு அர்ப்பணம் செய்தார். ஸ்ரீவேங்கடேசப் பெருமா னுக்குச் சோழராஜனை யழித்துவிடவேண்டுமென்ற எண் ணம் உண்டாய்விட்டது. சோழராஜன் ஸ்ரீ விஷ்ணு க்ஷேத் திரங்களை யெல்லாம் அழித்துவிட்டான்; சிதம்பரத்திலே யிருந்த ஸ்ரீகோவிந்தராஜப் பெருமானுடைய விக்கிரகத்தை யெடுத்துக் கடலிலே யெறிந்துவிட்டான். ஸ்ரீரங்க க்ஷேத்தி ரத்தையும் அடியோடு அழித்துத் தரையோடு தரையாக்கக் கருதி அங்கு அப்பொழுது போய்க்கொண் டிருந்தான்.

அவன் ஸ்ரீரங்கத்துக் கருகாமையில் சில மைல் தூரத் தில் ஒருநாள் இரவு தங்கியிருந்தபொழுது, எம்பெருமான் அவன் முன்னே கன்னங்கரேலென்று பிரமாண்டமான ஒரு உரு வெடுத்துத் தோன்றி நிற்க, அவன் பயந்து நடு நடுங்கி, "எமனைப்போ லுருவெடுத்திருக்கும் நீ யார்?" என்று கேட்டான்.

"நான் திருப்பதியிலே வசிக்கும் வேங்கடேசன்."

"நீ ஏன் என்னிடம் வந்திருக்கின்றாய்?"

"நீ செய்த எண்ணற்ற அக்கிரமங்கட்கு உன்னைத் தண் டிப்பதற்காக வந்திருக்கிறேன். இதை வாங்கிக்கொள்!"

ஸ்ரீவேங்கடேசப் பெருமான் இவ்வாறு சொல்லிவிட்டுத் தமது கையிலே வைத்திருந்த ஒரு சிறுகத்தியைக்கொண்டு, அந்தச் சோழராஜனுடைய தொண்டையிலே குத்து, குத்து என்று நாலா பக்கங்களிலும் குத்தினர். அரசன் "ஸ்ரீ வேங்கடேசர் என்னைக் குத்திவிட்டார்" என்று ஒரு பெருங் கூச்சலிட்டுப் பெருமூச்சுவிட்டுக் கொண்டு கீழே விழுந்து மூர்ச்சை போய்விட்டான். அவ் வரசனுடைய வேலைக்காரர்கள் ஓடிச் சென்று பார்க்க, அரசனுடைய தொண்டையில் எண்ணற்ற காயங்கள் ஏற்பட்டிருப்பதையும், அக் காயங்களி லிருந்தெல்லாம் ரத்தம் சொரிந்து கொண் டிருப்பதையும் கண்டு திடுக்கிட்டார்கள். "எவர் உள்ளே போனர்? எப்படிப் போனர்? வேலைக்காரர்களெல்லோரும் விழித்துக்கொண்டு அதிஜாக்கிரதையாகக் காவலிருக்க, அரசனுக்கு இவ்விதம் நேர்ந்ததெப்படி?" இவ்விதமாகவெல்லாம் வேலைக்காரர்கள் ஆலோசனை செய்து கொண்டிருக்கையில், சோழராஜனுக்குப் பிரக்ஞை வந்தது; அவன் "என்னை யிந்தப் பயங்கரமான இடத்திலிருந்து எடுத்துப்போங்கள்! அந்தப்பயங்கர உரு இனிமேல் என் முன் தோன்ருவாறு பார்த்துக்கொள்ளுங்கள்!" என்ருன். அவனுடைய வேலைக்காரர்கள் அவனைத் தூக்கி யெடுத்து ராஜதானிநகருக்குக் கொண்டுசென்ருர்கள்; அங்கே கொஞ்சக் காலம் கஷ்டப்பட்டுக்கொண்டிருந்து மரித்தான்.

இன்னொருவர், "ஸ்ரீ ராமாநுஜர் நரசிம்ஹபுரத்தில் இருந்தபொழுது ஸ்ரீ வைஷ்ணவமத விரோதிகளை யெல்

லாம் அடியோடு தொலைத்துவிடக் கருதி ஆச்சானைக்கொண்டு ஒரு யாகம் செய்வித்தார்'' என்று சொல்லுகின்றார்.

ஸ்ரீ ராமாநுஜர் அங்கிருந்து புறப்பட்டுத் தொண்டனூர் சென்றார். தொண்டனூர் என்பது இப்பொழுது தொன்னூர் என்ற பெயருடனே மைசூருக்கு வடக்கே பதினாறு மைல் தூரத்தி லுள்ளது. ஸ்ரீ ராமாநுஜர் இங்குத் தமது சிஷ்யர்களுள் ஒருவராகிய தொண்டனூர் நம்பி யென்பாருடைய கிருகம் சென்று இறங்கினர். தொண்டனூர் நம்பி மிகவும் ஏழை; தினந்தோறும் பிக்ஷையெடுத்து உண்பவர். ஸ்ரீ ராமாநுஜர் தம்மையும் தமது சிஷ்யவர்க்கங்களையும் ஆதரிப்பதற்குத் தொண்டனூர் நம்பியால் முடியாதென்று கண்டு, கொங்குப் பிராட்டியின் புருஷனாகிய ரங்கதாசனுக்குச் சொல்லி யனுப்பினர். ஸ்ரீரங்கதாசர் உடனே ஆயிரம் பொன் கொண்டுவந்து ஸ்ரீ ராமாநுஜருக்கு வேண்டியன செய்துவந்தார்.

இப்படித் தொண்டனூரில் இருக்கும் நாளையில், அவ்வூர் அரசனாகிய விட்டல் ராஜனுடைய பெண், அதி சௌந்தர்யவதி, இப்பொழுதுதான் பக்குவ பர்வமடைந்து பார்த்தவர்களை யெல்லாம் பரவசப்படுத்துகின்ற வனப்புடையாள், ஒரு பேயினால் பீடிக்கப்பட்டு, வஸ்திரங்களை யவிழ்த்தெறிந்துவிட்டுத் தெருவி லோடுவதும் மற்றும் செய்து கொண்டிருந்தாள். அவளுடைய நிலைமை பார்ப்பதற்கு மிகப் பரிதாபகரமா யிருந்தது. அரசன் எத்தனையோ மந்திர வாதிகளைக்கொண்டு எண்ணற்ற திரவியத்தைச் செல

வழித்துப் பார்த்தான். ஒன்றும் பயன்படவில்லை; கடைசியாக விசனம், வெட்கம், ஏக்கம் முதலியவற்றால் பீடிக்கப்பட்டவனாகி, அவன் இன்னது செய்வதென் றறியாது கலங்கி யிருந்தான்.

ஒருநாள் தொண்டனூர் நம்பி, பிக்ஷைக்கு வந்தவர், அரண்மனையிலே மங்களமற்று எல்லோரும் வாடிய முகங்களுடன் இருப்பதைப் பார்த்து ராணியை நோக்கி, "அம்மே! என் அரண்மனை மங்களமற்றுக் கிடக்கின்றது? சமீபத்தில் இங்கு ஏதேனும் மரணம் நேரிட்டதா?" என்று கேட்க, ராணி, "அப்பா! அப்படி மரணம் ஏதேனும் நேரிட்டிருந்தால் நன்றா யிருக்குமே. எங்களுக்கு ஒரே பெண் குழந்தை; அது படுகின்ற கஷ்டம் எங்களால் பார்க்க முடியவில்லை; அவளுடைய முக லாவண்யத்தையும் அங்கங்கள் ஒவ்வொன்றினுடையவும் அழகையும் எண்ண எண்ண, மனம் துடிக்கின்றது; ஏதோ ஒரு பேய் பிடித்திருக்கின்றது; எங்களானமட்டும் பார்த்துவிட்டோம்; ஒன்றும் பயன்படவில்லை" என்றாள்.

நம்பி "அம்மா! இதுகாறும் தெரியாமற் போய்விட்டதே. எனது குருமூர்த்தி ஸ்ரீ ராமாநுஜாசார்யர் நல்ல வேளையாய் இப்பொழுது இங்கிருக்கின்றார்; அவர் பார்த்தால் போதும்; எத்தகைய பேயாயினும் அப்புறம் அங்கிருத்தல் முடியாது," என்று சொல்லிவிட்டு, காஞ்சீபுரத்திலே பிரஹ்ம ரக்ஷஸை ஓட்டிய சங்கதியையும் எடுத்துரைத்தார். ராணி ஓடிச் சென்று தன்னுடைய புருஷ

னிடம் இதைப் புகன்றாள். அரசன் "அப்படியாயின்! நமக்கு ஸ்ரீ ராமாநுஜரே குரு; அவரே ஈச்வரன்" என்று கூறிவிட்டு, தன்னுடைய அரண்மனையிலே தனது மதத்து வைதீர்களுக்கும் வித்துவான்களுக்கும் ஒரு விருந்து அளிக்கப் போவதாகத் தெரியப்படுத்தினான்; இவ்வரசன் ஒரு சமயத்திலே டில்லி சக்கரவர்த்தியினாலே சிறை செய்யப்பட்டு, பின்னர் விடுவிக்கப்பட்ட காலத்தில், இவன் ஸ்வதந்திரமிழந்தவன் என்பதை ஸ்திரப்படுத்தும் அறிகுறியாக, டில்லி சக்கரவர்த்தி இவனுடைய விரல்களுள் ஒன்றைத் துண்டித்துவிட்டான். இப்பொழுது இவன், பிராஹ்மணர்களையும் வித்துவான்களையும் போஜனத்துக் கழைத்தபொழுது அவனுடைய மனைவி "விரலில்லாதவன் இடும் போஜனம் உண்ணமாட்டோம் என்று அவர்கள் மறுத்து, உன்னையவமானப்படுத்துவார்கள்" என்று சொன்னாள். அவன் "பார்க்கலாம்! அரசனாகிய என்னை யவமானப்படுத்தத் துணிவார்களா? அதுவும் இன்னொரு மதாசார்யர் முன்னிலையில் அப்படிச் செய்வார்களா?" என்றான்.

இராணி சொன்னது உண்மையாய்விட்டது; அந்தப் பிராஹ்மணர்கள் எவரும் வரவேயில்லை. அரசனுக்குக் கோபம் மூண்டுகொண்டது; அவனுக்கு ஸ்ரீ ராமாநுஜரிடம் பக்தி யுண்டுபண்ணுதற்கு இதுவே நல்ல சந்தர்ப்பமென்று ராணி கண்டுகொண்டு, அரசனைக் கொண்டு ஸ்ரீ ராமாநுஜரை யழைக்கும்படி செய்தாள்.

ஸ்ரீ ராமாநுஜர் "நான் எந்த நகரத்தினுள்ளும் வருவதில்லை; அதிலும் இது ராஜதானி நகரம்; நான் வர முடி

யாது; இது எனது ஆஶ்ரம விதி" என்று சொல்லி யனுப்பினார்; ஆனால், தொண்டனூர் நம்பியும் மற்ற சிஷ்யர்களும் அவர் அரசனிடம் வரத்தான் வேண்டுமென்று வற்புறுத்த, அவர் அரை மனத்துடன் அவர்களெல்லோரும் பின் தொடர்ந்து வர அரண்மனை சென்றார்.

அங்கே அரசனும் அரசியும் ஸ்ரீ ராமாநுஜருடைய பாதங்களிலே சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்கரித்து எழுந்து இரு கைகளையும் கூப்பிக்கொண்டு எதிரே நின்றார்கள். ஸ்ரீ ராமாநுஜர் தமது சிஷ்யர்களுள் ஒருவரை நோக்கி, தமது பாத தீர்த்தத்தை யெடுத்து அந்த ராஜகுமாரியின்மீது புரோக்ஷிக்கும்படி ஆக்ஞாபித்தார்; அவளுடைய உடம்பிலே யுடனே ஒரு நடுக்கம் உண்டாயிற்று; உறங்கி யெழுந்திருந்தவள்போல அவள் விழித்துக்கொண்டு, நாலா பக்கத்திலும் சுற்றிப் பார்த்தாள்; ஆடையின்றித் தான் அந்நியர்களின் முன்னே நிற்பதைக்கண்டு வெட்கி, அந்தப்புரத்துக்கோடி, விலையுயர்ந்ததோர் வஸ்திரம் தரித்துக்கொண்டு, திரும்பி வந்து ஸ்ரீ ராமாநுஜருடைய பாதங்களிலே விழுந்து நமஸ்கரித்தாள்.

உடனே அரசனும் அவனுடைய நண்பர்கள் அநேகரும் ஸ்ரீ ராமாநுஜரிடத்திலே சிஷ்யர்களாகி, வைஷ்ணவ மத சித்தாந்தத்தைப் பரப்புவதிலே ஊக்கம் மிகக்கொண்டவர்களானார்கள். ஸ்ரீ ராமாநுஜர் அந்த அரசனுக்கு விஷ்ணுவர்த்தனன் என்ற பெயரை யளித்தார்.

"விட்டலராஜன் முதலில் சமண மதத்தைச் சேர்ந்திருந்தவன்" என்றும், "அவனுடைய ஆசைவைப்பாட்டியினுடைய தூண்டுதலினாலும் ஸ்ரீ ராமாநுஜாசார்யருடைய போதனைகளினாலும் அவன் தப்தமுத்திரை பெற்று வைஷ்ணவமதம் புகுந்துகொண்டான்" என்றும், "பின்னர் விஷ்ணு வர்த்தனன் என்ற பெயரை வைத்துக்கொண்டு, சமணமதத்தைத் துவேஷிக்க ஆரம்பித்து, அதற்குக் கொடுத்திருந்த இனாமை யெல்லாம் நீக்கிவிட்டான்" என்றும், "790 க்ஷேத்திரங்களை யழித்துவிட்டான்" என்றும், "பஞ்சநாரயண க்ஷேத்திரங்கள் ஸ்தாபித்து, சமண ஆலயங்கட்குக் கொடுக்கப்பட்டிருந்த இனாங்களை யெல்லாம் இவற்றுக்கு மாற்றிக்கொடுத்துவிட்டான்" என்றும் சொல்லப்படுகிறது.

இன்னும், சமண ஆலயங்களை யிடித்து, அதிலிருந்து எடுக்கப்பட்ட கற்களைக்கொண்டு தொண்டனூரிலே ஒரு பெரிய தடாகம் இயற்றி, அதற்குத் திருமலை சாகரம் என்ற பெயர் இட்டான். இன்னும் ஸ்ரீ ராமாநுஜருக்கும் அவருடையசிஷ்யர்களுக்குமாக சீரங்கபட்டணத்தில் காவிரியின் இருதீரத்திலும் உள்ள பிரதேசத்தை அஷ்டக்கிராமம் என்ற பெயருடனே அவர்களுக்களித்து, அவற்றை மேல் பார்ப்பதற்குத் தனது சொந்த உத்தியோகதர்களையே நியமித்தான்.

இவை சமணர்களால் பொறுக்க முடியவில்லை. அவர்களுடைய மதத்துக்கு ஆதாரமாயிருந்த அரசனே விரோதியாக்கப்பட்டுவிட்டான். சமணர்களுடைய ஸ்தானங்கள்,

கௌரவங்கள், அதிகாரம், செல்வாக்கு முதலியவை யெல்லாம் எதிரிகளின் கைகளிலே சென்றுவிட்டன; ஆலயங்களெல்லாம் இடிபட்டன; எப்பொழுது தங்களை ஊரை விட்டும் துரத்துதற்கு யோசனைகள் ஆரம்பமாகுமோ? என்று சமணர்கள் கவலையுறத் தொடங்கினார்கள்.

இந்தச் சமணர்கள் 'இதற்கென்ன செய்யலாம்' என்று யோசனைசெய்து, 'ஸ்ரீராமாநுஜருடன் வாதுசெய்து வெற்றி பெற்று அவரை யவமானப்படுத்த வேண்டும்' என்று நினைத்து, அப்படியே ஸ்ரீ ராமாநுஜருக்குச் சொல்லியனுப்பினார்கள்.

''ஐயா! எங்களுடைய அரசனைத் தாங்கள் தங்களுடைய மதத்திலே சேர்த்துக்கொண்டுவிட்டீர்கள். இவ் விஷயத்திலே நீங்கள் சுலபமாக ஜய மடைந்துவிட்டீர்கள். ஆனால், எங்களை மறந்துவிட்டீர்கள். எங்களையும் வெற்றி பெறுவது அவ்வளவு சுலபமென்று நினைக்கவேண்டாம். எங்களுடனே வாது புரிந்து எங்களைத் தோற்கடித்துவிட்டால், நீங்கள் ஜயம் பெற்றுவிட்டதாக நாங்கள் கருதுவோம். இராஜ குடும்பத்திலே ஏற்பட்ட விபத்தொன்றை நீக்கியதைக் காரணமாகக் கொண்டு, எங்கள் மதத்தின்மீதேயே வெற்றிபெற்றுவிட்டதாக நினைக்கவேண்டாம்,'' என்று சமணர்கள் ஸ்ரீ ராமாநுஜருக்குச் சொல்லியனுப்ப, ஸ்ரீராமாநுஜர் சந்தோஷத்துடனே வாது புரியச் சம்மதித்தார். ஸ்ரீ ராமாநுஜருக்கும் வாது செய்து அநேக நாட்களாய்விட்டன; ஆகையினால், தோள் தட்டி யார்ப்பரித்தார்.

வாது செய்வதற் கென்று ஒருநாள் குறித்துத் தீர்மானிக் கப்பட்டது; பன்னீராயிரம் சமணர்கள், சமண மதத்திலே சகலமும் கற்ற வித்துவான்கள் ஸ்ரீ ராமாநுஜருடனே வாதுப்போர் புரிவதற்காக அரண்மனையிலே வந்து கூடி னார்கள்.

"எங்கள் ஒவ்வொருவருடனும் ஒருவர் பின் ஒருவ ராக எதிர்த்து வாது செய்யுங்கள்! இப் பன்னீராயிரவரும் தோற்றுவிட்டோமானால், எங்கள் மதம் தோல்வியடைந்து விட்டதாக நாங்கள் ஒப்புக்கொள்வோம்; இல்லையேல், அங் ஙனம் ஒப்புக்கொள்ளமாட்டோம்" என்று சமணர்கள் கூறினார்கள்.

ஸ்ரீ ராமாநுஜர் புன்நகை புரிந்தார்; இப் பன்னீராயிரவ ருடனும் போர் புரிந்து வெற்றி பெறுவது எக்காலம்? எத் தனை வருஷங்கள் வேண்டிவருமோ? ஆகையால், 'இந்த வாதத்தை எப்படியாவது சுருக்கிச் சீக்கிரத்திலே முடித்து விடவேண்டும்' என்று ஸ்ரீ ராமாநுஜர் நினைத்தவராகி, சபா மண்டபத்திலே சமணர்கள் அனைவரையும் கூடியிருக்கச் செய்து, நடுவிலே ஒரு திரைபோட்டுக்கொண்டு, திரையின் அப்பால் தாம் இருந்துகொண்டு, அவர்களை நோக்கி, "நீங் கள் ஒவ்வொருவரும் ஒரே காலத்தில் நீங்கள் கேட்க வேண்டிய கேள்விகளை யெல்லாம் கேட்கலாம்; இதனால் நேரம் வியர்த்த மாகாது; உங்களில் எவருக்கேனும் சரி யான மறுமொழி கிடைக்காவிட்டால், உடனே தெரியப் படுத்தவும்" என்று கூறினார்.

ஸ்ரீ ராமாநுஜர் திரையினுள் ஆயிரம் பணமகுடத்தையுடைய ஆதிசேஷ வடிவெடுத்து நின்றார். இவர் ஆதி சேஷனுடைய அம்சமல்லவா?

"எல்லோரும் ஒரே காலத்தில் கேள்விகள் கேளுங்கள்!" என்று இவர் சொன்னதைக் கேட்டுப் பயமும் ஆச்சர்யமும் அடைந்தார்களாயினும், சிறிது நேரம் கழித்து, 'இது வீண் மிரட்டு' என்று நினைத்து, தங்கள் தங்களாலான மட்டும் கேட்கக் கூடிய மிகமிகக் கடினமானவையும் மிக மிகக் குழப்பமானவையுமான கேள்விகளைக் கேட்க ஆரம்பித்தார்கள். பன்னீராயிரவரும் ஏககாலத்திலே கேள்வி கேட்பதென்றால், அங்குச்சப்தம் எப்படியிருந்திருக்கும்? என்பதை வாசகர்களே ஊகித்துக்கொள்ளலாம்; மிகப்பயங்கரமான சப்தமாயிருந்தது; ஆனால், ஒவ்வொருவருக்கும் சரியான விடை கிடைத்தது. கேள்வி கேட்டு முடிந்தவுடனே, ஒவ்வொருவருடைய காதுகளிலும் அவரவர்கள் கேட்ட கேள்விக்குத் தக்க விடைகள் ஒலிக்கக் கேட்டு ஆச்சர்யமடைந்தார்கள். கேட்கவேண்டிய கேள்விகளெல்லாம் கேட்டாய்விட்டன; சமணர்களுக்கு இன்னது செய்வதென்று தெரியவில்லை; ஒருவரையொருவர் பார்த்துப் பேய் விழி விழிக்க ஆரம்பித்தார்கள்.

"ஆய்விட்டதா? ஏ, மூடர்காள்! எழுந்திருந்து போங்கள்! வைஷ்ணவமதம் புகுந்து எம்பெருமானிடத்திலே சரணாகதியடையுங்கள்!" என்று திரையினுள்ளிருந்து ஒரு சத்தம் கேட்டது. ஆங்குக் கூடிய சமணர்களுள்,

அநேகர் ஸ்ரீ ராமாநுஜரிடத்திலே சரணாகதி யடைந்து ஸ்ரீ வைஷ்ணவர்க ளானார்கள். விஷ்ணுவர்த்தன அரசன் ஸ்ரீராமாநுஜரிடத்திலேதோற்றும் முரண்டு செய்தபத்மகிரி சமணர்களைக் கல் செக்கிலே போட்டு ஆட்டுவித்தா னென்றும் சொல்லப்படுகிறது.

வேறொருவர் பின் வருமாறு கூறுகின்றார்:— "தோற்றவர்கள் யந்திரத்திலிட்டு அரைக்கப்பட வேண்டும்" என்று சமணர்களே பிரேரேபித்தார்கள். தர்க்கம் நடந்துகொண்டிருந்தபொழுது, சமணர்களுள் ஒருவர் ஸ்ரீ ராமாநுஜர் அதி வேகமாகவும் மிகப் பொருத்தமாகவும் கொடுக்கின்ற மறுமொழியைக் கேட்டு ஆச்சரியப்பட்டு, திரையைச் சிறிது ஒதுக்கிப் பார்த்து, பிரமாண்டமான, ஆயிரம் பணா மகுடத்தையுடைய, ஒளி வீசுகின்ற ஒரு சர்ப்பத்தைக் கண்டான். அவன் பயந்து நடுநடுங்கி, பின்வாங்கி, தனது நண்பர்களிடத்திலே சமாச்சாரத்தைச் சொன்னான். அவர்கள் ஒருவர்பின் ஒருவராக எழுந்திருந்து போய்விட்டார்கள்; பெரிய மண்டபமானது மெல்ல மெல்ல காலியாய் விட்டது. ஆயினும், அரசன் அதை வெகு ஜாக்கிரதையாகக் கவனித்துக்கொண் டிருந்தான்; அவர்களுக்குத் தகுந்த தண்டனை யளிக்கத் தயாராயினான். ஆனால், ஆசார்யர் தமது ஹிருதயத்திலுள்ள அபாரமான கிருபையினாலே தூண்டப்பட்டவராகி, இவ்வெளிய, அறியாத ஜீவர்களுக்காகப் பரிந்து பேசி, அவர்களுடைய பயங்கரமான விதியினின்றும் அவர்களைக் காப்பாற்றினார். அநேகர் வைஷ்ணவ

மதம் புகுந்தார்கள்; சிலர் தேசத்தை விட்டு ஓடினார்கள். பின்னர் ஸ்ரீ ராமாநுஜர் சாளக்கிராமம் வந்து சேர்ந்தார்.

ஸ்ரீ ராமாநுஜர் ஜயமுறவே, அரசனுக்குச் சந்தோஷம் அளவற்று உண்டாயிற்று; இதனுடனே ஸ்ரீ ராமாநுஜரிடத்தில் பக்தி பெருகிற்று. ஸ்ரீராமாநுஜர் நரசிம்ஹபுரம் சென்று சிஷ்யர்களுக்கு வேதாந்தோபதேசம் செய்து கொண்டிருந்தார்.



9-வது அதிகாரம்:

ஸ்ரீ ராமாநுஜர்

# ஸ்ரீ ராமப்பிரியரை அடைதல்

ஸ்ரீ ராமாநுஜர் இப்படிக் காலம் கழித்துக்கொண்டு வருகையில், 'தாமும் தமது சிஷ்யர்களும் தினந்தோறும் நெற்றியில் அலங்கரித்துக்கொண்டு வந்த திருமண் ஆய் விட்டதென்று தெரிந்து, "என்ன செய்யலாம்? திருமண் இடாமல் பூஜை புநஸ்காரம் முதலிய எதுவும் வைஷ்ணவன் செய்யக்கூடாதே" என்று எங்கினவராய் ஒரு நாள் இரவு விசனம் மிகுந்து படுக்கைக்குச் சென்றார்; ஸ்ரீ காஞ்சிநாத னைப் பிரார்த்தித்தார்.

ஸ்ரீமந் நாராயணர் அவருடைய கனவிலே தோன்றி "அப்பா! அதோ அங்கே யுள்ள யதுகிரியிலே நீ வருவா யென்று காத்துக்கொண்டிருக்கிறேனே; உடனே புறப்பட்டு வா! நீ வேண்டியது உனக்கு ஒருபொழுதும் குறைவுறாத படி வேண்டிய தளிப்பேன்" என்று சொல்லி மறைந்தார். ஸ்ரீ ராமாநுஜர் மறுநாட் காலையிலே விழித்தெழுந்தவுடன் தமது சிஷ்யர்களுடன் தாம் கண்ட கனவைக் கூற, எல்லோ ரும் அவ்விடம் செல்ல ஆசைப்பட்டார்கள். உடனே அரச னுக்கு இந்தச் சமாச்சாரம் தெரியவே, அரசன் வேண்டிய வேலைக்காரர்களை யனுப்பி, வழியைச் சீர் செய்யும்படி ஆக்

ஞாபித்தான்; ஸ்ரீராமாநுஜரும் சிஷ்யர்களும் சீக்கிரத்திலே யதுகிரிபோய்ச் சேர்ந்தார்கள். ஸ்ரீ ராமாநுஜர் வேதசரஸ் என்ற தடாகத்திலே ஸ்நாநம் செய்து, தத்தாத்திரேயர் சந்யாசாச்ரமம் வகித்த இடத்திலே, உடை மாற்றிக் கொண்டார்.

பின்னர் ஸ்ரீ ராமாநுஜர் நாலாபக்கங்களிலும் தேடியலைந்தார்; மலையெல்லாம் சுற்றிப் பார்த்தார்; எம்பெருமான் குறிப்பிட்ட இடம் கிடைக்கவில்லை. அன்று முழுதும் கழிந்தது; இரவு நெருங்கிவிட்டது; ஸ்ரீ ராமாநுஜர் கவலையிருந்தவராக உறங்குதற்குக் கண்களை மூடினர்.

மறுபடியும் எம்பெருமான் ஸ்ரீ ராமாநுஜருடைய கனவிலே தோன்றி "அருகேயுள்ள கல்யாண சரசுக்குத் தென்மேற்கே யிருக்கும் சண்பக விருக்ஷங்களாலாகிய தோட்டத்தைக் குறிப்பாகக் கவனித்துக்கொள்! அங்கே தனித்து வகுள விருக்ஷமொன்று இருக்கின்றது; நேரே தெற்கே போ! அடர்ந்து படர்ந்த ஒரு துளசிச் செடியைக் காண்பாய்; அதன் வேர்களினடியில் பார்! அங்கு ஒரு எறும்புப் புற்று இருக்கும்; அதனுள்ளே நன்ருய்ப் பார்! அங்கு நான் இருக்கின்றேன். நீ விரும்புகின்ற திருமண் தடாகத்துக்கு வடமேற்கேயுள்ள ஒரு இடத்தில் காணப்படும். அது சுவேத தீபத்திலிருந்து கருடனலே இங்கு கொண்டுவரப் பட் டிருக்கிறது. அது வெட்ட வெட்ட, ஒரு பொழுதும் குறையாது. மனம் விட்டுவிடாதே. இங்கிருந்து நான் இருக்கும் எறும்புப் புற்று வரையில் துளசிச் செடியின் கிளைகள்

வழி நெடுகப் போட்டிருக்கக் காண்பாய்" என்று சொல்லி மறைந்தருளினர்.

மறுநாள் பொழுது விடிந்தது; ஸ்ரீ ராமாநுஜர் சந்தோஷத்துடனே எழுந்திருந்தார்; துளசிச் செடியின் கிளைகள் போட்டிருக்கும் வழியைப் பின்பற்றி நடந்து எறும்புப் புற்றண்டை வந்து சேர்ந்தார். அவருடைய சிஷ்யர்கள் மிகுந்த பயபக்தியுடனே சுற்றிலுமுள்ள மண்ணை நீக்கினர்கள்; எம்பெருமானுடைய ஆலயம் தென்பட்டது. ஸ்ரீ ராமாநுஜரைப் பின்பற்றிச் சென்ற ஆயிரக் கணக்கானவர்களும் ஆநந்தம் பொங்கி யார்ப்பரித்தார்கள்; உடனே விஷ்ணுவர்த்தன அரசனுக்குச் சொல்லியனுப்பினர்கள்; அவன் வந்து பார்த்துப் பிரமித்துவிட்டான். உடனே சாஸ்திர விதிகளின் பிரகாரம் விஷ்ணுவர்த்தனனல் அங்கு ஒரு க்ஷேத்திரம் நிர்மாணிக்கப்பட்டது; விஷ்ணுவர்த்தனன் இராப்பகலாகத் தானே யிருந்து அக் கோவிலைக் கட்டுவித்தான். ஸ்ரீ ராமாநுஜர் அவ்விடத்திலே எம்பெருமானை மூன்று நாட்கள் தமது கைகளினலேயே பூஜித்து, பாஞ்சராத்திர சாத்வத சம்ஹிதையிலே கூறப்பட்டுள்ளபடி பூஜாக்கிரமங்களை ஏற்படுத்தித் தமது சிஷ்யர்களுள் ஒருவராகிய ஸ்ரீ ரங்கராஜபட்டர் என்பவரை அக் கோவிலை மேல் பார்க்கும்படி நியமித்தார். பின்னர் ஸ்ரீ ராமாநுஜர் எம்பெருமானல் குறிக்கப்பட்ட இடம் சென்று, தமது தண்டத்தினலே தரையினமேல ஓங்கி ஒரு அடி யடிக்க திருமண் கட்டி கட்டியாகக் கிளம்பிற்று. நன்ருக ஊகித்துப் பார்த்தபொழுது, அவ்விடத்திலே ஏராளமாக, என்றும்

குறையாத அளவு திருமண் கிடைத்தது. ஸ்ரீ ராமாநுஜர் அங்குக் கிடைத்த திருமண்ணையெல்லாம் சேர்த்துக் குவித்துக்கொண்டு, அதைத் தமக்குச் சொந்த சொத்தாக வைத்துக்கொண்டு, யதுகிரியிலே ஸ்ரீமந் நாராயணமூர்த்தியை "ஒருநாயகம்" என்று ஆரம்பிக்கின்ற திவ்யப்பிரபந்தத்தைப் பாடிப் பிரதிஷ்டை செய்தருளினர்.

ஆனல், 'அந்த க்ஷேத்திரத்திலே உற்சவ விக்கிரகமில்லையே; எம்பெருமானை எழுந்தருளச் செய்து உற்சவம் கொண்டாடுவதற்கு வழியில்லாமலிருக்கின்றதே' என்று விசனமுடையவராய், இதே எண்ணத்துடன் படுத்துறங்கச் சென்றார். அப்பொழுது எம்பெருமான் அவருடைய கனவிலே தோன்றி, "அப்பா! இராமாநுஜா! எனது உற்சவ விக்கிரகமாகிற ராமப் பிரியர் டில்லியிலே மகம்மதியச் சக்கரவர்த்தியினுடைய அரண்மனையிலேயிருக்கின்றது. அங்குச் சென்று அதைக் கொண்டுவா!", என்று ஆக்ஞாபித்தருளினர்.

இந்த ஸ்ரீ ராமப்பிரிய விக்கிரகத்தைப்பற்றிப் பின்வருமாறு ஒரு ஐதீகம் சொல்லப்படுகின்றது:—

இராவணனுடைய தம்பியாகிய விபீஷணன் லங்கா நகர் செல்வதற்காக ஸ்ரீ ராமரிடம் விடைபெற்றுக்கொண்டபொழுது, ஸ்ரீராமர் தாம் தினந்தோறும் பூஜித்துக்கொண்டுவந்த ஸ்ரீரங்கநாதப் பெருமானை விபீஷணனுக்குத் தமது ஞாபகார்த்தமாகக் கொடுத்துவிட்டார். கொஞ்சக்

காலம் சென்றது; ஸ்ரீ ராமர் பூஜிப்பதற்கு எவ்வித மூர்த்தியு மில்லாமலே யிருந்தார்; இப்படி யிருக்கும்பொழுது பிரஹ்மா ஸ்ரீ ராமரிடம் வந்து, ஸ்ரீராமர் விபீஷணனுக்குக் கொடுத்த மூர்த்தியினுடைய அம்சமுடையதாயும் பரிசுத்தத் தன்மையிலும் சமானமானதாயும் உள்ள ஒரு விக்கிரகத்தை ஸ்ரீராமருக்குப் பூஜிப்பதற்குக் கொடுத்தார். ஸ்ரீராமர் அதை யதிக சந்தோஷத்துடனே வாங்கி, தமது ஆயுட்காலம் முழுதும் அதைப் பூஜித்து வந்தார். இதனால், அவ்விக்கிரகத்துக்கு ஸ்ரீ ராமப்பிரியர் என்ற பெயராயிற்று. ஸ்ரீராமர் தமது அந்திய காலத்திலே தமது பரம பக்தனை ஹநுமாருக்கு அதைக்கொடுத்தார்; ஹநுமார் அதை ஸ்ரீராமருடைய புத்திரனாகிய குசனுக்குக் கொடுத்தார். குசனுக்குக் கனகமாலினி என்று ஒரு பெண் இருந்தது; அப் பெண்ணுக்கு ராமப்பிரிய விக்கிரகத்தி னிடத்தில் அளவிலாப் பிரியம்; யாதவ குலத்திலே ஒரு அரசனுக்கு அவள் விவாகம் செய்விக்கப்பட, அவள் அந்த விக்கிரகத்தைத் தனக்கு ஸ்ரீதனமாக எடுத்துக்கொண்டு சென்றாள்; பின்னர் அது யாதவ வம்சத்து அரசர்களாலே பூஜிக்கப்பட்டு வந்தது. பின்னர் ஒரு காலத்திலே ஸ்ரீ பலராமர் தீர்த்த யாத்திரை சென்றிருந்தபொழுது ஸ்ரீநாராயணாத்ரி க்ஷேத்திரத்துக்கு வந்து அந்த ஸ்தல மகிமையையும் அங்கு எழுந்தருளி யிருந்த எம்பெருமானுடைய சிறப்பையும் கண்டு உவந்து, தீர்த்த யாத்திரை முடித்துத் திரும்பித் தமது ஊருக்கு வந்து சேர்ந்தவுடனே தமது சகோதரர் ஸ்ரீ கிருஷ்ணனிடத்திலே நாராயணாத்திரியைப்பற்றிக் கூறினார்; இன்னும், யாதவ

குல பரம்பரையினுலே பூஜிக்கப்பட்டு வருகின்ற ஸ்ரீ ராமப்பிரிய விக்கிரகத்தையும் ஸ்ரீ நாராயணுத்ரிக்குக் கொண்டு போகும்படி கூறினர். அங்கு இருந்த விக்கிரகமும், ஸ்ரீகிருஷ்ணனிட மிருந்த விக்கிரகமும் ஒரே அச்சில் வார்த்ததுபோல சற்றும் வித்தியாசமின்றி யிருக்கக்கண்டு ஸ்ரீ பலராமரும் ஸ்ரீ கிருஷ்ணனும் ஆச்சர்யப்பட்டார்கள். இதனுல் அவ்விடத்துக்கு ஸ்ரீயாதவாத்ரி யென்று பெயர் வழங்கலாயிற்று.

கலியுகம் பிறந்து வெகு நாட்களுக்குப் பின்னர்ச் சில பிரபுக்கள் தமது அரசனுக்குக் கீழ்ப்படியாமல் கலகம் செய்து, இவ்விடத்திலே ஒரு பெரிய கோட்டை கட்டி, அதற்கு மேல்கோட்டை என்று பெயரிட்டார்கள். மகம்மதியர்கள் இந்தியாவைப் படை யெடுத்து நாடு நகரங்களை யெல்லாம் கொள்ளை யடித்தார்கள். மகம்மது கஜினியினுடைய காலத்திலே அவனுடைய சைந்யாதிபதிகளுள் ஒருவன் மேல்கோட்டையையும் பிடித்து அங்கிருந்த முக்கியமான பொருள்களை யெல்லாம் கொள்ளை யடித்துக் கொண்டு போய்விட்டான்; ஸ்ரீராமப்பிரிய விக்கிரகத்தையும் கொண்டுபோய்விட்டான். அதுமுதல் அவ் விக்கிரகம் டில்லியிலே அரசாண்டு வந்த மகம்மதியச் சக்கரவர்த்திகளின் வசமே யிருந்துவந்தது.

ஸ்ரீ ராமாநுஜர் இரவிலே இக் கனவு கண்டு 'எப்பொழுது பொழுது விடியுமோ?' என்று வெகு ஆத்திரத்துடனே காத்துக்கொண்டிருந்தார்; பொழுது விடிந்தவுடனே,

தாம் கண்ட கனவைத் தமது சிஷ்யர்களிடத்தும் விஷ்ணு வர்த்தனனிடத்தும் கூற, எல்லோரும் உடனே புறப்பட ஆயத்தமானார்கள். விஷ்ணுவர்த்தனன் ஸ்ரீ ராமாநுஜரை யானை, குதிரை, ஒட்டகம் முதலிய சைந்யங்களுடனே யனுப்பி வைத்தான்.

ஸ்ரீ ராமாநுஜர் தமது சிஷ்ய வர்க்கங்களுடனே டில்லிபோய்ச் சேர்ந்து, தமது வரவைச் சக்கரவர்த்திக்குத் தெரியப்படுத்தினார். "ஹிந்துமத சந்நியாசிக்கு நம்மிடத்தி லென்ன வேலை?" என்று சக்கரவர்த்தி நினைத்தானாயினும், அவனுடைய ஹிருதயத்தி னுள்ளே ஏதோ ஒரு சக்தி யிருந்துகொண்டு 'ஸ்ரீ ராமாநுஜரைப் போய்ப் பார்க்கவேண்டும்' என்ற ஆசை யொன்றை யுண்டாக்கிற்று; சக்கரவர்த்தி யினுடைய மனம் ஸ்ரீ ராமாநுஜரைப் பின்பற்றியே சென்றது. அவன் ஆசார்யரை அவர் இறங்கி யிருந்த இடத்திலே வந்து கண்டான்; அவன், தன்னை யறியாமலே, தரை வரையில் தாழ்ந்து சலாம் செய்தான்; "ஸ்வாமி! தாங்கள் துலுக்கனாகிய என்னை நாடி வந்த காரணம் யாதோ? தயவு செய்து தெரியப்படுத்த வேண்டுகின்றேன்" என்று மிகவும் வணக்கத்துடன் வேண்டிக்கொண்டான்.

ஸ்ரீ ராமாநுஜர் அரசனை நோக்கி, "சம்பத்தும் சந்தானமும் சகல பாக்கியங்களும் உனக்குப் பெருகக்கடவது; நீ தீர்க்காயுளும் திடகாத்திர ஆரோக்கியமும் பெற்று, ஆநந்தமாய் அரசு புரியக்கடவது" என்று வாழ்த்திவிட்டு, "நீ அந்நிய மதத்தினனா யிருந்தும், அதுவும் கொடிய குணங்

களையுடைய துலுக்கனாயிருந்தும், உன்னுடைய மதத்தைச் சேராத பிற மதஸ்தர்களிடத்திலே இவ்வளவு பக்ஷமும் தாராளத்துவமும் காண்பிப்பது மிகவும் பாராட்டத்தக்கது. உனது தேசத்துக்கும் உனது மதத்துக்கும் நீயொரு ஆபரணமாக விளங்குகின்றாய். உனது அரண்மனையிலே ஹிந்துக்களாகிய எங்களாலேயே மிகவும் பரிசுத்தமானதாகவும் சிரேஷ்டமானதாகவும் கருதப்படுகின்ற விக்கிரகம் ஒன்று உள்ளது; அதனை வேண்டி நான் இங்கு வந்தேன்; தயை செய்து அளித்திடுக!'' என்று கேட்டார்.

மகம்மதியன் "வெகு சந்தோஷம்" என்று சொல்லி விட்டு, ஸ்ரீ ராமாநுஜரை மேளதாள சகல சங்கீத வாத்திய கோஷங்களுடனும் அரண்மனைக்கு இட்டுச் சென்று, ஜயித்த தேசங்களிலிருந்து கொண்டு வந்து குவித்து வைத்திருக்கும் விக்கிரகங்கள் இருக்கும் கட்டடத்துக்கு ஸ்ரீ ராமாநுஜரைக் கூட்டிக்கொண்டுபோய்க் காண்பிக்கும் படி, தனது மந்திரிகளுக்கு உத்தரவு செய்தான். ஸ்ரீ ராமாநுஜர் ஸ்ரீராமப்பிரிய விக்கிரகத்தை அங்குத் தேடித் தேடிப் பார்த்தார்; காணவில்லை. என்ன செய்வார்? ஸ்ரீ ராமாநுஜர் மிகவும் துக்காக்கிராந்தராய் தாம் இறங்கியிருக்கும் இடம் திரும்பி வந்தார். அந்த விக்கிரகம் டில்லியிலே மகம்மதியனுடைய அரண்மனையிலிருந்தது என்பதில் அவருக்கு எள்ளளவும் சந்தேகம் ஏற்படவில்லை; தமது ஹிருதயத்தின் பரிசுத்தக் குறைவினாலேயே அது தமது கண்களுக்குத் தென்படவில்லை யென்று ஸ்ரீ ராமாநுஜர் நினைத்

தார்; "என்ன செய்யலாம்? எம்பெருமானுடைய ஆக்ஞையை நிறைவேற்ற முடியாதவனாயிருக்கின்றேன்" என்று மனம் கலங்கியவராய்ப் படுத்து உறங்கச் சென்றார். நெடு நேரம் உறக்கம் வரவில்லை. கடைசியில் சற்றுக் கண் அயர்ந்தார். அப்பொழுது அந்த ஸ்ரீ ராமப்பிரியமூர்த்தியே அவருடைய கனவில் தோன்றி, புந்நகை புரிந்துகொண்டே, "புத்திரா! நான் இல்லாத இடத்தில் நீ தேடினால் நான் அகப்படுவேனோ? இந்தச் சக்கரவர்த்தியினுடைய பெண் துலுக்கச்சியானபொழுதிலும், என்னிடத்திலே பக்தியிருந்து என்னைத் தன்னிடம் வைத்துக்கொண்டிருக்கின்றாள்; அவளுடைய அந்தப்புர அறையிலே நான் இருக்கின்றேன்; என்னைப் பார்க்க விரும்பினால், நீ அங்கே வா!" என்றார்.

மறுநாள் பொழுது விடிந்தவுடனே, ஸ்ரீ ராமாநுஜர் இந்த சமாசாரத்தைச் சக்கரவர்த்திக்குத் தெரியப்படுத்த, சக்கரவர்த்திக்கு இவ் விஷயம் ஆச்சர்யத்தை விளைத்தது. 'அந்தப்புரத்திலே யுள்ள பொருள் இவருக்கு எப்படித் தெரிந்தது? நல்லது, பரிசோதித்து, அவர் சொன்னது உண்மைதானா?' என்று அறிய விரும்பினான் சக்கரவர்த்தி. ஆகையால், அவனும் ஸ்ரீ ராமாநுஜருமாக அந்தப்புரம் சென்றார்கள். இராஜகுமாரியினுடைய அறையினுள் சென்றவுடன், ஸ்ரீ ராமாநுஜர் பூமாதேவியை நோக்கி, நமஸ்கரித்து, இருகைகளையும் கூப்பிக்கொண்டு "எனது ஹிருதயேஸ்வரா! உன் அடிமையாகிய யான் உனது கிருபைக்குப்

பாத்திரவானானால், எனக்குத் தர்சனம் கொடுத்தருளு வாய்'' என்று பிரார்த்தித்தார்.

ஸ்ரீராமாநுஜருடைய வாயிலிருந்து இவ் வார்த்தைகள் வந்ததுதான் தாமதம்; கணீர் கணீரென்று சதங்கைச் சப்தம் கேட்டது; எல்லோரும் திடுக்கிட்டார்கள்; ஸ்ரீ ராமப்பிரிய விக்கிரகமானது குதித்துக் குதித்து ஸ்ரீ ராமாநுஜரை நோக்கி யோடிவந்தது; இதென்ன? உண்மைதானா? அங் கிருந்தவர்க ளெல்லோரும் பார்த்துப் பிரமித்தார்கள்; மகம் மதியச் சக்கரவர்த்தியோ தனது கண்களைக் கசக்கிக் கசக்கி நன்றாகத் துடைத்துக்கொண்டு பார்த்தான். ஸ்ரீராமப்பிரிய விக்கிரகம் ஸ்ரீ ராமாநுஜருடைய முழந்தாளிலே குதித் தேறி, அவருடைய மார்பிலே சேர்ந்து அணைந்து நின்றது. ஸ்ரீ ராமாநுஜருடைய மனம் இத் தகையதாயிருந்திருக்கு மென்று எவராலேனும் ஊகிக்க முடியுமா? ஆநந்தம், ஆநந் தம், ஆநந்தம்; அடக்கவொண்ணா ஆநந்தம். அந்த விக்கி ரகத்தைச் சேர்த்துக் கட்டி யணைத்துக்கொண்டு, ஆடிப் பாடி யார்ப்பரித்தார். "எந்தன் செல்வப்பிள்ளையே! நீ நெடுநாட்களாக என்னிடமிருந்து பிரிந்து நின்றாய்; இத னால் நான் மிகுந்த துக்கமுடையவனாய்த் துடித்துக்கொண் டிருந்தேன்; இப்பொழுது உன்னை யடைந்தேன்; எல்லா வற்றையும் அடைந்துவிட்டேன்'' என்று கூறி, அவ் விக் கிரகத்தைப் பார்த்துப் பார்த்து ஆநந்தித்தார்.

சக்கரவர்த்தியும் அவனுடன் இருந்த மற்ற மகம்ம திய உத்தியோகஸ்தர்களும் இவ் விநோதமும் ஆச்சர்யமு

மான காக்ஷியைக் கண்டு, "இது என்ன கனவா? அல்லது உண்மைதானு?" என்று சந்தேகித்துப் பிரமித்தார்கள். அவர்களைச் சுற்றிலும் ஆகாயம் புதியதாயிற்று; புதிய புதிய நினைப்புக்கள், புதிய புதிய உணர்ச்சிகள், புதிய புதிய தோற்றங்கள் எல்லாம் அவர்களுக்கு உண்டாயின. சக்கரவர்த்தியும் மற்றவர்களும் தாங்கள் துலுக்கர்கள் என்பதை மறந்து, ஸ்ரீ ராமாநுஜருடைய அடிகளில் விழுந்து பணிந்து எழுந்து, கைகட்டி வாய் பொத்தி, மிகுந்த பயபக்தியுடனே நிற்க, ஸ்ரீ ராமாநுஜர் சக்கரவர்த்தியை நோக்கி, "கோடிக்கணக்கான ஜனங்களை யாதரித்துக் காக்கும் கோவே! நான் நாடிவந்ததை இப்பொழுது அடைந்து ஆநந்தித்தேன். இப்பொழுது எனது ஆநந்தம் என்றும் நிலைத்திருக்குமாறு நான் இம்மூர்த்தியைஎடுத்துக்கொண்டு போவதற்கு உத்தரவளிக்கவேண்டும்" என்று கேட்டார்.

சக்கரவர்த்தி "ஸ்வாமி! தாங்கள் ஒரு ஆச்சர்ய புருஷர்; தாங்கள் கேட்பதை மறுப்பதற்கு எனக்கு மனம் வரவில்லை. தாங்கள் இங்கிருந்து சீக்கிரம் அகன்றுவிட்டால் நல்லதுபோலத் தோன்றுகின்றது; தாங்கள் என்னை மயக்கிவிட்டீர்கள்; எனது மனம் இப்பொழுது மயங்கித் தங்களிடத்தே பற்றி நிற்கின்றது. இன்னமும் தாங்கள் இங்கு இருப்பதானல், நான் எனது மதத்துக்குத் துரோகியாய், தங்களிடத்தில் சிஷ்யனுகும்படி நேரிடும். ஆதலால், இதையெடுத்துக்கொண்டாவது, சீக்கிரம் புறப்படுங்கள்!" என்று சொல்ல, ஸ்ரீ ராமாநுஜர் அதிக சந்தோஷ சித்தராய் அந்த

விக்கிரகத்தை யெடுத்துக்கொண்டு, டில்லியினின்றும் நீங்கிப் புறப்பட்டு, யதுகிரி வந்து சேர, அங்கே விஷ்ணு வர்த்தன அரசனும் மற்றவர்களும் அவருக்கு ஈஸ்வரோப சாரம் செய்து வரவேற்றார்கள்.

இந்த விக்கிரகத்தை அதிக பிரியத்துடனே வைத்துப் பூஜித்துக்கொண்டிருந்த டில்லி ராஜகுமாரத்திக்கு அந்த ஸ்ரீ ராமப்பிரிய விக்கிரகத்தினின்றும் பிரிந்திருக்கமுடியாது, ஆட்களை யனுப்பி "ஸ்ரீராமாநுஜரிடமிருந்து விக்கிரகத்தைத் திரும்பவும் வாங்கிக்கொண்டு வரும்படி உத்தரவு செய்ய வேண்டும்" என்று தொந்தரவு செய்தாள். அம் மகம்மதிய அரசனும் தனது புத்திரியினுடைய வேண்டுகோட் கிணங்கி, ஸ்ரீ ராமாநுஜரைப் பின் தொடர்ந்து சென்று வழி மறித்து, அவ் விக்கிரகத்தை வாங்கி வரும்படி ஆட்களை யனுப்ப, அவர்கள் அதிவேகமாக ஸ்ரீ ராமாநுஜர் போகும் வழியைப் பின்பற்றி யோடி ஸ்ரீராமாநுஜரை யடைந்து தங்கள் அரசனுடைய உத்தரவைத் தெரிவித்தார்கள். ஸ்ரீராமாநுஜர் "இதுவரை யிந்த விக்கிரகம் விக்கிரகமா யிருந்தது; இப்பொழுது இது ஸ்ரீ ராமாநுஜப்பிரிய விக்கிரகமாய் விட்டது; ஆகையால், ஸ்ரீராமாநுஜரிட மிருந்து இனிமேல் எப்போதும் எவராலும் இவ் விக்கிரகத்தைப் பிரிக்க முடியாது என்று அரசனிடம் சொல்லுங்கள்!" என்று கூறி, அவ் வாட்களை யனுப்பிவிட்டார். அவர்கள் டில்லி யரசனிடம் வந்து சங்கதியைக் கூற அவன் தனது புத்திரியினிடம் கூறினன். அவள் இன்னும் அதிகமாகத் துக்கித்து,

“இனிமேல் நான் இங்கு இரேன்; அவ் விக்கிரகம் எங்கு இருக்கின்றதோ அங்கே யிருப்பேன்,” என்று சொல்லி ஸ்ரீ ராமாநுஜர் இருக்கும் இடம் தேடிப் புறப்பட்டாள். அவளுக்கு அரசன் எவ்வளவோ தேறுதல் சொல்லிப் பார்த்தும், அவள் கேட்காமல் ஒரே பிடிவாதமாகப் புறப்பட்டதனால், அரசன் அவளுக்கு வழித் துணையாக ஒரு பெரும் சைந்நியத்தையும் அவளுடைய சகோதரனையும் கூட அனுப்பி வைத்தான். அந்த ராஜகுமாரத்தி ஸ்ரீராமப்பிரியரிடத்திலேயுள்ள பக்தியினால் தூண்டப்பட்டவளாகி, ஆகாரம் நித்திரை முதலியவற்றின் நினைப்பே இல்லாமல் வெகு வேகமாகச் சென்று சில நாட்களுக்குள்ளே ஸ்ரீ ராமாநுஜரையடைந்து, அவரை நோக்கி, “ஸ்வாமி! நான் ஸ்ரீராமப்பிரியரிடமிருந்து ஒரு நாளும் நீங்கி யிரேன். எனது ராமப்பிரியருக்கு என்னாலான தொண்டு செய்துகொண்டு நான் கூடவே யிருக்கும்படி சம்மதித்தருளல் வேண்டும்” என்று பிரார்த்தித்துக் கேட்க, ஸ்ரீ ராமாநுஜர் திரிகால ஞானியாகையினாலே அவளுடைய முந்திய பிந்திய ஜன்மங்களையெல்லாம் ஆய்ந்து தெரிந்துகொண்டு, ‘அவள் மகா உத்கிருஷ்டமான பக்தியையுடையவள்’ என்று நிச்சயித்து, ஸ்ரீ ராமப்பிரியரை ஏற்றிக்கொண்டு வந்த அதே பல்லக்கில் அவளையும் ஏற்றுவித்தார். பின்னர் இவ்விதமாக இவர்கள் வழிப் பிரயாணம் நடந்துகொண்டே போய்க்கொண்டிருந்தார்கள். ஒருநாள் பல்லக்குத் தூக்கிகள் “பல்லக்குச் சற்றும் பளுவின்றி யிருக்கின்றது’ என்று ஸ்ரீ ராமாநுஜரிடத்திலே தெரிவிக்க, ஸ்ரீ ராமாநுஜருக்கு இது அத்தியாச்சர்யமா,

யிருந்தது; பல்லக்கை அங்கே நிறுத்தச் சொல்லி, அதைத் திறந்து பார்க்க, அதிலே இராஜகுமாரியைக் காணவில்லை. அவள் ஸ்ரீ ராமப்பிரியருடனே கலந்துகொண்டாள்; அவரிடத்திலே ஐக்கியமாய்விட்டாள்; இவ் வற்புதத்தைக் கண்டு, அங்கிருந்தவர்கள் அனைவரும் திடுக்கிட்டுப் பிரமித்து ஆச்சர்ய மடைந்தார்கள். "அவள் எங்கே? எப்படி மறைந்துவிட்டாள்? என்பதற்கு ஸ்ரீ ராமாநுஜர் ஏதேனும் காரண முரைப்பாரோ?" என்று எல்லோரும் ஸ்ரீ ராமாநுஜரையே பார்த்தார்கள். ஆனால், ஸ்ரீ ராமாநுஜர் ஒன்றும் கூறவில்லை; வெறுமே புன்னகை மாத்திரம் புரிந்தார். இப் பெண்ணினுடைய சகோதரன் ஒருவன் கூட வந்தானென்று முன்னமேயே சொல்லி யிருக்கின்றோமே. அவனும் இச் சங்கதியைப் பார்த்து ஆச்சர்யப்பட்டு, ஸ்ரீ ராமாநுஜரிடத்திலே பக்தி மிகுந்தவனாகி, ஸ்ரீ ராமாநுஜருடன் கூடவே சென்று, ஸ்ரீ ராமப்பிரிய விக்கிரகத்தைப் பிரதிஷ்டை செய்வதைக் கண்டு களித்தான். ஸ்ரீ ராமாநுஜர், அப் பெண்ணைப்போலத் தங்கத்தினால் ஓர் உருச் செய்து, ஸ்ரீ ராமப்பிரிய விக்கிரகத்தின் இரு பாதங்களின் இடையிலும் வைத்து, "அவளும் பூஜை முதலியவற்றுக் குரியளே" என்று ஆக்ஞாபித்தார்.

பிரபாகரர் என்று ஒருவர் யவனீபரிணயம் என்று ஒரு புத்தகம் எழுதியிருக்கின்றார்; அதிலே சம்பத் குமாராகிய ஸ்ரீ ராமப்பிரியருக்கும் இந்தத் துலுக்க அரச குமாரிக்கும் நடந்த விவாகமே வர்ணிக்கப்பட் டிருக்கின்றது. "செல்வப்

பிள்ளையாகிய ஸ்ரீ ராமப்பிரியர் ஸ்ரீ ராமாநுஜருக்குப் புத்திரர் முறை யாகின்றதனாலே, இவர் ஹரித கோத்திரத்தைச் சேர்ந்தவர்" என்றும், காக்கியர் என்பவர் காலயவனனுடைய பிதாவாகையினாலே யவனர்களெல்லோருக்கும் முன்னோராதலினால், அத் துலுக்க இராஜ குமாரி கார்க்கிய கோத்திரத்தைச் சேர்ந்தவர்" என்றும் சொல்லப்படுகிறது.

டில்லி இராஜகுமாரியுடனே கூட வந்த அவளுடைய சகோதரன் ஸ்ரீ ராமாநுஜருடைய மகிமையையும், செல்வாக்கையும், சிறந்த வாழ்க்கையையும் கண்டு வியந்து புகழ்ந்து, டில்லிக்குத் திரும்பி வந்தவுடனே, தான் டில்லியிலிருந்து புறப்பட்டதுமுதல் இதுகாறும் நடந்த சங்கதிகளையெல்லாம் சாங்கோபாங்கமாகத் தனது பிதாவினிடத்திலே சொன்னான். அந்த மகம்மதிய சக்கரவர்த்தி ஆச்சர்ய சாகரத்தில் அமிழ்ந்து, அவனுக்கு அவனுடைய புத்திரியினிடத்திருந்த வாத்சல்யத்தினாலும் ஸ்ரீ ராமாநுஜரிடத்து அவன் வைத்திருந்த மதிப்பினாலும் தூண்டப்பட்டவனாகி, டில்லியிலிருந்து புறப்பட்டு, அநேக நாட்கள் யாத்திரை செய்து திருநாராயணபுரம் வந்து சேர்ந்தான். "டில்லிச் சக்கரவர்த்தி, ஸ்ரீராமப்பிரியருடைய காதலியின் பிதா, வந்திருக்கிறான்" என்று ஸ்ரீ ராமாநுஜர் அறிந்து, தகுந்த மர்யாதைகளுடனே அவனை வரவேற்று, அவன் அங்கேயிருக்கும்வரையில் சுகமாகத் தங்கியிருக்கும்படி வேண்டிய சௌகர்யங்கள் செய்துகொடுத்தார். சந்நியாசியாகிய ஸ்ரீராமாநுஜரே சக்கரவர்த்திக்கு இவ்வளவு மர்யாதைகள்

பண்ணுவாரானால், இவ் விந்தியா தேசம் முழுதிலும் ஏகச் சக்ராதிபத்தியம் செலுத்தி வரும் அவன் மர்யாதை செய்வதிலே குறைந்துவிடுவனோ? அவன் தனது மாப்பிள்ளை முறையாகிய ஸ்ரீராமப்பிரிய மூர்த்திக்கு அளவற்ற ஐஸ்வர்யமும் விலைமதிக்கப் பெறாத ரத்தினங்களும் ஆபரணங்களும் அளித்ததுமன்றியில், என்றென்றும் எல்லோரும் அவனைப் புகழ்ந்துகொண் டிருக்கும்படியாக ஒரு பெரிய உற்சவமும் செய்வித்தான்.

இந்தத் துலுக்க அரசன் தனது புத்திரர்களுள் ஒருவனாகிய கபீர் என்பவனைக் கூடவே கூட்டிக்கொண்டு வந்திருந்தான்; அவனுக்கு விழிப்பு உண்டாய்விட்டது; உண்மையை அறிய ஆரம்பித்துவிட்டான்; விசிஷ்டாத்வைத மதத்தினிடத்திலே பற்றுதல் விழுந்துவிட்டது. ஆகையினாலே, அந்த டில்லிச் சக்கரவர்த்தியும் அவனுடைய பரிவாரங்களும் திரும்பிப் புறப்பட்டபொழுது, இவன் மாத்திரம் புறப்படாமல் ஸ்ரீ ராமாநுஜருடனே தங்கிவிட்டான். அவன் மகம்மதியனாய்ப் பிறந்து, மாம்சம் தின்று மாம்சத்தைப் பெருக்கி வளர்ந்ததனாலே, அவன் மனம் பரிசுத்தமும் பக்குவமு மடையும் பொருட்டு, அவன் பரதக் கண்டம் முழுதும் சுற்றிப் பல க்ஷேத்திரங்களையும் தர்சனம் செய்து வரல் நலமென்று ஸ்ரீ ராமாநுஜர் ஆக்ஞைபிட்டார்.

இவன் இவ்வாறு ஸ்தல யாத்திரை செய்து வருகையில், ஒருநாள் ஸ்ரீரங்கம் வந்து சேர்ந்தபொழுது அவனுக்குப் பரமாத்மாவினுடைய பாதார விந்த நிழலை யடையவேண்டு

மென்ற எண்ணம் தீவிரமாக உண்டாய்விட்டது. கபீர் ஸ்ரீரங்கநாதப் பெருமானை நோக்கி, "எம்பெருமானே! எளியேன்மீது உனக்குக் கிருபை யுண்டானால், நான் இது காறும் திரிகரண சுத்தியுடனே உனக்குத் தொண்டு புரிந்தது உண்மையானால், என்னை இவ் விருண்ட பூமியினின்றும் விடுவித்து உனது பாதாரவிந்த பாக்கியமருளுவாய்" என்று பிரார்த்தித்தார். அதற்கு ஸ்ரீரங்கநாதப் பெருமான், "எனது புத்திரா! இங்கு, சேஷசயன ஸ்தலமாகிய ஸ்ரீரங்கத்திலே ஹிந்துக்களாகப் பிறந்து சக்கரதாரணம் செய்யப் பெற்று என்னிடத்து பக்தி செலுத்துபவர்களுக்கு, அல்லது எனக்குச் சத்துருக்களாய்ப் பிறந்து சக்கரத்தினால் சம்ஹரிக்கப்படுபவர்களுக்கு, இவர்களுக்கே நான் முக்தியளித்துவருகின்றேன். ஆனால், நீ ஜகந்நாதத்துக்கு வா; அங்கே எனது சக்கரத்தைத் தர்சித்தாலே போதும்; முக்தி கிடைத்துவிடும்." என்று உத்தரவு செய்தார்.

கபீர் அப்படியே செய்து ஜகந்நாதம் சென்று பரம பக்தி புரிந்து எம்பெருமானுக்கு வேண்டிய தொண்டுகள் புரிந்துவர, ஒருநாள் எம்பெருமான் கபீரைப் பரமபதத்துக்கு எடுத்துக்கொள்ள நினைத்து, ஒரு நாயுருவெடுத்து கபீருக்கு முன்னே தோன்றினர். கபீர் அப்பொழுது தியானத்தி லிருந்ததனாலே, அங்குத் தோன்றிய நாயைக் கவனிக்கவில்லை; அந்த நாயானது கபீர் பகற்சாப்பாட்டுக்காக ஆக்கி வைத்திருந்த பூரிகளைத் தூக்கிக்கொண்டு ஓடிற்று; அப்பொழுதுதான் கபீர் தியானம் தெளிந்து கண்

களை விழித்துப் பார்க்க, நாயானது பூரிகளை யெடுத்துக் கொண்டு ஓடுவது கண்டு, அப் பூரிகளுக்கு நெய் எடுத்துக் கொண்டு, அந்த நாயின்பின்னே யோடினார். நாயானது கடற் கரையை நோக்கி நேரே யோடிற்று; இவரும் ஓடினார். கடைசியாக அந்த நாயானது அங்கு மறைந்துவிட்டது; உடனே அப்பொழுதே எம்பெருமான் அவரைத் தமது பாத நிழலில் சேர்த்துக்கொண்டார்; இன்னும், எம்பெருமான் அந்த க்ஷேத்திரத்து அர்ச்சகரை நோக்கி, கபீருடைய சரீரத்தைத் தகுந்த மர்யாதைகளுடன் எடுத்து அடக்கம் செய்யுமாறும் உத்தரவு செய்தார்.

இப்பொழுது நாம் மறுபடியும் ஸ்ரீராமாநுஜரைக் கவனிப்போம். அவர், பின்னர், தினவுற்சவம் முதலியவற்றை ஒழுங்குபடுத்தி, அவை கிரமமாக நடந்து வருமாறு ஏற்பாடு செய்தார்; இவ் வருஷோற்சவங்களில் சந்தோஷகரமான சச்சரவு நடக்கும் வருஷ உற்சவம் ஒன்று உண்டு. இதன் ஐதீகம் பின் வருமாறு:—ஒருநாள் தொண்டனூர்ப் பெருமான் தொண்டனூர் நம்பியிடத்தில் கனவில் தோன்றி, "சம்பத் குமாாருடைய கிரகம் சென்று, அவரையும் இட்டுக் கொண்டு வேட்டைக்குப் போகவேண்டுமென்ற இச்சை யொன்று உண்டாயிருக்கின்றது," என்று கூறினார். நம்பி அவ்வூர் ஜனங்களிடம் கூற, அவர்கள் மிகுந்த சந்தோஷத்துடனும் வைபவத்துடனும் தொண்டனூர்ப் பெருமானை எழுந்தருளச் செய்து, ஸ்ரீ ராமப்பிரிய க்ஷேத்திரத்துக்கு இட்டுச் சென்றார்கள். ஸ்ரீ ராமாநுஜர் நம்பியை அதிக பிரி

யத்துடனே வரவேற்று, அவருக்குச் சகல மர்யாதைகளும் நடக்கும்படி செய்தார்; தொண்டனூர்ப் பெருமானுக்கும் பஞ்சபக்ஷ பரமான்னங்களுடனே நைவேத்தியம் செய்து, நம்பிக்கும் சம்பிரமமான விருந்துகள் செய்வித்தார். நம்பிக்கு ஐம்பத்திரண்டு சிஷ்யர்கள்; நைவேத்திய அமுதைத் தாங்கள் பகிர்ந்துகொள்ளுமாறு அநுமதி கொடுக்கவேண்டுமென்று இந்த ஐம்பத்திரண்டு பெயர்களும் கேட்டுக்கொள்ள, வேடிக்கையிலும் விநோதத்திலும் எப்பொழுதும் பிரியமுள்ள ஸ்ரீ ராமாநுஜர் அவர்களை நோக்கி, "நல்லது! உங்களுக்குச் சாமர்த்தியம் உண்டானால், உங்களுடைய தொண்டனூர்ச் சகோதரர்களிடமிருந்து நீங்கள் அதைப் பிடுங்கிக்கொள்ளலாமே" என்றார். உடனே நம்பியினுடைய சிஷ்யர்கள் அனைவரும் ஒருவர்மேல் ஒருவர் விழுந்து நைவேத்தியத்தின் பொருட்டுப் போராடத் தொடங்கினார்கள். இப் போராட்டம் இன்றும் வருஷந்தோறும் உற்சவமாக நடக்கின்றது.

இங்கு ஸ்ரீ ராமாநுஜர் இவ்விதமாக க்ஷேத்திரத்திலே அநேக சீர்திருத்தங்கள் செய்துவர, டில்லி சக்கரவர்த்தி தனது புத்திரனுடைய பெருமையைப்பற்றிக் கேள்விப்பட்டும், தன்னுடைய புத்திரியின் பக்தியையும் ஸ்ரீ ராமாநுஜருடைய மகிமையையும் நினைந்தும், ஸ்ரீராமப்பிரிய மூர்த்திக்கு விலையுயர்ந்த ஆடையாபரணாதிகளை யெல்லாம் அனுப்பிவைத்தான்,

ஸ்ரீ ராமாநுஜர் டில்லியிலிருந்து திரும்பிவரும் மார்க்கத்திலே பின் கூறப்படுகின்ற ஒரு சங்கதியும் நடந்ததாகச்

சொல்லப்படுகின்றது:— திரும்பி வரும் வழியிலே ஓரிடத்தில் திருடர்கள் ஸ்ரீ ராமாநுஜரையும் அவருடைய சிஷ்ய வர்க்கங்களையும் எதிர்த்து, ஸ்ரீராமப்பிரிய விக்கிரகம் உள்பட எல்லாவற்றையும் கொள்ளையடித்துக்கொண்டுபோக விருந்த தருணத்தில், சுற்றுப்பிரதேசத்திலே வசித்துவந்த சில பறையர்கள் உதவிக்கு ஓடிவந்து திருடர்களை யடித்துத் துரத்தி ஸ்ரீ ராமாநுஜரையும் பந்தோபஸ்தாக இட்டுச் சென்று ஆபத்தினின்றும் காப்பாற்றி யனுப்பினர்கள். இப் பறையர்கள் எவ்வித பிரதியுபகாரத்தையும் கருதாமல் செய்த நன்றியை உத்தேசித்து ஸ்ரீ ராமாநுஜர் அவர்களுக்கு ஒரு பெருங் கார்யம் செய்தருளினர். திருநாராயணபுரத்திலே நடக்கும் ப்ரஹ்மோத்சவ சமயத்தில் ஒருநாள் இப் பறையர்கள் க்ஷேத்திரத்தினுள்ளே வரலாம்; கல்யாண சரசிலே ஸ்நாநம் செய்யலாம்; புண்ட்ரம் தரித்துக் கொள்ளலாம்; க்ஷேத்திரத்தினுள்ளே பலிபீடம் வரையில் செல்லலாம். இதற்கெல்லாம் ஸ்ரீராமாநுஜர் அநுமதிகொடுத்தார்; பின்னர் இவர்களுக்கு ஒரு பெரிய விருந்து நடக்கும். எல்லாம் ஆனபிறகு, க்ஷேத்திரம் பரிசுத்தமாக்கப்படுகின்றது. பின்னர் மற்ற உற்சவங்கள் நடைபெறுகின்றன. இன்றும் இப்படியேதான் நடக்கின்றன. இப் பறையர்களுக்கு ஸ்ரீ ராமாநுஜர் திருக்குலத்தார் என்ற நாமம் அளித்தார். திருநாராயணபுரத்தில் மாத்திரமல்ல, "வேலூர், ஸ்ரீரங்கம், மேல்கோட்டை இந்த ஸ்தலங்களிலுள்ள க்ஷேத்திரங்களிலும் வருஷம் ஒருமுறை நுழையலாம்" என்று அநுமதி கொடுத்தார்; இச் சந்தர்ப்பங்களிலே பறையர்கள் பிராஹ்

மணர்களைத் தீண்டும்படி நேரிட்டாலும், பிராஹ்மணர்கள் குறை கூறக்கூடாது.

ஸ்ரீ ராமாநுஜர் இவ்விடத்திலே ஒரு பெரிய மடம் கட்டி, அதிலே தமக்குப் பிரியமான ஐம்பத்திரண்டு சிஷ்யர்களைத் திருப்பணிகள் செய்வதற்கு அமர்த்தி, அவர்கள் அங்கேயே ஸ்திரமாக வசிக்கும்படி ஏற்பாடு செய்தார்.

ஒருநாள் ஸ்ரீ ராமாநுஜர் தமது சிஷ்யர்களை யெல்லாம் மடத்திலே கூடும்படி செய்தார்; இந்த சிஷ்யர்க ளேக தேசத்திலே ஆயிரக்கணக்கானவர்களுக்கு ஆசார்யர்களா யுள்ளவர்கள். அநேக ஜீயர்கள், ஏகாங்கிகள், நாம் முன் கூறிய ஐம்பத்திரண்டு சிஷ்யர்கள், ஸ்ரீ வைஷ்ணவர்கள், சாத்தாண்டிகள் முதலிய பலரும் வந்து ஆசார்யரைச் சூழ்ந்து கூடினார்கள்; ஆகவே அது ஒரு பெருங் கூட்டமா யிருந்தது.

ஸ்ரீ ராமாநுஜர் தமது வலக்கையை உயர்த்தவே, எல்லோரும் மௌனமானார்கள். ஸ்ரீ ராமாநுஜர் மெல்லிய குரலில் "இப் பரிசுத்த ஸ்தலத்திலே வசிக்கும் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு ஸ்ரீ வைகுந்தத்திலே நித்திய பதவி கிடைப்பது நிச்சயம்" என்றார். ஆ! ஆ! அங்கு அப்பொழுது கூடியிருந்த ஆயிரக் கணக்கான ஜனங்கள் அடைந்த ஆநந்தத்தை என்னென்று உரைப்பது!

கிருதயுகத்திலே சனத்குமாரர் சத்தியலோகத்திலிருந்து ஆநந்த விமானத்துடன் இப் பர்வதத்தைக் கொ

ண்டுவந்து அதிலே ஸ்ரீமந் நாராயணமூர்த்தியைப் பிரதிஷ்டை செய்வித்தார்; இதனுல் இதற்கு"நாராயணகிரி"என்று பெயர் வழங்கி வந்தது.

திரேதாயுகத்திலே, ஸ்ரீ மகாவிஷ்ணுவின் அவதாரமாகிய ஸ்ரீ தத்தாத்திரேயர் வேதசரஸின் தீரத்திலே தமது காலத்தைக் கழித்துவர, சுற்றுப்புறத்திலிருந்த பர்வதங்கள், குருவும் சிஷ்யர்களும் உச்சரிக்கின்ற வேதத்தை எதிரொலியாக ஒலித்தன; இதனுல், இதற்கு "வேதகிரி" என்று பெயர் வழங்கலாயிற்று.

துவாபர யுகத்திலே ஸ்ரீகிருஷ்ணனும் ஸ்ரீபலராமரும் இந்த க்ஷேத்திரத்திலே நெடுங்காலம் அத்தியந்த பக்தி செலுத்தி வந்தபடியினுலே இதற்கு "யாதவகிரி" என்று பெயர் வழங்கலாயிற்று.

கலியுகத்திலே ஆசார்யராகிய ஸ்ரீ ராமாநுஜர் அழிந்து அமிழ்ந்து கிடந்த க்ஷேத்திரத்தைக் கண்டெடுத்துப் புதுப்பித்து, ஸ்ரீ நாராயணமூர்த்தியை அங்கு பூஜித்துவருமாறு ஏற்பாடு செய்தார்; இதனுல் அதற்கு "யதிசைலம்" என்ற பெயர் உண்டாயிற்று.

ஸ்ரீ ராமாநுஜர் பின்னர்ப் பௌத்தர்களின் பிரதான ஸ்தலமாகிய பத்மகிரி சென்று அவர்களுடனே நெடுநாட்கள் வாதாடி, அவர்களுடைய மதம் பொய்க்கொள்கைள் நிறைந்ததென்று நிரூபித்து, அவர்களைத் தேசத்தினின்றும் துரத்தி, விசிஷ்டாத்வைதமதம் எங்கும் பரவச் செய்தார்.

ஒருநாள் ஒரு ஸ்ரீ வைஷ்ணவன் ஸ்ரீ ராமாநுஜருடைய பாதங்களிலே விழுந்து நமஸ்கரித்து, தான் ஸ்ரீரங்கத்தி லிருந்து வந்ததாகக் கூறினான். ஸ்ரீ ராமாநுஜர் "ஸ்ரீரங்கத் தில் என்ன விசேஷம்?" என்று கேட்க, "தாங்கள் அங்குப் பன்னிரண்டு வருஷமாக இல்லாக் குறையைத் தவிர, வேறு எல்லாம் நல்ல சமாசாரம்தான்" என்றான் அவன்.

"நல்லது! சோழராஜனிடத்தில் ஆழ்வானும் ஸ்ரீமஹா பூர்ணரும் சென்றார்களே; அவர்களுடைய சங்கதி உனக் கேதேனும் தெரியுமா?"

"இவ் விருவரும் சென்றவுடனே, சோழராஜன் ஆழ் வானைச் சுட்டிக் காட்டி, நாலூரானிடத்திலே "இவர் தானா ஸ்ரீ ராமாநுஜர்!" என்று கேட்டான். நாலூரான் "இல்லை" என்று சொல்லி, "இவர் ஸ்ரீ ராமாநுஜருடைய சிஷ்யர், யோக்கியதையில் அவருக்குச் சமமானவர்" என வே, சோழன் "சிவனைவிட சிரேஷ்டமான மூர்த்தி யில்லை" என்று எழுதியுள்ள பத்திரத்தைக் கையில் கொடுத்து, அதிலே ஆழ்வானையும் மஹா பூர்ணரையும் கையெழுத் திடும்படி சொன்னான்; அதற்கு ஆழ்வான் வெகு தைர்யத் துடனே, "அரசே! வேத சாஸ்திர புராண இதிகாசங்க ளெல்லாம் 'ஸ்ரீமந் நாராயணனே சிரேஷ்டமான மூர்த்தி' என்று கோஷிக்கின்றன; அவ்விடமிருந்தே பிரபஞ்சம் உற்பத்தி யடைகின்றது, அவரிலே பிரபஞ்சம் ஸ்திதியாய் உள்ளது; அவரிடத்திலே லயமாய் விடுகின்றது; அவரே நமது லக்ஷியம்; பிரஹ்மாவும் ருத்திரனும் அவருக்குப்

பிள்ளையும் பேரப்பிள்ளையு மாவார்கள். இதோ ஒரு கேள்வி. ஒருவன் காலை நீட்டிக்கொண்டான்; இன்னொருவன் அவனுடைய கால்களைக் கழுவினன்; வேறொருவன் அந்தத் தீர்த்தத்தை யெடுத்துத் தனது தலையிலே புரோக்ஷித்துக் கொண்டான். இவர்களுள் எவன் பெரியவன்?" என்று கேட்டார். அரசன் மறுமொழி யொன்றும் சொல்ல முடியாது, வாய் மூடி மௌனமா யிருந்தான். ஆழ்வான் இன்னும் சொன்னதாவது:—"இன்னும் ஒரு விஷயம்: சிவனுக்கு இப் பெயர் வந்ததற்குக் காரணம் தெரியுமா? சிவனைப் பிடித்த பிரஹ்மஹத்தியானது திரிவிக்கிரமனுடைய பாத தீர்த்தத்தைப் புரோக்ஷித்துக்கொண்டதனாலே நீங்கிற்று. இதனால் இப் பெயர் உண்டாயிற்று. ஆகையால், சிவனிலும் சிறந்தவர் இல்லவே இல்லையா?" இம்மாதிரி 25 நியாயங்கள் கூறிச் சைவமதத்தை ஆழ்வான் பொடிப் பொடியாகும்படி செய்தார்.

அரசனுக்கும் மற்ற பண்டிதர்களுக்கும் இன்னது மறுமொழி சொல்வதென்று தெரியவில்லை; ஆனால், அரசனுக்கு நிமிஷத்துக்கு நிமிஷம் கோபம் அதிகரித்துக்கொண்டே வந்தது; அவன் ஆழ்வானை நோக்கி, 'நீ நிரம்பப் படித்தவன்; புத்தி சாதுர்யவான்; ஆகையால், இரண்டும் இரண்டும் சேர்ந்தால் ஐந்து ஆகுமென்றுகூட நீ ருசுப் படுத்திவிடுவாய். எனக்கு அதெல்லாம் அவசியமில்லை. சிவனிலும் சிரேஷ்டமான மூர்த்தி யில்லவே யில்லை என்று இதோ எழுதப்பட்டிருக்கின்றது. நீ இதை ஒப்புக்கொள்ளு

கின்றாயா? இல்லையா? ஒரே வார்த்தை சொல்!'' என்று கேட்டான். அவர் சிரித்துக்கொண்டே அந்தப் பத்திரத்தைக் கையில் வாங்கி அதில் ஏதோ எழுதித் திரும்பவும் அரசனிடம் கொடுத்தார். அரசன் அதைப் பார்த்தான்; அவனுடைய கண்களெல்லாம் சிவந்தன; அவனுடைய மீசைகள் படபடவென்று துடித்தன; பொறுக்க முடியாத மிகுந்த கோபமுள்ளவனாய், "என்னிடத்திலா இப்படி எழுதிக்கொடுத்தாய்? பண்டிதர்களே! பாருங்கள்! இந்தப் போக்கிரிப் பையல் என்ன எழுதி யிருக்கின்றானென்று தெரியுமா?—'துரோணம் சிவத்தைவிடப் பெரிது' என்று எழுதியிருக்கிறான் (சிவம் என்பது இங்கு ஒரு அளவைக் குறிப்பிடுகிறது; துரோணம் என்பது அதனினும் பெரிய ஒரு அளவு). இவ்விருவரையும் அப்புறம் நெட்டித் தள்ளிக் கொண்டுபோய், இவர்களுடைய கண்களைப் பிடுங்கிவிடுங்கள்'' என்று ஆக்ஞை செய்தான். ஆழ்வான் அவ்வரசனை நோக்கி, "ஏ! கொடுங்கோல் அரசா! உண்மையே! உன்னைப் போன்ற மகா பாபியைப்பார்த்த கண்கள் தகுந்த தண்டனையடையவேண்டும்; எனது கண்களை நானே இதோ பிடுங்கி எறிந்துவிடுகின்றேன்'' என்று கூறித் தாமே தமது விழிகளைப் பிடுங்கி யெறிந்துவிட்டார். மஹா பூர்ணருடைய கண்களும் பிடுங்கப்பட்டன.

ஆழ்வான் பின்னர் அச்சபையை நோக்கி, 'விசிஷ்டாத்வைத வைஷ்ணவமதப் பற்றுள்ளவர்கள் இங்கு எவருமேயில்லையா?'' என்று கேட்க, சோழனுடைய வாளாயுதத்தை

எடுத்துச் செல்லும் வேலைசெய்து வந்த ஒரு ஸ்திரீ, தனது கையிலிருந்த வாளைத் தூர எறிந்துவிட்டு, 'ஸ்வாமி! இதோ நான் இருக்கின்றேன்; தங்களுடைய இஷ்டப்படி நடக்கச் சித்தமாயிருக்கின்றேன்' என்றாள். ஆழ்வான் 'இங்கிருந்து என்னை வெளியே இட்டுக்கொண்டு போ!' என்று கூற, அவள் அவரை அந்தச் சபா மண்டபத்திலிருந்து வெளியே கொண்டுவந்து நகருக்கு வெளியேயுள்ள ஒரு தோட்டத்துக்கு இட்டுச் சென்று, அவருக்குச் சிசுருஷை செய்து வந்தாள். ஸ்ரீ மகாபூர்ணரை அவரை விட்டு என்றும் நீங்காத அவருடைய அருமைப் புத்திரி ஸ்ரீ அத்துழாய் என்பாள் அதே தோட்டத்துக்கு அவரைக் கைப்பிடித்து இட்டுச் சென்றாள்.

மஹா விருத்தாப்பியரான ஸ்ரீமஹாபூர்ணருக்குத்தான் என்ன கஷ்டம் வந்து சேர்ந்துவிட்டது! அந்தத் தோட்டத்திலே மஹாபூர்ணர் களைப்பு மிகுந்து மேல் நடக்க முடியாதவராய் ஆழ்வானுடைய மடியிலே தலை வைத்துத் தமது புத்திரி அத்துழாயினுடைய மடியிலே கால் நீட்டித் தரையிலே படுத்துக்கொண்டார். இனிமேல் இவர் நெடுநேரம் உயிர் தரித்திருப்பாரென்று நம்புவதற்கில்லாமற் போய்விட்டது, அத்துழாய்க்கு 'எப்படியாவது மஹாபூர்ணர் உயிர் துறப்பதற்கு முன்னாலே ஸ்ரீரங்கம் போய்ச் சேர்ந்துவிட்டால் நல்லது' என்று ஒரு எண்ணம் உண்டாயிற்று. அவள் அதை மஹாபூர்ணருக்குத் தெரியப்படுத்தினாள். மஹாபூர்ணர் தமது புத்திரியை நோக்கி, "குழந்தாய்! அப்படியன்று! நான் அப்படிச் செய்தால் எனது

சிஷ்யர்களின் மனத்திலே ஒரு தப்பெண்ணம் விழுந்து விடும். ஸ்ரீரங்கத்திலேயே 'மரணமடைவது அவசியம்' என்று எல்லோரும் கருத ஆரம்பித்துவிடுவார்கள்; அது தப்பு. இறக்கும்பொழுது எம்பெருமானுடைய தியானம் இருந்தால், எங்கு இறந்தால் என்ன?'' என்று சொல்லி விட்டு, எம்பெருமானுடைய திருவடிகளிடத்தே தமது மனத்தைச்செலுத்தித் திரிகரண சுத்தியுடனே தியானித்து விட்டு, பின்னர் தமது குரு ஸ்ரீ யாமுநாசார்யரை மனத்தி லே ஸ்மரித்துக்கொண்டு, இந்த ஸ்தூல சரீரத்தினின்றும் உயிர் நீங்கிப் பரமபதம் அடைந்தார்.

அங்கே சில ஸ்ரீ வைஷ்ணவர்கள் அரசனுக்குத் தெரி யாமல் அவருடைய சரீரத்தை யடக்கம்செய்துவிட்டு, ஆழ் வானை மெல்ல மெல்ல ஸ்ரீரங்கத்துக்குக் கொண்டு சென் றார்கள். ஆழ்வான் மகாபூர்ணரைப்போல் தாமும் பரமபதம் அடைய முடியவில்லையே யென்று துக்கித்துக்கொண் டிருந் தார். "மஹாபூர்ணர் சமாதி செய்யப்பட்டது தஞ்சாவூருக்கு அருகாமையிலுள்ள கண்டியூரிலிருந்து ஏழு மைல் தூரத்தி லுள்ள பசுபதி கோவில் என்ற இடத்திலே நடந்தது''என்று சிலர் சொல்லுகின்றார்கள். இதே இடந்தான் ஸ்ரீ நாதயோகி யும் அவருடைய சிஷ்யர் ஸ்ரீ குருகாதிபரும் சமாதி யடைந்த ஸ்தலமாகும்'' என்று கூறினன்.

மஹாபூர்ணருடைய மரணத்தைக் குறித்துப் பின் வருமாறும் சிலர் சொல்லுகின்றார்கள்:—"மஹா பூர்ணர் உயிர் துறந்து கிடக்க, அப்பொழுது, அநாதைப் பிரேதம்

களை யெடுத்து அடக்கம் செய்து அதனால் ஜீவித்து வந்த சிலர் ஸ்ரீமஹாபூர்ணருடைய சரீரத்தையும் அம்மாதிரியே செய்வதாகச் சொல்ல, ஆழ்வானுக்குக் கோபமுண்டாகி, "என்ன! ஸ்ரீ வைஷ்ணவரை நீங்கள் தொட்டு அடக்கம் செய்வதா? எம்பெருமானும் அவருடைய அடியார்களும் இச் சேவை செய்வதற்காகக் காத்துக்கொண் டிருக்கின்றார்க ளென்பது உங்களுக்குத்தெரியாதா? போங்கள்! போங்கள்!" என்று கூறினார்.

பின்னர், சமீபத்துக் கிராம வாசிகளாகிய ஸ்ரீ வைஷ்ணவர்கள் வந்து சேர்ந்து, பிராஹ்மணர்கள் செய்ய வேண்டிய பிரஹ்மமேதக் கிரியையின் பிரகாரம் செய்ய வேண்டுவன வெல்லாம் செய்து, அச் சரீரத்தை ஆழ்வான் அடக்கம் செய்வதற்கு மிகுந்த உதவி செய்தனர். பிறகு அந்த ஸ்ரீ வைஷ்ணவர்களே ஆழ்வானைத் தங்களுடைய கிராமத்துக்குக் கொண்டு சென்று ஆதரித்தார்கள். மஹா பூர்ணர் இறக்கும்பொழுது அவருக்கு வயது 105. ஆழ்வா னுடைய நண்பர்கள் ஆழ்வானை ஸ்ரீரங்கம் கொண்டு சென் றார்கள். அப்பொழுது அங்கு நகர் வாசலிலே யிருந்த காவற்காரர்கள் இவர்களைத் தடுத்து நிறுத்தி, "நீங்கள் யார்?" என்று கேட்டார்கள். அவர்கள் "நாங்களா? இவர் ஆழ்வான்; நாங்கள் இவருடைய நண்பர்கள்" என்று மறு மொழி யளிக்க, அக் காவற்காரர்கள் "நீங்க ளெல்லோரும் ஸ்ரீ ரங்கத்திலே யிருந்த ஸ்ரீ ராமாநுஜருடைய சிஷ்யர்க ளல்லரா?" என்று கேட்டார்கள். "ஆமாம், உங்களுக்கு

என்ன? அது தெரியாதா?'' என்று ஆழ்வானுடைய நண்பர்கள் கூற, காவற்காரர்கள் "எங்களுக்குத் தெரியும்; அதனுல்தான் நாங்கள் உங்களை உள்ளே விடமாட்டோம் என்கிருேம். ஸ்ரீ ராமாநுஜரையும் அவருடைய கொள்கைளையும் நாங்கள் ஆதரித்ததனுல் நாங்கள் பட்டபாடு போதாதா? ஸ்ரீராமாநுஜரினுலேதானே சோழன் இந்த பிரஹ்மாண்டப் பெருமை வாய்ந்த க்ஷேத்திரத்தைத் தகர்த்துவிடுவதாகப் பயமுறுத்தினுன். ஆ! ஆ! இந்த ஸ்ரீ ராமாநுஜர் காரணமாக எத்தனைப் பிரமாதங்கள் விளைந்துவிட்டன! என்ன கொடுமைகளெல்லாம் நடந்துவிட்டன. ஆ! ஆ! நினைக்கவே பயங்கரமா யிருக்கின்றது! விஷ்ணு பெரியவனுனுல் என்ன? சிவன் பெரியவனுனுல் என்ன? எவன் பெரியவனு யிருந்தால் எங்களுக்கென்ன? ஐயா! போதும், போதும்; நீங்கள் உள்ளே போகவேண்டாம்'' என்று கூறினுர்கள். இதற்குள்ளாக, அந்த காவற்காரர்களிலேயே ஒருவன் "அப்படியன்று, அப்படி யன்று, இவர் வெகு நல்ல மனிதர்; இவர் அதற்கெல்லாம் போகமாட்டார்; மஹா பரிசுத்தர்; ஜனங்கள் எல்லோருக்கும் அவரிடத்திலே அதிக பிரியம்; ஆகையால் இவரை யுள்ளே விட்டதனுல் நமக்கு யாதொரு தோஷமு மில்லை,'' என்றுன். "அப்படியானுல் சரி'' என்றுன் முதலில் பேசியவன்.

இதற்குள்ளாக ஆழ்வான் அவர்களை நோக்கி "நீங்கள் வெகு சீக்கிரத்திலே எனது கார்யத்தைப்பற்றித் தீர்மானித்துவிட்டீர்களே; என்னுடைய அபிப்பிராயம் இன்ன

தென்று நீங்கள் தெரிந்துகொள்ளவில்லையே. நான் ஸ்ரீ ராமா நுஜருடைய சிஷ்யன்தான்; நான் அவருடைய சிஷ்யனு யிருப்பதனுல்தான் என்னை யுள்ளே விடும்படி நான் வேண்டுகின்றேன். உங்களுக்கு ஸ்ரீ ராமாநுஜரிடத்திலே இவ்வளவு பிரியம் இருக்கிறதனுலே, அதே மாதிரி பிரியத் தை என்னிடத்தும் நீங்கள் செலுத்துவது நியாயமேயாகும்; எனது ஆசார்யர் ஸ்ரீ ராமாநுஜருடனே நான் இங்கு வந்தால் வருகிறேன்; இல்லையேல் நான் ஒருபொழுதும் இவ்வூரினுள் நுழையேன்" என்று கூறிவிட்டு, தமது நண் பர்களை நோக்கித் தம்மைத் திருமாலிருஞ்சோலைக்குக் கொண்டு செல்லும்படி சொன்னுர். அப்படியே அவர்கள் கொண்டு செல்ல, திருமாலிருஞ்சோலைவாசிகள் அவரை வெகு மரியாதையுடனே வரவேற்று, அவருக்கு வேண்டிய சௌகர்யங்க ளெல்லாம் செய்து கொடுத்தார்கள். இங்கு ஆழ்வான் ஸ்ரீ ராமாநுஜர் ஸ்ரீரங்கத்தைவிட்டு வெளியி லிருந்த காலமெல்லாம் வசித்தார்; இங்குத்தான் ஆழ்வான் தமது பெயர் பெற்ற கிரந்தங்களை யெல்லாம் இயற்றியது.

ஸ்ரீ வைஷ்ணவன் இந்தச் சமாசாரத்தை ஸ்ரீ ராமா நுஜரிடம் சொன்னவுடனே, ஸ்ரீ ராமாநுஜருக்குக் கோபம் ஒரு பக்கம், விசனம் ஒரு பக்கம் குதித்துக் கிளம்பின; கண்களிலிருந்து தாரை தாரையாய்க் கண்ணீர் சொரிந்தார்; ஆனமட்டும் தமது மனத்தைத் திடப்படுத்திக்கொண்டு, தம்முள் ஊற்றுப்போலப் பொங்கும் விசனத்தை யடக்கிப் பார்த்தார்; அவரால் அடக்க முடியவில்லை. கடைசியாக

அவர் "ஏ! எம்பெருமானே! இந்தப் பயங்கரமான கஷ்டங்களையெல்லாம் எனக்கு ஏன் விதித்தாய்? நான் இவற்றைக் காது கொடுத்துக் கேட்கும்படி என்ன பாபம் செய்தேன்?" என்று வாய்விட்டு அலறித் தேம்பித் தேம்பியழத் தொடங்கினர்; அப்படியே மூர்ச்சையாய் விழுந்தார்; கொஞ்சநேரம் கழித்து, சிஷ்யர்களால் தேற்றுவிக்கப்பட்டு, மிகுந்த கஷ்டத்துடனே தெளிந்தார். சிஷ்யர்கள் "ஸ்வாமி! ஆழ்வான் உயிருடனிருக்கின்றார் என்ற சமாசாரத்தினாலே நாம் தெளிந்து தேரிக்கொள்ளவேண்டும்" என்று கூறினார்கள்.

ஸ்ரீ ராமாநுஜர் ஸ்ரீ மகாபூர்ணருக்குச்செய்யவேண்டிய ஈமச் சடங்குகளையெல்லாம் வெகு விமர்சையாகச் செய்து முடித்தார்; பின்னர் ஆழ்வானுடைய சமாசாரத்தைப்பற்றி நன்றாக விசாரித்து வருமாறு தம்முடைய சிஷ்யர்களுள் ஒருவராகிய ஸ்ரீ மாருதி யென்பவரை ஸ்ரீரங்கத்துக்கு அனுப்பி வைத்தார். இச் சமயத்திலேதான் ஸ்ரீ கோஷ்டிபூர்ணரும் பரமபத மடைந்தார். கோஷ்டிபூர்ணருடைய அந்திய காலத்திலே அவருடைய சிஷ்யர்கள் அவரை நோக்கி, "ஸ்வாமி! இப்பொழுது தங்களுடைய சிந்தை எதன்மீது சென்றிருக்கின்றது என்பதை யறிந்துகொள்ள நாங்கள் பாத்திரர்களா?" என்று கேட்க, அவர் "நான் பரந்தாமனுடைய பாதாரவிந்தத்திலே எனது பாரத்தை யெல்லாம் போட்டுவிட்டேன்; ஆநந்தமா யிருக்கின்றேன்' என்று மறுமொழி கூறினர்.

இதற்குள்ளாக மாருதி வாயுவேகம் மனோ வேகமாக ஸ்ரீரங்கம் சென்று, அங்கு ஆழ்வானைக் கண்டு அவருடைய பாதார விந்தங்களிலே விழுந்து, ஆநந்தக் கண்ணீர் அருவி போன்று ஓட, துக்கம் ஒரு பக்கம் துடித்துத் துடித்துப் பொங்க, "ஸ்வாமி! தங்களுடைய ஆசார்யர் ஸ்ரீ ராமாநுஜர் என்னைத் தங்களிடம் அனுப்பிவைத்தார்" என்று கூற லும், ஆழ்வான், குரலைக் கவனித்து, வந்தவர் மாருதி யென்று தெரிந்துகொண்டு "சகோதரா! ஆசார்யர் சௌக் கியமா யிருக்கின்றாரா? அவருடைய சிஷ்யர்களாகிய எனது சகோதரர்களும் சௌக்கியமா யிருக்கின்றனரா? இப்பொ ழுது ஆபத்து ஒன்றுமில்லையே. அனைவரும் க்ஷேமம் தானே? அவருடைய அந்தரங்க நட்பாளனாகிய உன்னைக் கண்டதே அவரைத் தர்சித்ததுபோல் ஆநந்தம் பொங்கு கின்றது," என்றெல்லாம் மொழிய, மாருதி "சகோதா! ஆசார்யர் அடக்கவொண்ணாத விசனத்திலாழ்ந்து, அல்லும் பகலும் அழுதுகொண்டிருக்கின்றார்; இங்கு நடந்த விஷ யங்களை யெல்லாம் கேட்டு இராப்பகலாக ஏங்கிக்கொண் டிருக்கின்றார். சங்கதிகளை விவரமாக விசாரித்துக்கொண்டு வரும்படி என்னை யனுப்பியிருக்கின்றார்," என்றார்.

ஆழ்வான் "ஸ்ரீமகா பூர்ணர் அந்தக் கொடுங்கோல் சோழனுடைய கொடுமையினாலே வருந்துகின்றார். அவருக் குச் சமானமாக எவரைச் சொல்லலாம்? அந்தோ! அம் மகா னுக்கு இத்தகைய கஷ்டம் வந்ததே! என் விஷயம் வேறு. ஆசார்யர் சௌக்கியமா யிருக்கின்றார்' என்ற சிந்தனையிலே,

நான் ஆநந்தித்துக்கொண் டிருக்கின்றேன்; இவ் வூனக் கண்களைத்தான் தியாகம் செய்ய முடிந்ததே யொழிய வே ருென்றும் தியாகம் செய்வதற்கு என்னிடம் இல்லையே யென்று நான் விசனிக்கின்றேன்" என்ருர்.

"அப்பொழுது கொடுங்கோல் சோழன் தொண்டைப் பிளவை யொன்றினுலும், தீரா வயிற்று நோவினுலும் மிக வருந்தி, ஸ்ரீரங்கத்திலிருந்து ராஜதானி நகருக்குக் கொண்டு போகப்பட்ட அன்றிரவே மரித்துவிட்டான்" என்ற சந்தோஷ சமாசாரம் அவர்களுக்கு எட்டிற்று; 'இது உண்மைதானு?' என்று தெரிந்துகொள்ளும்பொரு ட்டு, மாருதியும் ஆழ்வானுமாகச் சோழராஜனுடைய ராஜ தானி நகருக்குச்சென்ருர்கள்;'சங்கதியுண்மைதான்' என்று தெரிந்துகொண்டவுடனே, மாருதி தமது குருவினிடம் செல்லப் புறப்பட்டார்; வழியிலே, ஆசார்யருடைய சிஷ் யர்களுள் ஒருவராகிய ஸ்ரீ அம்மங்கிபம்மாள் என்பவரைக் கண்டு, அவரையும் கூடக் கூட்டிக்கொண்டு ஸ்ரீ ராமாநுஜ ரிடம் வந்து சேர்ந்தார்.

இவர்கள் வரும்பொழுது ஸ்ரீ ராமாநுஜர் கல்யாண சரசிலே ஸ்நாநம் செய்து கரையேறி உடம்பு துடைத்துக் கொண்டிருந்தார். மாருதியும் அம்மங்கியம்மாளும் அவ ருடைய பாதங்களில் விழுந்து பணிந்து, "ஸ்வாமி! நமது ஜன்ம விரோதியாகிய சோழன் மரித்தான்; நம்மைப் படாத பாடெல்லாம் படுத்திய சோழன் மரித்தான்; ஆழ்வானுக் கும் மகா பூர்ணருக்கும் அளவற்ற துன்பங்களைச் செய்து

சோழன் மரித்தான்; ஈவிரக்க மில்லாத இரும்பு மனத்துச் சோழன் மரித்தான்; கொல் மனப்பான்மையனுகிய கொடுங் கோல் சோழன் மரித்தான்; மரித்தான்'' என்று கோஷித்துக் கூற, ஸ்ரீ ராமாநுஜரும் அவருடைய மற்ற சிஷ்யர்களும் ஆநந்தக் கடலில் ஆழ்ந்து ஆர்ப்பரித்தார்கள்; ஆநந்தக் கண்ணீர் சொரிந்தார்கள்; ஆடினார்கள், பாடினார்கள்; அவர்கள் அப்பொழுது அடைந்த ஆநந்தத்தை என்னுல் அளவிட்டுக் கூறல் முடியாது.

ஸ்ரீ ராமாநுஜர் அவ்விரு சிஷ்யர்களுக்கும் உடனே இரு பேருண்மைகளின் இரகஸ்யத்தை யெடுத்துப் போதித்து விளக்கிவைத்தார். பின்னர், ஸ்ரீ ராமாநுஜர் நரசிம்ஹஸ்வாமி க்ஷேத்திரம் சென்று அப் பெருமானின் அடிகளிலே சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து ஆநந்த ஸ்வரத்துடனே "ஸ்வாமி! எம்பெருமானே! என் பிராணேசா! முற்காலத்திலே உன்னிடம் பகைமை பாராட்டிய அசுரன் ஹிரண்ய கசிபுவை நீ உனது கைகளினுலேயே கொன்ருய்; இப்பொழுது மகா பூர்ணருக்கும் ஆழ்வானுக்கும் துன்புறுத்திய மகா பாபி சோழனையும் நீயே சம்ஹரித்தாய்'' என்று பிரார்த்தித்துவிட்டு, பின்னர் ஸ்ரீ நாராயணருடைய சந்நிதிக்குச் சென்று, கண்ணீரைத் தாரைதாரையாய் வடித்துக்கொண்டு "ஸ்வாமி! நான் ஸ்ரீரங்கம் திரும்பிச் செல்லுமாறு அநுமதி யளித்தருள வேண்டும்'' என்று கேட்க, எம்பெருமானிட மிருந்து மறுமொழி யொன்றும் வரவில்லை; அப்பொழுது ஸ்ரீ ராமாநுஜர் 'எம்

பெருமானுக்குப் பிரியமில்லைபோலிருக்கிறது’ என்று ஊகித்துக்கொண்டு, மறுபடியும் எம்பெருமானை நோக்கி “ஸ்வாமி! எனது ஆயுட்கால முழுதும் நான் தென்பிரதேசத்து மாளிகையிலேயே வசிக்கும்படி எம்பெருமானால் உத்தரவு செய்யப்பட்டேனே!” என்றார்.

பார்த்தார் எம்பெருமான்; அப்படி வாக்களித்தது உண்மையே. “ஆம்; நீ போகலாம்; உனக்கு எல்லா நன்மையும் உண்டாகக்கடவது” என்று அநுமதி யளித்தார்.

ஸ்ரீ ராமாநுஜர் க்ஷேத்திரத்திலிருந்து வெளியே வந்தாரோ, இல்லையோ, அங்கேயே ஸ்திர வாசம் செய்யும்படி ஸ்ரீ ராமாநுஜரால் ஆக்ஞாபிக்கப்பட்ட ஐம்பத்திரண்டு சிஷ்யர்களும் அவருடைய பாதங்களில் பணிந்து, “ஸ்வாமி! நாங்கள் தேவரீரை விட்டு எப்படிப் பிரிந்திருப்போம்?” என்று வருந்த, ஸ்ரீ ராமாநுஜர் சிறிது நேரம் யோசனைசெய்து, பின்னர் கூறியதாவது:—

என்னைப் போன்ற பிரதிமை யொன்று நான் உங்களிடம் கொடுத்துவிட்டுப் போகின்றேன்; அதனிடத்தே எனது சக்தி யிருக்கும்; உங்களுக்குக் கஷ்டங்கள் நேரிடும் பொழுதெல்லாம் நான் உங்களுக்கு ஆதரவாக நிற்பேன்; ஆனால், இது பெரிதன்று; உங்களுக்குச் சில மொழிகளைப் புத்திமதியாகக் கூறுகின்றேன்; நீங்கள் அவற்றை அன்புடனே பின்பற்றி யொழுகல்வேண்டும். எனது அன்புக்கு உறைவிடமாயுள்ள இந்த ஸ்ரீ ராமப்பிரியரை ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொள்ளுங்கள்! அவருக்குத் திரிகரண சுத்தி

யுடனே தொண்டு புரியுங்கள்! இல்லையேல் அவர் இங்கிருந்து எவருக்கும் தெரியாமற் போய்விடுவார். கோவிலிலே பூஜை முறைகளெல்லாம் சரியாக நடத்தப்படட்டும்! அதிதிகளுக்கு அன்ன மளியுங்கள்! அந்யோந்யம் அன்பு செலுத்துங்கள்! நீங்கள் செய்கிற கார்யம் யாதாயினும் அது வைதீகமாயினும் சரியே, லௌகீகமாயினும் சரியே, ஈஸ்வரார்ப்பணமாகவே செய்யப்படட்டும்! இப்பொழுது என்னுடைய பாதங்களைத் தொட்டுப் பிரதிக்ஞை பண்ணிக் கொள்ளுங்கள்!''

ஸ்ரீ ராமாநுஜருடைய இம் மொழிகளை ஐம்பத்திரண்டு சிஷ்யர்களும் வெகு அன்புடனே கேட்டார்கள்; ஆனால், அவர்களுக்கு ஒன்று மாத்திரம் பிடிக்கவில்லை. ஸ்ரீ ராமாநுஜர் தமக்குப் பதிலாகத் தமது விக்கிரகத்தை வைத்து விட்டுப் போவதாகச் சொன்னாரே; அதிலே அவர்களுக்கு நம்பிக்கை விழவில்லை. அவர்கள் ஸ்ரீ ராமாநுஜரை நோக்கி, ''ஸ்வாமி! தங்களுக்குப் பதிலாகத் தங்களுடைய விக்கிரகத்தை வைத்துவிட்டுப் போவதாகச் சொன்னீர்களே; தங்களைப்போல அது எங்களுக்கு உபதேசம் செய்யுமா? எங்கள்மீது அருள் புரியுமா? எங்களுடன் கூடிப் பழகிப் பேசி உய்விக்கும் ஆசார்யர் ஒருவர் எங்களுக்கு வேண்டுமென்றால், இந்தப் பொம்மையைக் கொடுக்கிறீர்களே!'', என்றார்கள்.

இவர்களுக்கு நம்பிக்கையில்லாததை ஸ்ரீ ராமாநுஜர் கண்டு, அதிக கோபமுடையவராகி, ''ஏ! மூடர்களே! உங்க

ளுக்கு இவ்வளவு நம்பிக்கையில்லையா? நீங்கள் எப்பொழுது கூப்பிட்டு, நான் பேசாம லிருந்துவிட்டேன்? என்னுடைய வார்த்தையினிடத்திலே உங்களுக்கு அவ்வளவு நம்பிக்கையில்லையா? எனது வார்த்தைகளைப் பரிசோதனை செய்து பார்த்துவிட்டுப் பின்னர் நம்பிக்கையை யிழந்துவிடக்கூடாதா?'' என்றார்.

அவர்கள் தங்கள் மன உணர்ச்சியை குரு அறிந்துவிட்டாரென்று தெரிந்து வெட்க மடைந்தார்களாயினும், ஸ்ரீ ராமாநுஜ விக்கிரகத்தின் முன்னே நின்று "குருமூர்த்தி! ஸ்ரீ ராமாநுஜா'' என்று கூப்பிட்டார்கள்.

அந்த விக்கிரகத்திலிருந்து உடனே "ஆ! இதோ இருக்கின்றேன்; இப்பொழுதும் எப்பொழுதும் நான் இங்கு இருக்கின்றேன்'' என்று ஆநந்தமாக மறுமொழி வந்தது. மூடர்களுக்குப் போதும், போது மென்றாய்விட்டது.

ஸ்ரீ ராமாநுஜர் தமது சிஷ்யர்களுக்குப் புகலவேண்டியன புகன்று, அவர்களிடமிருந்து செலவு பெற்றுக்கொண்ட பொழுதிலும், அவரால் ஸ்ரீ ராமப்பிரிய விக்கிரகத்தினின்றும் பிரிய முடியவில்லை; ஸ்ரீ ராமப்பிரியமூர்த்தியைத் தமது சொந்த புத்திரனைப்போலப் பாவித்துவந்தாரல்லவா? ஆயினும் என் செய்வது? கடைசியாகப் பிரிந்து செல்லத்தான் வேண்டிவந்தது. மனுஷ்ய வர்க்கத்தினுடைய நன்மையை நாடி அவதரித்திருக்கும் மகா புருஷர்கள் இம்மாதிரி எத்தனையோ சஞ்சலங்களை யனுபவிக்க

வேண்டியதுதான். ஸ்ரீ ராமாநுஜர் விசனம் மிகுந்தவராய், ஹிருதயம் உடைந்து ஸ்ரீரங்கத்துக்குப் புறப்பட்டாராயி னும், போகின்ற இடம் ஸ்ரீரங்கம் என்ற எண்ணமானது அவருக்கு ஆநந்தத்தை யளித்தது.

---

## ஆழ்வானுடைய பரமபத ப்ராப்தி

ஸ்ரீ ராமாநுஜர் ஸ்ரீரங்கத்துக்கு வந்துவிட்டாரென்று கேட்டவுடனே, ஸ்ரீரங்கநகர் முழுதும் ஓரே கூட்டமாகக் கூடி, ஸ்ரீராமாநுஜரை எதிர்கொள்ளப் புறப்பட்டுவிட்டது. ஸ்ரீரங்கத்திலிருந்து ஸ்ரீராமாநுஜர் போய் இருபது வருஷ ங்களாய்விட்டன; ஆ! ஆ! இவ்விருபது வருஷங்கட்கு முன் னே ஸ்ரீ ராமாநுஜர் அவ்வூருக் கரசர்போன் றிருந்தார்; ஆசார்ய புருஷரா யிருந்தார்; ஆயிரக் கணக்கான ஜனங் கட்கு அநேக உண்மைகளைப் போதித்து அவர்களை நல் வழிக்குக் கொண்டுவந்தார்; அன்பே யவதாரமாய் வந்தது போன்று இருந்தார். ஆகையால், நீண்ட வருஷங்கள் இரு பது கழித்து அவர் திரும்பி வந்தபொழுது, அந் நகர் வாசிகள் அடைந்த சந்தோஷத்துக்கு ஓர் அளவே யில்லை; அதுபோலவே, ஸ்ரீ ராமாநுஜரும் அடக்க வொண்ணாத ஆநந்த மடைந்தார்.

ஸ்ரீ ராமாநுஜர் அந் நகரினுள்ளே நுழைந்து, அந்த ஸ்தலத்திலே யுள்ள ஒவ்வொரு க்ஷேத்திரத்தையும் தா

சித்துப் பிரதக்ஷிணம் வந்து, எம்பெருமானுடைய சந்நிதானத்திலே சென்று இரு கைகளையும் கூப்பிக்கொண்டு, கண்களிலே நீர் ததும்பிக் களிக் கூத்தாடி நிற்க, எம்பெருமான் மிகுந்த கருணையுடனே ஸ்ரீ ராமாநுஜரை நோக்கி, "ஸ்ரீ ராமாநுஜா! நீ வெகு நாட்கள் என்னைப் பிரிந்திருந்து விட்டாய்; களைப்பு மிகுந்து சோர்வுற்றிருக்கிறதுபோலத் தோன்றுகின்றதே'' என்றார்.

ஸ்ரீ ராமாநுஜர் "ஸ்வாமி! எனக்குக் குறைவொன்றுமில்லை; இரு நதிக்கும் இடையிலே எழுந்தருளி யிருக்கும் எம்பெருமானுடைய கிருபா கடாட்சம் என்மீது பரிபூர்ணமாக இருக்கும்பொழுது, எனக்கு என்ன குறை ஏற்படும்? இவ் வுலகிலும் அவ் வுலகிலும் எம்பெருமான் எனக்கு ஏகச் சக்ராதி பத்தியம் அளித்திருக்க, எனக்கென்ன குறை? நான் என்றும் ஆநந்தமா யிருக்கின்றேன்; உனது கிருபையிலே களித்துக் கிலேசமற் றிருக்கின்றேன்'' என்றார்.

ஸ்ரீ ரங்கநாதப் பெருமான் ஸ்ரீ ராமாநுஜருடைய இம் மொழிகளிலே இன்பம் மிகுந்தவராகி, அவருக்கு மிக மிகச் சிரேஷ்டமான மர்யாதைக ளெல்லாம் செய்யும்படி ஆக்ஞாபித்தது மன்றியில், ஸ்ரீ ராமாநுஜரையும் பலவாறு வாழ்த்தி, மடத்துக்குச் செல்லுமாறு அநுமதி அளித்தார்.

ஸ்ரீ ராமாநுஜர், எம்பெருமானிடமிருந்து விடை பெற்றுக்கொண்டு, மடத்துக்குப் புறப்பட்டவர் மடத்துக்குச் செல்லாமல், தமது ஆருயிர்ச் சிஷ்யன் ஆழ்வானுடைய

வீடு நோக்கி வெகு வேகமாகச் சென்றார். ஸ்ரீ ராமாநுஜர் அங்குச் செல்வதற்குள்ளாகவே, இவர் வருகிற சங்கதி ஆழ்வானுக்குத் தெரிந்துவிட்டது; அவர் தமது வீட்டு வாசலிலேயே வந்து காத்திருந்து, தமது குருவை வரவேற்று குருவினுடைய பாதாரவிந்தங்களிலே விழுந்து விழுந்து புரண்டு, ஆநந்தக் கண்ணீர் சொரிந்து, "என் அப்பா! என்னை ஈடேற்ற வந்த எம்பெருமானே! ஐயோ, நின்னை விட்டுப் பிரிந்து எத்தனை நாட்களாய்விட்டன! நான் என்ன செய்வேன்! திசை தெரியாக் கப்பல் போல நான் இத்தனை நாட்களும் திண்டாடிக் கொண்டிருந்தேனே," என்று பல பல புகன்று முறையிட, ஸ்ரீராமாநுஜர் மனம் தாளாதவராகி, தமது விசனத்தையடக்க முடியாமல் "ஆ! புத்திரா! நீ கண்கள் இழந்ததற்குக் காரணம் நான் அல்லவோ? நான் என்ன பாபம் செய்தேனோ உன்னைவிட்டுப் பிரிந்து நெடுநாள் வசிக்கும்படி நேரிட்டது; இன்னும் என்ன பாபம் செய்தேனோ? என்னுடைய கண்ணுக்குக் கண்ணான நீ கண்களை யிழக்கும்படி நேரிட்டது. ஐயோ! நான் என் செய்வேன்?" என்று வாய்விட்டு வருந்தினார்.

ஆழ்வான் "ஸ்வாமி! எனக்காகத் தாங்கள் வருந்துவது நியாயமன்று. நான் செய்த பாப கர்மத்தை நான் அநுபவித்துத் தானே தீரவேண்டும்; தாங்கள் என்ன செய்வீர்கள்? 'நான் மகா பரிசுத்தன், நான் சிரேஷ்டன்' என்று நெடுநாட்களாக எனக்கு அளவிலாக் கர்வம் இருந்தது; இப்பொழுது எனது கர்வம் அழிந்தது," என்றார்.

ஸ்ரீ ராமாநுஜர் "ஆழ்வானே! நீ உனது குறைகள் என்று நீ கருதுகின்றவற்றைப்பற்றிப் பெரிதாகப் பேசி எனது மனம் மிக நோகப்பண்ணுகின்றாய். ஆழ்வானைப்பற்றிப் பேசிக்கொண்டிருக்கும் சமயத்தில் குற்றங்களின் ஞாபகமும் வருமோ? எனது பாப கர்மம் ஏதோ கிஞ்சித்து இருந்திருக்கின்றது; அதற்கு நான் அநுபவிக்கவேண்டியதற்குப் பதிலாக, நீ அநுபவிக்கின்றாய்; நான் என்ன செய்வேன்?" என்று வாய்விட்டு அழுது வருந்தினார்.

ஆழ்வானும் மற்ற சிஷ்யர்களும் ஸ்ரீ ராமாநுஜரைத் தேற்றுவித்து, ஆறுதல் கூறினார்கள். பின்னர் ஸ்ரீராமாநுஜர் மடத்துக்குச் சென்று, தமது கார்யங்களையெல்லாம் நிர்வகிக்கத் தொடங்கினார்.

"ஸ்ரீ ராமாநுஜர் ஸ்ரீ ரங்கநாதப் பெருமானுடைய க்ஷேத்திரத்திலிருந்து நேரே தமது ஆசார்யர் ஸ்ரீமகாபூர்ணருடைய வீட்டுக்குச் சென்றார்" என்றும், "அங்குப் புண்டரீகாக்ஷர், அத்துழாய் முதலியவர்கள் ஸ்ரீ ராமாநுஜரை வரவேற்றார்கள்" என்றும், "ஸ்ரீராமாநுஜர் ஸ்ரீ மகாபூர்ணருடைய மரணத்தைக் குறித்துத் துக்கித்து, மற்றவர்களுக்குத் தேறுதல் கூறிவிட்டுத் தமது மடத்துக்குச் சென்றார்" என்றும் ஸ்ரீ ராமாநுஜருடைய சரித்திரம் எழுதிய இன்னொருவர் கூறுகின்றார்.

ஆழ்வான் ஸ்ரீரங்கம் வந்தவுடனே, ஸ்ரீ ராமாநுஜர் அவரை ஸ்ரீரங்கநாதப் பெருமான் சந்நிதானத்துக்கு இட்

டுக்கொண்டுபோய் நிறுத்த, ஸ்ரீ ரங்கநாதப் பெருமான் ஆழ்வானிடத்திலே அதிக கருணை யுடையவராய், "புத்திரா! நீ தர்மத்தைப் பாதுகாக்கும்பொருட்டு உனது கண்களை யடைந்துவிடவேண்டியது நியாயமே" என்றார்.

ஆழ்வான் "எம்பெருமான்! எளியேன் வார்த்தையைக் கொஞ்சம் ஏற்றருளவேண்டும்; மகா பாபி சோழனைப் பார்த்த அவ் வூனக் கண்கள் எனக்கு வேண்டியதில்லை. எனது குரு தயா பூர்வமாக எனக்கு அளித்த ஞானக் கண்கள் எனக் கிருக்கின்றன வென்று நான் ஆநந்திக்கின் றேன்," என்று மறுமொழி கூறினார். ஆழ்வானுடைய அளவற்ற பக்தியைக் கண்டு ஸ்ரீராமாநுஜர் ஆச்சர்யப்பட்டு, "இவன் எனக்குச் சிஷ்யனல்லன்; எனக்கு மேம்பட்டவ னே" என்று கருதிக்கொண்டார். இன்னும் ஸ்ரீ ராமாநுஜர் "புத்திரா! உனக்கு இம்மாதிரித் துன்பமும் வரவேண்டு மா?" என்று அழுதார். ஆழ்வான் "ஸ்வாமி! நான் மகா பாபம் புரிந்திருக்கின்றேன். நான் செய்த வேறு எப்பாபம் எனக்கு ஞாபக மில்லாவிடினும், ஒன்று மாத்திரம் இப் பொழுது நன்றாக ஞாபகத்தி லிருக்கின்றது. நான் தங்க ளுடைய சிஷ்யன் என்ற பாக்கியம் பெறுதற்கு முன், நான் உண்மையை யோராது உலகப் பித்தலாட்டங்களிலே உழன்றுகொண்டிருந்த காலத்தில், ஸ்ரீ வைஷ்ணவர்கள் புண்டரம் தரித்துக்கொள்வதைக் "கரும்புள்ளி செம்புள்ளி குத்திக்கொள்கிறார்கள்" என்று கூறி நான் பலகாலும் பரிக சித்திருக்கின்றேன். இம் மகா பாபத்துக்குத்தான் இந்தத்

தண்டனை கிடைத்துளது என்று நான் நினைக்கின்றேன்,'' என்றார்.

இவ் விருவருடையவும் இச் சம்பாஷணையைக் கேட்டுக்கொண் டிருந்த ஸ்ரீரங்கநாதப் பெருமான் ஆழ்வானைக் குறித்து ''இந்த மகாத்மாவினுடைய கிருபையிலே சரண் புகுந்துகொள்ளுகிற எல்லோருக்கும் பரமாநந்தம் வாய்த்திடுக!'' என்று ஆசி கூறினார். ஆழ்வான் உடனே ''எம்பெருமானே! நாலூரானுக்கும் பரமாநந்தம் அநுக்கிரகிக்க வேண்டும்'' என்று பிரார்த்தித்துக் கேட்டுக்கொண்டார். ஸ்ரீரங்கநாதப் பெருமானும் அவ்வாறே யநுக்கிரகிக்க, ஸ்ரீ ராமாநுஜர் ஆழ்வானை யின்னவாறு கருதுவதென்று தோன்றாமல் சித்தப்பிரமை கொண்டவர்போல விழிக்கலானார். ஆழ்வானுக்குத் தம்மிடமுள்ள பக்தியைக் குறித்து வியப்பதா? அல்லது, பரமசத்துருவினிடத்தும் அவர் காட்டுகின்ற அன்பை மெச்சுவதா? ''இம் மகாபுருஷருடனே ஏதோ வித சகவாசம் ஏற்பட்டுள்ளது; நிச்சயமாக நமக்குக் கைவல்லிய பதவி கிடைக்கும்; சந்தேகமில்லை'' என்று ஸ்ரீ ராமாநுஜர் சந்தோஷ சித்தராய்த் தமது மேல் உத்தரீயத்தை உயர உயர வீசி ஆநந்தத்தினால் ஆர்ப்பரித்தார்.

ஸ்ரீ ராமாநுஜர் மடத்துக்குத் திரும்பி வந்து தமது சிஷ்யகோடிகள் ஒழுக்கம் தவறாது உபாசனை முறைகள் முதலியவற்றை நடத்தி வரும்படி சகல கார்யங்களையும் சீர் திருத்தி மேற்பார்த்து வந்தார். இப்படி யிருக்கும் நாளையிலே, சிதம்பரத்திலே யிருந்த ஸ்ரீ கோவிந்தராஜப்

பெருமானுடைய க்ஷேத்திரத்தைக் கிருமிகண்டசோழன் இடித்துத் தகர்த்து, அழித்து, கடலினுள்ளே யெறிந்து விட்டபொழுது, அர்ச்சகர்கள் உற்சவ விக்கிரகத்தை யெடுத்துக்கொண்டு திருப்பதிக்கு ஓடினார்களென்றும், அவ்வூரிலே யிருந்த தில்லை யென்று பெயரிய ஒரு வைஷ்ணவ ஸ்திரீ சோழ ராஜனுக்குப் பிரமையை யுண்டாக்கிவிட்டு மூல விக்கிரகத்தையும் திருப்பதிக்குப் பத்திரமாய் எடுத்துச் சென்றாளென்றும், அவ்விரண்டு விக்கிரகங்களும் இப்பொழுது திருப்பதியி லிருக்கின்றன வென்றும் ஸ்ரீ ராமாநுஜருக்குச் சமாசாரம் தெரிய வந்தது. ஸ்ரீ ராமாநுஜர் உடனே அங்குச் சென்று இரண்டு விக்கிரகங்களையும் திருப்பதி மலையின் அடிவாரத்திலே பிரதிஷ்டை செய்வித்து, அவற்றுக்கு முறையே பூஜைகள் நடக்குமாறு ஏற்பாடு செய்தார். மூல விக்கிரகத்தைக் காப்பாற்றி யெடுத்துக் கொண்டு வந்த தில்லை யென்னும் ஸ்திரீயின் ஞாபகார்த்தமாக, ஸ்ரீராமாநுஜர் அப்பெருமானுக்குத் "தில்லைக் கோவிந்தராஜப் பெருமான்" என்று பெயரிட்டார்.

பின்னர் ஸ்ரீ ராமாநுஜர் திருப்பதியினின்றும் புறப்பட்டு, வழியிலே அநேகம் ஸ்தலங்களைத் தர்சனம் செய்து கொண்டு, கடைசியாக ஸ்ரீரங்கத்துக்குத் திரும்பி வந்து சேர்ந்து, அநேக சீர்திருத்தங்களும் நற்கார்யங்களும் செய்து தேவாலய நடவடிக்கைகளெல்லாம் சரிவர நடக்கும்படி ஏற்பாடு செய்தார்.

ஒரு வருஷத்தில் உற்சவ சமயத்தில் பெருமழை பெய்து, எங்கும் தண்ணீர் ஏராளமா யோடி வெள்ளம்

பெருகி, போக்கு வரத்துக்குக் கஷ்டம் நேரிட்டுவிடவே, திருநகரியிலிருந்து நம்மாழ்வாருடைய விக்கிரகத்தை ஸ்ரீரங்கத்துக்கு எழுந்தருளச் செய்வது மிகவும் கஷ்டமாய்விட்டது; உடனே ஸ்ரீ ராமாநுஜர் அந்த க்ஷேத்திரத்திலேயே நம்மாழ்வாருடைய விக்கிரக மொன்றைப் பிரதிஷ்டை செய்விப்பித்து, ஸ்ரீ நாதமுனிகள் கூறியுள்ளபடி திருவிழாவை நடத்தி வைத்தார்.

ஒரு சமயத்தில் ஆழ்வானுடைய சிஷ்யர்களுள் ஒருவரான திருவரங்கத்தமுதனர் தமது குரு ஸ்தோத்திரமாக இரண்டொரு பாக்கள் பாடி, ஸ்ரீ ராமாநுஜரிடம் கொண்டுவந்து காண்பிக்க, ஸ்ரீ ராமாநுஜருக்கு அவை திருப்தியை அளிக்கவில்லை. ஆகையால் ஸ்ரீ ராமாநுஜர் புன்நகையுடனே திருவரங்கத் தமுதனரை நோக்கி, "பிள்ளாய்! உனக்குக் கவி யியற்றவேண்டுமென்று ஆசையிருந்தால், உனது குருவைப்பற்றியும், நமது ஆசார்யர்களாகிய ஆழ்வாராதியர்களைப்பற்றியும், அவர்களாலே புகழப்பட்ட அநந்தம் க்ஷேத்திரங்களைப் பற்றியும் ஏதேனும் ஒரு கிரந்தம் இயற்றுவாய்!" என்று கூறினர். திருவரங்கத்தமுதனர் அப்படியே கொஞ்சகாலம் பாடுபட்டு ஸ்ரீராமாநுஜர் நூற்றந்தாதி யென்று இப்பொழுது பிரசித்தியுடன் விளங்குகின்ற நூலை யியற்றி ஸ்ரீராமாநுஜருடைய பாதங்களிலே சமர்ப்பித்தார். ஸ்ரீராமாநுஜருடைய சிஷ்யர்களும் மற்றவர்களும் அனைவரும் அங்குக் கூடினர்கள்; ஸ்ரீ ராமாநுஜ நூற்றந்தாதி எல்லோருக்கும் முன்னிலையில் அரங்கேற்றப்பட்டது; எல்லோரும்

"பேஷ், பேஷ்" என்று கரகோஷம் செய்தார்கள்; ஸ்ரீராமாநுஜரும் அளவிலாச் சந்தோஷமடைந்து அதைத் தினந்தோறும் ஸ்ரீ வைஷ்ணவர்கள் எல்லோரும் பாராயணம் பண்ணவேண்டுமென்று ஆக்ஞாபித்தார். இந்த ஸ்ரீ ராமாநுஜ நூற்றந்தாதிக்கு ப்ரபந்நகாயத்ரி என்று பெயர். பிராமணர்கள் காயத்ரியைத் தினந்தோறும் 108 தரம் ஜபிக்கிறார்கள்; அதில் நாராயணன் தியானம் செய்யப்படுகின்றான்; இதில் 108 பாடல்கள் அடங்கியுள்ளன; ஸ்ரீமந் நாராயணனுக்குப் பதிலாக ஸ்ரீ ராமாநுஜருடைய நாமம் ஏற்படுகிறது.

"திருவரங்கத்தமுதனார் மதுரகவியினுடைய பாடலைத் தமக்கு ஆதாரமாகக் கொண்டு, அப் பாடல்கள் பத்தையும் விரித்து, 108 பாடல்களாக்கி, அப் பாடல்களிலுள்ள கருத்துக்களையே நன்கு பரப்பினார். ஆனால், இந்த அந்தாதியை ஸ்ரீ ராமாநுஜர் முதலில் பார்க்கக்கூட மறுத்துவிட்டார். சிஷ்யர்கள் "அது சாதாரணமான பாடல்களல்ல" என்றும், "அதைக் கட்டாயம் ஸ்ரீ ராமாநுஜர் பார்க்கவேண்டும்" என்றும் வற்புறுத்த, அப்பொழுதும் ஸ்ரீ ராமாநுஜர் பிடிவாதமாயிருந்தார். ஸ்ரீ ரங்கநாதப் பெருமானும் இவ்வந்தாதியைப்பற்றிப் புகழ்ந்து சொல்லியனுப்ப, அப்பொழுதுதான் ஸ்ரீ ராமாநுஜர் அவ் வந்தாதியை இயற்பாவின் கடைசியிலே வைக்கும்படி யநுமதியளித்து அதைத் தினந்தோறும் பாராயண கிரந்த மாக்கினார். இவ்விதம் ஒரு சரித்திரக் கர்த்தர் கூறுகின்றார்.

இதற்குள்ளாக ஸ்ரீ சைலபூர்ணர், ஸ்ரீ வரரங்கநாயகர், ஸ்ரீமாலாதரர், ஸ்ரீ காஞ்சிபூர்ணர் முதலியவர்களும் வைகுந்த ப்ராப்தி யடைந்துவிட்டார்கள். ஸ்ரீ சைலபூர்ணருடைய புத்திரன் ஸ்ரீ ராமாநுஜரிடம் வந்து தனது பிதா வைகுந்த மடைந்த விஷயத்தைத் தெரிவிக்க, ஸ்ரீ ராமாநுஜர் வெகு விமர்சையாகத் தமது ஆசார்யருக்குச் செய்யவேண்டிய கடன்களை யெல்லாம் செய்து முடித்தார்; பின்னர் அவர் திருப்பதிக்குச் சென்று ஸ்ரீ கோவிந்தராஜப் பெருமாளைப் பிரதிஷ்டை செய்தார்; திருப்பதியின் அடிவாரத்திலே ஆழ்வார்களுடையவும் ஆசார்யர்களுடையவும் விக்கிரகங்களைப் பிரதிஷ்டை செய்து, வருஷந்தோறும் உற்சவம் நடக்கும்படி ஏற்பாடு செய்தார். திருநாராயணபுரத்தை ராஜதானியாக உடைத்தாயிருந்த கார்த்திகேய தேவன் என்னும் பெயரிய அரசனை வசப்படுத்திக்கொண்டு, ஸ்ரீ ராமாநுஜர் அவனால் க்ஷேத்திரத்தைக் கட்டுவித்தார். இன்னும் அவனிடமிருந்து இளமண்டயம் என்னும் கிராமத்தை மாந்யமாகப் பெற்று, திருமலை நம்பி, நல்லான், ஈச்சம்பாடி ஜீயர் முதலிய தமது பிரிய சிஷ்யர்களுக்கு அதன் செழிப்பான பாகங்களைப் பங்கிட்டுக் கொடுத்தார்; க்ஷேத்திரத்தினருகே அவர்களுக்கு வீடுகளும் கட்டுவித்தார்; அவர்களுக்குப் பின்னர் வேறு சிஷ்யர்களுக்கும் தினசரி பூஜைக்காக நரசிம்ஹ விக்கிரகம் அளித்தார்; திருப்பதி க்ஷேத்திர நிர்வாகத்தை அந்த யாதவ அரசன் மேல் பார்க்கும்படி ஆக்ஞை செய்தார். க்ஷேத்திரத்தைச் சுற்றியுள்ள பட்டினத்துக்குக் கோவிந்தராஜ பட்டணம் என்று பெயரிட்டார்.

இங்குத்தான் கூரேசருக்கும் ஹநுமத்தாசருக்கும் இஷ்டதேவதோபாசனையின் ரகஸ்யங்களை யெல்லாம் உபதேசித்தார்; ஸ்ரீ வாங்கிபுரத்துநம்பி யென்று ஸ்ரீ ராமாநுஜருக்கு ஒரு சிஷ்யர் உண்டு; ஸ்ரீ ராமாநுஜர் இவருக்கே முதலில் இஷ்டதேவதோபசானையின் ரகஸ்யங்களை உபதேசிப்பதாக வாக்களித்திருந்தார். இப்பொழுது ஸ்ரீ ராமாநுஜர் வேறு இருவருக்கு முதலில் உபதேசித்துவிட்டதைக் கேட்ட வாங்கிபுரத்து நம்பி யோடிவந்து "ஸ்வாமி! இது நியாயம்தானே? வாக்குத் தவறலாமோ?" என்று கேட்க, ஆசார்யர் "நம்பி! என்மீது கோபம் வேண்டாம்; ஜகந்நாதனே யசோதையின் அன்புக்குக் கட்டுண்டார்; என்னால் அன்பை எதிர்த்து நிற்க முடியுமோ? உனக்கு ஆக்ஷேபனையில்லையானால், இதோ உனக்கும் விளக்கி வைக்கிறேன்" என்றார்.

கிருமிகண்ட சோழனுடைய புத்திரனாகிய குலோத்துங்க சோழன் ஸ்ரீ ராமாநுஜரைத் தேடிவந்து தனது பிதா செய்த குற்றங்கள் எல்லாவற்றையும் மன்னித்து, தன்னைச் சிஷ்யனாக ஏற்றுக்கொள்ளும்படி மன்றாடி வேண்டிக்கொள்ள, ஸ்ரீ ராமாநுஜர் அவனைத் தாசரதிக்குச் சிஷ்யனாக்கினார். அவ் வரசன் க்ஷேத்திர நிர்வாகத்தை ஆசார்யரிடம் ஒப்புவித்தான்; அவர் தாசரதிக்கும் அவருடைய வம்சத்தாருக்கும் அதைத் தானமாக அளித்துவிட்டார்.

பின்னர் ஸ்ரீரங்கத்திலே ஸ்ரீராமாநுஜர் வசித்துவரும் பொழுது, ஒருநாள் அவர் ஆழ்வானைப் பார்த்து மனம்

மிக வருந்தி "ஆழ்வான்! உனக்குக் கண்களில்லாது நீயிப்படியிருப்பது எனக்கு மனம் தாளவில்லை; ஸ்ரீகாஞ்சிநாதர் தமது பக்தர்கள் கேட்டதை ஒருபொழுதும் மறுக்காதவர்; அவரை உனது இனிய குரலினாலே ஸ்தோத்திரம் செய்து, உனது பார்வையை நீ திரும்பவும் அடைந்துகொண்டால் எனக்கு அதிக சந்தோஷமாயிருக்கும்" என்றார்.

ஆழ்வான் "ஸ்வாமி! இவ்வற்ப சங்கதிக்கா எம்பெருமானைத் தொந்தரவு செய்வது?" என்று சொல்ல, ஸ்ரீராமாநுஜர்" எனக்காகவாவது பிரார்த்திக்க வேண்டும்! என்னிடத்தில் உனக்கு அன்பில்லையா! என் மனம் துடிக்கின்ற துடிப்பு உனக்குத் தெரியாதா? என் கண்ணீரைப் பார்த்தும் உனக்கு என்மீது இரக்கமுண்டாகவில்லையா?" என்று பலவாறு கெஞ்சிக்கூற, ஆழ்வானுடைய மனமானது இளகிவிட்டது. ஆழ்வான், பெயர் பெற்ற வரதராஜஸ்தவத்தைப் பாட ஆரம்பித்தார். அவர் பாடிய பாடல்களுள் ஒன்றிலே எம்பெருமானுடைய அழகைக் கண்டு என்றென்றும் தாம் ஆநந்தித்துக்கொண் டிருக்கும்படி தமக்குத் திவ்ய சக்ஷுஸ அருளவேண்டுமென்று பிரார்த்தித்தார். அன்றிரவு எம்பெருமான் அவருக்குக் கனவிலே தோன்றி "உனது விருப்பத்துக் கிசைந்தேன்; எனக்கு வெகு சந்தோஷம்" என்று சொல்லி மறைந்தருளினார்.

மறுநாள் விடிந்தது; ஆழ்வான் தமது பாடல்களை முடித்துவிட்டார்; ஸ்ரீ ராமாநுஜரிடம் பாடிக் காட்டினார்.

"பேஷ்! வெகு நன்றாயிருக்கின்றன; இத்தகைய உருக்கமான பாடல்களைப் பாடுபவனுக்கு வரதராஜர் ஒன்றும் மறுக்கமாட்டார்," என்றார் ஸ்ரீ ராமாநுஜர்.

"ஸ்வாமி! உண்மைதான்; நான் கேட்டதை ஸ்ரீ வரதராஜப்பெருமான் நேற்றே யளித்துவிட்டார்" என்றார் ஆழ்வான்.

"என்ன? உனக்குப் பார்வை கிடைத்துவிட்டதா?"

"நான் இவ் வூனக் கண்களை வேண்டிப் பிரார்த்திக்கவில்லை; எம்பெருமான் வைகுந்தத்திலே யிருக்கும் பேரழகை என்றென்றும் கண்டு களித்துகொண் டிருக்கும் பாக்கியம் வேண்டுமென்று கேட்டேன்" என்றார் ஆழ்வான்.

ஸ்ரீராமாநுஜருக்கு மிகுந்த விசன முண்டாய்விட்டது; "நீ என்னை மிகவும் ஏமாற்றிவிட்டாய்; என்னுடன் காஞ்சிபுரத்துக்கு வா! எம்பெருமான் உனக்கு வேண்டியதைச் செய்யும்படி நான் செய்கின்றேன்."

பின்னர் இருவருமாகக் காஞ்சிபுரம் சென்று ஸ்ரீவரதராஜப்பெருமான் முன்னே நின்றார்கள்; ஸ்ரீ ராமாநுஜருடைய ஆக்ஞைப்படி ஆழ்வான் வரதராஜஸ்தவப் பாடல்களைப் பாடினார்; இச் சமயத்திலே ஸ்ரீ ராமாநுஜர் வேறு கார்யம் கவனிக்கும்படி நேரிட்டுவிட்டது. எம்பெருமான் ஆழ்வானை நோக்கி "உனக்கு வேண்டியதைக் கேள்" என்று கேட்டார்.

ஆழ்வான், "ஸ்வாமி! ஒரு வரமருளவேண்டும்; எனது சிஷ்யனாகிய நாலூரான் என்னைப் போலவே நற்கதியடையுமாறு கிருபை புரியவேண்டும்" என்று கேட்டார்.

"நல்லது! அப்படியே" என்றார் வரதராஜர்.

இதற்குள்ளாக ஸ்ரீ ராமாநுஜர் திரும்பி வந்துவிட்டார்; நடந்ததையறிந்துகொண்டார். ஸ்ரீ வரதராஜப் பெருமானை நோக்கி "ஸ்வாமி! தாங்கள் இப்பொழுது செய்தது நியாயம்தானா? தாங்கள் சர்வஞ்ஞரல்லவா? என்னுடைய ஹிருதயத்திலே இராப்பகலாகத் துடித்துக்கொண்டிருக்கும் எண்ணம் தங்களுக்குத் தெரியாதா?" என்று ஸ்ரீ வரதராஜப் பெருமானைக் கடிந்துகொண்டு, ஆழ்வானை நோக்கி, "எனது ஹிருதய நண்ப! எனது விருப்பத்தைப் பூர்த்தி செய்யக்கூடாதா? நான் உனக்கு அவ்வளவு அலக்ஷியமாய்விட்டேனா? ஸ்ரீ வரதராஜரும் லக்ஷியம் செய்யவில்லை; நீயும் என்னை லக்ஷியம் செய்யவில்லை; இனிமேல் இங்கு எனக்கென்ன வேலை?" என்று சொல்லிவிட்டு, வெளியே போய்விட்டார். ஸ்ரீ ராமாநுஜர் வருத்தமடைந்தது ஸ்ரீ வரதராஜரால் பொறுக்க முடியவில்லை. ஸ்ரீ ராமாநுஜர் கோபித்துக்கொண்டு போய்விட்டாரே! ஆழ்வானும் வெட்கமும் மனஸ்தாபமும் மிகுந்தவனாகி, வெகு வேகமாக ஓடிச்சென்று, ஸ்ரீ ராமாநுஜருடைய வழியில் குறுக்கே விழுந்து, "பிரபு! என் ஈசா! தவறு இழைத்தேன்; மன்னித்தருளுக! எனக்குப் புத்தி வந்தது; எனக்குப் புத்தி வந்தது; தாங்கள் கிருபாநிதியாய்விட்டதே; நான் மாத்திரம்

சரணாகதி யடைவதற்குத் தங்களுடைய கிருபையிலே இட மில்லையோ?'' என்று கூறிக்கொண் டிருக்கையிலேயே, "இராமாநுஜ! திரும்பி வா! என்ன முன் கோபமப்பா உனக்கு? நீ கேட்பதைக் கொடுக்கின்றேன், திரும்பிவா!' என்று எம்பெருமான் கூப்பிட்டார்.

ஆழ்வான் எம்பெருமானை நோக்கி "எம்பெருமானே! ஸ்ரீ ராமாநுஜருக்கு என்மீதுள்ள கோபத்தை ஆற்றிவிட வேண்டும்'' என்று பிரார்த்தித்துவிட்டு, மறுபடியும் ஸ்ரீ ராமாநுஜரை நோக்கி, "ஸ்வாமி! இப்பொழுது தாங்கள் என்ன கேட்கச் சொன்னாலும் கேட்கின்றேன்'' என்று கெஞ்சினார்.

ஸ்ரீ ராமாநுஜர் திரும்பி க்ஷேத்திரத்தினுள்ளே வந்து, எம்பெருமான் சந்நிதியிலே தான் செய்ததுபற்றிக் கூச்சம் மிகுந்தவராய்த் தலை குனிந்து நின்றார்.

எம்பெருமான் அவரை நோக்கி, "இனிமேல் என் முகத்தில் விழிப்பதில்லை யென்று பிரதிக்ஞை பண்ணிக் கொண்டுதானே நீ சென்றாய்; நீ கேட்ட வரத்தைக் கேட்ட வுடனே நான் கொடுக்காதது ஒரு பெரிய காரணம். அப் பப்பா! இவ்வளவு கோபம் இவ்வளவு சீக்கிரம் வருவதா னால், எப்படிக் காலம் தள்ளுவது?'' என்றார்.

ஸ்ரீ ராமாநுஜர் "ஸ்வாமி! மன்னிக்கவேண்டும். ஆழ்வா னிடம் எனக்குள்ள அத்தியந்த அன்பானது என்னை இம் மாதிரி யெல்லாம் செய்வித்துவிட்டது; தவிர, பரிபூர்

ணத்துவம் எனக்கு இருந்துவிட்டால், அப்புறம் எனக்கும் தேவரீருக்கும் என்ன வித்தியாசம் உள்ளது? ஆழ்வா னுடைய விருப்பத்தைப் பூர்த்தி செய்யுங்கள்" என்று பிரார் த்தித்தார்.

"நல்லது! அப்படியே அளித்தேன்; அவன் உன்னை யும் என்னையும் அவனுடைய ஊனக் கண்களால் பார்ப் பான்" என்று எம்பெருமான் சொல்லிவிட்டு, ஆழ்வானைக் "கண்கள் தெரிகின்றனவா?" என்று கேட்டார். ஆழ்வான் இருவரையும் உச்சந்தலை முதல் உள்ளங்கால் வரையில் விவரித்துக் கூறத் தொடங்கினார். இவ்வளவுதூரம் தமது கார்யம் ஜயமடைந்துவிட்டதுபற்றி ஸ்ரீ ராமாநுஜருக்கு அளவற்ற சந்தோஷம் உண்டாய்விட்டது; பின்னர் அவர் ஸ்ரீரங்கத்துக்குத் திரும்பி வந்தார்.

"ஆழ்வான் தமக்குத் திவ்ய சக்ஷுஸ் அளிக்கும்படி எம் பெருமானைப் பிரார்த்தித்தார்" என்றும், "அவர் ஆழ்வா னுக்கு ஞானக்கண்மாத்திர மன்று, ஊனக் கண்ணும் அளித்தார்" என்றும் ஒருவர் கூறுகின்றார்.

ஸ்ரீ ராமாநுஜர் இன்னும் திருப்தி யுடையாமல் என் றும் பயனுள்ளதாக ஏதேனும் ஒன்று செய்ய விரும்பினார். ஒருநாள் வெயில் கொளுத்திக்கொண் டிருக்கின்றது; ஸ்ரீ ராமாநுஜர் தனித்து, திருவரங்கத்தமுதனாருடைய வீட் டுக்குச் சென்றார். இப்படி ஸ்ரீ ராமாநுஜர் தனித்துச் செல் வது வழக்கமில்லை; ஆச்சர்யமா யிருந்தது. ஸ்ரீ ராமாநுஜர்

பிக்ஷைக்குப் போகும்பொழுது தனித்துத்தான் செல்வார்; ஆனால், இப்பொழுது பிக்ஷைக்குப் போவதை நிறுத்தி அநேக நாட்க ளாய்விட்டன. ஆகையால், இப்பொழுது அவர் தனித்து வந்தது ஆச்சர்யமா யிருந்தது. திருவரங் கத்தமுதனார் அவருடைய பாதங்களிலே விழுந்து "நான் செய்த பாக்கியமே பாக்கியம்," என்றார்.

ஸ்ரீ ராமாநுஜர் "இவ்விடத்திலே உனக்குள்ள புரோ ஹிதத் தன்மையின் பாத்தியதையை நாம் அடைந்து கொள்ள விரும்புகின்றோம்" என்றார்.

திருவரங்கத்தமுதனார் "ஆ! ஆ! எனது பாக்கியமே பாக்கியம்" என்று சொல்லிவிட்டுத் தமது குருவாகிய ஆழ் வானை மனத்திலே தியானித்து அவருக்கே தானம் அளிப் பதுபோலப் பாவித்து, தமது புரோகித உத்தியோகத்தைத் தானம் செய்துவிட்டார். 'ஸ்ரீ ராமாநுஜர் எதனிடத்தும் இச்சையுள்ளவ ரல்லர்' என்பது திருவரங்கத்தமுதனாருக் குத் தெரியும்; சிஷ்யன் கொடுக்கக் கூடியதை குருவே ஏற்றுக்கொள்ளலா மாதலால், ஆழ்வானுக்குக் கொடுப்ப தாகப் பாவித்துக்கொண்டு கொடுத்தார். ஸ்ரீ ராமாநுஜர் அவ் வுத்யோகத்தை ஆழ்வானுக்கு அளித்து ஸ்ரீரங்கநாதப் பெருமான் முன்னே தினந்தோறும் புராணபடனம் செய்து வியாக்கியானம் செய்யுமாறு ஆக்ஞாபித்தார்; இதனால், 'பராசரர்" என்று பட்டப் பெயரு மளித்தார்.

ஆழ்வானுக்கு ஒரு வீடும் மகா பூர்ணருடைய குடும் பத்தாருக்கு ஒரு வீடுமாக ஸ்ரீ ராமாநுஜர் இரண்டு வீடு

களை ஒன்றுக்கொன்று எதிரே கட்டிக் கொடுத்தார். இக் காலத்தில் ஸ்ரீ ராமாநுஜர் ஸ்ரீ பாஷ்யத்தை முடித்துவிட்டு, ஸ்ரீரங்கநாதப் பெருமான் சந்நிதியிலே அதைப்பற்றிப் பிரசங்கம் செய்தார். எம்பெருமான் "ஸ்ரீ ராமாநுஜரைப் பிரஹ்ம ரதத்திலே ஏற்றி ஊர்வலம் கொண்டு வரவேண்டும்" என்றும், "அவருக்கு ஷடகலசாபிஷேகம் செய்வித்துக் கௌரவப்படுத்தவேண்டும்" என்றும் க்ஷேத்திரப் பணியாளர்களுக்கு உத்தரவு செய்தார்.

பின்னர் ஸ்ரீ ராமாநுஜருடைய அந்தரங்க சிஷ்யர்கள் சிலர் அருகிலிருந்த பரிசுத்த தீர்த்தங்களிலிருந்து நூறு குடம் ஜலம் கொண்டுவந்து ஸ்ரீ ராமாநுஜருக்கு அபிஷேகம் செய்வித்து, சடங்குக் கிரியைகளெல்லாம் முடிந்த பின்னர், ஸ்ரீ ராமாநுஜருக்கு இளவரசு பட்டமும் கட்டி வைத்தார்கள். பின்னர் ஸ்ரீ ராமாநுஜருடைய சிஷ்யர்கள், நண்பர்கள், அவருடைய பக்தர்கள் எல்லோரும்—ஆயிரக் கணக்காக எண்ணற்ற ஜனங்கள் கூடி,—ஸ்ரீ ராமாநுஜரை ஒரு ரதத்திலே ஏற்றுவித்து, ஸ்ரீரங்கம் தெருக்களினூடே ஊர்வலம் கொண்டு வந்தார்கள். சந்யாசிகளும் பிராஹ்மணர்களும் அவருடைய ரதத்தை யிழுப்பதற்கு ஒருவர்க்கொருவர் முட்டிக்கொண்டு பட்டபாடு சொல்லி முடியாது. ஆ! ஆ! வேத பாராயணங்களென்ன! திவ்யப் பிரபந்த படனங்களென்ன! ஆயிரக் கணக்காகக் கூடிய ஜனங்களின் ஆரவாரமென்ன! கட்டியக்காரர்களின் எச்சரிக்கைகளென்ன! கணக்கற்ற ஜனங்களின் கரகோஷங்களென்ன! இவ் விமரிசைகளுடனெல்லாம் பிரஹ்ம ரதம் ஊர்வலம் வந்தது.

இவ்வித வைபவத்திலே ஸ்ரீ ராமாநுஜர் காலம் கழித்துக்கொண்டுவர, ஒருநாள் "நாறு நறும்பொழில்" என்று ஆரம்பிக்கின்ற நாச்சியார் திருமொழிப்பாட்டை வியாக்கியானம் செய்துவருகையில், நாச்சியாருடைய விருப்பத்தைப் பூர்த்திசெய்து வைக்கவேண்டு மென்று ஸ்ரீ ராமாநுஜருக்கு ஒரு எண்ணம் உண்டாயிற்று. ஆகையால், ஸ்ரீ ராமாநுஜர் உடனே வாணுத்ரிக்குச் சென்று, நாச்சியாருடைய பிரதிக்ஞைப்படி 100 குறுணி யன்னமும் நூறு குருணி வெண்ணெயும் நைவேத்தியம் செய்துவைத்துவிட்டு, அங்கிருந்து புறப்பட்டு, ஸ்ரீ வில்லிபுத்தூரிலே யுள்ள நாச்சியாருடைய க்ஷேத்திரத்துக்குச் சென்றார்.

நாச்சியார் ஸ்ரீ ராமாநுஜரை நோக்கி "நன்கு செய்தாய்; உனது அன்புக்கு அநேக வந்தனம்; இத்தனை நாட்களாக நிறைவேற்றப்படா திருந்த எனது கோரிக்கையை ஈடேற்றி வைத்தாய்; இது செய்வதற்கு மூத்த சகோதரனுக்கே பாத்தியதை யுண்டு; ஆதலால், நீ நம் கோயிலண்ணன் ஆம்," என்றார்.

"ஜகன்மாதாவினுடைய சித்தம்" என்று ஸ்ரீ ராமாநுஜர் கூறிவிட்டு, ஸ்ரீ ரங்கத்துக்குத் திரும்பி வந்து சேர்ந்தார். இன்னொரு சரித்திரக் கர்த்தா இது சம்பந்தமாக இன்னொரு விஷயமும் கூறுகிறார்:— ஸ்ரீ ராமாநுஜர் அங்கிருந்து திருநகரிக்குச் சென்று அங்கிருந்து மதுரகவி விஷயமாக என்றும் பிரசித்தமான திருக்கோவிலூருக்குச் சென்றார். அங்குப் போகும் மார்க்கத்திலே அவர் திருக்கோவிலூரி

லிருந்து ஒரு ஸ்திரீ வெளியே வருவதைக் கண்டு "அம்மே! நீ எங்கிருந்து வருகின்றாய்?" என்று கேட்டார்.

"நான் திருக்கோவிலூரிலிருந்து வருகின்றேன்" என்றாள் அந்த ஸ்திரீ.

"ஆ! ஆச்சர்யமா யிருக்கின்றதே! எல்லோரும் அவ் வூருக்குப் போக விரும்புவார்கள்; ஆனால், நீயோ அதிலிருந்து வெளியே வருகின்றாய்" என்றார் ஆசார்யர்.

"ஸ்வாமி! ஆம், உண்மைதான். இப் பரிசுத்த ஸ்தலத்தை இழிதன்மையுள்ள நான் தீட்டுப்படுத்தலாமோ?" என்று அவள் உடனே மறுமொழி கூறி, எம்பெருமானுடைய கிருபையை அடைந்து அவருடைய பக்கல் என்றென்றும் இருப்பதற்குள்ள பாக்கியம் பெற்ற 73 பக்தர்களுடைய திருஷ்டாந்தங்களை ஸ்ரீ ராமாநுஜருக்கு சவிஸ்தாரமாக எடுத்துரைத்தபொழுது, ஸ்ரீ ராமாநுஜர் ஆச்சர்யமடைந்தார்; ஆகையால், ஸ்ரீ ராமாநுஜர் அந்த ஸ்திரீயை திருக்கோவிலூருக்கு இட்டுச் சென்று அவளுடனே சில நாட்கள் தங்கி, அவளுடைய கையிலிருந்து அன்னமிட்டுண்பதைப் பெரும் பாக்கியமாகக் கருதினார்.

பின்னர் ஸ்ரீ ராமாநுஜர் திருக்குருகூருக்குச் சென்று, ஸ்ரீ சடகோபருடைய பாதரக்ஷைகட்கு மதுரகவி யென்றுள்ள பெயருக்குப் பதிலாக "ஸ்ரீ ராமாநுஜர்" என்று பெயர் வைக்கப்பட வேண்டுமென்று சடகோபரைப் பிரார்த்தித்துக் கேட்டுக் கொள்ள, அப்படியே அநுமதி கொடுக்

கப்பட்டது. இப் பெரிய கௌரதை தமக்குக் காண்பிக்கப் பட்டதற்காக எப்படி நன்றி செலுத்துவது என்ற விஷயத்தைப் பற்றி ஸ்ரீ ராமாநுஜர் தீர்க்கமாய்ச் சிந்தித்து, "இப் பெரியோருடைய பெயர் எடுக்கும்படியாக எவரேனும் ஒருவர் மகா பரிசுத்தராகக் கிடைத்தால் நன்றாயிருக்கும்" என்று தாமே நினைத்துக்கொண்டார். ஸ்ரீ சைலபூர்ணருடைய புத்திரனாகிய பிள்ளான் என்பவர் முன் வந்து "ஸ்வாமி! அப் பெயரெடுக்க நான் முன் வருகின்றேன்" என்றார். ஸ்ரீ ராமாநுஜர் அவ்வாறே சம்மதித்து, பிள்ளானுக்குக் குருகேசர் என்று நாமமிட்டார். அன்று முதல் குருகேசர் ஸ்ரீராமாநுஜருடைய ஞான புத்திரனாகப் பாவிக்கப்பட்டு வந்தார்.

பின்னர் ஒருநாள் ஸ்ரீ ராமாநுஜர் பிள்ளானைக் கூப்பிட்டு, "புத்திரா! நான் திவ்யப் பிரபந்தத்திற்கு உரையெழுதாது விட்டிருக்கின்றேன்; ஏனெனில், நான் உரையெழுதுவேனாயின், இவையே உபநிஷத்துக்கள்போலக் கருதப்பட்டுவிடும்; ஆனால், நீ எழுதலாம். நீ மஹானாகிய நாதயோகி வம்சத்தைச் சார்ந்தவன்; அதற்கு உரையெழுதுவதற்குள்ள சகல உரிமைகளும் உனக்கு இருக்கின்றன. தவிர, திவ்யப்பிரபந்தத்தினிடத்திலே உனக்கு ஆசையும் அதிகமாயுள்ளது. ஆதலால், ஸ்ரீ விஷ்ணுபுராணத்தை யாதாரமாகக் கொண்டு 6000 கிரந்தங்களிலே நீ அதற்கு ஒரு உரை யெழுதுவாயாக!" என்று ஆக்ஞாபித்தார். பிள்ளான் "இப் பெருங் கார்யம் செய்தற்குத் தனக்கு யோக்கியதையுண்டோ?" என்று அவநம்பிக்கை மிகுந்திருந்தாராயினும்,

குரு ஆக்ஞையாகையால் எதிர் கூருது, உரை யெழுத ஆரம்பித்துச் சின்னுட்களுக்குள்ளே முடித்து, ஸ்ரீ ராமாநுஜரிடம் கொண்டுவந்து காண்பிக்க, ஸ்ரீராமாநுஜர் அதை நன்ருகப் படித்துப் பார்த்து, திருப்தியடைந்ததுமன்றியில் அதற்கு பகவத் விஷயம் என்ற பெயர் இட்டு, அதைத் தினசரி பாராயணம் செய்யவேண்டுமென்றும் ஏற்பாடு செய்தார். திவ்யப்பிரபந்தத்துக்கு இதைத் தவிர, வேறு உரைகளும் உள்ளன. அவையாவன:—(1) பராசருடைய சிஷ்யராகிய நஞ்ஜீயர் எழுதிய "ஒன்பதினுயிரம்", (2) வடக்குத் திருவீதிப் பிள்ளை யென்பவர் எழுதிய "முப்பத்தாருயிரம்", (3) பெரியவாச்சான்பிள்ளை எழுதிய "இருபத்துநாலாயிரம்", (4) வாதிகேசரி அழகிய மணவாள ஜீயர் எழுதிய "பன்னீராயிரம்."

மேலே சொன்ன பிரகாரம் ஸ்ரீ ராமாநுஜர் பிள்ளானைக்கொண்டு திவ்யப்பிரபந்தத்துக்கு உரை யெழுதும்படி செய்துவிட்டு, சிஷ்யர்களுடனே ஆநந்தமாகக் காலங் கழித்துவரும் நாட்களில் ஒருநாள் ஆழ்வான் ஆசார்யர் ஸ்ரீ ராமாநுஜருக்குத் தெரியாமல் எம்பெருமானுடைய க்ஷேத்திரத்துக்குச் சென்று சந்நிதானத்திலே இரு கைகளையும் கூப்பிக்கொண்டு மௌனமாக நின்ருர். எம்பெருமான் அவரை நோக்கி, "நீ என்னிடம் ஏதோ பேச வந்திருக்கிருப்போல இருக்கின்றது" என்று கூறினர்.

ஆழ்வான் "பிரபு! ஆம்!" என்று கூறிவிட்டு, பின்னர் தாம் இயற்றிய வரதராஜஸ்தவத்திலிருந்து' "எனது

ஆசார்யர் ஸ்ரீ ராமாநுஜருடைய பரிசுத்த அடிகளிலே நான் சரண் அடைகிறேன்; அவர் ஸ்ரீயாமுநாசார்யருடைய சிஷ்யர்; அவர் ஸ்ரீ நாதயோகியின் சிஷ்யரும் சந்ததியில் வந்தவருமாவர்; அவர் மகாத்மா ஸ்ரீ சடகோபருடைய பாதாரவிந்தங்களில் வீற்றிருந்தவர்; அவர் மற்றவரினும் பாக்கியவந்தர்; ஜகன்மாதாவாகிய உயிரும் ஒளியுமாம் ஊற்றையருந்தியவர்; அவளுடைய அந்தரங்க ஹிருதயத்திலே உனது பாதம் பூஜிக்கப்படுகிறது. அப்படியாயின், பிரபு! உனது கிருபைக்கு எனக்குக் கொஞ்சமும் உரிமையில்லையா?" என்று பொருள் படுகின்ற பாடலைப் பாடி மிகத் தெளிவாக வியாக்கியானமும் கூறவே, எம்பெருமானுக்கு ஆநந்தம் பொங்கிவிட்டது; "வேண்டும் வரத்தைக் கேள்! கொடுக்கிறேன்" என்றார்.

"ஸ்வாமி! நான் தங்களிடத்திலே சரணாகதியடைந்துவிட்டபொழுதே, தேவரீர் எனக்கு வேண்டியதையெல்லாம் கொடுத்திருக்கின்றீர்களே; எனக்கென்ன குறையுள்ளது?"

"அதெல்லாம் சொல்லாதே; இப்பொழுது உபசார வார்த்தை வேண்டாம்; நான் இப்பொழுது கொடுக்கும் குணமுடையவனாயிருக்கின்றேன்; நீ எது கேட்டாலும் அது கொடுக்கத் தவறேன்."

இப்படி எம்பெருமான் கூறினதைக் கேட்ட ஆழ்வான் ஒரு நிமிஷம் ஆலோசனையிலாழ்ந்திருந்து, பின்னர்

நிமிர்ந்து எம்பெருமானைப் பார்த்து, "ஸ்வாமி! தேவரீருக்கு நான் கேட்டது கொடுக்கப் பிரியமிருக்கும் விஷயத்திலே, தங்களுடைய திவ்ய சந்நிதானத்தை நான் என்றும் ஆநந்தமாய் அநுபவிக்காமலிருப்பதற்குக் காரணமாயிருக்கிற இந்த நாற்றச் சடலத்தை நான் போட்டுவிடும்படிக்கும், என்றென்றும் இடைவிடாமல் தேவரீருடைய திவ்ய சந்நிதானத்திலேயே நான் இருந்து மகிழும்படிக்கும் அருள் புரியவேண்டும்" என்று கேட்டார்.

எம்பெருமான், 'ஆழ்வான் இவ்வரத்தையிப்பொழுது கேட்பார்' என்று ஒருபொழுதும் நினைக்கவில்லை; ஆகையால், எம்பெருமான் மனம் கலக்குற்றவராகி, "வேறு ஏதேனும் வரம் கேள்! இவ்வளவு சீக்கிரத்திலே உன்னை யிவ்வுலகினின்றும் அனுப்பிவிட முடியாது," என்று கூற, ஆழ்வான் "ஸ்வாமி! இம்மாதிரி சொல்வீர்களென்று நான் நினைத்தேன்; அப்படியேதான், சொல்லிவிட்டீர்கள்; நான் கேட்கும் வரம் தேவரீர் கொடுக்கமாட்டீர்களென்று எனக்கு நெடு நாட்களாகத் தெரியும்; அதனால்தான் நான் எவ்வித வரமும் கேட்காமலிருந்தேன். தேவரீர் என்னைக் கட்டாயப் படுத்தி வரங் கேட்குமாறு வற்புறுத்தியதனாலே, 'கேட்டுப் பார்க்கலாம்' என்று கேட்டேன். நான் வேறு வரம் கேட்கமாட்டேனென்பது நிச்சயம்; தேவரீர் வாக்கு மாறினீர்கள் என்று உலகத்திலே வழக்குச் சொல்லாகுமா? நான் இதுவரை எவ்வித வரமும் கேட்டுத் தேவரீருக்குத் தொந்தரவு கொடுத்ததில்லை. ஆகையால், இவ் வேண்டுகோளைத் தேவரீர் மறுக்கலாகாது" என்றார்.

ஸ்ரீரங்கநாதப் பெருமானுக்குப் போதும், போதும் என்றாய்விட்டது; இது அவராகவே இழுத்து வைத்துக் கொண்ட கஷ்டம். என்ன செய்யலாம்? ஆழ்வான் எத்தனையோ தடவை வரம் கேட்க மறுத்தும், எந்த வரமும் கேட்கும்படி எம்பெருமான்தானே அவரைப் பலவந்தப்படுத்தினார்? ஆகையால், எம்பெருமான் அன்பு ஜொலிக்கும் ஒரு புந்நகை புரிந்து "ஆழ்வான்! நான் உனக்கும் உன்னைச் சேர்ந்தவர்களுக்கும் பிரஹ்மலோக ஆநந்தபோதம் என்றென்றும் அளித்தேன்" என்று திருவாய் மலர்ந்தருளவும், ஆழ்வான் "ஸ்வாமி! மூடனாகிய நாலூரானுக்கும் அதே பாக்கியம் அருளவேண்டும்" என்று பிரார்த்திக்க, "அந்த இழிந்த துரோகிக்கா?" என்றார்.

"ஸ்வாமி! அவன் துரோகியா யிருந்தாலும் சரி; எனக்குத் தீங்கிழைத்த நாலூரானை நான் மன்னித்து, 'சர்வ லோக பிதாவாகிய ஸ்ரீரங்கநாதப்பெருமான் மன்னிக்கவில்லை' என்று உலகினர் கூறினால், அது நன்றாயிருக்குமா? ஸ்வாமி! நீங்கள் எச் செய்கை செய்யினும், அச் செய்கையினா லுண்டாகும் பழி பாவம் உங்களைப் பற்றாது; நானோ அற்பன்; நாலூரான் ரக்ஷிக்கப்படாவிட்டால், என்னைத் தான் அதற்குக் காரணமாக உலகினர் கூறுவார்கள். ஆகையால், இந்த வரமும் தேவரீர் கொடுத்தருளல் வேண்டும்; இல்லையேல் எவ் வரமும் எனக்கு வேண்டியதில்லை. நான் தேவரீரிடத்தில் இவ்வளவு பிடிவாதமா யிருப்பதுபற்றி விசனிக்கிறேன்."

எம்பெருமானுக்கு இவ் வரம் கொடுப்பதற்கு மன மில்லாவிட்டாலும், ஆழ்வா னிடத்திலே அகப்பட்டுக் கொண்டுவிட்டாராதலாலே, அரை மனத்துடனே "அப்படி யே அவனுக்கும் அருளினேன்" என்றார்.

ஆழ்வான் அளவற்ற ஆநந்தமடைந்து ஸ்ரீரங்கநாதப் பெருமானை நாவாரத் துதித்து, பின்னர் ஆழ்வாராதியர்க ளுடைய க்ஷேத்திரத்துக்கு நேரே சென்று, வெளியிலே நின்றுகொண்டிருந்தார்.

இந்தச் சங்கதி ஸ்ரீ ராமாநுஜருக்குத் தெரியவந்தது; அவருடைய ஹிருதயத்திலே ஆநந்தம் பொங்கிற்று. அவர் தமது உத்தரீயத்தை மேலே வீசி வீசி ஆர்ப்பரித்தார். "இதென்ன? பச்சைக் குழந்தைபோல விளையாடுகின்றாரே" என்று அங்குள்ளவர்கள் ஆச்சர்ய மடைந்தார்கள். "ஸ்வாமி! தங்களுடைய இவ் வாநந்தத்துக்குக் காரணம் என்ன?" என்று கேட்டார்கள்.

ஸ்ரீ ராமாநுஜர் "நாம் எல்லோரும் ஆழ்வானைச் சேர்ந் தவர்களாகையினாலே, நம் எல்லோருக்கும் பிரஹ்மலோகத் திலே இடம் கிடைப்பது நிச்சயமென்று ஆடுங்கள்! பாடு ங்கள்!" என்று சொன்னார்.

இதற்குள்ளாக, ஆழ்வானுடைய மனைவியாகிய ஆண் டாளுக்குத் தன்னுடைய புருஷன் பரமபதம் அடையப் போகிற சமாசாரம் தெரியவந்தது; அவள் உடனே தனது புத்திரர்களெல்லோரையும் கூட்டிக்கொண்டு, ஆழ்வான்

இருந்த இடம் நோக்கி நேரே வந்து, அவருடைய பாதங்க ளிலே பணிந்து நிற்க, அவர் தமது மனைவியை நோக்கி, "எனது இல்வாழ்க்கைத் துணையே! நமது ஆசார்யருடைய பாதாரவிந்தங்களிலே சரணாகதி யடைவதே உனது வாழ்க் கைப் பயனாக நீ கருதவேண்டுமென்பது நான் சொல்லி நீ தெரிந்துகொள்ள வேண்டியதில்லை; எம்பெருமானுடைய பக்தர்களிடமும் திரிகரண சுத்தியாய்த் தொண்டு புரிவா யாக!" என்று கூறிவிட்டு, பராசரரைப் பார்த்து "நீ எம்பா ரிடத்திலும் ஸ்ரீ ராமாநுஜரிடத்திலும் சரணாகதி யடைந்து கொள்! என்னிடத்தில் எவ்வளவு மதிப்புச் செலுத்துகின் றாயோ அவ்வளவு மதிப்பும் மரியாதையும் ஆசார்யருடைய சிஷ்யர்களிடத்தும் செலுத்து!" என்றார். இன்னும் அவர் தமது மற்ற புத்திரனாகிய வியாசரைப் பார்த்து "நீ பராசர னிடத்திலே சரணாகதி பெற்றுக்கொள்! அதுபோதும் உனக்கு" என்று கூறினார். பின்னர் அவர் தமது சிஷ்ய னாகிய பிள்ளைப் பிள்ளை யாழ்வானைப் பார்த்து "நீ பேச்சி லே ஜாக்கிரதையா யிரு! சத்துரு பயமும் தேச சட்டமும் உன்னை உனது சரீரச் செய்கைகளின் விஷயத்திலே ஒழு ங்குபடுத்தும்; ஆனால், உனது நினைப்புக்கள் உனக்கு விரோ தமாகக் கிளம்பிவிட்டால், நீ என்ன செய்வாய்? ஸ்ரீ கிருஷ் ணன் ஒருகடினமான மார்க்கத்தை உபதேசித்திருக்கின்றார்; நான் அதனினும் சுலபமான வழியொன்று கூறுகின்றேன். ஸ்ரீ கிருஷ்ணன் விடா முயற்சியையும் பற்றற்ற தன்மை யையும் உபதேசிக்கிறார்; ஆனால், நான் கூறுவதை நீ பின் பற்று! எனது ஆத்ம நாதனாகிய பரந்தாமனிடத்திலே

சரண் புகுந்துகொள்! நீ சீக்கிரத்திலே பிரஹ்மாநந்த பதவி யடைவாய்'' என்று சொல்லிவிட்டு, கடைசியாகத் தமது சிஷ்யர்களெல்லோரையும் பார்த்து "இது உங்கள் மனத்திலே பதிந்திருக்கட்டும்; ஆழ்வாராதியர்களுடைய மொழிகளே பயனும் உபாயமுமாம்'' என்று கூறினர்.

இப்படி யிங்ஙகே ஆழ்வான் தம்மைச் சேர்ந்தவர்களெல்லோருக்கும் புத்திமதிகள் கூறி விடை பெற்றுக் கொண்டிருந்தபொழுது, ஆசார்யர் தமது மடத்திலே சிஷ்யர்கள் அனைவரையும் சூழ உட்கார வைத்துக்கொண்டு திருப்பாவையில் ஒரு பாடலை அவர்களுக்கு விரித்துரைத்து விளக்கிக்கொண்டிருந்தார்; அப்பொழுது ஒருவர் க்ஷேத்திரத்திலே ஸ்ரீரங்கநாதப் பெருமானுக்கும் ஆழ்வானுக்கும் நடந்த சம்பாஷணையைக் கூற, ஸ்ரீ ராமாநுஜர் உடனே அங்கிருந்து எழுந்து ஆழ்வான் இருந்த இடம் சென்றார்; சிஷ்யர்கள் அனைவரும் கூடச் சென்றார்கள். ஸ்ரீ ராமாநுஜர் ஆழ்வானை நோக்கி, "புத்திரா! நீ இப்படிச் செய்தது நியாயமா?'' என்று கேட்க, ஆழ்வான் மறுமொழியே கூறவில்லை. "எனக்கு முன்னே நீ செல்ல விரும்பியதென்ன?' என்று ஸ்ரீ ராமாநுஜர் மறுபடியும் கேட்க, அப்பொழுதும் அவர் பதில் பேசவில்லை.

"உனக்கு என்னிடம் பேச விருப்ப மில்லையோ? என் மீது உனக்கு அதிருப்தி ஏற்படக் காரணம் என்னவோ?''

ஸ்ரீ ராமாநுஜர் இப்படிக் கேட்க, ஆழ்வானுக்கு இன்னது சொல்வதென்று தெரியவில்லை. ஆசார்யருக்கு அவர்

மீது வருத்த முண்டாய்விட்டது. ஆயினும், ஆழ்வான் தமது மனத்தைத் தேற்றிக்கொண்டு, "வைகுந்தத்திலே ஒரு வழக்கம் நடைபெற்று வருகின்றது; அவ் வழக்கத்துக்கு விரோதம் செய்யலாகாதென்று நான் இப்படிச் செய்தேன்" என்றார்.

ஸ்ரீ ராமாநுஜர் "புத்திரா! நீ சொல்வதொன்றும் எனக்கு விளங்கவில்லை," என்று கூறினார்.

ஆழ்வான், "ஸ்வாமி! திவ்யப் பிரபந்தத்தில் திருவாய்மொழியிலே கடைசிப் பாடலைப் படித்தால், வைகுந்தத்துக்கு வருபவர்களை முதலில் சென்றுள்ளவர்களும் நித்திய முக்தர்களும் வந்து வரவேற்கிறார்கள்' என்று தெரியவருகிறது. தேவரீர் சென்றபின் நான் செல்வதானால், தேவரீர் என்னை வரவேற்பதற்கு வரவேண்டி வருமே; அது நன்றாயிருக்குமா? தவிர, எனது ஆசார்யராகிய தாங்கள் அங்கே வரும்பொழுது, அதிக ஆசையுடனே ஆநந்தமாய்த் தங்களை வரவேற்பதற்கு நான் முன்னமேயே சென்று அங்கிருக்கவேண்டாமா?" என்றார்.

ஸ்ரீ ராமாநுஜர் "உண்மைதான்; அவ்விடத்தில் பெரியோர் சிறியோர், குரு சிஷ்யன் என்ற வித்தியாசம் கிடையாதென்று அதே கிரந்தங்கள் போதிக்கின்றனவே. நீ அங்கும் சென்று இவ் வித்தியாசங்களை வைத்துக்கொள்ளப் பார்க்கிறாயா? சரி, உனது இஷ்டம்" என்றார்.

ஸ்ரீ ராமாநுஜர் பின்னர் சிறிது நேரம் மௌனமாயிருந்துவிட்டு, ஆழ்வானுடைய மனத்தின் நிலைமையை

அறிந்துகொண்டு, அவனுடைய செவிகளிலே இருபெருண்மைகளையும் உபதேசித்தார். சில சிஷ்யர்கள் "ஆழ்வான் என்ன? புதிதாக வந்தவரா? அவருக்கு இப்பொழுது உபதேசிக்கவேண்டிய அவசியமில்லையே" என்று கூறினர்கள்.

"ஏ! சுருங்கிய ஞானமுடையவர்களே! ஆழ்வானுடைய நா அவ்வுண்மைகளை உச்சரித்து அநேக நாட்களாய்விட்டன; ஆதலினாலே, அது வரண்டு கிடக்கின்றது" என்றார்.

ஸ்ரீ ராமாநுஜருக்குத் திடீரென்று சாதாரண மனிதருடையது போன்ற வருத்தம் உண்டாய்விட்டது; தமது ஆருயிர் நண்பர் தம்மை விட்டுச் சீக்கிரம் பிரிந்துவிடப் போகிறாரே யென்ற எண்ணம் அவருக்குண்டாகவே, அவர் ஆழ்வானுடைய கழுத்தைக் கட்டிக்கொண்டு அழுதார்.

"எனது கண்ணே! எனது கண்களின் ஒளியே! விசிஷ்டாத்வைத ரத்தினமே! என்மீது உனக்கு இரக்கம் உண்டாகவில்லையா? நீ என்னையும் உன்னுடன் இட்டுச் செல்லமாட்டேன் என்கிறாயே! நீ என்னைப் பிரிந்து செல்லுமாறு நான் உனக்கு அவ்வளவு வெறுப்பாய்விட்டேனா? எனது ஸ்ரீ ரங்கநாதப்பெருமானைவிட ஸ்ரீ வைகுந்தநாதன் உனக்கு அவ்வளவு ரம்யமாய்விட்டாரா? இதனால் என்னையும் வெறுத்துவிட்டாயா? ஸ்ரீ வைகுந்தநாதனும் அங்குள்ள தேவர்களும் பாக்கியவான்களாய்விட்டார்கள். ஆயி

னும், உனது அந்திய காலத்திலே உன்னை வருத்தப்படுத்த எனக்கு மனமில்லை. நீ சுகமே போய்வா!'' என்றார்.

ஆசார்யர் பின்னர்த் தமது அன்பு மிகுந்த சிஷ்யராகிய ஆழ்வானை அஸ்த மஸ்தக ஸையோகம் செய்து, அழுகை பொங்கிய கண்களுடனே ஆழ்வானுக்கு விடைகொடுத்தனுப்பினார். ஆழ்வானுக்குப் பேசக்கூட முடியவில்லை: மனம் அவ்வளவு கரைந்துவிட்டது; ஸ்ரீ ராமாநுஜருடைய பாதங்களிலே விழுந்து, அப் பாதங்களைத் தொட்டுக் கண்களில் ஒத்திக்கொண்டார்; பின்னர் ஸ்ரீ ராமாநுஜரிடமிருந்து பாத் தீர்த்தம் பெற்றுக்கொண்டு, ''தேவரீருடைய பாதங்களிலே நான் சரணாகதி யடைகின்றேன்'' என்று மனமாரக் கூறி, சரணாகதி சுலோகத்தை மொழிந்தார்; பின்னர் அங்கிருந்து நடந்தார்; ஸ்ரீ ராமாநுஜரும் கூடவே சென்றார். ஆழ்வான் ''ஸ்வாமி! தேவரீர் நில்லுங்கள்!'' என்று கூறினபொழுதிலும் ஸ்ரீ ராமாநுஜருக்கு அவரை விட்டுப் பிரிய மனம் சகிக்கவில்லை; ஆகையால், வடகாவிரி வரையில் ஆழ்வானைப் பின்தொடர்ந்து சென்றார். ஆழ்வான் இது தெரிந்து ''ஸ்வாமி! இனிமேல் நீங்கள் வரக்கூடாது! வரக்கூடாதென்பதை நான் வற்புறுத்துகின்றேன். உலகுக்கே ஒளி யளிக்கும் தாங்கள் எனது புத்தி பேதிக்கும்படி செய்யலாமா?'' என்று சொல்லிவிட்டு, மேலே நடந்து ஓர் அழகிய இடத்தை யடைந்து, அங்கு உட்கார்ந்துகொண்டு, தமது மனைவியைப் பார்த்து ''எனது இல்லறத் துணையே! இப்பொழுது நீ சிந்தித்துக்கொண்டிருப்பது எதுவாயிருக்கலாம்?'' என்று கேட்டார்.

“நாதா! புதிதாக நான் என்ன சிந்திக்கப் போகிறேன்? உறக்கத்திலும் விழிப்பிலும், தனியே யிருக்கும்பொழுதும் கூட்டத்தி லிருக்கும்பொழுதும் எனது மனத்தில் ஒரே எண்ணம்தான் உள்ளது—என்னுடைய அளவு எனது ஹிருதய நாதனுக்குத் தொண்டுபுரியவேண்டுமென்ற எண்ணம் ஒன்றுதான்.

ஆழ்வான் முகமலர்ச்சி பெற்றவராய்ப் புந்நகை புரிந்து தமது புத்திரர்களாகிய பராசரரையும் வியாசரையும் பார்த்து, “உங்களுக்குப் பிதா மாதா எம்பெருமானும் லக்ஷ்மியுமேயாம். உங்களுக்கு ஒரு குறைவும் நேரிடாதபடி அவர்கள் பார்த்துக்கொள்வார்கள். உங்களுடைய ஹிருதயத்திலே கர்வம் உண்டாய்விடாதபடி நீங்கள் ஜாக்கிரதையா யிருந்துகொள்ளுங்கள்! அதுவும் போதாது. ஆசார்யரிடத்திலே சரணாகதி யடைந்து கொள்ளுங்கள்! எல்லாவற்றிலும் தாயார் சொற்படி நடந்துகொள்ளுங்கள்! எம்பெருமானுடைய பக்தர்களிடத்தே எக்காரணத்தினாலும் எவ்வித குற்றமும் செய்யாது ஜாக்கிரதையா யிருங்கள்! பக்தர்களுக்குப் பணிவிடை புரிவதையே பெரிதெனக் கொள்ளுங்கள்!” என்று கூறினார்.

அவர்கள் ஆழ்வானுடைய பாதங்களிலே விழுந்து அழ, ஆழ்வான் அவர்களைத் தூக்கிவிட்டுக் கண்ணீரைத் துடைத்து, “நீங்கள் ஏன் அழுகிறீர்கள்! இம் மாம்சத்தினாலே நீங்கள் என்னுடன் சம்பந்தப்பட்டவர்க ளென்று கரு

திக்கொண்டு அழுவீர்களானால், நீங்கள் ஆசார்யருடைய சிஷ்யர்கள் என்று சொல்லிக்கொள்ளக் கூடாது!'' என்று கூறினர்.

இதற்குள்ளாக ஆழ்வானுடைய பிரதம சிஷ்யராகிய திருவரங்கத்தமுதனர் இந்தச் சங்கதி யெல்லாம் கேள்விப் பட்டு, முன்னமேயே தமக்குத் தெரியாமற்போய்விட்டதே யென்று விசனம் மிகுந்தவராய், அலறி யடித்துக்கொண்டு, ஆழ்வான் இருந்த இடம் நோக்கி யோடிவந்தார்; ஆழ்வானுடைய பாதங்களிலே அடியற்ற பனைபோல விழுந்தார்; அழுது அழுது புரண்டார். ஆழ்வான் அவருக்கு வேண்டிய தேறுதல்களெல்லாம் கூறி, ஆசார்யரிடத்திலே பரிபூர்ண நம்பிக்கை வைத்தலே அவசியமென்று போதித்தார்.

பின்னர் ஆழ்வான் க்ஷேத்திரத்தை நோக்கிப் படுத்துக்கொண்டு, தமது சிஷ்யராகிய பிள்ளைப்பிள்ளையாழ்வானுடைய மடியிலே தலையும் தமது மனைவியாகிய ஆண்டாளின் மடியிலே கால்களும் வைத்துக்கொண்டார். இங்கு இவருடைய சிஷ்யர் பிள்ளைப்பிள்ளையாழ்வானைப் பற்றி ஒரு சில வார்த்தைகள் கூறுவோம். இவர் ஆழ்வானுடைய சிஷ்யனாயினும், வைஷ்ணவர்கள் எவரையும் தூஷிக்காம லிருப்பதில்லை. ஆழ்வானுக்கு இவரிடத்திலே பிரியம் அதிகம்; ஆகையால், ஜனங்கள் 'இந்த பிள்ளைப்பிள்ளையாழ்வானுடைய தூஷணைக்குக் காரணம் ஆழ்வானே' என்று நம்பிவந்தார்கள். இது ஆழ்வானுக்குத் தெரியவரவே, பிள்

ளைப் பிள்ளையாழ்வான் செய்துவருகின்ற இந்தத் தூஷணையை நிறுத்தும்பொருட்டு, பிள்ளைப் பிள்ளையாழ்வானைக் கூப்பிட்டு "உனது வாக்கு, மனம், காயம் ஆகிய திரிகரணத்தையும் எனக்குத் தானமாகக் கொடுத்துவிடு!" என்று கேட்டு வாங்கிக்கொண்டார்; அப்படியே பிள்ளைப் பிள்ளையாழ்வான் கொடுத்துவிட்டு, தமது வீட்டுக்குச் சென்று, ஒரு வெறுங் கட்டைபோல எச் செயலுமற்றுப் படுத்திருந்தார். ஆனால், எல்லோரையும் பம்பரம்போலாட்டுவிக்கின்ற பிரகிருதி இவரை மாத்திரம் விட்டுவிடுமோ? படுத்திருந்தவர் மறந்துபோய் எழுந்துத் தெருவில் சென்றார்; அங்குப் போய்க்கொண் டிருந்த ஒரு வைஷ்ணவனைப் பார்த்து அவனைப்பற்றித் தூஷணையாக நினைத்தார். உடனே அவர் தமது குருவுக்குச் செய்து கொடுத்த வாக்குத்தத்தம் ஞாபகத்துக்கு வரவே, "என்ன முட்டாள்தனம் செய்தேன்? நான் எனது குருவுக்குத் தானமாகக் கொடுத்ததைத் திருடிவிட்டேனே: நான் கொடும் பாபி; இனிமேல் நான் உயிர் வைத்துக்கொண் டிருக்கலாகாது" என்று சிந்தித்தவராய், உயிரை மாய்த்துக்கொள்ளப் பிரயத்தனம் செய்தார். ஆழ்வானுக்கு இது தெரியவந்தது; உடனே பிள்ளைப் பிள்ளையாழ்வான் இருந்த இடம் அவருடைய மனத்தை யவருக்குத் திரும்பவும் கொடுத்து, "புத்திரா! காயத்தினாலும் வாக்கினாலும் செய்த பாபங்கட் குரிய தண்டனையை அளிப்பதற்குச் சட்டமிருக்கின்றது; ஆனால், மனத்தினால் செய்த பாபங்கட்கு மாத்திரம் ஆசார்யரிடம் சரணாகதி யடைந்து

கொள்வதைத் தவிர, தப்புவதற்கு வேறு வழியில்லை,'' என்று கூறி அவரை ஸ்ரீ ராமாநுஜரிடம் சரணாகதி புகுந்து கொள்ளும்படி செய்தார்.

இந்த பிள்ளைப் பிள்ளையாழ்வானுடைய மடியிலே தலையும், ஆண்டாளின் மடியிலே காலுமாக வைத்துக் கொண்டு, ஆழ்வான் பரமபதம் செல்லக்கருதிப் படுத்துக் கொண்டு. ஸ்ரீ ராமாநுஜருடைய திருவடிகளின்மீது தமது மனத்தை ஏகாக்கிரமாகச் செலுத்தி, இந்த மாம்சக் கூண்டைப் போட்டுவிட்டு, வைகுந்தம் போய்ச் சேர்ந்தார்.

ஆழ்வான் பரமபதம் சேர்ந்துவிட்ட சங்கதி ஸ்ரீ ராமாநுஜருக்குத் தெரியவரவே, உடனே ஸ்ரீராமாநுஜர் அங்குச் சென்று, செய்யவேண்டிய ஈமக் கிரியைகளைப் பட்டரைக் கொண்டு, ஸ்ரீ நாதமுனிகள் சொன்னதுபோலவே பன்னிரண்டு நாட்களும் செய்து வைத்தார்; கிரியைகளெல்லாம் முடிந்தவுடனே வேதத்தின் ஸம்ஹிதைப் பாகமானது பாராயணம் செய்யப்பட்டது. இன்னும் திவ்யப் பிரபந்தமும் ஸ்ரீ ராமாநுஜ நூற்றந்தாதியும் பாராயணம் செய்யுமாறு ஸ்ரீ ராமாநுஜர் ஆக்ஞாபித்தார். இப்பொழுது தேவராஜ முனி தாம் இயற்றியிருந்த திராவிட ஸ்ரீ ராமாநுஜ நூற்றந்தாதியையும் பாராயணம் செய்யுமாறு வேண்டிக்கொள்ள, ஸ்ரீராமாநுஜர் அதில் ஆழ்வானைப்பற்றி ஒரு வார்த்தைகூடயில்லாததனாலே, அதை ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டார். தேவராஜமுனி ஆழ்வானைப்பற்றி ஒரு பாடல் இயற்றி அதில் சேர்க்கவே, பின்னர் அதை ஸ்ரீ ராமா

நுஜர் ஏற்றுக்கொண்டார். பிறகு நம்மாழ்வாருக்குச் சம்பாவனை செய்யப்பட்டது; ஸ்ரீ ராமாநுஜருடைய சிஷ்யர்கள் ஸ்ரீ ராமாநுஜருக்கும் சம்பாவனை செய்தார்கள்; இதை ஏற்றுக்கொள்ள ஸ்ரீ ராமாநுஜருக்கு மனம் இல்லாவிடினும், சிஷ்யர்களுடைய பலவந்தத்துக் கிணங்கி அரை மனத்துடன் ஏற்றுக்கொண்டு, இனிமேல் எல்லாச் சந்தர்ப்பங்களிலும் இந்த வழக்கம் நடைபெற்று வரும்படி ஏற்பாடு செய்தார்.

ஆழ்வான் பரமபதம் எய்தும்பொழுது அவருக்கு வயது 105. அவர் சென்று ஆறுமாதங்கட்குப் பின்னர் அவருடைய நண்பனாகிய ஆண்டானும் வைகுந்தம் அடைந்தார்; ஆழ்வான் போய்விடவே, தநுர்தாசன் ஒரு அநாதைப் பேய் போல அலைபலானான்; இவனும் சின்னாட்களிலே பரமபதம் அடைந்தான்; இவன் சென்று ஒரு சில மணி நேரத்துக்குள்ளே ஹேமாம்பாள் பரமபதம் எய்தினாள். இவர்களுடைய ஈமக்கிரியைகளெல்லாம் நடத்தும்படி ஸ்ரீ ராமாநுஜர் பராசருக்கு ஆக்ஞைபிட்டார்.

இப்பொழுது ஹேமாம்பாளைக் குறித்து ஒரு வார்த்தைக் கூறுவோம். ஒருநாள் சில சிஷ்யர்கள் ஹேமாம்பாளிடம் சென்று "அம்மே! ஆசார்யருள்பட்ப் பலரிடமிருந்து நாங்கள் அறிந்திருக்கிறோம். நாங்கள் சரண் புகுந்து ரக்ஷை பெறுவதற்கு எவரை ரக்ஷக கர்த்தாவாகக் கருதலாம்?" என்று கேட்க, அவள் புந்நகை புரிந்து தனது நீண்டு வளர்ந்த கூந்தலைச் சுற்றிப் பிடித்து அதை யொரு சிவப்புக்

கயிறுகொண்டு கட்டினாள். தலையிலேயுள்ள ரோமத்தைப் போல அறிவு புகட்டுவோர் அநேகர் ஆயினும், அவர்களை யெல்லாம் ஒழுங்கு படுத்துபவர் ஆசார்யரே யாதலால், அவரே ரக்ஷக கர்த்தா என்று பொருள் படும்படி அவ்வாறு செய்தார்.

ஆழ்வானைக் கொண்டுபோய் அடக்கம் செய்த மறுநாள் ஸ்ரீ ராமாநுஜர் எம்பெருமானுடைய சந்நிதானத்திலே பராசரரை யிட்டுச் சென்று, அவரை எம்பெருமானிடம் ஒப்புவித்தார். ஸ்ரீ ரங்கநாதப் பெருமான் அவரைத் தமது அருங்குமரன்போல ஏற்றுக்கொண்டு, பராசரரை நோக்கி "உனது பெற்றோர்கள் பரித்துவிட்டார்கள் என்று வருந்தாதே; நாம் இருக்கிறோம்" என்றார்.

ஸ்ரீ ராமாநுஜர் எம்பெருமானை நோக்கி, "ஸ்வாமி! தேவரீர்தான் இவனுக்குப் பிதா, மாதா, சகலமும். பூமியிலே நான் இன்னும் கொஞ்ச நாட்கள் இருந்து இவனுக்கு வேண்டியன போதித்துவிட்டுப் போவதற்கு உத்தரவு அளிக்கின்றீர்களா?" என்று கேட்க, எம்பெருமான் மறுமொழியே அளிக்கவில்லை. ஸ்ரீ ராமாநுஜருக்கு எம்பெருமானுடைய மௌனம் உண்மைப் பொருளை விளக்கிவிட்டது; அவர் எம்பெருமானிடம் விடை பெற்றுக்கொண்டு நேரே மடத்துக்குச் சென்றார். ஸ்ரீ ராமாநுஜருக்குப் பின் பட்டத்துக்கு வருவதற்கு யோக்கியராகப் பயிற்றுவிக்கப்படும்படி பராசரர் கோவிந்தரிடம் ஒப்புவிக்கப்பட்டார். ஸ்ரீ ரங்கநாதப்பெருமான் பராசரருக்கு ஸ்ரீ வேதாந்தாசார்யபட்டர்

என்றும் பெயர் அளித்தார். ஸ்ரீ ராமாநுஜர் பராசருக்கு இரு பேருண்மைகளை யுபதேசித்து ஒரு சுலோகத்தைக் கற்றுக்கொடுத்து, சுற்றி யிருந்தவர்களை நோக்கி, "நீங்கள் என்னைப் போலவே பராசரரைக் கருதுங்கள்!" என்று கூறிவிட்டு, ஜகன்மாதாவினுடைய சந்நிதானத்துக்குப் பராசரரை யிட்டுச் சென்றார்; ஜகன்மாதா அவரைத் தமது புத்திரனாக ஏற்றுக்கொண்டார்.

ஒருநாள் ஆண்டானுடைய புத்திரனாகிய ஸ்ரீ ராமாநுஜன் என்பவன் ஆசார்யரை யணுகி "ஸ்வாமி! தாங்கள் முதலில் ஞான ஒளியடைந்த ஸ்தலமாகிய ஸ்ரீபெரும்பூதூர் க்ஷேத்திரத்தில் தங்களுடைய விக்கிரகம் ஒன்று வைத்தால் நலம்" என்று கூற, ஸ்ரீ ராமாநுஜர் "சரி" என்றார். உடனே ஆண்டான் புத்திரன் ஸ்ரீ ராமாநுஜர் போன்று அழகியதொரு விக்கிரகம் செய்யுமாறு செய்து ஸ்ரீ ராமாநுஜர் முன்னே கொண்டுவந்து வைக்க, ஸ்ரீ ராமாநுஜர் அந்த விக்கிரகத்தைச் சேர்த்துக் கட்டி யணைத்துக்கொண்டு, தமது சக்திகளை அதற்கு அளித்தார்; பின்னர் ஸ்ரீ ராமாநுஜர் ஒரு நல்ல நாள் பார்த்துக்கொடுத்து, அந்நாளிலே அந்த விக்கிரகத்தை ஸ்ரீ பெரும்பூதூரிலே கொண்டு போய்ப் பிரதிஷ்டை செய்யும்படி ஆக்ஞாபித்தார். ஆண்டானுடைய புத்திரன் அவ்வாறே செய்தான்; அன்று ஸ்ரீ ராமாநுஜருக்குப் பலஹீனமும் சோர்வும் அதிகமாக உண்டாயிற்று; அவருடைய கண்களிலிருந்து ரத்தம் ஒடிற்று. ஸ்ரீ ராமாநுஜருக்கு இது ஆச்சர்யமாயிருந்தது; ஆனால், சீக்கிர

த்தில் உண்மையை அறிந்துகொண்டார். இவருடைய சக்திக ளெல்லாம் ஸ்ரீபெரும்பூதூர் விக்கிரகத்தினிடத்தே போய்ச் சேர்ந்தன.

பின்னல் வரப்போகின்ற ஆசார்யர் இவர்தான் என்று ஸ்ரீ நம்மாழ்வார் ஒரு விக்கிரகத்தை ஸ்ரீ நாதயோகிக ளுடைய கையில் கொடுத்துவிட்டுப் போனுர். அது முறை யே ஸ்ரீ புண்டரீகாக்ஷர், ஸ்ரீ ராமமிச்ரர், ஸ்ரீ யாமுநாசார் யர், ஸ்ரீ கோஷ்டிபூர்ணர், ஸ்ரீ தேவகிப்பிராட்டியார் இவர்க ளிடத்தில் கைக்குக் கை மாறி வந்தது. பின்னர், பிரண தார்த்திஹரர் தேவகிப்பிராட்டியி னிடத்தே நெடுநாட்கள் காத்திருந்து, இந்த விக்கிரகத்தைப் பெற்ருர். ஆதி விக் கிரகங்கள் நாலில் இது ஒன்று. மற்ற மூன்றுமாவன:— (1) ஆசார்யராலே திருநாராயணபுரத்தில் சிஷ்யர்களுக் குக் கொடுக்கப்பட்டதொன்று, (2) ஸ்ரீ பெரும்பூது ரிலே பிரதிஷ்டை செய்யப்படும்படி ஆசார்யராலே ஆண் டானுடைய புத்திரனுக்குக் கொடுக்கப்பட்ட தொன்று; (3) ஆசார்யருடைய சரீரம் அடக்கம் செய்யப்பட்ட இடத் திலே ஆசார்யராலும் ஸ்ரீ ரங்கநாதப்பெருமானுலும் ஆக் ஞை செய்யப்பட்ட விக்கிரகம் ஒன்று.

கொஞ்ச நாட்கள் சென்றன; ஸ்ரீ ராமாநுஜர் பட்டரை எம்பெருமானுடைய சந்நிதானத்துக்கு இட்டுச் சென்று, அவருக்கு வழக்கமான கௌரவங்கள் செய்யப்படும்படி செய்தார்; பின்னர் அங்குக் கூடியிருந்தவர்களை நோக்கி, "இவர்தான் எனக்குப் பின் இந்த ஸ்தானம் வகிப்பவர்;

உங்களுடைய ஆசார்யர்'' என்றார். ஸ்ரீ ராமாநுஜர் பராசரரை நோக்கி, ''மேனாட்டிலே ஒரு பெரிய வேதாந்தியிருக்கிறதாக நான் கேள்விப்படுகிறேன்; அவரைத் தேடிக் கண்டுபிடித்து, விசிஷ்டாத்வைத மதத்தை யவர் அநுசரிக்கும்படி செய்! அவர்தான் உனக்குப் பின் இந்த ஸ்தானம் வகிப்பவர்'' என்று கூறினார்.

---

10-வது அதிகாரம்:

# ஸ்ரீ ராமாநுஜர் பரமபதம் அடைதல்



ஸ்ரீ ராமாநுஜர் பரமபதம் அடையும்பொழுது அவருக்கு வயது நூற்றிருபது; இதில் அவர் அறுபது வருஷ காலம் ஸ்ரீரங்கத்திலே கழித்துவிட்டார். ஒருநாள் ஸ்ரீ ராமாநுஜர் எம்பெருமானுடைய சந்நிதானம் சென்று, இரு கரங்களையும் கூப்பிக்கொண்டு, "ஸ்வாமி! நான் இந்த மாம்சக் கூட்டை நெடுநாட்கள் சுமந்து திரிந்துவிட்டேன்; இப்பொழுது இதை யெறிந்துவிடுதற்கு அநுமதி கொடுக்க வேண்டும்; 'மனிதனுக்குப் பூர்ண ஆயுள் நூறு வருடங்கள்' என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன; நான் அதற்குமேல் இருபது வருஷங்கள் இருந்துவிட்டேன்; நான் பரமபதம் போதற்கு அநுமதி கொடுக்கவேண்டும்" என்று பிரார்த்தித்தார். ஸ்ரீரங்கநாதப் பெருமான் மறுமொழி யளிக்கவேயில்லை. ஆசார்யர் மறுபடியும் மறுபடியும் வற்புறுத்திக் கேட்க, ஸ்ரீரங்கநாதப் பெருமான் இவருக்கு வாக்கு அளிக்கக் கூடாதென்று கருதி "அதைப்பற்றி உனக்கென்ன கவலை? உன்னை எப்பொழுது கூட்டிக்கொள்ளவேண்டும் என்பது எனக்குத் தெரியாதா? உனக்கு இன்னும் கொஞ்சம் வேலை யுள்ளது" என்றார். ஸ்ரீ ராமாநுஜர் "ஸ்வாமி! தேவரீர் அப்படி யுத்தரவு செய்யலாகாது. நான் களைத்துச் சலித்துவிட்டேன். இனிமேல் எவ் வேலையும் செய்ய

என்னால் இயலாது. நான் பரமபதம் அடைய விரும்புகின்றேன்,'' என்று வற்புறுத்தினர். ஸ்ரீ ராமாநுஜர் பிடிவாதக்காரர் என்பதும், நினைத்த கார்யத்தைச் சாதிக்காமல் விடமாட்டாரென்பதும் எம்பெருமானுக்கு நன்றாய்த் தெரியும். ஆகையால், எம்பெருமான் அரை மனத்துடனே ''சரி'' என்று கூற, ஸ்ரீ ராமாநுஜர் ''நான் இத்துடனே தேவரீரை விட்டுவிட்டேனே? எவ்விதத்திலேனும் என்னுடன் சம்பந்தப்படுகிறவர்கள் எல்லோருக்கும் எனக்குக் கிடைக்கும் பதம் கிடைக்குமாறு அருள்புரிந்தாலொழிய, நான் இவ்விடம் விட்டு அகல்வதில்லை,'' என்று சொன்னர்.

எம்பெருமான் ''நல்லது! அப்படியே யாகட்டும். உனக்கு இஷ்டமுள்ளவர்களுக் கெல்லாம் மோக்ஷ லோகம் திறந்திருக்கின்றது,'' என்று சம்மதித்து உத்தரவு கொடுத்தார்.

பின்னர் ஸ்ரீ ராமாநுஜர் தமது மடத்துக்குச் சென்று, தமது சிஷ்யர்களை யெல்லாம் ஒன்று சேரச் செய்து அவர்களை நோக்கி, ''நண்பர்காள்! இன்றைக்கு நாலாம் நாள் நான் உங்களிடமிருந்து போய்விடுவேன். நான் போய்விட்ட பின்னர், மூடத்தனமாக எக் கார்யமும் செய்யாது ஜாக்கிரதையா யிருங்கள்! உண்மையை விட்டுவிடாதீர்கள்! ஜாக்கிரதை! நீங்கள் உங்கள் சித்தாந்தங்களி லிருந்தும் ஒழுக்கங்களிலிருந்தும் தவறிவிட்டால், நீங்கள் ஒருபொழுதும் பரமபதம் அடைவதில்லை; ரௌரவாதி நரகம் அடைவீர்கள். எனது பாதங்களைத் தொட்டு எல்லோரும் சத்தி

யம் செய்யுங்கள்!'' என்று உரைத்தார். அவர்கள் அனைவரும் அப்படியே செய்தார்கள்; சிலர் பெருமூச்செறிந்தார்கள்; சிலர் ஏங்கினர்; சிலர் தேம்பித் தேம்பித் யழுதனர்; சிலர் அலறி யழுதனர். ஸ்ரீ ராமாநுஜர் அவர்கள் எல்லோரையும் ஆகாரம் செய்துகொள்ளும்படி செய்து, பின்னர் தம் முன்னே கூடும்படி ஆக்ஞாபித்தார்.

ஸ்ரீ ராமாநுஜர் தமது சிஷ்யர்களுக்குள்ளே பிரதம ஸ்தானம் வகித்து வந்த ஆண்டான், தேவராஜமுனி, எம்பார், குருகேஶ்வரர், நடுவிலாழ்வான் இவர்களைத் தமது அருகே கூப்பிட்டு, மற்றவர்களை இவர்கள் கைவசம் ஒப்புவித்தார்; பின்னர் பட்டரை நோக்கிப் புந்நகையுடனே, ''ஆண்டானும் ஆள்வானும் எனது சிஷ்யர்களுக்குள்ளே முதல்வர்; இவ் விருவரும் எனது தண்டு கமண்டலமாயிருந்தனர்; அவர்களுக்கு என்னிட மிருந்த அன்பைப் பார்க்கிலும், அவர்களுக்குள் அந்யோந்யம் அன்பு அதிகம்; அதுபோலவே, பராசரனும் ஸ்ரீ ராமாநுஜனும் ஆகிய நீங்கள் இருவரும் அந்யோந்யம் அன்பு செலுத்திக்கொள்ளல் வேண்டும்'' என்றார்.

---

11-வது அதிகாரம்:

# ஸ்ரீ ராமாநுஜர் உபதேசம்

பின்னர் ஸ்ரீராமாநுஜர் சிஷ்யர்கள் இன்னின்ன மாதிரி பொழுகல்வேண்டும் என்று போதனை செய்தார்:—

(1) உங்களுடைய ஞானசார்யரை எப்படிப் பூஜிக்கின்றீர்களோ, அதே மாதிரி ஸ்ரீ வைஷ்ணவர்களையும் பூஜியுங்கள்; எவ்வித வித்தியாசமும் பாராட்டாதீர்கள்.

(2) பண்டைக் காலத்து மகதாசார்யர்களுடைய போதனைகளிலே உண்மையான நம்பிக்கை வையுங்கள்.

(3) ஐம்புலன்களினுடையவும் அடிமைகளாயிராதீர்கள்.

(4) உலக அறிவைச் சம்பாதித்துவிட்டு அதனுடனே திருப்தி படைந்துவிடாதீர்கள்.

(5) எம்பெருமானையும் அவருடைய சிருஷ்டி விநோதங்களையும் மகிமைப்படுத்துகின்ற கிரந்தங்களைப் பாராயணம் செய்து ஆநந்த மடையுங்கள்.

(6) ஆசார்யரிட மிருந்து உங்களுக்குச் சோதி யுணர்வு கிடைத்துவிட்டால், பின்னர் ஐம்புலன்களினால் ஒருபொழுதும் ஆகருஷிக்கப்படாதீர்கள்.

(7) உணர்ச்சிகளெல்லாவற்றையும் அசட்டையுடன் கருதக் கற்றுக்கொள்ளுங்கள்.

(8) சந்தனம், புஷ்பம், சுகந்தங்கள் முதலியவற்றில் அதிக ஆசை வையாதீர்கள்.

(9) எம்பெருமானுடைய நாமத்தையும் மகிமையையும் எப்படிக் கூறி ஆநந்திக்கின்றீர்களோ, அப்படியே அவருடைய பக்தர்களுடைய நாமத்தையும் மகிமையையும் கூறி ஆநந்தியுங்கள்.

(10) எம்பெருமானுடைய பக்தர்களுக்குப் பணிவிடை செய்பவனே எம்பெருமானுடைய பாதாரவிந்தங்களைச் சீக்கிரம் அடைவானென்பதை நன்றாக மனத்தில் பதித்துக்கொள்ளுங்கள்.

(11) மனிதன் எவ்வளவு ஞானமுடையவனாயிருந்தாலும், எம்பெருமானுக்கும் அவருடைய பக்தர்களுக்கும் தொண்டு புரியும் விஷயத்திலே தன்னை அடியோடு அர்ப்பணம் செய்துகொள்ளாத விஷயத்தில், அவன் ஈடேறுகிறதில்லை.

(12) வைஷ்ணவனுடைய வாழ்க்கையைப் பயனையடைதற்கு ஒரு உபாயமாகக் கருதாதீர்கள்.

(13) நீங்கள் அடைய முயற்சிக்கவேண்டியது லக்ஷியம் ஒன்றையே.

(14) எம்பெருமானுடைய பக்தர்களிடத்து ஒரு பொழுதும் அவமரியாதையான பாஷை வழங்காதீர்கள்.

(15) வைஷ்ணவனைப் பார்த்தமாத்திரத்திலே அவனுக்கு வணக்கம் செய்யத் தவருதீர்கள்.

(16) எம்பெருமானுடைய சந்நிதானத்திலே, அல்லது பக்தர்களின் முன்னே, அல்லது சாதுக்களின் முன்னிலையில் கால்களை நீட்டிக்கொண்டு சுகமாய் உட்கார்ந்திராதீர்கள்.

(17) ஆலய முகமாக, அல்லது அவருடைய பக்தர்களுக்கு நேராக, அல்லது மற்ற பரிசுத்த புருஷர்களுக்கு நேராகக் கால்களை நீட்டிக்கொண்டு படுத் துறங்காதீர்கள்.

(18) விழித்தவுடனே ஆழ்வாராதியர்களுடைய நாமங்களை உச்சரியுங்கள்.

(19) எம்பெருமான் சந்நிதானத்திலே ஸ்ரீ வைஷ்ணவர்கள் ஒரு கூட்டமாகக் கூடியிருந்து நீ அங்கே செல்லும்படி நேர்ந்தால், இரு பேருண்மைகளையும் உச்சரித்துக்கொண்டே அவர்களுக்கு நமஸ்காரம் செய்யுங்கள்.

(20) வைஷ்ணவர்கள் எம்பெருமானுடைய அல்லது அவருடைய பக்தர்களுடைய நாமங்களையும் மகிமைகளையும் ஸ்தோத்திரம் செய்துகொண்டிருக்கும்பொழுது, உங்களாலானவரையில் அவர்களைப் பூஜியுங்கள். நடுவில் எழுந்திருந்து போய்விடாதீர்கள்; இது மகா பாபமாகும்.

(21) ஒரு வைஷ்ணவர் உங்களிடம் வருவதாக நீங்கள் கேள்விப்பட்டால், அவரை எதிர் சென்று அழைக்கத் தவறுதீர்கள். அவர் போகும்பொது, கொஞ்சதூரம் சென்று, வழிவிட்டு வாருங்கள்! இந்த விதிகளை அலக்ஷியம் செய்தால் பாபம் நேரிடும்.

(22) ஸ்ரீ வைஷ்ணவர்களிடத்திலே தாழ்ந்த வேலை ஏதேனும் ஏற்றுக்கொண்டு, அதனல் ஜீவனம் செய்யுங்கள்! ஆனல், கிருபைக்குப் பாத்திரமாகாத ஜனங்களுடைய வீடுகட்குச் செல்லுதல், அவர்களுடன் பழகுதல், அவர்களிடம் ஜீவனம் பெறுதல், இவையெல்லாம் உங்களைத் தாழ்த்திவிடும்.

(23) எம்பெருமானுடைய க்ஷேத்திரங்களை, அல்லது கோபுரங்களைப் பார்த்த மாத்திரத்திலே, மிகுந்த பயபக்தியுடனே உங்களுடைய கைகளைக் கூப்பிக்கொள்ளுங்கள்.

(24) அந்நிய தேவதைகளின் கோவில்கள் எவ்வளவு அழகாயிருந்தாலும் அவற்றை ஆச்சர்யமாகப் பாராதீர்கள்.

(25) அந்நிய தேவதைகளுடைய அற்புதச் செயல்களைப்பற்றி எவரேனும் சொல்லக் கேட்டு நீங்கள் பிரமித்து விடாதீர்கள்.

(26) ஸ்ரீ வைஷ்ணவர்கள் எம்பெருமானுடைய, அல்லது ஆழ்வாராதியர்களுடைய, அல்லது ஆசார்ய புருஷருடைய மகிமைகளைப்பற்றி ஆநந்தமாகச் சம்பாஷித்துக்

கொண்டிருக்கும்பொழுது, குறுக்கே புகுந்து வாதிப்பது பெரும் பாபம்.

(27) ஸ்ரீ வைஷ்ணவர்களுடைய நிழலைத் தாண்டாதீர்கள்.

(28) உங்களுடைய நிழலும் அவர்கள்மீது படும்படி செய்யாதீர்கள்.

(29) வைஷ்ணவரல்லாத ஒருவரை நீங்கள் ஸ்பர்சிக்கும்படி நேர்ந்துவிட்டால் நீங்கள் ஸ்நாநம் முதலியன செய்து சுத்தமாவதற்கு முன்னே, ஸ்ரீ வைஷ்ணவர்களைத் தொடாதீர்கள்.

(30) ஒரு எளிய வைஷ்ணவன் உங்களை முதலில் நமஸ்கரித்தால், அவனை அவமரியாதையாக நடத்தாதீர்கள்! அது பெரும் பாபம்.

(31) ஒரு ஸ்ரீ வைஷ்ணவன் உங்களை முதலில் நமஸ்கரித்து, "நான் உங்களுடைய தாசன்" என்று கூறினால், அவனுக்கு எவ்விதத்திலும் அவமரியாதை காண்பிக்காதீர்கள்! அது பெரும் பாபமாம்.

(32) எந்த ஸ்ரீ வைஷ்ணவரிடத்தாவது உறக்கம், சோம்பர், இழிபிறப்பு முதலிய எக்குறைகளேனும் இருப்பதாக உங்களுக்குத் தெரியவந்தால், நீங்கள் அவற்றைப் பிறருக்குப் பகிரங்கப் படுத்தலாகாது. அக் குறைகளையெல்லாம் மனத்திலேயே வைத்துக்கொண்டு, அவர்களுடைய நற்குணங்களையே வெளியிற் கூறவேண்டும்.

(33) பஞ்ச சம்ஸ்காரம் செய்யப் பெறுதவர்களுடைய முன்னிலையிலே, எம்பெருமானுடைய அல்லது அவருடைய பக்தர்களுடைய பாததீர்த்தத்தை யெடுத்துக்கொள்ளாதே.

(34) மூன்று உண்மைகளையும், மூன்று ரஹஸ்யங்களையும் அறியாதவர்களுடைய பாத தீர்த்தத்தை யெடுத்துக் கொள்ளாதே.

(35) ஞான மார்க்கத்தை யநுசரித்துப் பரிசுத்த வாழ்க்கை வாழ்பவருடைய பாததீர்த்தத்தை எவ்விதத்திலும் அடையத் தவறாதே.

(36) ஆழ்வாராதியர்களுக்குச் சமமாக நீயே உன்னைக் கருதி உயர்த்திக் கொள்ளாதே.

(37) அஜாக்கிரதையினால் நீ நம்பிக்கை யற்றவனால் தீண்டப்பெற்றுவிட்டால், உடுத்தியிருந்த வஸ்திரங்களுடனே ஸ்நாநம் செய்து, ஸ்ரீ வைஷ்ணவர்களுடைய பாத தீர்த்தத்தினாலே நீ உன்னைப் பரிசுத்தம் செய்துகொள்.

(38) நிராசை, ஞானம், பக்தி முதலிய நற்குணங்களுடைய பெரியோர்கள் கடைசியாக ஜன்ம மெடுத்திருக்கிறார்களென்றும் அவர்களுடைய சரீரம் மகா பரிசுத்தமானதென்றும் கருதி, உன்னாலியன்ற அளவு அவர்களுக்குத் தொண்டுசெய்.

(39) உனது பணத்தை அவர்களுடைய பிறப்பினிடத்தே அல்லது, குறைவு செய்யும் வேறு எத்தன்மையினிடத்

தும் செலுத்தாதே; ஆனல், அவர்களை நீ தொண்டு செய்து பின்பற்றுவதற்கு அனுப்பப்பட்ட மஹான்கள் என்று கருது.

(40) நம்பிக்கை யற்றவர்களுடைய கிருகங்களிலே எம்பெருமானுடைய பாததீர்த்தத்தை யெடுத்துக்கொள்ளாதீர்கள்.

(41) அவர்களுடைய கிருகங்களிலே எம்பெருமானுடைய விக்கிரகங்களைப் பூஜிக்கவும் செய்யாதீர்கள்.

(42) ஆனல், எம்பெருமானுடைய சந்நிதானத்தினுலே பிரகாசிக்கின்ற பரிசுத்த ஸ்தலங்களிலே, நம்பிக்கை யற்றவர்கள் கூடியிருந்தாலும், எம்பெருமானுக்குச் செய்த நைவேத்தியங்களை யோசனை செய்யவேண்டாம்.

(43) எம்பெருமானுடைய சந்நிதானத்திலே ஒரு ஸ்ரீ வைஷ்ணவன் எம்பெருமானுடைய பிரசாதத்தை யெடுத்துக்கொள்ளும்படி உன்னை வேண்டினல், அன்று உனக்கு உபவாசதினம் என்ற காரணத்தைக் கூறி, அதை மறுத்துவிடாதே.

(44) எம்பெருமானுடைய பிரசாதத்தை மிகமிகப் பரிசுத்தமானதாகக் கருது; அது உனது பாபங்களை யெல்லாம் எரித்துவிடுகிறது. "அது இன்னரால் செய்யப்பட்டது, அது சுத்தமானது அன்று" என்று சொல்லாதே.

(45) ஸ்ரீ வைஷ்ணவர்கள் முன்னிலையில் நீ உன்னை ஸ்தோத்திரம் செய்துகொள்ளாதே.

(46) இன்னொருவரை யவமானமும் செய்யாதே.

(47) எம்பெருமானின் பக்தர்களுடைய மகிமைகளைப் பாடுவதிலே, அல்லது அவர்களுக்குப் பணிவிடை செய்வதிலே உனது நேரத்தின் ஒவ்வொரு நிமிஷமும் கழியட்டும்.

(48) உனது ஞான ஆசார்யருடைய நற்குணங்களைப் பற்றி ஸ்தோத்திரம் செய்வதற்காக உனது நாளில் ஒரு பாகத்தை, குறைந்தது ஒரு மணி நேரமாவது செலவிடு.

(49) அப்படியே ஆழ்வாராதியர்களுடைய அல்லது, உனது ஆசார்யருடைய பரிசுத்த நூல்களைப் பாராயணம் பண்ணும் விஷயத்திலும் செலவிடு.

(50) ஸ்வயநலப் பிரியர்களுடனே சகவாசம் செய்யாதே.

(51) ஸ்ரீ வைஷ்ணவர்களுடைய வெளி வேஷத்தை மாத்திரம் தரிக்கும்ஆஷாடபூதிகளுடனும் சகவாசம் செய்யாதே.

(52) புறங்கூறுபவருடனும், நிந்தை செய்பவருடனும் சம்பாஷணை செய்யாதே.

(53) இதர மதங்களைச் சேர்ந்தவர்களுடனே சம்பாஷித்த பாபங்களைப் போக்கடித்துக்கொள்வதற்காக, ஸ்ரீ வைஷ்ணவர்களுடனே சம்பாஷணை செய்.

(54) பகவத் பக்தர்களை நிந்தித்துப் புறங் கூறுகின்ற இழிஞர்களை எறிட்டும் பாராதே; மனுஷ்ய வடிவெடுத்து

குருத் துரோகிகளாய்த் தோன்றும் புலிகளையும் எறிட்டுப் பாராதே.

(55) இருபெருண்மைகளின் ரஹஸ்யத்தை யறிந்தவர்களுடைய சகவாசத்தையே எப்பொழுதும் நாடு.

(56) "மோக்ஷத்துக்கு வேறு மார்க்கங்கள் உண்டு" என்று கூறுபவருடன் சேராதே; எப்பொழுதும் பிரபத்தியை யநுஷ்டிக்கின்றவர்களுடனேயே சேர்ந்திரு.

(57) மூன்று உண்மைகளையும், மூன்று ரகஸ்யங்களையும் நன்கு தெரிந்து தெளிந்தவர்களுடனேயே எப்பொழுதும் சேர்ந்திரு.

(58) எப்பொழுதும் பொன்னையும் சுகத்தையும் நாடிக்கொண் டிருப்பவர்களுடைய சகவாசத்தை நாடாதே. ஆனால், கூடுமானவரையில் பகவத் பக்தர்களுடனேயே சேர்ந்திரு.

(59) ஒரு வைஷ்ணவன் உனக்கு ஏதேனும் தீங்கு செய்தால், அவனுக்கு விரோதமாக எவ்வித தீய நினைப்பும் கொள்ளாதே; ஆனால், தன்னடக்க முடையவனாயிரு.

(60) பரமபதத்திலே உனக்கு இடம் வேண்டுமென்று நீ இச்சித்தால், எப்பொழுதும் வைஷ்ணவர்களுக்கு நன்மை செய்வதிலேயே கருத்தாயிரு.

(61) பகவானிடத்திலே சரணாகதி யடைந்துவிட்ட ஞானி பகவத் பக்தர்களுடைய விஷயத்திலே நடந்து

கொள்ளவேண்டிய மாதிரியில் ஒரு பொழுதும் தவறக் கூடாது.

(62) எவ்விதமான ஆகாரமும், அல்லது எவ்விதமான சந்தனக் குழம்பு, புஷ்பம், தாம்பூலம், வஸ்திரம் அல்லது பானகம் இவற்றைப் பகவானுக்கு நைவேத்தியம் செய்யப் படுகிற வரையில் ஒருபொழுதும் எடுத்துக்கொள்ளக் கூடாது.

(63) ஐச்வர்யத்தையும் சுகத்தையும் நாடுகின்றவர்கள் அவர்களாகக் கொடுத்தாலும்கூட அவர்களிட மிருந்து ஒன்றையும் ஏற்றுக்கொள்ளாதே.

(64) பரிசுத்தப் பிறப்பும், பரிசுத்த வாழ்க்கையுமுள்ள ஜனங்கள் ஆக்கிய ஆகாரத்தை யெடுத்துக்கொள்.

(65) உனது கண்களுக்கு நன்றாயிருக்கின்றனவென்ற ஒரு காரணத்தை மாத்திரம் வைத்துக்கொண்டு, எந்த வஸ்துவையும் ஈஶ்வரனுக்கு அர்ப்பணம் செய்துவிடாதே

(66) ஆனால், சாஸ்திரங்களில் விதிக்கப்பட்டுள்ள வஸ்துக்களையே எம்பெருமானுக்கு அர்ப்பணம் செய்.

(67) எம்பெருமானுக்குச் சமர்ப்பிக்கப்பட்ட ஆகாரத்தையும் சுகந்த வஸ்துக்களையும் அவர் ஏற்றுக்கொண்டதனாலே பரிசுத்தம் பண்ணப்பட்ட வஸ்துக்கள் என்றுமாத்திரம் கருது; போகிக்கப்படத்தக்க வஸ்துக்கள் என்று ஒரு பொழுதும் கருதாதே.

(68) சாஸ்திரவிதிகளைப் பகவானுக்குச் செய்யும் பணிவிடையாகச் செய்.

(69) திரிமந்திரங்களையும் எப்பொழுதும் தியானம் செய்துகொண்டேயிருக்கும் மஹாத்மாக்கள் விஷயத்திலே அவமரியாதை செய்தால், அதிவேகத்திலே அதோகதி கிடைப்பது நிச்சயம்; அவர்களுடைய கிருபைக்குப் பாத்திரமாய்விட்டால், நித்திய வாழ்க்கையும் நிச்சயம்.

(70) உனது வாழ்க்கையின் பயனும் நோக்கமும் பகவத் பக்தர்களுக்குப் பணிவிடை செய்தலே என்று அறிந்துகொள்; அவர்களுக்கு எவ்விதத்திலேனும் அதிருப்தி ஏற்பட்டுவிட்டால், அதோகதி நிச்சயம்.

(71) பகவானுடைய விக்கிரகங்களை வெறுங் கல் துண்டுகளாகவும், தன்னுடைய ஞானசார்யரைச் சாதாரண மனிதனாகவும், பக்த சிரேஷ்டர்களை அவர்களுடைய பிறப்புக்கேற்றபடி உயர்ந்தவர்களாகவும் அல்லது தாழ்ந்தவர்களாகவும்,பாபமெல்லாவற்றையும் பறக்கடிக்கும் பாத தீர்த்தத்தை வெறுந் தண்ணீராகவும், பரிசுத்த மந்திரங்களைச் சப்தங்களின் கூட்டமேயென்றும், சர்வலோக நாதன் மற்றத் தேவர்களைப் பார்க்கிலும் எவ்விதத்திலும் உயர்ந்தவரல்லரென்றும் எவன் கருதுகின்றானோ, அவனை என்றென்றும் ரௌரவாதி நரகங்களிலே வசிப்பவனென்றும் நீ கருதலாம்.

(72) பகவானுக்குச் செய்யும் பூஜையைவிட பகவத் பக்தர்களுக்குச் செய்யும் பூஜையே மிகப் பயனுள்ளதாம்;

அவர்களை அவமரியாதை செய்தால், அது பகவானை நிந்தித்ததனு லுண்டாகும் பாபத்தைவிட அதி பயங்கரமான பாபமாம்; அவர்களுடைய பாத தீர்த்தம் பகவானுடைய பாத தீர்த்தத்தினும் பரிசுத்தமாம். இதை நன்ருக ஹிருதயத்தில் தரித்துக்கொண்டு, பக்தர்களுக்குப் பணிவிடை செய்வதிலே என்றும் கருத்தா யிருங்கள்.''

ஸ்ரீ ராமாநுஜர் இவ்விதமாக உபதேச மொழிகளைப் புகன்றவுடனே, சிஷ்யர்கள், ''ஸ்வாமி! நாங்கள் இச் சரீரத்தினின்றும் பிரிகிற வரையில் எப்படி யிருக்கவேண்டுமென்பதைத் தயவு செய்து ஆக்ஞாபிக்கவேண்டும்'' என்ருர்கள்.

ஆசார்யர் ''அப்படியே யாகட்டும்'' என்று சொல்லிப் பின் வரும் மாதிரி ஆக்ஞாபித்தார்.

(1) பகவானிடத்திலே சரணுகதி யடைந்துவிட்டவன் அவனுடைய பிற்காலத்தைப்பற்றி யொருபொழுதும் கருதுதல் கூடாது; ஏனெனில், அது பகவானுடைய கையிலிருக்கின்றது; அவன் கொஞ்சமேனும் அதைப்பற்றிக் கவலைப்பட்டானுனல், அவன் சரணுகதி யடைந்தது ஆஷாடபூதித் தன்மையேயாம்.

(2) அவனுடைய தற்கால வாழ்க்கை அவனுடைய முன் கர்மத்தின் பயனும்; ஆகையால், அவன் அதைக் குறித்து ஒருபொழுதும் வருந்துதல்கூடாது. தற்காலம் அவ்

லது பிற்காலத்தைப்பற்றி வைஷ்ணவன் கவலையே கொள்ள லாகாது.

(3) ஒரு பயனைக் கருதிச் செய்யும் உபாயங்களாக உங்கள் கடமைகளை யொருபொழுதும் செய்யாதீர்கள்.

(4) அவற்றைப் பகவானுக்குப் பணிவிடையாகவே கருதுங்கள்.

(5) ஸ்ரீ பாஷ்யத்தைப் படித்து, அதன் போதனைகளை எங்கெங்கும் பரப்புங்கள்; இது பகவானுக்குச் சந்தோஷம் அளிக்கும் பணிவிடையாம். நீ இது செய்ய முடியாவிட்டால்,

(6) ஸ்ரீ சடகோபர் முதலிய மஹாத்மாக்களுடைய பரிசுத்த நூல்களை யாராய்ந்து, அவற்றைத் தகுந்த சிஷ்யர்களுக்குப் போதியுங்கள்; அல்லது,

(7) பரிசுத்த ஸ்தலங்களிலே எம்பெருமானுக்குப் பணிவிடை செய்வதிலே உங்கள் காலத்தைக் கழியுங்கள்.

(8) யாதவாத்ரியிலே ஆச்ரம மொன்று இயற்றிக் கொண்டு அங்கே பரிபூர்ண அமைதியுடன் வசியுங்கள்.

(9) இருக்கும் இடத்திலேயே யிருங்கள்; உங்கள் பாரங்களை யெல்லாம் பகவான்மீது, அல்லது உங்களுடைய குருவின்மீது போட்டுவிட்டு, எப்பொழுதும் இருபெருண்மைகளின் பொருளைத் தியானித்துக்கொண்டிருங்கள்.

(10) ஞானம், பக்தி, நிராசை முதலிய நற்குணங்கள் உடைய ஒரு வைஷ்ணவரை நாடி அவர் உங்களிடத்தே அன்பும் அருமையும் பாராட்டும்படி செய்துகொள்ளுங்கள்; நான் என்ற அகங்காரத்தை யடியோடு அழித்துவிடுங்கள்; அந்த வைஷ்ணவருடைய சொற்படி நடவுங்கள்; இது ஒன்றே முக்தி யடைதற்கு உபாயம்.

(11) இவ்வாழ்க்கையிலே நண்பர்கள் இன்னாரென்றும், சத்துருக்கள் இன்னாரென்றும், உதாசீனர்கள் இன்னாரென்றும் ஜாக்கிரதையாகப் பிரித்தறிந்துகொள்ளல்வேண்டும். ஸ்ரீ வைஷ்ணவர்களே நண்பர்கள்; பகவானை வெறுக்கிறவர்களே விரோதிகள். உலகினர் உதாசீனர்கள். நீங்கள் நண்பர்களைச் சந்திக்கும்பொழுது, உங்களுடைய கண்களுக்கு அழகான தாம்பூல புஷ்ப கந்தாதிகளைக் கண்டால் எவ்வாறு ஆநந்திக்குமோ, அவ்வாறு உங்களுடைய ஹிருதயம் ஆநந்திக்கும்.

(12) நீங்கள் சத்துருக்களைச் சந்தித்தால், உங்களுடைய ஹிருதயம்: சர்ப்பம், புலி போன்ற பயங்கரமான, அபாயகரமான பிராணிகளைக் கண்டால் எப்படி நடுங்குமோ அப்படி நடுங்கும்.

(13) நீங்கள் உதாசீனர்களைச் சந்தித்தால், நீங்கள் கல்களையும் கட்டைகளையும் எப்படிக் கருதுகிறீர்களோ அப்படியே வெகு அலக்ஷியமாகக் கருதுவீர்கள்.

(14) பகவானிடத்திலே சரணாகதி யடைந்துள்ள நீங்கள் இவ்விதமாக நடந்துகொள்ளல்வேண்டும்.

(15 )வைஷ்ணவர்களுடனே சகவாசம் செய்யுங்கள்! உங்களுடைய ஹிருதயத்திலே ஞானம் பிரகாசிக்கும்; நீங்கள் முக்தி யடைவீர்கள்.

(16) சத்துருக்களுடனே ஒருபொழுதும் சகவாசம் செய்யாதீர்கள்; அவர்களுடன் ஒருபொழுதும் பேசாதீர்கள்; நீங்கள் நண்பர்களை யவமதித்து, உலக நோக்கங்களை முன்னிட்டுச் சத்துருக்களுக்கு மரியாதை பண்ணினால், பகவானுடைய மனத்தைப் புண்படுத்துயவர்க ளாவீர்கள். ஆகையால், எவ்வித உலகப் பிரயோசனங்களை முன்னிட்டும் சத்துருக்களுக்கு மரியாதை செய்யாதீர்கள்; ஏனெனில், அவர்களிடமிருந்து உனக்குக் கிடைக்கும் ஐச்வர்யம் உனக்கும் பகவானுக்கும் சீக்கிரத்திலே விரோதத்தை யுண்டுபண்ணிவிடு மென்பது நிச்சயம்.

(17) சர்வலோகநாதனுகிய பகவான் உங்களுக்குக் கேட்டதெல்லாம் கொடுப்பதற்கு இருக்கும்பொழுது நீங்கள் என் சத்துருக்களிடம் போய்ப் பிச்சையேற்கவேண்டும்? உலகப் பிரயோசனங்களை யுத்தேசித்து உதாசீனர்களுக்கும் மரியாதை செலுத்தாதீர்கள்.

இவ்விதமாக ஸ்ரீ ராமாநுஜர் தமது சிஷ்யர்களுக்கு உபதேசம் செய்தார்.

பின்னர் அவர் க்ஷேத்திரத்து உத்தியோகஸ்தர்களுக்கும் பணியாளர்களுக்கும் சொல்லியனுப்பி வரவழைத்து, அவர்கள் முன்னே யிருகைகளையும் கூப்பி நின்றுகொண்டு

"நான் தெரிந்தும் தெரியாமலும் எப்பொழுதேனும் உங்களுக்கு எவ்விதத்திலேனும் குற்றம் செய்திருந்தால், என்னைத் தயவுசெய்து இப்பொழுதே மன்னித்திடுக" என்று கேட்டுக்கொண்டார்.

அவர்கள் அச்சமும் ஆச்சர்யமும் உடையவர்களாகி, "ஸ்வாமி! நீங்களா குற்றம் செய்ய! எங்களிடத்திலா தேவரீர் மன்னிப்புக் கேட்கிறீர்கள்? அதிருக்கட்டும்; தேவரீர் இப்பொழுது எங்களை விட்டுப் பிரிந்துவிடப்போகின்றீர்களே; நாங்கள் என்ன செய்வது?" என்று கேட்டார்கள்.

"என்ன செய்வதா? இருநதிகளுக்கு மிடையிலுள்ள எம்பெருமானுக்குப் பணிவிடை செய்வது உங்களுக்குக் கஷ்டமாயிருக்கிறதோ? அவருடைய சந்நிதானத்தைவிட்டுப் போகின்ற நான்தான் துர்ப்பாக்கியன், உங்களா லானவரையில் பகவானுக்கு உண்மையாய்ப் பணிவிடை செய்யுங்கள்; இன்னும் பகவான் சந்நிதானத்துக்கு வரும்படி நேர்கின்ற பக்தர்களையும் அன்புடன் ஆதரியுங்கள்."

பின்னர், பிள்ளானுடையவும் ஆண்டானுடைய புத்திரன் ஸ்ரீ ராமாநுஜனுடையவும் வேண்டுகோளுக் கிணங்கி, ஸ்ரீ ராமாநுஜர் தம்மைப் போன்று மூன்று விக்கிரகங்கள் வார்க்கச் செய்து, ஸ்ரீரங்கத்திலே வைக்கும்படிப் பிள்ளானுக்கு ஒன்றும், தமது ஜனன ஸ்தலத்திலே வைக்கும்படி ஸ்ரீ ராமாநுஜனுக்கும் நல்லானுக்குமாக ஒன்றும், திருநார

யணபுரத்திலே வைக்கும்படி ஆச்சானுக்கு ஒன்றுமாகக் கொடுத்தார்.

நடாதூர் ஆழ்வான் (வரதவிஷ்ணு ஆசார்யர்) "என க்கு மாத்திரம் இல்லையா? நான் என்ன குற்றம் செய் தேன்?" என்று கேட்டார்.

ஸ்ரீ ராமாநுஜர் உடனே தமது விக்கிரகத்தைக் காஞ்சீ புரத்திலே பிரதிஷ்டை செய்யும்படி நடாதூர் ஆழ்வானுக் கும், மேலைத் திருப்பதியிலும் கீழ்த் திருப்பதியிலும் பிரதி ஷ்டை செய்யும்படி ஸ்ரீசைலபூர்ணருடைய புத்திரனுக்கும் அநுமதி கொடுத்தார்.

பின்னர் அவர், பிள்ளானையும் ஆச்சானையும் தனியே இட்டுச் சென்று நெடுநேரம் பேசிக்கொண்டிருந்தார்; தாம் தினந்தோறும் பூஜித்துவந்த ஸ்ரீ வரதராஜப்பெருமா னுடைய விக்கிரகத்தையும், ஹயக்கிரீவ மூர்த்தியினுடைய விக்கிரகத்தையும் பிள்ளானிடத்தில் ஒப்புவித்தார்.

அவர், எழுபத்து நான்கு சங்கங்களும், எழுபத்து நான்கு சக்கரங்களும், ஸ்ரீ பாஷ்யத்தின் நான்கு பிரதிக ளும் தயார்செய்து இவற்றையும் திவ்யப் பிரபந்தத்திற்குப் பிள்ளான் எழுதிய வியாக்கியானத்தையும் ஸ்ரீ வரதராஜப் பெருமானுடைய விக்கிரகத்தின் முன்னே வைத்து, எடு த்து, பகவானுடைய அநுமதியின் பேரில் சங்கங்களையும் சக்கரங்களையும் தமது சிஷ்யர்களுள் எழுபத்து நான்கு

பெயர்கட்குக் கொடுத்து, அவர்களுக்கு ஸிம்ஹாசனாதிபதி கள் என்ற பெயரிட்டார்.

ஸ்ரீ பாஷ்யத்தை யெடுத்து உரைக்கும் உரிமையை வரத விஷ்ணு ஆசார்யர், ஆச்சான், இராமாநுஜன், பிள் ளான் ஆகிய இந் நால்வருக்கும் அளித்தார்.

பிள்ளானுக்குப் பாஷ்யம், திவ்யப் பிரபந்தம் இரண் டுக்கு முள்ள உரிமையை அளித்தார்; எல்லாரும் பிள்ளா னுக்குக் கீழ்ப்படிந்து அவரை யாதரிக்கவேண்டுமென்று ஆக்ஞாபித்தார்.

சிஷ்யர்க ளெல்லோருக்கும் பராசரரைத் தலைமை யாக்கினார்.

தமக்குச் செய்யவேண்டிய ஈமக் கிரியைகளெல்லாம் இராமாநுஜன் செய்யும்படி ஏற்பாடு செய்தார்.

ஸ்ரீ பாஷ்ய வியாக்கியான கர்த்திருத்துவத்தை வரத விஷ்ணு ஆசார்யருக்கு அளித்தார். ஸ்ரீஸூக்தி முதலிய அவ ருடைய மற்றக் கிரந்தங்களைப் பராசரர் வியாக்கியானம் செய்யும்படி நியமித்தார்.

பின்னர்க் கோவிந்தருடைய மடியிலே தலை வைத்துக் கொண்டு, ஆந்திர பூர்ணருடைய மடியிலே கால்களை நீட் டிக்கொண்டு படுத்துக்கொண்டார். சனிக்கிழமை, பிங்கள வருஷம், மாசிமீ சுக்கிலபக்ஷம், தசமி, ஆருத்ரா நட்சத்திரம், கலியுகம் 4238 வருஷங்களாய்விட்டன.

ஸ்ரீ ராமாநுஜர் இந்தத் தினத்திலே ஸ்ரீ மஹாபூர்ணருடைய பாதரக்ஷைகளைத் தரிசித்துக்கொண்டும், ஸ்ரீ யாமுநாசார்யருடைய பாதாரவிந்தங்களை ஸ்மரித்துக்கொண்டும், ஸ்தூல சரீரத்தைப் போட்டுவிட்டுப் பரமபதம் போய்ச் சேர்ந்தார்.

இந்த சமாசாரம் வெளியில் தெரிந்ததுதான் தாமதம்; தேசத்தின் நாலா பக்கங்களிலிருந்தும் சிஷ்யர்கள் ஓடோடி வந்தார்கள். திருப்பதியிலிருந்து ஸ்ரீ அநந்தார்யர், ஸ்ரீ குஹதேசர் முதலியவர்கள் வந்தார்கள். கீழ் நாட்டிலிருந்து ஸ்ரீ எக்ஞேசரும் மற்றவர்களும் வந்தார்கள். பாண்டி தேசத்திலிருந்து ஸ்ரீகோஷ்டி பூர்ணருடைய புத்திரராகிய் யாமுனரும் மற்றவர்களும் வந்தார்கள்; திருநாராயணபுரம் முதலிய இடங்களிலிருந்து ஸ்ரீ மாலாதரருடைய புத்திரராகிய ஸ்ரீசுந்தர பாகுவும், ஸ்ரீசோமயாஜி ஆண்டானும், ஸ்ரீ மருதூர் நம்பி, ஸ்ரீதொண்டனூர் நம்பி முதலியவர்களும் இன்னும் பலரும் வந்தார்கள். ஸ்ரீபராசரரும் ஸ்ரீராமாநுஜனும் எல்லோரையும் வரவேற்றுத் தேறுதல் கூறினார்கள். ஆயிரக் கணக்காகக் கூடிய அந்தச் சிஷ்யர்கள் பட்ட பாட்டை எப்படி யுரைப்பது!

குடை, கொடி, சாமரம் முதலிய க்ஷேத்திர விருதுகளெல்லாம் வந்தன; பகவானுடைய ஆடை கொண்டு வரப் பட்டது. ஸ்ரீ ராமாநுஜருடைய சரீரம் பரிசுத்த தீர்த்தத்திலே ஸ்நாநம் செய்விக்கப்பட்டுப் புண்டரக் குறிகள் இடப் பட்டன; கழுத்திலே புஷ்பமாலை போடப்பட்டது. ஸ்ரீ குருகேஶ்வரரை ஸ்ரீராமாநுஜர் தமது ஞான புத்திரனாக வரித்துக்கொண்டதனாலே, அவர் பிரஹ்மமேதச் சடங்குகளுடனே ஈமக்கிரியைகளெல்லாம் செய்து முடித்தார்.

---

## 12-வது அதிகாரம்:

# ஸ்ரீ விசிஷ்டாத்வைத மத வரலாறு



விசிஷ்டாத்வைத மதம் இரு வகைப்படும்:— வைஷ்ணவ விசிஷ்டாத்வைதம், சைவ விசிஷ்டாத்வைதம். ஆனால், பொதுவாக விசிஷ்டாத்வைதம் என்றவுடனே பொது ஜனங்கள் வைஷ்ணவ விசிஷ்டாத்வைதத்தைத்தான் பொருள் படுத்திக்கொள்கின்றார்கள். சைவ விசிஷ்டாத்வைதம் இப்பொழுது சைவ சித்தாந்தம் என்ற பெயருடனேயே விளங்குகின்றது. எல்லா மூர்த்தங்களினும் ஸ்ரீ விஷ்ணுவே பிரதானம் என்று கொள்வது வைஷ்ணவ விசிஷ்டாத்வைத மதம்; சிவனே பிரதானம் என்று கொள்வது சைவ விசிஷ்டாத்வைத மதம். விசிஷ்டாத்வைதம் என்ற பதம் விசிஷ்டம், அத்வைதம் என்ற இரு பதங்களால் ஆக்கப்பட்டுள்ளது. அத்வைதம் என்றால் ஏகத்துவம்; விசிஷ்டம் என்றால் விசேஷணத்துவம். விசேஷணம் ஆவது சித்தையும் அசித்தையும் சரீரமாக உடையது என்று பொருள். ஆகையால், விசிஷ்டாத்வைதம் என்றால் சித்தையும் அசித்தையும் லக்ஷணங்களாக உள்ள ஏகத்துவம் என்று பொருள்.

பரப்பிரஹ்மமென்பது உண்மையில் உள்ளது ஒன்றே. அது நித்தியம், சத்யம், ஞானம், அநந்தம், விபு, சர்வஜ்ஞம், சர்வசக்தி முதலிய லக்ஷணங்களுள்ளதாக

வியவகரிக்கப்படுகிறது. அதுவே பிரபஞ்சத்துக்கு உபாதானகாரணமும், நிமித்த காரணமும், ஸககாரிக காரணமுமாம்.

அதை யநேகம் நாமங்களினால் கூறுகிறார்கள். வேதங்களிலே அதற்குச் சத்தென்றும், ஆத்மா வென்றும், பிரஹ்மமென்றும், ஈசனென்றும், விஷ்ணு அல்லது நாராயணனென்றும் பெயர்கள் அளிக்கப்பட்டிருக்கின்றன. மற்ற சாஸ்திரங்களிலே அதற்குப் புருஷோத்தமன், வாசுதேவன் முதலிய பெயர்களும் அளிக்கப்பட்டிருக்கின்றன. சித்தும் உண்மைப்பொருளே; அசித்தும் உண்மைப் பொருளே. பரப்ரஹ்மமானது இவ் விரண்டுடனும் என்றும் பிரிவுறாதபடி கலந்திருக்கின்றது. இந்த அவஸ்தையில்தான் ப்ரஹ்மத்தை யறியலாம்; ஆனால், இதனால் அது ஜடமாய் விடுகிறதில்லை. அது சித்திலிருந்தும் அசித்திலிருந்தும் தனிப்பட வேறானதேயாம்; ஞானாத்மகமா யுள்ளதாம். பரப்ரஹ்மம் ஒன்றுக்கு ஸ்வதந்திரத்துவம் உண்டு; மற்றிரண்டும் அதைச் சார்ந்திருக்கின்றன. இவை யிரண்டும் கூடத் தனித்தனி வேறு பொருள்கள் அல்ல; ஒரு வஸ்துவும் அதன் லக்ஷணங்களும் போல ஒன்றைவிட்டு ஒன்று பிரிக்க முடியாதபடி கலந்திருக்கின்றன. சித்தும் அசித்தும் பரப்ரஹ்மத்துக்குச் சரீரமாம்; பரப்ரஹ்மம் சரீரியாம்; ஒன்று இல்லாவிடில் மற்றது இருத்தல் முடியாது.

சரீரம் என்றால் தேகம் என்றன்று பொருள்; லக்ஷணம் என்று பொருளாம்; சரீரத்துக்கும் சரீரிக்கும் உள்ள

சம்பந்தமானது அபிருதக்ஸித்த மெனப்படும்; இந்தச் சம்பந்தம் இடைக்காலத்திலே உண்டாயினதில்லை; இந்தச் சம்பந்தத்துக்கு முடிவும் இல்லை. ஆயினும், மூன்றுக்கும் இடையில் வித்தியாசம் ஏராளமாக உள்ளது; அந்த வித்தியாசமானது அநுபாதிகமு மன்று; மாயாகிருதமுமன்று. மூன்றும் ஒன்றுடனொன்று கலந்தே யிருக்கின்றன; அந்த அவஸ்தையிலே அறியப்படும். பரப்ரஹ்மம், சித், அசித்து ஆகிய மூன்றும் ஓரே தத்துவமாம்; பரப்ரஹ்மம்: சித், அசித்து என்ற லக்ஷணங்கட்கு இருப்பிடமாம்.

ஸ்ரீ விசிஷ்டாத்வைதமத சித்தாந்தத்தை யாதரிக்கின்ற மேற்கோள்கள் சில பின் வருவன:—

(ச்வேதாச்வதர உபநிஷத் I. 6.)

(1) ஜீவாத்மாவும் பிரேரேபிக்கிறவனும் வேறாக அறிந்து, ஆகையால், அவனுடைய கிருபையை அடைந்து, மனிதன் அமிருதத் தன்மை யடைகின்றான்.

(மாண்டூக்கிய உபநிஷத் I. 1. 9, I. 2. 7.

(2) எல்லாவற்றையும் அறிகிறவன், ஒவ்வொன்றையும் அறிகிறவன்.

(ச்வேதாச்வதர உப. VI. 8)

(3) அவருடைய விசேஷ சக்தி உண்மையில் பலவாக, ஞானம்-பலம்-கிரியை முதலியன உட்பட்டதாக, இயற்கையாக வெளிப்படுத்தப்படுகிறது.

(சாந்தோக்கிய உபநிஷத் VIV. I. 5.)

(4) உண்மையான இச்சைகளை யுடையவர், உண்மை யான சித்தத்தை யுடையவர்.

(வேதாந்த சூத்ரம் II. 3. 187.)

(5) ஆத்மா சிருஷ்டிக்கப்பட்ட வஸ்து அன்று; ஏனெனில், சாஸ்திரம் அப்படிக் கூறுகிறதில்லை.

(சாந்தோக்கிய உபநிஷத் VI. 2. 3.)

(6) அது நினைத்தது.

(சாந்தோக்கிய உபநிஷத் VI. 3. 2.)

(7) இதே தேவதை சங்கற்பித்தது.

(ஐதரேய உபநிஷத் I. 1.)

(8) "நான் உலகங்களைச் சிருஷ்டிப்பேனாக" என்று அவர் நினைத்தார்.

(கதா உபநிஷத் V. 13, ச்வேதாச்வதர உபநிஷத் 13.)

(9) நித்தியர்களுக்குள்ளே நித்தியர், அறிவுள்ளோர்களுக்குள்ளே அறிவுள்ளவர். அவர் ஒருவரே யாயினும் அநேகருடைய ஆசைகளை யடைகிறார்.

(ச்வேதாச். உப. I. 9, VI. 7. 8.)

(10) சித்தும் அசித்தும், இரண்டும் பிறப்பற்றது, ஆத்மாவும் அநாத்மாவும்.

(சாந்தோக். உப. VIII. 1. 5, VIII. 7. 1. 3.)

(11) இந்த ஆத்மா பாபரஹிதமானது, மூப்பின்றியது. மரணமற்றது, விசனமில்லாதது, பசிதாக மற்றது. அவருடைய இச்சைகள் உண்மையேயாம், அவருடைய நினைப்புக்கள் உண்மையேயாம்.

(தைத்திரீய. உப. II. அநுவகஸ். 7. 8.)

(12) அவருக்குப் பயந்து காற்று அடிக்கின்றது—ப்ரஹ்மாநந்தத்தை யறிகிறவன் எதை முன்னிட்டும் பயப்படுகிறதில்லை.

(தைத்திரீய உப. II. 1. 1.)

(13) உபாசனையில் ஜயமடைகிறவன் சைதந்ய ப்ரஹ்மத்தை யடைகிறது மன்றியில், அவருடைய நற்குணங்கள் எல்லாவற்றையும் அடைகிறான்.

(தைத்திரீய உப. II. 6. 1.)

(14) நான் அநேகமாகி, பிறப்பை யடைவேனாக.

(தைத்திரீய. ஆரண்யகம். III. 24)

(15) உள்ளே நுழைந்துள்ளவர், ஜனித்துள்ள சகல வஸ்துக்களுக்கும் அதிபதி, சகலவற்றினுடையவும் ஆத்மாவாம்.

(ப்ரஹதாரண்யோபநிஷத் III. 7. 22;
அந்தர்யாமி ப்ராஹ்மணம் முழுதும்)

(16) எவர் ஆத்மாவிலேயே வசித்துக்கொண்டு, ஆத்மாவினுள்ளே யிருக்கின்றாரோ, எவரை ஆத்மா அறிகிற

தில்லையோ, எவருடைய சரீரம் ஆத்மாவாயிருக்கிறதோ; அவரே ஆத்மாவுக்கு அதிபதி.

(சுபால உப. VII. 1.)

(17) எவர் பூமிக்குள்ளே சலித்துக்கொண்டிருக்கிறாரோ,... எவருடைய சரீரம் ஜடமாயிருக்கிறதோ, எவரை ஜடம் அறிகிறதில்லையோ, அவரே சமஸ்த ஜீவராசிகளுடையவும் அந்தராத்மா; அவர் சர்வ பாபரகிதர், அவரே ஏகநாராயணர்.

(தைத்திரீய உப. II. 6. 1.)

(18) உலகைச் சிருஷ்டித்து, அவர் அதே உலகுக்குள் புகுந்துகொண்டார்.

(ச்வேதாச். உப 1. 10.)

(19) அழியுந் தன்மையுள்ள ஜீவாத்மாவுக்கு ஈஸ்வரன் ஒருவனே அதிபதி.

(ச்வேதாச். உப. VI. 9. 16.)

(20) அவரே ஐம்புலன்களுக்கும் அதிபதியாகிய ஜீவாத்மாவுக்கும் அதிபதி.

(மஹா நாராயணோபநிஷத் XI. 3.)

(21) அவரே ஜீவாத்மாக்களுக் கெல்லாம் அதிபதி, நித்தியர், நல்லவர், குறைவற்றவர்.

(ச்வேதாச். உப. 1. 12.)

(22) போகியையும் போகப்பொருளையும் பிரேரேபிக்கிறவனையும் தெரிந்துகொண்டு.

(ச்வேதாச். உப. IV. 6.)

(23) அவற்றுள் ஒன்று மதுரமான பழத்தை யுண்கின்றது; மற்றது உண்ணவே செய்யாமல் அழகாகப் பிரகாசிக்கின்றது.

(கீதை XIII. 19.)

(24) பிரகிருதி, புருஷன், இரண்டும் அநாதியாம்.

(சாங்தோக். உப. VI. 3. 2.)

(25) நானேயாயுள்ள இந்த ஜீவாத்மாவுடனே இம்மூன்று தேவதைகளுக்குள்ளும் நுழைந்து, நான் நாமரூப வித்தியாசங்களை யுண்டுபண்ணுகிறேன்.

(வேதா. சூத். V. 4. 21.)

(26) ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் போகவிஷயத்தில் மாத்திரம் சமத்துவம் உண்டு.

(வேதா சூத். I. 3. 2.)

(27) முக்தபுருஷர்களால் அடையப்படுவதே ப்ரஹ்மம்;

(சாங்தோ. உப. VIII. 12. 3.)

(28) அவர் அங்கு சலிக்கிறார்.

(முண்டகோபநிஷத். III. 1. 3.)

(29) பின்னர், ஞானியானவன் புண்ணியத்தையும் பாபத்தையும் தூரத் தள்ளிவிட்டு, எக்களங்கமும் அற்றவனாய், ப்ரஹ்மத்துடனே மிகமிகச் சிரேஷ்டமான சமத்துவத்தை யடைகின்றான்.

(சாந்தோக்கிய உப. VIII. 3. 4.)

(30) பரஞ்ஜோதியை யணுகியவுடனே, முக்தாத்மா தனது சொந்த ஸ்வதந்திர வடிவத்திலே வெளிப்படுகிறது.

(ப்ருஹதாரணிய. உப. IV. 3. 30.)

(31) ஞாதாவினுடைய ஞானமானது மறைந்து விடுகிறதில்லை.

(ப்ரஹதா. உப. VI. 5. 15.)

(32) மனிதன் ஞாதாவை எப்படி யறிவது?

இன்னும் எத்தனையோ மேற்கோள்கள் எடுத்துக் காட்டலாம். அத்வைதிகள் அத்வைதத்துக்கு ஆதாரமாகக் கூறுகின்ற அநேக உபநிஷத்து வாக்கியங்களை ஸ்ரீ ராமாநுஜர் விசிஷ்டாத்வைதத்துக்குப் பொருந்தப் பொருள்படுத்தி யிருக்கின்றார்.

வேதங்களிலே 'பரப்ரஹ்மம்' நிர்க்குணம் என்று கூறப்பட்டுள்ளதை நாம் பார்க்கும்பொழுது, அதற்கு குணங்களே யில்லையென்று நாம் பொருள்படுத்திவிடுதல் தப்பாம். அது ஓர் உண்மைப் பொருளாம்; குணங்களில்லாத உண்மைப் பொருள் கிடையாது. இங்கு நிர்க்குணம் என்றதனால் பொருள் என்னவென்றால், அதற்குத் தூர்க்குணங்கள் கிடையாது என்று பொருளே தவிர, வேறில்லை; ஜீவனுக்குள்ள கட்டுப்பாடுகளும் பந்தங்களும் ஜீவனுக்குப் பிரகிருதி சம்பந்தத்தினு லேற்படுகின்ற பலவித நிர்ப்பந்தங்களும் பரப்ரஹ்மத்துக்குக் கிடையாது. ஆனால், அத

ற்கு (1) ஞானம். (2) சக்தி. (3) பலம். (4) ஐஸ்வர்யம். (5) வீர்யம். (6) தேஜஸ். (7) க்ஷமா. (8) கிருபை. (9) வாத்சல்யம். (10) சீலம். (11) ஆர்ஜவம். (12) சௌஹாரதம் முதலிய குணங்கள் உண்டு.

அதற்குத் தனிப்பட ஒரு பெயர் கிடையாது. நாராயணன், விஷ்ணு, வாசுதேவன் முதலிய பெயர்கள் அதை நேரே குறிப்பிடுகின்றன; அக்கினி, இந்திரன் முதலிய பெயர்கள் அதை நேரல்லாது குறிப்பிடுகின்றன. அது எங்கு முள்ளது, சர்வ வியாபகமானது, அகண்டமானது; ஆகையால் ரூபமற்றது, நிறமற்றது; ஆனால், அது எந்த ரூபமும் எடுத்துக்கொள்ள முடியும்.

அது முக்கியமாய் ஐந்துவிதமாக வெளிப்படுகின்றது:-

(1) பர விக்கிரகம்:—அவர் தமது ஆயுதங்களுடனும் ஆபரணங்களுடனும் வைகுந்த லோகத்திலே தோன்றுகிற வடிவம்; பாபங்களெல்லாவற்றையும் பறக்கடிக்கின்ற சங்கத்தை யுடையவர்; அஞ்ஞான மெல்லாவற்றையும் அடித்துத் துரத்துகின்ற சக்கரத்தை யுடையவர்; ஞான சக்திக் கறிகுறியாகிய கட்கத்தை யுடையவர்; ஜகத்தைக் குறிப்பிடுகின்ற பத்மத்தை யுடையவர்; கதை தரிப்பவர்; சாரங்கபாணி; கௌஸ்துபம் அணிந்தவர்; ஸ்ரீ வத்சம் தரித்தவர். இவருக்கு வாசுதேவர் என்று பெயர்.

(2) வ்யூக விக்ரகம்:— ஜகத்தினுள்ளே சத்தியலோகத்தி லிருக்கப்பட்ட விஷ்ணுலோகங்கள் மூன்றிலும் அவர்

எடுக்கும் சரீரங்கள். இவ் வடிவங்களுக்கு சங்கர்ஷணர், ப்ரத்யும்னர், அநிருத்தர் என்று பெயர்; பிராகிருதப்பிரளயத்தினுல் இவ் வுலகங்கள் அழிவுறும் வரையில், இவர்களைத் தேவர்கள் உபாசிக்கிறார்கள். அவர் இவ் வடிவங்களிலிருந்துகொண்டு, பிரபஞ்சத்தின் சிருஷ்டி சம்ஹாராதித் தொழில்களைக் கவனிக்கின்றார்; ஜீவகோடிகளுக்கு நேரிடும் தீங்குகளை விலக்கிவிடுகின்றார்; பக்தர்களுடைய பக்திக்கு அநுகூலமா யிருக்கின்றார்.

வாசுதேவருக்குத் திவ்ய குணங்கள் ஆறும் உண்டு. இவர்களுக்கு முறையே இரண்டிரண்டுதான் உண்டு. சங்கர்ஷணருக்கு ஞானமும் பலமும் உண்டு; அவர் உலகுக்கு உண்மையை உபதேசித்து மகா கல்பத்தின் முடிவிலே பிரபஞ்சப் பிரளயத்தை யுண்டுபண்ணுகிறார். இவர்தான் ஜீவர்களுக்கு அதிபதி.

ப்ரத்யும்னருக்கு ஐஸ்வர்யம், வீர்யம் ஆகிய இவ்விரண்டு லக்ஷணங்களும் உண்டு. அவர் தர்மத்தைப் போதித்து, பரிசுத்த வஸ்துக்களைச் சிருஷ்டித்து, நான்கு ஜாதிகளையும் ஏற்படுத்துகிறார். இவரே மனத்துக்கு அதிபதி.

அநிருத்தருக்கு சக்தியும் தேஜஸும் உண்டு. அவர் உலகுக்கு ஞானம் அளிக்கிறார்; ரக்ஷகர்த்தா; மிச்ரசிருஷ்டிக்கு அதிபதியாம்.

(3) விபவ விக்கிரகம்:—ஸ்ரீராமர், கிருஷ்ணர்போன்ற அவதாரங்கள். இது இருவிதமாம். (1) அம்சாவதாரம்—

ஈஸ்வர சக்தி மாத்திரம் உடையது. (2) நேர் அவதாரம், ஸாக்ஷாத் அவதாரம்.

(4) அர்ச்சா விக்கிரகம்:—தியானசக்தியினாலும் வேத மந்திர ஜபங்களினாலும் விக்கிரகங்களுக்குள்ளே நுழைகிற ஒரு சூக்ஷ்ம சரீரம். விக்கிரகம் தீட்டுப்பட்டுவிட்டால், அல்லது சரியானபடி பூஜை நடைபெறாவிட்டால், உள்ளே உள்ள சக்தியானது அதிலிருந்து போய்விடுகிறது.

இந்த விக்கிரகங்களுக்குச் சில குணங்களுண்டு; அவற்றுள் முக்கியமான குணங்களாவன:—

(க) ருசி ஜனகத்வம்—பக்தர்களுடைய மனத்திலே ஒரு விக்கிரகத்தைப் பூஜிப்பதற்குள்ள சுபேச்சையை உண்டாக்குவது.

(உ) அசேஷலோக சரண்யத்வம்.

(ங) சுபாச்ரயத்வம்.

(ச) அநுபாவ்யத்வம்.

(5) அந்தர்யாமி விக்கிரகம்:— பக்தன் தியானிக்கும் பொழுது அவனுக்கு ஈஸ்வரன் தர்சனம் கொடுக்கும் சரீரம். அது ஹிருதய பத்மத்திலே யுள்ளது, புத்தியை யடக்கி யாள்கிறது.

பகவான் இச் சரீரங்களுள் எதையேனும் எடுக்கும் பொழுது, ஜகன்மாதாவாகிய ஸ்ரீலக்ஷ்மிதேவியும் கூடவேசரீரம் எடுக்கிறாள். இவ் வடிவங்கட்குக் கர்மம் காரணமன்று;

இச் சரீரம் சாதாரண ஜடத்தினுல் ஆக்கப்பட்டதன்று, சுத்த சத்துவப் பொருளினுல் ஆக்கப்பட்டது. நிர்க்குண தேவதையைத் தியானித்தல் முடியாது; பகவான் கிருக்க நிதியாகையினுலே யோகிகளுடைய யோகம் சித்திக்குமி பொருட்டு இவ் வடிவங்க ளெடுக்கிருர். ...த் ...ம்

## அசித்து என்பதின் வகைகள்

கு

(1) அதுவே காலம் என்பது; விகாரங்க ளெல்லாவ ...றுக்கும் காரணமா யுள்ளது; அது நித்தியமாய், சமரசபா... அகண்டகாலமாயுள்ளது; கண்டமாயும் அநித்தியமாயும், ...ரகங்களின் கதிக்குத் தக்க பிரகாரம் கணக்கிடப்பட்டு ...ழிகையாயும் நாட்களாயும் யுகங்களாயும் கல்பங்களாயும் உள்ளது; அது சத்துவாதிகுண சூன்யமென்றும் சொல்லப் படுகிறது.

(2) அதுவே பிரகிருதி. பாண்டங்களுக்கு எப்படிக் களிமண் உபாதான காரணமோ, அப்படியே அதுவும் பிர பஞ்சத்துக்கு உபாதான காரணமாம்; அது ஜீவர்களுடைய சரீரங்களாகவும் பிரபஞ்சத்திலுள்ள ஒவ்வொன்றுகவும் ஆகிறது. அதற்கு ஆதி யில்லை; அது தானே யுள்ளது, ஏகமாயுள்ளது; ஆனல், எல்லா விஷயங்களிலும் பிரஹ்மத் துக்குக் கீழ்ப்பட்டதே.

சாஸ்திரங்களிலே இதற்கு: ப்ரகிருதி, ப்ரதானம், மூலப்பிரகிருதி, அவ்யக்தம், மாயை, தமஸ், அக்ஷரம், ப்ரஹ்மம் என்று பல பெயர்கள் அளிக்கப்பட்டிருக்கின்றன.

இதிலே முக்குணங்களில் எதுவும் ஒன்றைவிட ஒன்று அதிகமாயில்லை. அது அவற்றுக்குக் காரணமாம்; அவற்றின் மூலமாகத் தங்கள் வடிவங்களை யெல்லாம் வெளிப்படுத்துகிறது.

முதலாவது சிருஷ்டியாவது, மகத்தாம்; அதிலே முக்குணங்களும் சமநிலையி லில்லை. அது இயற்கையில் மூவிதமானது—சாத்வீகம், ராஜசம், தாமசம். மகத்தைச் சாங்கியர்கள் புத்தியென்று பொருள் படுத்துகின்றார்கள்; ஆனால் அது அன்று பொருள். மகத் என்றால் ஜடத்தின் தோற்றமே; ஞானமானது ஜீவாத்மாவினுடைய லக்ஷணமேயாம்.

முக்குணங்களையுடைய மகத் முறையே முக்குண அகங்காரத்தையும் சிருஷ்டிக்கிறது.

மனம் என்பது அந்தர் இந்திரியமாம்; இதனால் ஆத்மாவில் ஞான முண்டாகின்றது. இது ஹிருதயத்திலே இடம் பெற்றுள்ளது.

சாத்வீக அகங்காரத்திலிருந்து (1) மனமும், (2) ஞானேந்திரியங்களும், (3) கர்மேந்திரியங்களும் உண்டாகின்றன.

தாமச அகங்காரத்திலிருந்து பஞ்சதன்மாத்திரைகள் உண்டாகின்றன; இவை: சப்த ஸ்பர்ச ரூப ரச கந்தம் என்பனவாம். இவற்றிலிருந்து மஹா பூதங்கள் உண்டாகின்றன. ஈஸ்வர சித்தத்தின்படி எல்லாவற்றையும் உண்

பண்ணுதற்கு ராஜஸ அகங்காரமானது ஜடத்துக்கும் மகத்துக்கும் உதவி செய்கின்றது.

அது சுத்த சத்துவம்:— ஜடத்திலிருந்து வேறான பொருளாம், அதன் குணங்களுக்கு உட்பட்டதன்று. அது ஸ்வச்ச திரவிய மென்றும், நித்திய விபூதி யென்றும் கூறப் படுகின்றது. வைகுந்தம் இந்தச் சுத்த தத்துவத்தினால்தான் ஆக்கப்பட்டுள்ளது. விஷ்ணுவினுடைய சரீரமும் முக்தர்களுடைய சரீரங்களும் ஆகிய இவை இந்தச் சுத்த சத்துவத்தினால்தான் ஆக்கப்பட்டுள்ளன. அது இயற்கையிலே அறிவு வாய்ந்தது; அது ஜீவனல்லாததினாலே அசித்தாகக் கருதப்படுகிறது. பரப்ரஹ்மமே ஜடத்துக்கு உபாதான காரணமாம். அது சூக்ஷ்ம நிலைமையிலும் வேற்றுமையற்ற நிலையிலுமாக இருவிதத்தி லுள்ளது. அதுவே காரணம்; வேற்றுமையாகிய ஸ்தூலமே காரியம். பின்னர் ஜகத் என்று சொல்லப்பட்ட வடிவங்களை யெல்லாம் அது உண்டாக்குகிறது.

சாதாரணமாக உபாதான காரணமும், நிமித்த காரணமும், சககாரிக காரணமும் வெவ்வேறா யிருப்பதை நாம் பார்க்கிறோம். திருஷ்டாந்தம்—களிமண், குயவன், காலம். ஆனால், பரப்ரஹ்மமே ஜகத்துக்கு உபாதான காரணமா மென்று நாம் முன்னமே கூறியிருக்கின்றோம்; அதுவே நிமித்த காரணமுமாம்; ஏனெனில், அது தனது சங்கற்பத்தினாலே பிரபஞ்சத்தைச் சிருஷ்டிக்கிறது. அது காலத்தின் சரீரி யாகையினாலே, ஜகத்துக்கு சககாரிக காரணமாம்,

## சிருஷ்டி இருவிதம்

(1) சமஷ்டி, மகத், அகங்காரம் முதலியன தோன்றுதல்.

(2) வியஷ்டி:—பஞ்ச பூதங்களின் வெவ்வேறளவான சேர்க்கைகளினாலே நான்கு விதமான சரீரங்களின் உற்பத்தி.

(1) சுரர். (2) நரர். (3) திரியக். (4) ஸ்தாவரம். ஒவ்வொரு மகா கல்பத்தின் துவக்கத்திலும் சிருஷ்டி ஆரம்பிக்கின்றது; ஒவ்வொரு பிரஹ்ம கல்பத்தின் துவக்கத்திலும் விசேஷ சிருஷ்டி ஆரம்பிக்கின்றது; கர்மங்களின் பலன்களுக்குத் தக்க பிரகாரம் எப்பொழுதும் நித்திய சிருஷ்டி நடந்துகொண்டேயிருக்கின்றது.

பிரபஞ்சமானது தற்கால நிலைமையிலிருந்து சூக்ஷ்ம நிலைமைக்கு மாறுகிறபொழுது, அது பிரளய மென்று சொல்லப்படும்.

## பிரளயம் நான்கு விதம்

(1) பிராகிருதப் பிரளயம்:— பிரபஞ்சம் முழுதையும் பாதிப்பது; முக்குணங்களும் சமநிலையை யடைகின்ற அவஸ்தையை யடைவது. இது ஒவ்வொரு மகா கல்பத்தின் முடிவிலும் உண்டாகின்றது.

(2) நைமித்திகப் பிரளயம்:— சூர்ய கோளங்களெல்லாம் கரைந்து போகும் நிலைமை. இது ஒவ்வொரு பிரஹ்ம கல்பத்தின் முடிவிலும் உண்டாகின்றது.

(3) நித்தியப் பிரளயம்:— ஒவ்வொரு நிமிஷத்திலும் உண்டாய்க்கொண்டே யிருக்கின்றது.

(4) ஆத்யந்திகப் பிரளயம்:— ஒரு ஜீவன் முக்தி யடைந்து ஜனனம் அற்றுவிடுகிறபொழுது உண்டாகிறது.

## உலகங்கள் ஏழு

(1) பூலோகம். (2) புவர்லோகம்; இது பூமிமுதல் சூர்யன்வரையில் உள்ளது. (3) சுவர்லோகம்; இது சூர்யன் முதல் துருவநக்ஷத்திரம் வரையில் உள்ளது. (4) மஹாலோகம். (5) ஜனலோகம். (6) தபோலோகம். (7) சத்யலோகம்.

இவ்வுலகங்கள் துருவநக்ஷத்திரமுதல் ப்ரஹ்மாண்டம் வரையிலுள்ளது. சாதாரணமாக இவற்றுக்கு ஊர்த்துவ லோகங்கள் என்று பெயர்.

பிதர்லோகம், விஷ்ணுலோகம், சிவலோகம் இவை இந்த ஊர்த்துவ லோகங்களில் சில பிரதேசங்களாம். எண்ணற்ற பிரமாண்டங்கள் இருக்கின்றன. ஒவ்வொரு பிரமாண்டத்திலும் பதினான்கு உலகங்களும் சூர்யன், சந்திரன் முதலியவையும் உண்டு; ஒவ்வொன்றும் ஒரு பிரமாவினால் ஆளப்படுகின்றன. பிரமாவினுடைய ஜீவிதம் முடிவடைகிறபொழுது, அவை பிரளய மடைந்துவிடுகின்றன. இவையெல்லாம் ஒரே மூலப்பிரகிருதியிலிருந்துதான் உண்டானபொழுதிலும், ஒன்றிலிருந்து ஒன்று வித்தியாசமா யிருக்கின்றன; அவை வெவ்வேறு காலங்களிலே பிரளய மடைகின்றன. ஆனால், அவற்றி லெல்லாம் ஒரே ஈச்வரன்தான் வியாபகமா யிருக்கின்றான்.

பிரபஞ்சத்துக்குக் கீழே எல்லாப் பக்கங்களிலும் எல்லையற்றதா யுள்ளது; மேலே மாத்திரம் சுத்தசத்துவப் பிரதேசம்.

சித் என்பது ஜீவாத்மாவே, ஜடமன்று; இது நித்தியமா யுள்ளது, எதனாலும் ஆக்கப்பட்டதன்று; அசித்திலிருந்தும் ஈஸ்வரனிலிருந்தும் வேறானது. ஜீவனுக்கு ஜீவன் வித்தியாசமுண்டு. 'சித்' என்றால் 'அறிவையுடையது' என்று பொருளாகையினாலே, ஜீவாத்மா, பரமாத்மா இரண்டையும் குறிப்பிடலாம். ஆனால், ஈஸ்வரனுடைய ஞானமானது நித்தியமா யுள்ளது, அகண்டமா யுள்ளது; ஜீவனுடைய அறிவானது ஜடத்தினாலும் கர்மத்தினாலும் கட்டுப்படுத்தப்பட்டது. ஆகையால், சித் என்ற பதம் சாதாரணமாக ஜீவாத்மாவுக்கே வழங்கப்படுகின்றது.

இது அணுப்பிரமாணமானது; ஆனால், மோக்ஷத்திலே அகண்ட ஞானத்தை யுடையது. அது பரிசுத்தமானது, ஆநந்தகரமானது, அறிவு வாய்ந்தது, மாறுத லற்றது; அறிவுக்கு ஆதாரமாயும் உள்ளது; மோக்ஷ மடைகிறவரை பிரகிருதியில் கர்மத்துக்கு உட்பட்டது; அதுவரையில் பிரகிருதியினின்றும் வேறா யிருக்க முடியாது. பிரகிருதியின் ஒவ்வொரு அணுவிலும் ஜீவன் உள்ளது. ஒவ்வொரு ஜீவனிலும் அந்தர்யாமியாகப் பரமாத்மா உள்ளது. இது பரப்ரஹ்மத்துக்குச் சரீரமாம்.

சரீரத்திலே [illegible] வாத்மாவின் ஸ்தானமானது ஹிருதயமாம்; அணு வ[illegible] [illegible]திலே அது கண்டமா யுள்ளது;

ஆனால், ஞானமாகிற அதன் லக்ஷணம் அகண்டமாம்; பல விதங்களா யுள்ளதுவாம்.

ஒரு வஸ்துவைப்பற்றி அது அறிய விரும்புகிறபொழுது, சமீபத்திலோ தூரத்திலோ உள்ள அந்த வஸ்துவினிடம் அது செல்கின்றது; இது காலத்தினாலாவது தேசத்தினாலாவது கட்டுப்படுத்தப்படுகிறதில்லை. இந்த அறிவு உண்மையும் நித்தியமு மானதாம்.

## ஜீவர்கள் மூவகைப்படுவர்

(1) நித்தியர்கள்:— இவர்கள் ஒருபொழுதும் கர்மத்துக்கு உட்படாது, என்றும் பரமாநந்தம் எய்தி யிருப்பவர்கள்; இவர்கள் சர்வஞ்ஞர்கள்; இவர்களுடைய வாசஸ்தானம் வைகுந்தம். அநந்தன் அல்லது சேஷன், கருடன், விச்வக்சேனன், ஜயன், விஜயன், நந்தன், ஸ்கந்தன், சங்ககர்ணன், புஷ்கரன், புஷ்கராக்ஷன், குமுதாக்ஷன், கஜானனன், ப்ரிஸ்னிகர்ப்பன், காலன், புண்டரீகன், குமுதன், வாமன், ஜயத்சேனன், சுப்ரதிஷ்டன், சமுகன், அமானவ புருஷன், சர்வகந்தி முதலியோர் இவ் வகுப்பைச் சேர்ந்தவர்கள்.

(2) முக்தர்கள்:— இந்தச் சிருஷ்டியிலே மோக்ஷமடைந்து சர்வஞ்ஞர்க ளானவர்கள்.

(3) பெத்தர்கள்:— கர்ம பந்தங்கட்கு உட்பட்டு, அஞ்ஞானத்திலே கட்டுண்டவர்கள். தேவர், மனிதர், மிருகங்கள் முதலியோர் இவ் வகுப்பைச் சே[illegible]வர்கள்.

ஜீவாத்மா சரீர மடையும் செய்கை ஜனனம் எனப் படும்; சரீரத்தை யெறிந்துவிடுதல் மரணம் எனப்படும்; இன்னொரு சரீரத்தை யடைதல் புநர் ஜனனம் எனப்படும். ஜனனம், மரணம், புநர் ஜனனம் ஆகிய இவை சரீரத்தை மாத்திரம் பாதிக்கின்ற மாறுதல்களாம்; ஜீவன் எவ்வித மாறுதலு மற்றதாம்.

ஜீவாத்மா பரிசுத்தமானதாய், சைதந்யமாய், நித்திய மானதா யிருக்கின்றது; ஆனால், அது ஜடத்துடனே சம் பந்தப்பட்டுச் சரீர மடைந்து, சுக துக்கங்கட்கு உட்படு கின்றது. கர்மமே ஜீவனை ஜடத்துடனே சம்பந்தப்படுத்தி, கர்ம சரீரத்தைக் கொடுத்து, சுக துக்கத்தையும் அளிப்ப தற்குக் காரணமாகின்றது; கர்மமானது பலவித சரீரங்களை யடைவதற்குங் காரண மாகின்றது.

கர்மமென்பது ஜீவாத்மா தெரிந்து செய்கின்ற செய் கை, அல்லது இச் செய்கையின் பயனாகும். அக் கர்மம் ஈஸ் வரனுக்குத் திருப்திகரமானதா யிருந்தால், ஈஸ்வரனுடைய சித்தத்துக்கு ஒத்ததா யிருந்தால், அது நல்லதே; ஈஸ்வர சித்தத்துக்கு அது விரோதமானால், அது தீயதே. இது அஞ்ஞானம் அல்லது அவித்தையினாலே யுண்டாகின்றது

## அஞ்ஞானத்தின் பிரிவுகள்

(1) அந்யதாஞானம்:— ஒரு வஸ்துவின் லக்ஷணங்களை இன்னொரு வஸ்துவுக்குக் கூறுதல்.

(2) விபரீத ஞானம்:— ஒன்றை வேறொன்றாகப் பார்த்தல்.

ஜீவாத்மா சரீரத்தைத் தானாகக் கருதுகின்றது. சரீரத்தின்லக்ஷணங்களாகிய ஜனன மரணம் முதலியவற்றைத் தன்னுடையவையாகக் கருதுகின்றது. இவ் வஞ்ஞானமே காமக் குரோதாதிகட்குக் காரணமாய்ச் சில கர்மங்களைச் செய்யும்படி தூண்டுகின்றது. இவை முறையே வாசனையினாலும் அஞ்ஞானத்தினாலும் வேறு கர்மங்களை யுண்டுபண்ணுகின்றன. இன்னும் ஜீவன் ருசியினாலே பல விதமான ஜடத்துடனே சம்பந்தப்படுகின்றது. இதன் பயன் இன்னும் கர்மம் உண்டுபண்ணும்படியான அஞ்ஞானமே.

இந்தக் கர்மத்துக்கு ஆதி யில்லை; அஞ்ஞானம், கர்மம், வாசனை, இச்சை, ஜடசம்பந்தம் இவற்றின் மூலமாக வேலை செய்கிறது. ஜீவன் காரண சரீரத்தை யடைந்தது இப்பொழுதென்று நமக்குத் தெரியாது. இது இடைக்காலத்திலே நேர்ந்ததில்லை; பிரளய காலத்திலே கூட யிருந்திருக்கிறது. புதிதாகச் சிருஷ்டி யாரம்பிக்கும் பொழுது, இவை மறுபடியும் தோன்றி முன்போலவே பலன்களை யுண்டுபண்ணுகின்றன.

தீய கர்மங்களின் பலன்கள் இவ் வுலகத்திலே நேரிடுகின்ற துன்பத்தின் மூலமாகவும் நரக வேதனையின் மூலமாகவும் அநுபவிக்கப்படுகின்றன. நரகமென்பது ஜீவாத்மா தான் செய்த பாபங்கட் கேற்ற பலன்களை யனுபவிக்கும் ஒரு பிரதேசமாம். இதற்கு அதிபதி எமனாம். நரகத்தில் ஜீவாத்மா துன்ப மநுபவிக்கும் காலத்திலே அது சூட்சும

சரீரத்திலிருந்து ஆக்கப்பட்ட நரக சரீரம் அல்லது யாதனு சரீரம் என்ற ஒரு விசேஷ சரீரத்தை யடைகின்றது.

ஸ்வர்க்கமென்பது ஜீவாத்மா தனது நற்கர்மங்களின் பலன்களை துக்கமென்பதே யில்லாத சுகரூபமாக அநுபவிக்கும் ஒரு பிரதேசமாம்; இது ஊர்த்துவ லோகங்களிலே யுள்ளது; இப்பொழுதும் ஜீவாத்மா சூக்ஷ்ம சரீரத்திலிருந்து ஆக்கப்பெற்ற ஒரு சரீரத்தை யடைகின்றது. இவ்வுலகில் அநுபவிக்கும் சுகமும் ஆநந்தமும் நற்கர்மங்களின் பலன்களேயாம்.

எவ்வளவு காலம் நற்கர்மமோ தீயகர்மமோ இருக்கிறதோ அவ்வளவு காலம் ஜீவாத்மா ஸ்வர்க்கத்திலோ நரகத்திலோ இருக்கும். இந்தப் பிரஹ்மாண்டத்திலும் மற்றப் பிரமாண்டங்களிலும் கர்மப்போக்கு ஒரே மாதிரியாகத் தான் உள்ளது.

ஈஶ்வரன் சர்வசக்தன்; ஆனாலும், மனிதனுடைய கர்மத்திலே பிரவேசித்து மனிதன் தீய கர்மம் செய்வதைத் தடுக்க முடியாது; ஏனெனில், அவன் வியஷ்டி காரணமன்று, சமஷ்டி காரணமாம். ஒவ்வொரு ஜீவாத்மாவும் வியஷ்டியே; அது அது செய்யும் கர்மத்துக்கு அது அதுவே உத்தரவாதி.

ஈஶ்வரன் பொதுவா யிருக்கின்றான். அவரவருடைய அநுபவமும் அறிவுமே அவரவருடைய வளர்ச்சிக்குக் காரணமா யிருக்கிறதினாலே, சர்வேஶ்வரன் இதில் பிரவேசிப்பது நியாய மாகாது. ஜீவன் ஜனன மரணங்களை யடைந்து அடைந்து, அநுபவமும் அறிவும் பெற்று, பரி

பூரணத்துவம் அடைந்து, முக்தி யெய்தி, ஜனனமரணச் சக்கரத்திலிருந்து விடுபடுகிறது.

தேவர்கள் ஊர்த்துவ லோகங்களிலே வசிக்கின்றனர்; அவர்கள் பலவகைக் கணங்க ளாவார்:—ஹிரண்யகர்ப்பன், ருத்திரன், இந்திரன், அக்கினி முதலியவர்கள். இவர்கள் ஈஶ்வரனுடைய ஆக்ஞைக்கு உட்பட்டு, ஒரு சிருஷ்டியிலே பலவிதத் தொழில்களை வகிப்பவர்கள். ஒவ்வொருவருக்கும் தனித்தனி லோகம் உண்டு. இவர்களுக்குக் கீழும் தேவர்கள் உண்டு. இவர்கள் பிரஹ்மாவினுடைய ஆயுள் முடிவுவரையில் இருந்து, அவருடனே மோக்ஷமடைகிறார்கள். அடுத்த மஹா கல்பத்திலே, பரிபாக மடைந்த வேறு தேவர்கள் இந்த ஸ்தானங்களை யடைகிறார்கள்.

## இருவகை மோக்ஷம்

(1) கைவல்யம்—ஜீவன் ஜீவனாகவே யிருந்து, பரமாநந்தம் அநுபவிக்கும் தன்மை.

(2) ப்ரஹ்மாநந்தம், அல்லது சாயுஜ்யம்—பிரஹ்மத்தைப் போலவே ஜீவன் ஆநந்தத்தை அநுபவிப்பது.

மோக்ஷம் பரமபதத்திலே அடையப்படுகிறது; ஆனால், வகுப்புக்குத் தக்கவாறு பிரதேசங்களும் வேறுபடுகின்றன.

## மோக்ஷப் பிரதேசங்கள்

சாயுஜ்யத்திலே சாலோக்யமும் சாரூப்யமும் அடங்கியிருக்கின்றன. சாலோக்கியம் என்பது விஷ்ணு இருக்கும் உலகில் வசித்தலாம்.

சாரூப்யம் என்பது விஷ்ணுவினுடைய சரீரம் போன்று சுத்த சத்துவத்தினு லாக்கப்பெற்ற ஒரு சரீரத்தை யுடைத்தாயிருத்தலாம். ஆனல், மோக்ஷத்திலே ஜீவாத்மா ஒருபொழுதும் பரமாத்மாவினிடத்திலே லயமாய் ஒன்ருய் விடுவதில்லை.

## மோக்ஷத்தினுடைய முக்கிய அம்சங்கள்

மோக்ஷத்தினுடைய முக்கிய அம்சங்களாவன:—ஜீவனுக்குச் சர்வகர்ம நாசமும், ஜடபந்த நிவிர்த்தியுமேயாம். ஜீவன் இந்த ஜடப்பிரபஞ்சத்தை விட்டு அகன்று பரமபதம் செல்வதற்கு முன் ஒரு இடத்தில் இவை யுண்டாகின்றன.

மோக்ஷ ஆநந்த அநுபவத்திலே முக்தர்களுக்குள்ளே வித்யாசம் கிடையாது; முக்தர்களுக்கும் பரப்ரஹ்மத்துக்கும் வித்தியாச மில்லை. மோக்ஷமானது ஒவ்வொரு ஜீவனுலும் அடையப்படத் தக்கதேயாம். முக்தியடைகின்ற ஜீவன் சூக்ஷ்மசரீரத்திலே ஹிருதயத்திலிருந்து சிரசின் உச்சியிலுள்ள பிரஹ்மரந்திரம் என்னும் இடத்துக்கு சுஷும்னு நாடி வழியாகச் செல்லுகின்றது. அங்கே அதன் மூலமாக அது வெளிப்பட்டு, சூர்யகிரணங்களின் மூலமாகச் சூர்யமண்டலத்துக்குச் செல்லுகின்றது. அங்கிருந்து அது சூர்யனிலேயுள்ள ஒரு இருண்ட பிரதேசத்தின் வழியாகப் பரமபதம் செல்லுகின்றது. யோகாப்யாசத்தினுலே அடையப்பெற்ற ஞானமானது அவனுக்கு வழி காட்டுகிறது; அதிவாஹிகர்கள் அவனே யிட்டுக்கொண்டு செல்கிருர்கள். இம்மார்க்கமானது அர்ச்சிராதி மார்க்கம் எனப்படும்.

மோக்ஷம் என்றும் உள்ளது. முக்தர்கள் ஒருபொழுதும் கர்மத்துக்கு உட்படுகிறதில்லை, பந்தத்துக்கும் உட்படுகிறதில்லை; ஆனல், அவர்களாக இஷ்டப்பட்டால், உலக நன்மையின் பொருட்டு, அவதரிக்கலாம். அப்பொழுதுகூட, அவர்கள் முக்தர்களே; கர்மமாவது ஜடமாவது அவர்களைக் கட்டுப்படுத்தாது.

தூமாதி மார்க்கம் என்று இன்னொரு மார்க்கம் உண்டு. இதன் வழியே முக்தியடையாதவர்கள் செல்லுகிறார்கள்; ஆனல், இவர்கள் பிதுர்லோகம் செல்ல யோக்யதை பெற்றவர்கள். கர்மம் அநுபவித்துத் தீர்ந்த பிறகு, இவர்கள் மறுபடியும் பிறக்கிறார்கள்.

## மோக்ஷமடைதற்குரிய நான்கு மார்க்கங்கள்

(1) கர்மயோகம்:— முமுக்ஷுவானவன் சித், அசித், ஈச்வரன் என்ற மூன்று உண்மைகளைப்பற்றியும் சாஸ்திரங்களிலே என்ன போதித்துள்ளன என்பதை நன்றாகத் தெரிந்துகொள்ளவேண்டும்; தன்னாலியன்றவரையில் பலனில் பற்றற்றுக் கர்மங்கள் செய்துவர வேண்டும். பலன்களையநுபவிக்கவேண்டுமென்று ஆசையுள்ளவன் எப்படிக் கர்மங்களைச் செய்வானே அதேமாதிரி முமுக்ஷுவானவன் கர்மங்களைப் பகவானுக்கு அர்ப்பணம் செய்து உற்சாகத்துடனும் சந்தோஷத்துடனும் செய்யவேண்டும்.

(2) ஞானயோகம்:— முமுக்ஷு தகுந்த குருவினிடத்திலே சரிவர, நன்றாக யோக வித்தையை அப்பியசிக்க

வேண்டும். இது, அல்லது முன் சொல்லிய மார்க்கம், முமுக்ஷுவுக்கு ஜீவாத்மாவினுடைய தன்மையும் லக்ஷணங்களும் இன்னின்னவை யென்று தெளிவித்து, அவன் இருவித மோக்ஷங்களையும் அடையும்படி செய்கின்றது.

(3) பக்தியோகம் அல்லது உபாசனை:—பக்தன் தனது தர்மங்களைப் பகவானுக்குச் செய்யும் பணிவிடையாகவே செய்கின்றான்; ஆயினும், அவனுடைய மனமானது இடைவிடாது பகவானையும் அவருடைய லக்ஷணங்களையும் தியானித்தலிலேயே செல்கின்றது. இதை யநுஷ்டிப்பவனுக்கு ஞானயோகம் அதிக பிரயோசனகரமாயிருக்கும்.

(4) வேதங்களிலும் தர்ம சாஸ்திரங்களிலுமுள்ள மந்திரங்களும் பிராஹ்மணங்களும் கர்மயோகம் மிகவும் சிறந்த மார்க்கமென்று வற்புறுத்துகின்றன. பக்தியோகமே மிகமிகச் சிறந்தது; ஞானயோகம் ஜீவனை பக்தியோகத்துக்குத் தயார் செய்கிறது; கர்மயோகமானது தீய கர்மத் தொடர்புகளை யெல்லாம் அழித்து, மனிதனுடைய ஹிருதயத்தைச் சுத்திசெய்கிறது.

### மனிதன் பக்திமார்க்கத்தில் பிரவேசிப்பதற்குமுன் அடையவேண்டிய ஏழு லக்ஷணங்கள்

(1) மனிதன் கீதையிலும் யோக சூத்திரங்களிலும் கூறப்பட்டுள்ளபடி பரிசுத்த சாத்வீக ஆகாரத்தைச் சாப்பிட்டு, பரிசுத்தமான சரீரம் உடையவனாகவேண்டும். இதனால் அவனுடைய மனம் தியானத்தில் ஏகாக்கிரதை பெறும்.

(2) மனிதன் தனது இச்சைகளைப் பகுத்துப் பார்த்து, அவற்றைப் பரிசுத்தம் செய்து, அவற்றுக்கு மேலே கிளம்புவதற்கு அப்பியாசம் செய்துகொள்ளவேண்டும்.

(3) இடைவிடாத அப்பியாசத்தினாலும் இடையூறுகளையெல்லாம் அகற்றிவிடுவதினாலும் மனிதன் தியானத்திலே அபிவிருத்தி யடைந்து, எவ்வளவு நேரம் வேண்டுமானாலும் எந்த வஸ்துவினிடத்தும் மனத்தை நிலைநிறுத்துவதற்கு யோக்கியதை பெற்றுவிடுகின்றான்.

(4) இவ்வாறு பக்திசெய்துகொண்டிருந்தும் அவன் சுற்றத்தினருக்குச் செய்யவேண்டிய கடமைகளைச் செய்யாமலிருப்பதில்லை; ஆனால், பலனில் கிஞ்சித்தும் பற்றற்றவனாகிச் செய்யவேண்டிய சகல கர்மங்களையும் செய்கின்றான்.

(5) அவன் தன்னுடைய மார்க்கத்துக்கு உதவியான நற்குணங்களையெல்லாம்— சத்தியம், தயை, தர்மம் முதலியவற்றை — அடைவதற்கு அதிக ஆத்திரத்துடன் முயற்சிக்கின்றான்.

(6) அவன் பரிபூர்ணமான, நித்திய சாந்தி நிறைந்த ஹிருதயத்தை யுடையவனாயிருக்கின்றான்.

(7) அவன் சிருஷ்டியிலே தனது முன் ஜன்மக் கர்மங்களினாலே தனக்குக் கிடைக்கும் ஸ்தானத்தை யடைந்து, தன்னாலானமட்டும் மேம்பட முயற்சிக்கின்றான்.

## தியானத்தின் இருவகை

இத்தகைய பக்தன், தான் பரப்ரஹ்மத்துடனே ஒன்றேயென்று தியானிக்கின்றான்; ஆனால், இப்படித் தியானிப்பதிலே அத்வைதிக்கும் இவனுக்கும் வித்தியாசமிருக்கின்றது. பரப்ரஹ்மமும் தானும் அடியோடு அப்படியே ஒன்று என்று இவன் தியானிக்கிறதில்லை; அது ஒருபொழுதும் சாத்தியமல்லாதது; ஆனால், அதனுடைய எண்ணற்ற லக்ஷணங்களுள் ஏதேனும் ஒன்றினுடன் ஒற்றுமைப்பட்டுத் தியானிக்கின்றான்.

இதில் ஒருவித தியானமானது பிரதீக போஸ்னம் எனப்படும்; அது ப்ரணவம் முதலிய சிலவற்றைப் பரப்ரஹ்மமாகக் கருதித் தியானித்தலாம்; மதுவித்தை, உதகீதவித்தை என்ற கிரந்தங்கள் இவற்றைப்பற்றி விபவகரிக்கின்றன.

இன்னொருவித தியானம் அப்பிரதீக போஸனம் எனப்படும். இது பரப்ரஹ்மத்தை நேரே தியானித்தலாம். சத்வித்தை, தகரவித்தை, நியாசவித்தை முதலியவை இதில் அடங்கியிருக்கின்றன. இந்த வித்தைகள் மொத்தம் 32. இவை உபநிஷத்துக்களில் வெகு விவரமாக வியவகரிகப்பட்டிருக்கின்றன.

இவற்றுள் ஒன்றுக்கொன்றுள்ள வித்தியாசம் தியானம் செய்கின்ற பரப்ரஹ்மத்தினுடைய லக்ஷணங்களிலேயேதான் உள்ளது. உபாசனையின் முதல்படி மனித

னுக்கு மோக்ஷத்தைத் தவிர, மற்று அவன் இச்சிக்கின்ற எல்லாவற்றையும் அளிக்கின்றது; பின்னர், இவற்றின் மூலமாக மோக்ஷம் அளிக்கின்றது; இரண்டாவது தியான மானது இவற்றுள் அவன் இச்சிக்கின்ற எதையும் அளிக் கின்றது.

ஆனால், இம் மூன்று யோகங்களிலே எதையும் அப் பியசிக்க முடியாது. ஹிருதயத் தளர்ச்சியும் அசக்தியு முள்ளவர்களுக்குப் பகவான் தயாபூர்வகமாக இன்னொரு மார்க்கத்தைக் காண்பித்திருக்கிறார்; இம் மார்க்கம் மிகமிகச் சுகமானது, மிகமிகச் சுலபமானது. ஜனங்கள் பகவானை நோக்கி, தங்கள் ஹிருதயத்திலே கை வைத்து, உண்மை யான மனத்தினையுடையவர்களாய், உள்ளும் புறமும் ஒரே நினைவுடையவர்களாய்,

"ஏ! கிருபாநிதி! நான் பல பாபங்களைச் செய்திருக் கின்றேன்; நான் அசக்தன்; நான் அறிவீனன்; இப்பொழுது ஈடேறுவதற்கு வழியில்லாது ஏங்குகின்றேன்; நீதான் என்னை ரக்ஷிக்கவேண்டும்; உன்னைத் தவிர எனக்கு வேறு கதியில்லை; நான் உனது கிருபையிலே சரணாகதி யடை கிறேன், அபயம், அபயம்."

என்று கூறவேண்டியதுதான். இவ்விதம் சரணாகதி யடைந்த பக்தன் தனது கர்ம பாரத்தைத் தூர எறிந்து விட்டவனாகிறான்; அவன் தன்னுடைய மோக்ஷத்தைப் பற்றிச் சிந்திக்கவேண்டியதே யில்லை; ஏனெனில், அது பகவானுடைய கடமையாய்விட்டது. தான் அசக்தன்,

பகவான் சர்வசக்தன் என்ற இந்த ஒரு எண்ணத்தையே அவன் தன் மனத்தில் பலமாய்த் தரித்துக்கொண்டால் போதும்; அவனுக்கென்று சொந்தமாகச் சங்கற்பம் ஒன்று மில்லை; அவன் தனது வாழ்நாள் முழுதும் எம்பெருமானுடைய அகண்ட கலியாண குணங்களைத் தியானித்துக் கொண்டே காலம் கழிக்கிறான்.

பகவான் சித்தையும் அசித்தையும் சரீரமாக உடையவனென்றும்; ஞானம், சக்தி, பலம், ஐச்வர்யம், வீர்யம், தேஜஸ், ஆநந்தம், தயை, வாத்ஸல்யம், சௌசீல்யம், சௌலப்யம் முதலிய லக்ஷணங்களை யுடையவனென்றும் அவன் தியானிக்கவேண்டும்; இன்னும் உலகை யுய்விக்கும்பொருட்டு, பகவானும் ஸ்ரீ லக்ஷ்மி தேவியும் எடுத்த அவதார விசேஷங்களைப்பற்றியும் தியானிக்கவேண்டும்.

முதல் மூன்று மார்க்கங்களும் மனமானது உயர்ந்த ஸ்திதியிலே பரிபாக மடைந்தவர்களும், ஞான சிரேஷ்டர்களுமே அநுஷ்டிக்கத் தக்கது. ஆனால், பிரபத்தியாகின்ற இந்த மார்க்கமோ ஜாதிமத பேதமில்லாமல் பண்டித பாமர சாதாரண சர்வ ஜனங்களாலும் அநுஷ்டிக்கத் தக்கது. மனிதன் இந்த மார்க்கத்தைத் தகுந்த குருவின் மூலமாக உபதேசம் பெற்றும் அநுஷ்டிக்கலாம்; தானாகவும் அநுஷ்டிக்கலாம்.

ஆனால், இந்த மார்க்கங்களில் எதையேனும் அநுஷ்டிக்க விரும்புகிறவன் எந்தப் பாஷையிலாவது சாஸ்திரார்த்

தங்களைத் தெரிந்துகொண் டிருத்தல்வேண்டும்; தகுந்த குருவை யடைந்து, சித்-அசித்-ஈஸ்வரன் இவற்றைப்பற்றிய அறிவை யடைந்திருக்கவேண்டும். இவனுக்குச் சாஸ்திரங் களினிடத்தே பரிபூர்ண நம்பிக்கை யிருத்தல்வேண்டும்; இவன் தனது குருவையே ஈஸ்வரனாகப் பாவித்தல்வேண் டும். அவன் தனது காமக்குரோதாதி குணங்களையும் உலகப் பற்றுதல்களையும் அடியோடு உதறி யெறிந்துவிடவேண் டும்.

கர்மத்தின் அதிகாரம் இவனிடம் செல்லாது. பகவா னிடத்துப் பரிபூர்ண பக்தியும், அவருடைய இச்சைப்படி நடத்தலு மிருத்தலினாலே அவன் செய்யும் கர்மங்கள் பலன் அடைகிறதில்லை; அதனால் அவன் கர்ம பந்தத்தினால் பிடிக்கப்படுகிறதில்லை. எம்பெருமானுடைய மகிமையை யே இடைவிடாமல் தியானிப்பதனாலே முன் ஜன்மங்களி லே அவன் செய்த கர்மங்களெல்லாம் பஞ்சாய்ப் பறந்து விடுகின்றன. அவனுக்குச் சுகம் வந்தாலும், துக்கம் வந்தா லும் அவனுடைய மனமானது நிலை கலங்குகிறதில்லை; அவ னுடைய ஹிருதயத்திலே நித்திய சாந்தி நிரம்பி யிருக் கின்றது. பிறப்புக்குக் காரணமா யிருந்த கர்மமானது இந்த ஜன்மத்தின் முடிவிலே முடிந்துவிடுகின்ற தாகையி னாலே அவன் இனிமேல் பிறப்பை யடையாது பரமபதம் சென்று பரந்தாமனுடைய சந்நிதானத்திலே என்றென்றும் இன்பவாழ்க்கை வாழ்கின்றான்.

---

13-வது அதிகாரம்:

# ஸ்ரீ ராமாநுஜரின் சிஷ்ய பாரம்பரை

## (எழுபத்து நான்கு சிஷ்யர்கள்)

1. ஆளவந்தாருடைய புத்ரனாகிய சொட்டை நம்பி.
2. மஹா பூர்ணருடைய புத்திரனாகிய புண்டரீகர்.
3. கோஷ்டி பூர்ணருடைய புத்திரனாகிய யாமுனர்.
4. மாலாதாருடைய புத்திரனாகிய சுந்தரபாகு.
5. சைல பூர்ணருடைய புத்திரனாகிய ராமாநுஜர்.
6. ஆழ்வானுடைய புத்ரர்களாகிய பராசரரும், அவருடைய சகோதரரும்.
7. ஆண்டானுடைய புத்திரனாகிய ராமாநுஜர்.
8. நடுவிலாழ்வான்.
9. கோமடத்தாழ்வான்.[ன்
10. திருக்கோவலூராழ்வான்
11. திருமோஹூர் ஆழ்வான்
12. பிள்ளைப்பிள்ளையாழ்வான்
13. நடாதூர் வரத விஷ்ணு ஆசார்யர்.
14. எங்களாழ்வான் (விஷ்ணு சித்தர்)
15. மிளகாழ்வான்.
16. நெய்யுண்டாழ்வான்.[ன்
17. சேட்டலூர் சிறியாழ்வா
18. அனந்தாழ்வான்.
19. வேதாந்தி ஆழ்வான்.
20. கோவில் ஆழ்வான்.
21. உக்கலாழ்வான்.
22. அரணபுரத்தாழ்வான்.
23. எம்பார் (கோவிந்தர்).
24. கிடாம்பியாச்சான். [ன்.
25. கணியனூர் சிறியாழ்வா
26. ஈச்சம்படியாச்சான்.
27. கொங்கிலாச்சான்.
28. ஈச்சம்பாடி ஜீயர்.
29. திருமலை நல்லான்.
30. சட்டம்பிள்ளை ஜீயர்.
31. திருவெள்ளறை ஜீயர்
32. ஆட்கொண்டவல்லிஜீயர்
33. திருநகரிப்பிள்ளை.
34. காராஞ்ஜீ சோமயாஜீ.

35. அலங்கார வேங்கடவர்.
36. நம்பி கருந்தேவர்.
37. தேவராஜ பட்டர். [யார்.
38. பிள்ளையுறைந்தை யுடை
39. திருக்குருகைப் பிரான் பிள்ளான். [லார்.
40. பெரிய கோவில் வள்ள
41. ஆசூரிப் பெருமாள்.
42. கண்ணபுரத் தாச்சான்.
43. முனிப் பெருமாள்.
44. அம்மங்கிப் பெருமாள்.
45. மாருதி யாண்டான்.
46. மாருதிச்சிறியாண்டான்
47. சோமயாஜி யாண்டான்.
48. ஜீயராண்டான்.
49. ஈஸ்வராண்டான். [டான்
50. ஈயுண்ணிப்பிள்ளையாண்
51. பெரியாண்டான்.
52. சிறியாண்டான்.
53. குருஞ்சிபுரத்துச் சிறி யாண்டான்
54. அம்மங்கி யாண்டான்.
55. ஆளவந்தார் ஆண்டான்.
56. அருளாளப் பெருமா ளெம் பெருமானார் (தேவராஜமுனி).
57. தொண்டனூர் நம்பி.
58. மருதூர் நம்பி.
59. மழுவூர் நம்பி.
60. திருக்குறுங்குடி நம்பி.
61. குருவ நம்பி.
62. முடும்பை நம்பி.
63. வடுக நம்பி.
64. வங்கிபுரத்து நம்பி.
65. பராங்குச நம்பி.
66. அம்மங்கி யம்மாள்.
67. பருத்திக்கொல்லையம்மா
68. உக்க லம்மாள் [ள்.
69. சொட்டை யம்மாள்.
70. முடும்பை யம்மாள்.
71. கோமாண்டூர் பிள்ளை. [வி
72. கோமாண்டூர் இளையவல்
73. கிடாம்பிப் பெருமாள்.
74. ஆர்க்காட்டுப் பிள்ளான்.

---

இன்னும் ஸ்ரீ ராமாநுஜருக்கு 700 சந்நியாசிச் சிஷ்யர்களும், பன்னீராயிரம் ஏகாங்கிச் சிஷ்யர்களும், 300 ஸ்திரீ சிஷ்யர்களும் இருந்தனர்; பிராஹ்மண ரல்லாத எண்ணற்றவர்கள் சிஷ்யர்களாக இருந்தனர்.

இனிமேல் ஸ்ரீ ராமாநுஜருடைய சிஷ்யர்கள் சிலரைப் பற்றி யுள்ள சில விசேஷங்களைக் கூறுவோம்.

## ஸ்ரீ வடுக நம்பி

ஸ்ரீ ராமாநுஜருடைய எண்ணற்ற சிஷ்யர்களுக்குள்ளே ஆந்திரபூர்ணர், அதாவது, ஸ்ரீ வடுகநம்பி யென்பவர் போன்று, ஸ்ரீ ராமாநுஜரிடத்திலே பரிபூர்ண பக்தி வைத்தவர் வேறு எவருமே யில்லை. இவர் ஸ்ரீ ராமாநுஜருடைய பாதரக்ஷைகளையே ஈஸ்வரனாகக் கருதிப் பூஜித்துவந்தார்; இவர் இந்தப் பாதரக்ஷைகளைத் தவிர, வேறு எந்த மூர்த்தியையும் பூஜிப்பதில்லை. ஸ்ரீ ராமாநுஜருடைய பாதரக்ஷைகளே தமக்கு மோக்ஷம் அளிக்க வல்லவை என்று இவர் பரிபூர்ணமாக நம்பி யிருந்தார்.

ஒரு சமயத்தில் இவர் ஸ்ரீ ராமாநுஜருடன் கூட ஸ்ரீ ரங்கத்துக்கு வடக்கே பத்துமைல் தூரத்திலுள்ள திருவெள்ளறைக்குப் பிரயாணம் போகும் மார்க்கத்திலே ஸ்ரீ ராமாநுஜர் இவர் சுமந்து சென்ற சுமையைக் கவனிக்கும்படி நேரிட்டது; ஸ்ரீ ராமாநுஜர் உடனே இவருடைய சுமையை அவிழ்த்துப் பார்க்க, அதிலே தம்முடைய இஷ்ட தேவதையாகிய ஸ்ரீ வரதராஜப் பெருமானுடைய விக்கிரகமும், தமது பாதரக்ஷைகளும் ஒன்றாக வைக்கப் பட்டிருந்தன. ஸ்ரீ ராமாநுஜர் பார்த்துத் திடுக்கிட்டார்; பயந்து நடுங்கினார்; "என்ன செய்திருக்கிறாய்? என்னுடைய பாதரக்ஷைகளையும் ஸ்ரீ காஞ்சிநாதருடைய விக்கிரகத்தை

யும் ஒன்றாக வைத்திருக்கிறாயே; இது நியாயமா? மஹா பாபமாயிற்றே,'' என்றார் ஸ்ரீ ராமாநுஜர்.

ஸ்ரீ வடுகநம்பி அதிக சாந்தத்துடனே ''அப்படியா? ஸ்வாமி! எனக்கு அது தெரியாது. தங்களுடைய இஷ்ட தேவதையைவிட என்னுடைய இஷ்ட தேவதை எவ்விதத்தில் குறைந்தது? சொல்லுங்கள், பார்ப்போம்'' என்றார்.

ஸ்ரீ வடுகநம்பி ஸ்ரீ ராமாநுஜரைப் பின்தொடர்ந்து ஸ்ரீ ரங்கநாதப்பெருமானுடைய சந்நிதிக்குச் செல்லும்படி நேரிட்டாலும் கூட, இவர் ஸ்ரீ ரங்கநாதப்பெருமானைக் கவனிக்கவேமாட்டார்; தமது குருமூர்த்தியையே மனத்தில் தியானிப்பார். இது ஸ்ரீ ராமாநுஜருக்குத் தெரியவந்தது; அவர் வடுகநம்பியை நோக்கி, ''புத்திரா! எம்பெருமானுடைய அத்தியற்புதமான அழகிய கண்களின் ஒளியைக் கவனித்தாயா?'' என்று கேட்டார். வடுகநம்பி எம்பெருமானுடைய கண்களைக் கூர்ந்து பார்த்துவிட்டுப் பின்னர் தமது குருமூர்த்தியினுடைய கண்களையும் கூர்ந்து பார்த்தார்; பிறகு ஸ்ரீ சடகோபர் கூறியதுபோல, ஸ்ரீ ராமாநுஜரை நோக்கி, ''ஸ்வாமி! எனது நாதனுடைய லக்ஷணங்களையும் ஒரே தரம் பார்க்கும்படியான பாக்கியம் கிடைத்தாலும், அவன் வேறு வஸ்துக்களைப் பார்க்கவேண்டுமென்று இச்சைப்படமாட்டான்,'' என்றார். ஸ்ரீ ராமாநுஜர் வடுகநம்பிக்குத் தம்மிடத்து இவ்வளவு பக்தியிருப்பதைக் கண்டு ஆச்சரியப்பட்டார்; பின்னர் ஸ்ரீ ராமாநுஜருடைய மனமானது

எப்பொழுதும் வடுகநம்பியையே பின்பற்றிச் சென்றுகொண்டிருந்தது.

ஸ்ரீ ராமாநுஜர் தமது உச்சிஷ்ட ஆகாரத்தை யெடுத்துக்கொள்ளும்படி வடுகநம்பியினிடம் கூற, அப்படியே வடுகநம்பி மிகுந்த பக்திவிநயத்துடனே அதை யேற்றுண்டார்; பின்னர் கை கழுவாமல், கையைத் தலையிலே துடைத்துக்கொண்டுவிட்டார்; ஏனெனில், பிரசாதத்தின் சக்தி கையிலிருந்து அணுவளவும் வெளியில் உபயோகமில்லாமல் போய்விடக்கூடாது என்பது இவருடைய கருத்து.

ஒருநாள் ஸ்ரீ ராமாநுஜர் இதைக்கவனித்தார்; "போய்க் கையைக் கழுவிவிட்டு வா!" என்று கண்டித்து ஆக்ஞாபித்தார். அப்படியே வடுகநம்பியார் செய்துவிட்டு அன்று பேசாமல் இருந்தார்.

மறுநாள் ஸ்ரீ ராமாநுஜர், வடுகநம்பி முதலியவர்கள் க்ஷேத்திரத்தில் இருக்கையில், எம்பெருமானுக்கு நைவேத்தியம் செய்யப்பட்ட பிரசாதமானது ஸ்ரீ ராமாநுஜருக்குக் கொடுக்கப்பட்டது. அவர் அதில் கொஞ்சம் உண்டு, எஞ்சியதை வடுகநம்பியினிடத்தில் கொடுத்தார். ஸ்ரீ வடுகநம்பி அதைப் பெற்றுக்கொண்டார்; ஆனால், "கை கழுவுதற்குத் தண்ணீர்வேண்டும்" என்றார். ஸ்ரீ ராமாநுஜர் திடுக்கிட்டு, வடுகநம்பியை நோக்கி, "வடுக! என்ன இது? நீ யிருக்கும் இடம் அறியாய்போலும்" என்றார்.

"பிரபு! நான் இருக்கும் இடம் க்ஷேத்திரம் என்பது எனக்கு நன்றாய்த் தெரியும். நேற்றுத் தாங்கள் ஆக்ஞாபித்தபடியே நான் இன்று நடக்கிறேன்."

இன்னொருநாள் ஸ்ரீ வடுகநம்பி தமது குருவுக்குப் பால் காய்ச்சிக்கொண்டிருந்தார்; அச் சமயத்திலே ஸ்ரீ ரங்கநாதப் பெருமான் தெருவிலே பவனி வந்தார்; ஸ்ரீ ராமாநுஜர் "வடுக! பகவான் பவனி வருகிறார்; ஓடிவா சீக்கிரம்! பகவானைத் தர்சிப்போம்," என்று கூப்பிட்டார். ஸ்ரீ வடுகநம்பி "நான் தங்களுடைய இறைவனைத் தர்சிக்க வந்துவிட்டால், என்னுடைய இறைவனுக்கு இங்கே பால் காய்ச்சுபவர் எவர்?" என்றார்.

இன்னொரு சமயத்திலே வடுகநம்பியாருடைய பந்துக்களிற் சிலர், வைஷ்ணவர்களல்லாதவர்கள், ஸ்ரீ வடுகநம்பியாருடைய வீட்டுக்குவந்து சின்னாட்கள் வசித்தார்கள்; அவர்கள் போனவுடனே வடுகநம்பியார் தமது வீட்டிலே அவர்களால் கையாளப்பட்ட பாத்திரங்களை யெல்லாம் தூர எறிந்துவிட்டார்; ஆண்டானுடைய வீட்டுக் கொல்லைப்புறத்திலே சென்று, அங்குக் குப்பை மேட்டிலே எறியப்பட்டிருந்த உடைந்த பாத்திரங்களை யெல்லாம் எடுத்துக்கொண்டுவந்து உபயோகித்துக்கொண்டார். தமது ஆசார்யருடைய சிஷ்யர்களுடன் சம்பந்தப்பட்ட எதையும் அவர் அசுத்தமான தென்று கருதுவதில்லை. தமது ஆசார்யருடைய பாத தீர்த்தத்தைத் தவிர, வேறு எந்தத் தீர்த்தத்தையும் அவர் பரிசுத்தமான தென்று கருதவில்லை. இவர்

வி தமது அந்திய காலத்திலே, மாணத்தறுவாயில், தமது நண்பர்களுக்குத் தாம் அதுகாறும் வெகு அருமையாகப் பூஜித்து வந்த ஸ்ரீ ராமாநுஜருடைய பாதரக்ஷைகளைச் சுட்டிக்காட்டி, "நண்பர்காள்! இதுவே அபய ஸ்தானம்; நான் வைத்துவிட்டுப் போகும் நிதி இதுவே; ஜாக்கிரதையாக இதைப் பாதுகாத்துவாருங்கள்! இதற்குச் சரிவரப் பூஜை செய்து வாருங்கள்!" என்றார்.

## ஸ்ரீ சிறியாண்டான்

ஸ்ரீ ராமாநுஜருடைய சிஷ்யர்களுள் ஒருவராகிய இவர் தமது மரணத்தறுவாயிலே கூறியதாவது:—

"பகவான் கிருபையேயாகிற தமது தன்மையை மறந்து ஒரு விநாடி நேரமேனும் என்னுடைய பாபங்களைப் பற்றி நினைப்பாரானல், இப்பொழுது இருக்கும் ரௌரவாதி நரகங்கள் போதா. ஆனல், என்னுடைய இயற்கையை அவர் மறந்துவிட்டு, தமது கிருபையைப்பற்றி மாத்திரம் நினைப்பாரானல், வைகுந்தலோகம் எனக்குப் போதாது; இன்னும் சிறந்ததாக ஒரு லோகம் அவர் எனக்குச் சிருஷ்டித்துக் கொடுக்கவேண்டும். அவருடைய கிருபை அவ்வளவு அபாரமானது."

## ஸ்ரீ மருரேர் நம்பி

இவர் தமது மரணத்தறுவாயிலே கூறியதாவது?—"தன்னுடைய மூன்று ஜன்மங்களிலும் ஈஸ்வரனைப் பகைத்து வந்த சிசுபாலன் பகவானுடைய பாதாரவிந்தங்களிலே சேர்க்கப்பட்டுக்கொண்டான். எனது நாதா! நானே என்

ணற்ற ஜன்மங்களிலே உனக்குக் குற்றம் செய்திருக்கிறேன்; ஆகையினால், நான் சிசுபாலனைவிட மஹாபாபி; ஆதலினால், நான் இன்னும் சீக்கிரத்திலே உனது பாதாரவிந்தங்களை யடையவேண்டியதே நியாயம்.''

## ஸ்ரீ நம்பிதிருவழுதி வளநாடுதாசர்

இவருடைய மரணத்தறுவாயில், இவரருகி லிருந்த ஒரு ஸ்ரீ வைஷ்ணவர் உரத்த சத்தமிட்டு அழுதார். நம்பி அவரைக் கண்டித்துக் கூறியதாவது:—''என்ன! உனக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதா? பகவத் பக்தர்களுடைய கூட்டத்திலிருந்து பிரிந்து போகவேண்டி யிருக்கின்றதே யென்று நான் அழவேண்டும். பராசரர் ஆசார்யராக நின்று போதிக்க, நீ கேட்கும்படியான பாக்கியம் பெற்றிருக்கிறாய். நீ விசனப்படக் காரணமென்ன?''

## ஸ்ரீ பிள்ளைத்திருவழுதி வளநாட்டரையர்

இவர் தமது மரணத்தறுவாயில் கண்ணீர் விட்டு அழுதார்; இவருடைய நண்பர்களும் சிஷ்யர்களும் இதைக் கவனித்து, ''என்ன! இவர் மஹா வேதாந்தி; மஹா பக்தர்; இவர் இப்படி விசனிக்கக் காரண மென்ன? சாதாரண மனிதனைப்போல அழுகின்றாரே'' என்று ஆச்சரியப்பட்டு ஒருவரை யொருவர் பார்த்தார்கள்.

பிள்ளைத்திருவழுதி வளநாடரையர் இதைக் கவனிக்கும்படி நேர்ந்தது; அவர் தமது சிஷ்யர்களையும் மற்றவர்களையும் பார்த்துக் கூறியதாவது:— ''நான் என்னைப்பற்றிய

விசனப்படுகிறேன்? உலக ஜனங்களுக்காகக் கண்ணீர் விடுகிறேன் என்பது உங்களுக்குத் தெரியவில்லையா? அந்தோ! உலகினர் உண்மையை யறியாது உழலுகிறார்களே. நாமோ பகவானிடத்திலே சரணாகதி யடைந்து, அவருடைய பாதாரவிந்தங்களிலே நமது சிரசை வைத்துவிடுகிறோம். நாம் உலக பந்தங்களை யெல்லாம் உதறி யெறிந்துவிட்டு நித்திய வாழ்க்கையை அடைந்துவிடுகிறோம். நாம் செய்யு முயற்சி சொற்பம்; ஆனால், நாம் அநுபவிக்கும் பலனோ அபாரம்! ஆயினும், உலகினர்கட்கு இது தெரிகிறதில்லை; சம்சார சக்கரத்திலே தப்ப சக்தியிலே உழலுகிறார்கள்.''

## ஸ்ரீ எம்பார்

ஸ்ரீ ராமாநுஜர் பரமபதம் அடையப்போகும் சமயத்தில், எம்பார் அவருடைய பாதங்களைச் சேர்த்துக் கட்டிப் பிடித்துக்கொண்டு, ''ஸ்வாமி! நான் அஞ்ஞானமாகிய இருண்ட காட்டிலே அலைந்து திரிந்துகொண் டிருந்தேன்; அப்பொழுது ஸ்ரீசைலபூர்ணர் என்மீது கிருபை கூர்ந்து என்னைத் தடுத்தாட்கொண்டு, எனக்கு உயிரும் ஒளியும் அளித்தார். பின்னர் அவர் என்னைத் தங்கள் வசம் ஒப்புவித்தார்; என்னை நோக்கி அப்பொழுது அவர் கூறியதாவது:—''ஸ்ரீ ராமாநுஜரே உனக்குப் பிதா; அவரே உனக்கு மாதா; அவரே உனக்குக் குரு; அவரே உனக்கு நண்பன்; அவரே யுனக்குச் சகலமும்.'' தேவரீரும் இதே மாதிரி எனக்கு இருந்திருக்கின்றீர்கள். நான் தங்களுடைய திருப்பாத நீழலாம்; தாங்கள் பரமபதத்துக்குத் திரும்பிச் செல்ல, நான்

தங்களை விட்டுப் பிரிந்து இங்கு எப்படியிருப்பேன்?" என்று கருதினர்.

ஸ்ரீ ராமாநுஜர் "உண்மைதான்; ஸ்ரீ சைலபூர்ணரிட மிருந்து நான் உன்னைத் தானமாகப் பெற்றேன்; அவர் என் னிடத்தில் உன்னுடைய உடல், பொருள், ஆவி, மூன்றை யும் ஒப்புவித்தார். ஆதலால், நீ என்னை விட்டுப் பிரிந்திருக்க ஒருநாளும் முடியாது. எம்பெருமானுல் கூட நம்மைப் பிரிக்க முடியாது. ஆனாலும், நீ இன்னும் சில நாட்கள் இவ் வுலகி லிருந்துவிட்டு வா! பராசரனைத் தக்கபடி பயிற்று வித்து, அவன் தனது வேலையைத் தகுந்தபடி பார்ப்பதற்கு யோக்கியதை யுள்ளவனுகும்படி செய்துவிட்டு, பின்னர் வா! நம்முடைய சொந்த நன்மையினும் நாம் எடுத்திருக்கும் காரியம் பெரிதல்லவா?" என்றார்.

சின்னுட்கள் கழிந்தன. ஒருநாள் ஸ்ரீ கோவிந்தர் ஸ்ரீ ரங்கநாதப் பெருமாள் சந்நிதியில் போய் நின்றுகொண்டு, வெகு விநயத்துடனே ஸ்வாமி! நான் இங்கு உபயோக மில்லாம லிருக்கிறேன்; என்னுடைய மனமெல்லாம் எப் பொழுதும் என்னுடைய குருமூர்த்தியையே நாடிக்கொண் டிருக்கின்றது; அவர் வைகுந்தத்திலே யிருக்கிறார்; நான் அவரிடம் போய்ச் சேரவேண்டும்; எனக்கு அநுமதி கொடுத்தருள வேண்டும்" என்று பிரார்த்திக்க, ஸ்ரீ ரங்க நாதப்பெருமானுடைய மனம் கரைந்தது; "உன்னுடைய இஷ்டப்படியே ஆகட்டும்; நீ எங்கிருந்தாலும் எனது பக்தனே" என்றார்.

கோவிந்தர் தமது மடத்துக்குத் திரும்பிச் சென்று பராசரரை நோக்கி, "புத்திரா! நான் எனது ஆசார்யரிடம் செல்கின்றேன். லக்ஷக் கணக்கான ஜனங்களுக்கு அபய ஸ்தானமாக ஆசார்யரால் நியமிக்கப்பட்டுள்ள நீ, நான் இப்பொழுது சொல்வதை மனத்தில் நன்றாகத் தரித்துக்கொள்! நீ ஆழ்வானுக்குப் புத்திரன்; நீ சகல கலைகளையும் கற்று அறிவின் ஆழத்தைக் கண்டுபிடித்திருக்கின்றாய்; ஆசார்யர் உன்னைத் தமது புத்திரனாக வரித்துக்கொண் டிருக்கின்றார். ஆனால், இதனால் எல்லாம் உனக்குச் சற்றும் பிரயோசனம் இல்லை; இவை உனக்கு வீண் கர்வத்தைத்தான் உண்டாக்கும். நீ இவற்றின் மூலமாகவெல்லாம் முக்தியடைய முடியாது; ஆசார்யருடைய ஸ்ரீபாதங்களிலே சரணாகதி யடைந்துகொள்! அது ஒன்றே மார்க்கம்!" என்றார். பின்னர் இவரும் பரமபதம் சேர்ந்தார்.

---

## ஆசார்யருடைய அத்தியந்த பக்தர்கள்

ஸ்ரீ ராமாநுஜருக்கு அவர் அருகிலேயே எப்பொழுதும் இருந்து அவருக்கு வேண்டிய சிஷ்ருஷை செய்து வந்தவர்கள் பின் வருபவர்களாவர்:—

ஸ்ரீ ஆழ்வான், ஸ்ரீ ஆண்டான், ஸ்ரீ வரதவிஷ்ணு ஆசார்யர், ஸ்ரீ பராசரர், அவருடைய சகோதரர் ஆகிய இத்தனை பெயர்களும் ஸ்ரீராமாநுஜர் ஸ்ரீபாஷ்யம் இயற்றியபொழுது அவருக்கு அந்த விஷயத்தில் பல விதத்திலும் உதவியாயிருந்தார்கள்.

ஸ்ரீ தேவராஜமுனிவர்: ஞானசாரம், பிரமேயசாரம் என்று இரண்டு கிரந்தங்களை யெழுதினர். இவை ஸ்ரீராமாநுஜராலே நன்ருகப் பரிசோதித்துப் பார்க்கப்பட்டு, ஏற்றுக்கொள்ளப்பட்டன. பின்னர் ஸ்ரீ வரதராஜப் பெருமாளைத் தினந்தோறும் பூஜிக்கும் வேலை யவருக்கு அளிக்கப் பட்டது.

ஸ்ரீ ப்ரணதார்த்திஹரரும், ஸ்ரீ கிடாம்பிப் பெருமாளும் மடைப்பள்ளியை மேல் பார்த்து வந்தார்கள்.

ஆசார்யர் புண்டரம் தரித்துக்கொள்வதற்கும் தினசரி பூஜை செய்வதற்கும் அவசியமான வஸ்துக்களைச் சேகரித்துத் தயார் செய்வது ஸ்ரீ ஆண்டானுடைய வேலையாம்; இன்னும் ஆண்டான் அவருடைய பாதரக்ஷைகளையும் கொண்டு வந்து கொடுப்பார்.

ஸ்ரீ வடுகநம்பியார்: ஆசார்யர் ஸ்நாநம் செய்யும்போது, அவருக்கு வேண்டிய பணிவிடைகள் செய்வார்; இன்னும் ஆசார்யருடைய பசுக்களையும் ஓட்டி மேய்த்து வருவார்.

ஸ்ரீ கோமடத்துச் சிறியாழ்வான்: ஆசார்யருடைய பிக்ஷா பாத்திரத்தையும் பாதரக்ஷைகளையும் பாதுகாத்து வந்தார்.

ஸ்ரீ எம்பார்: ஆசார்யருக்குப் படுக்கை விரித்துக் கொடுத்து, ஆசார்யர் படுத்துக்கொண்டவுடனே அவருடைய கை கால்களை நோவு நீங்கப் பிடிப்பார்; ஆசார்யர் நடக்

கும்பொழுது, கை கொடுப்பார்; ஆசார்யருடைய வஸ்திரங்களை ஜாக்கிரதையாகப் பார்த்துவந்தார்.

ஸ்ரீ தநுர்தாசன்: பொக்கிஷத்தை மேல் பார்த்துவந்தார்.

ஸ்ரீ உக்கலாழ்வான்: ஆகாரம் பரிமாறுவது வழக்கம்.

ஸ்ரீ உக்கலம்மாள்: ஆசார்யருக்கு விசிறிகொண்டு வீசுவார்.

ஸ்ரீ அம்மங்கியம்மாள்: ஆசார்யருக்குப் பால் காய்ச்சிக் கொடுப்பார்.

ஸ்ரீ மாருதி யாண்டான்: ஆசார்யருக்குக் கை கழுவத் தண்ணீர் கொண்டுவந்து கொடுப்பார்.

ஸ்ரீ மாருதி சிறியாண்டான்: மடத்துக்குத் தினந்தோறும் வேண்டிய சாமான்களை வாங்கிக் கொண்டுவந்து கொடுப்பார்.

துய்யமுனி வேளான்: ஆசார்யருக்கு ஸ்நாநத்துக்குத் தண்ணீர் கொண்டுவந்து வைப்பார்.

ஸ்ரீ தநுர்தாசனுடைய மருமக்களாகிய வந்தன், அந்தன் இருவரும் அரசனிடத்திலே ஆயிரம் பொன்னுக்கு வேலை செய்து, அவ்வாயிரம் பொன்னையும் மடத்துக்குக் கொண்டு வந்து கொடுத்துவந்தார்கள்.

---

## ஞான பரம்பரை, குருபரம்பரை

1. மந்திர பரம்பரை.
2. மந்திரார்த்த பரம்பரை.
3. ஸ்ரீ பாஷ்ய பரம்பரை.
4. ஸ்ரீ பகவத்விஷய பரம்பரை.

சாக்ஷாத் பகவான்முதல் ஸ்ரீ ராமாநுஜர் வரையில் இந் நான்கு பரம்பரையாகவே யிருந்தது.

இப் பரம்பரை வரலாறு:—

| | |
|---|---|
| ஸ்ரீ விஷ்ணு. | ஸ்ரீ புண்டரீகாக்ஷர். |
| ,, லக்ஷ்மி. | ,, ராமமிச்ரர். |
| ,, ஸேநேசர். | ,, யாமுநாசார்யர். |
| ,, சடகோபர். | ,, மஹாபூர்ணர். |
| ,, நாதயோகி. | ,, ராமாநுஜர். |

## I. மந்திர பரம்பரை

ஸ்ரீ ராமாநுஜருக்குப் பின்னே எழுபது ஆசார்யர்களும், அவருடைய சந்ததியாரும். ஸ்ரீ பரகால ஸ்வாமி மடமும், ஸ்ரீ அகோபில ஸ்வாமி மடமும் இன்றும் இருக்கின்றன.

## II. மந்திரார்த்த குருபரம்பரை

| | |
|---|---|
| ஸ்ரீ ராமாநுஜர். | ஸ்ரீ கிடாம்பி ஸ்ரீ ரங்கராஜர். |
| ,, கிடாம்பியாச்சான் (பிரணதார்த்திஹரர்.) | ,, கிடாம்பி அப்புள்ளார். |
| ,, கிடாம்பி ராமாநுஜ அப்புள்ளார். | ,, வேதாந்த தேசிகர். |
| | ,, ப்ரஹ்ம தந்திர ஸ்வாமி. |

## III. ஸ்ரீ பாஷ்ய குருபரம்பரை

| | |
|---|---|
| ஸ்ரீ ராமாநுஜர் | ஸ்ரீ அப்புள்ளார். |
| ,, பிள்ளான். | ,, வேதாந்த தேசிகர். |
| ,, விஷ்ணுசித்தர். | ,, ப்ரஹ்மதந்திர ஜீயர். |
| ,, நடாதூர் அம்மாள். | |

## IV. ஸ்ரீ பகவத்விஷய பரம்பரை

ஸ்ரீ வேதாந்த தேசிகர் வரையில் முன் சொன்னமாதிரியே; பின்னர் ஸ்ரீ நயினாராசார்யர்—ஸ்ரீ ப்ரஹ்மதந்திர ஜீயர்.

## இரண்டுவித குருபரம்பரை:

### ஆஸ்ரயணம், கிரந்தம்.

### ஆஸ்ரயண பரம்பரை

ஆஸ்ரயணம்:— ஸ்ரீ ராமாநுஜர்வரையில் மேலே சொன்ன மாதிரியே. பின்னர்,

ஸ்ரீ எம்பார்.
,, பராசரர்.
,, நஞ்ஜீயர்.
,, நம்பிள்ளை.
,, வடக்குத் திருவீதிப்பிள்ளை.

ஸ்ரீ பிள்ளைலோகாசார்யர்.
,, திருவாய்மொழிப் பிள்ளை.
,, மணவாள மஹாமுனி (பெரிய ஜீயர்.)

### கிரந்த பரம்பரை

I. ரஹஸ்ய கிரந்தமானது பிள்ளைலோகாசார்யருக்குப் பின்னை கூரகுலோத்தமரைக் குறிப்பிடுகின்றது.

II. ஸ்ரீ பகவத் விஷயம்.

இதிலே பின் கூறப்படுபவர்கள், பரம்பரையில் வந்தவர்கள்:

ஸ்ரீ ராமாநுஜர்.
,, பிள்ளான்.
,, எம்பார்.
,, ஆழ்வான்.
,, பட்டர்.

ஸ்ரீ நஞ்ஜீயர்.
,, நம்பிள்ளை.
,, வடக்குத் திருவீதிப்பிள்ளை.
,, ஈயுண்ணி மாதவர்
,, ஈயுண்ணி பத்மநாபர்.

| | |
|---|---|
| ஸ்ரீ கோலவராகநயினார். | ஸ்ரீ பெரியவாச்சான்பிள்ளை. |
| ,, நாலூர் தேவராஜர். | ,, நயினார் ஆச்சான்பிள்ளை |
| ,, சைலேசர். [நம்பிள்ளை. | ,, அழகியமணவாளஜீயர். |
| ,, பெரியஜீயர் அல்லது | ,, வாதிகேஸரவர். |

## III ஸ்ரீ பாஷ்யம்

| | |
|---|---|
| ஸ்ரீ ராமாநுஜர். | ஸ்ரீ விஷ்ணுசித்தர். |
| ,, எம்பார். | ,, நடாதூர் அம்மாள். |
| ,, பட்டர். | ,, அப்புள்ளார். |
| ,, நஞ்ஜீயர். | ,, தேசிகர். |
| ,, நம்பிள்ளை. [ளை. | ,, நயினாராசார்யர். |
| ,, வடக்குத் திருவீதிப்பிள் | ,, பிரதிவாதிபயங்கரர். (அண்ணன்) |
| ,, பிள்ளைலோகாசார்யர். | ,, பொளிப்பாக்கம்நயினார். |
| ,, பிள்ளான். | |

ஸ்ரீ ராமாநுஜருடைய சரித்திரம் ஒருவாறு எழுதப் பெற்று முடிந்தது. உலகினர் (தமிழ் நாட்டினர்) இச் சரித்திரத்தைப் படித்துப் பாராயணம் செய்து இன்ப மெய்துமாறு, எல்லாம் வல்ல இறைவனும், அகண்ட கல் யாணகுண சம்பந்நனுமாகிய ஸ்ரீ அகிலலோக நாயகன் அருள் புரிவானாக.

ஸ்ரீ ராமாநுஜ விஜயம்

முற்றிற்று.

---

FIRST EDITION] [1000 COPIES,